ஸ்ரீ ரமணாச்ரமம்

பரமார்த்த தீபம் என்னும்

# குருவாசகக் கோவை

உரைநூல்



மூலம்: முருகனார் உரை: சாதுஓம்

# பரமார்த்த தீபம்

என்னும்

# குருவாசகக் கோவை

(உரைநூல்)

மூலம்: ஸ்ரீமுருகனார்
உரை: ஸ்ரீசாது ஓம்



ஸ்ரீ ரமணாச்ரமம்
திருவண்ணாமலை - 606 603
2008

**Guruvachaka Kovai — Tamil** - Original by Sri Muruganar; Commentary by Sri Sadhu Om. Published by President, Sri Ramanasramam, Tiruvannamalai - 606 603.



முதற் பதிப்பு – 1980
(ஸ்ரீரமண கேந்திரம், டெல்லி - வெளியீடு)
இரண்டாம் பதிப்பு – 1997 — 1000 பிரதிகள்
(ஸ்ரீரமணாச்ரம வெளியீடு)
மூன்றாம் பதிப்பு – 2008 — 1000 பிரதிகள்

CC: 2010

ISBN: 978-81-8288-087-0

விலை ரூ. 100.00

*பதிப்பாளர்:*

தலைவர்
ஸ்ரீரமணாச்ரமம்
திருவண்ணாமலை - 606 603
தொலைபேசி: 04175-237200
மின்னஞ்சல்: ashram@sriramanamaharshi.org
இணைய தளம்: www.sriramanamaharshi.org

*அச்சிட்டோர்:*

நாகராஜ் அண்டு கம்பெனி பிரைவேட் லிமிடெட்
சென்னை - 600 096

# உள்ளுறை

## II. தத்துவ அநுசந்தான வியல்

## III. தத்துவ அனுபவ வியல்

ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய

# பதிப்புரை

பகவான் ஸ்ரீ ரமண மகர்ஷிகள் நமக்கு அளித்துள்ள அழியாச் செல்வம் அவரது உபதேச நூல்களே யாகும். இந்நூல்களில் பெரும்பகுதி தமிழ்மொழியிலும் காலப்போக்கில் திரிபடையா வாறு பாடல் வடிவிலும் அமைந்துள்ளது தமிழுலகம் செய்துள்ள பெரும் பாக்கியமாகும். தமிழ்ப்புலமை சற்று குறைவாக உள்ள வர்கள் ஸ்ரீபகவானது உபதேச உண்மையை ஐயமற எளிமையாக உணர சீரிய உரை நூல்களும் இப்பாடல்களுக்கு இன்றியமையாத வையே.

ஸ்ரீ பகவானது மூல உபதேச நூல்களுக்கு அடுத்து அமைந்துள்ள முதல் நூல் குருவாசகக் கோவை என்றால் அது மிகையாகாது. ஸ்ரீ பகவான் திருவாய் மலர்ந்தருளிய அரிய ஆன்மீகக் கருத்துக்களை ஸ்ரீ முருகனார் உடனுக்குடன் அழகிய தமிழ்ப்பாக்களாக்கி ஸ்ரீ பகவானிடமே கொடுத்து அவ்வுபதேசக் கருத்துக்கள் சரியாக அமைந்துள்ளனவா என்பதை ஸ்ரீ பகவான் சரிபார்த்து ஆமோதித்த பின் அவற்றை ஒரு கோவையாகத் தொகுத்து வந்தார். ஸ்ரீ பகவான் அப்பாடல்களை கவனித்து வரும்போது சில கருத்துக்களைச் சேர்க்கவோ அல்லது சுருங்கக் கூறி விளங்க வைக்கவோ விரும்பிய விடங்களிலெல்லாம் தாமே புத்தம் புது செய்யுட்களை யாத்து இடையிடையே அமைத்தருளியுள்ளார். (இவை இந்நூலில் தக்கவிடங்களில் **பகவான் (1)** முதல் **பகவான் (28)** என்று குறிப்பிடப்பட்டுள்ளது.) ஒரு விஷயத்தைப் பற்றிய சரியான ரமணோபதேசம் யாதாயிருக்குமென ஊர்ஜிதப் படுத்த வேண்டு மானால் அதற்குப் புகல் 'உள்ளதுநாற்பது', 'உபதேச உந்தியார்' மற்றும் 'குருவாசகக் கோவை' என்றே கூறலாம்.

செந்தமிழ்ச் செய்யுள் நடையில் அமைந்துள்ள குருவாசகக் கோவை மூலநூலானது ஆங்காங்கே அருஞ்சொற்களைத் தாங்கி சிலருக்குக் கடினமாகக் காணப்படுவதால் இந்நூலில் பொதிந் துள்ள உபதேச நுட்பங்களை அறிய முடியாமல் உள்ளது. இப் பெரும் சிரமத்தையகற்ற

திரு. சாது ஓம் அவர்கள் இந்நூலின் உட்கருத்தைத் துருவி

யாராய்ந்தும் திரு முருகனார் அவர்களுடனே கலந்துபேசி ஆழ்ந்துணர்த்தும் இந்தத் தெளிவுரையை ஞான நாட்ட முள்ளவர்களுக்குத் தந்துள்ளார்.

திரு சாது ஓம் அவர்கள் பழுத்த தமிழ்ப் புலமையுடன் வாலிபத்திலேயே ஸ்ரீ ரமண பகவானை சத்குருவாக வந்தடைந்தவர். ஸ்ரீ முருகனாருடன் நெருங்கிப் பழகி ஸ்ரீ ரமண சாத்திரம் ஒன்றிலேயே மூழ்கித் திளைத்தவர். அன்னாரது உரையில் முருகனாரது கவிதை யுளமும் ஸ்ரீ ரமண சித்தாந்த வளமும் மாற்றுக் குறையாமல் தோன்றுவது இயற்கையே. (1282 பாக்கள் கொண்ட மூல நூலையும் இவ்வுரை நூலுடன் சேர்ப்பது நடை முறைக்குச் சாத்தியப் படாமையால் அன்பர்கள், தனிப்புத்தக மாகவுள்ள மூலநூலையும் உடன்கொண்டே இந்த உரைநூலைப் பயன்படுத்துதல் இன்றியமையாததாகும்).

இவ்வுரை நூல் முதற்பதிப்பாக ஸ்ரீ ரமண பகவானின் ஜயந்தி நூற்றாண்டு வெளியீடாக புதுதில்லி ரமண கேந்திரத்தினரால் 1980ல் (அமரர்) பேராசிரியர் கி. சுவாமிநாதன் அவர்களின் பெருமுயற்சியால் அன்னாரது பதிப்புரையுடன் வெளியிடப் பட்டது. திரு கி. சுவாமிநாதன் அவர்களே இந்நூலை ஆங்கிலத்தில் மிகச் சிறந்த முறையில் பாடல் வடிவில் இயற்றினார். இது ஆச்ரமப் பத்திரிகையில் பல ஆண்டுகள் தொடர்ந்து பிரசுரிக்கப்பட்டுப் பின்னர் தனிப்புத்தகமாகவும் (The Garland of Guru's Sayings) திரு முருகனாரின் ஜயந்தி நூற்றாண்டு சிறப்புப் பதிப்பாக அச்சிடப்பட்டு அன்பர்களால் பெரிதும் விரும்பிப் படிக்கப்பட்டு வருகிறது. இந்தத் தமிழ் உரைநூல் அன்பர்களின் ஆர்வ மிகுதியால் தற்போது ஆச்ரமப் பதிப்பாக வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி அடைகின்றோம்.

*1.9.96*
*(அருணை விஜய நூற்றாண்டு)*
*திருவண்ணாமலை*

**வே. சு. ரமணன்**
*தலைவர், நிர்வாகக் குழு*
*ஸ்ரீ ரமணாச்ரமம்*

to add I edn pub note also - 1980 Delhi K. [illegible]

ஓம் நமோ ரமணாய

# குருவாசகக் கோவை — உரை நூல்

## சிறப்புப் பாயிரம்

*(திருவருணை, ஸ்ரீ நடனானந்த சுவாமிகள் வழங்கியது)*

**(நேரிசை வெண்பா)**

*1.* ஒருவா சகத்துட் பொருளை யுணர்த்துங்
குருவா சகக்கோவை யென்னுந் — தெருள்வாய்
திருமுருக னாரின் சிறந்தகவி நூலுக்
குரையுதவி னன்சாது ஓம்.

*2.* பொழிப்புரையல் லாலுட் புதைபடுமூ லத்தின்
விழுப்பொருட்குஞ் சாலும் விளக்கச் — செழிப்புறூஉம்
பூன்றவுரை நூலிற் பொலிவித்தான் மெய்யறிவு
சான்றபுல மைக்குத் தக.

*3.* காந்த மிரும்பைக் கவர்ந்தாங் கெமைக்கவர்ந்து
சாந்திதந் தாண்டரம ணன்கருணை — வாய்ந்துமெய்
யோர்முருக னார்நூற் குரைவழங்கி யானுதவி
நீர்முகின் மாரிநேர்ந் தற்று.

*4.* தெள்ளியநற் சீரமணன் செப்புந் தவநெறியா
லுள்ளதை யோர்வித் தொருதலையா — வுள்ளத்
துறைவிக்கு மாறிவ் வுரையா சிரிய
னிறைபணியிற் செய்தா னிதை.

*5.* ஒல்லாங் கெவர்க்கு முதவுநற் சாதுஓம்
பல்லார்க்கு மிந்நூற் பயன்படுமென் — னல்லாங்கிற்
கற்பவருக் குண்மைக் கருத்தைப் புலப்படுத்தும்
பொற்புரைசெய் துற்றான் புகழ்.

6. மூலம் படைத்த முருகன் கவிக்குப்பல்
காலன்ஞன் கண்ணே கருத்தறிந்து — ஞால
வழக்குத் தமிழில் வரைந்தா னுரையை
ஒழுக்கத் துயர்சாது ஓம்.

7. பெரியோர் குறிப்பைப் பிறர்காணச் செய்கை
யரிதாய வற்றுளரி தாமென் — றரியதன்
வாழ்வை யிதற்கே வழங்கியிந் நல்லோன்றன்
னேழ்மையகன் றின்பெய்தி னுன்.

8. தேற்றத்திற் சாதுஓம் செய்த வுரைநூற்கென்
சாற்றுரைவா யன்ஞன் றவத்துறுநல் — லேற்றமிகும்
பேற்றையெலாம் பேசுவித்த பெம்மான் றிருக்கருணைக்
கூற்றையென் னென்பேன் குறித்து?

9. குருவசன மெல்லாங் குவித்து முருகன்
பொருவிலொரு மெய்ந்நூல் புனைந்தான் — துருவியச்
செய்யுணூ லுக்குத் தெளிவுரைசெய் துற்ருரை
யுய்யவைத் தான்சாது ஓம்.

10. பதிரமணன் சொற்பகரிப் பாவுரைக ளிற்றேன்
றதிரமணீ யத்தைக்கா ணுன்ற்ேர் — யதியாஞ்
சதிரேய் முருகனுய் சாதுவோ மாயப்
பதியே படைத்ததென் பார்!

குறிப்பு:— ரமணன் சொற் பகர் : பகவான் ஸ்ரீ ரமணரின் வாய்மொழியைப் பகர்கின்ற.

பா உரைகளில் : செய்யுள் நூலிலும், உரை நூலிலும்.

அதிரமணீயம் : அதியற்புதம்.

Chorse?

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# பரமார்த்த தீபம்

என்னும்

# குருவாசகக் கோவை

## (உரை)

### பாயிரம்

### க குரு வணக்கம்

1. 'நான்' 'எனது' என்னும் (அகங்கார மமகார வடிவ) மயக்க முற்று நின்ற இழிந்த மனப்பான்மை அற்றுப் போகும் படிச் சேருகின்ற 'குருவாசகக் கோவை' யாகிய இப் **'பரமார்த்த தீப'** மானது, நாம் அருளாசை மட்டும் மிகுந்து, ஆனால் மோக்ஷ லக்ஷியம் கைகூடாததால் மேன்மேலுந் தளர்வடைந்து விடாத வாறு, நம் உள்ளந் தெளிவடையச் செய்கின்ற ஆன்ம சொரூப மாகப் பிரகாசிக்கும்.

2. (என்னை) இவ்வுடல் வடிவாகவே கருதி மயங்கித் துன் புற்ற அடியேனை, மலமய இச் சட வடிவம் நானல்ல வென்று விலக்கச் செய்து, அழிவற்ற மெய்ஞ்ஞானத்தை யருளுங் குருவடி வாக எழுந்தருளி வந்து பரிவுடன் ஆட்கொண்ட நல்ல அருண் மோன குருவாம் ஸ்ரீ ரமண பிரானின் திருவடிகள் என் முடிமே லாகுக.

3. பலவேறுபட்ட கருத்துக்களைக் கொண்ட (அடியார்கள் தம்மிடம் புரிந்த) சம்வாதங்களுக்கெல்லாம் மிகவும் சுருக்கமாக வும், வேறுபாட்டை யகற்றும் சமரசமாகவும் திறமான தீர்ப்ப ளித்து (அவ்வேறுபட்ட விவாதங்களிற் பொதிந்துள்ள) ஒன்றான மெய்ப் பொருளை விளக்கி உபதேசித்தருளுகின்ற ஞானவல்லவ னான ஸ்ரீ ரமண சற்குருவின் திருவடிகள் என் சிரமேற் பொருந்துக.

## உ. நூற்பெயரும் தோற்றமும்

4. ஞானத் தெளிவே வடிவான இந்தப் பரமார்த்த தீப மானது, மெய்ப்பொருளின் விளக்க மறியாத மனத்தேனுகிய அடியேனின் பக்குவ முதிர்வில்லாத சிற்றறிவால் ஏற்றப்பட்ட தல்ல. என்னை யாட்கொண்ட ஸ்ரீ ரமண பகவானின் முற் றறிவால் ஏற்றப்பட்ட தீபமாகும்.

5. மெய்ஞ்ஞான விளக்கமாக வுள்ள சத்தே தானுக விளங்கும் பரமாத்ம சொரூபமான அருட்பெருமான் (ஸ்ரீ ரமணன்) தம் அடியார்களின் அஞ்ஞானம் நீங்கும் வண்ணம் உபதேசித்த போதனைகள் பலவற்றுள் என் அறிவிற் கிட்டிய சிலவற்றை உள்ளத்திற் பாதுகாத்து வைத்து, (பின்வரும் பாக்களாற்) கூறு கின்றேன்.

6. எந்த அத்துவித ஞானுனுபவ நிலையிற் சதா இருந்து கொண்டு ஸ்ரீ ரமண சற்குரு என்னைத் தன்னேடு அன்னியமற்ற ஏகமா யாக்கி யருளினரோ அவ் வான்மபர ஐக்கிய நிலையில் யானும் அப் பெருமானேடிருந்தே எங்களது ஐக்கிய வாழ்வில் அனுபவித் தறிந்த பரமார்த்த தத்துவங்களைச் சிறிது கூறுவேனுக.

7. 'நான் இவ்வுடல்' என்று எழும்பும் அகந்தை (தற் போத) உணர்வு நீங்கும்படி என்னைத் தெளிவித்த ஸ்ரீரமண குருதேவன் எனக்களித்த அருட்பார்வையால் யான் கண்ட பரமார்த்த வுண்மைகளைத் தமிழ்க் கவிகளாக எழுதி ஒரு கோவையாகக் கோக்கின்றேன்.

## ௩. நூற் பயன்

8. யாவும், என்றும், தன்னைத்தவிர வேறில்லாததாய்ப் பர மான்ம சொரூபம் விளங்குவதால், அதை 'அடைதல்' என்னும் காரியம் என்றும் எத்துணையும் உண்மையில் இல்லவேயில்லை. ஆதலால் (மோக்ஷ இச்சை கொண்ட மனமானது) 'அறம் பொருள் இன்பம்' எனப்படும் (போலிப் புருஷார்த்தங்களை மெய்யெனக் கருதியுழலும்) சலனம் நீங்கப் பெறுவதே இப் 'பர மார்த்ததீபம்' என்னும் நூலின் பயனுகும்.

⊗ ⌣ = to join and read



விளக்கக் குறிப்பு: தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் (அறம், பொருள், இன்பம், வீடு) எனப் புருஷார்த்தம் நான்கு என இது வரை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். இவற்றுள் முதல் மூன்றாகிய தர்மம், அர்த்தம், காமம் என்பவை எய்துவதற்கு அருகதை யற்றவை என்ற உண்மையைத் தன் ஒளியாற் காட்டித்தந்து, அவைகளுக்காகச் செய்யப்படும் முயற்சி வடிவச் சலனங்களை இந் நூல் நீக்குகின்றது, மேலும் "மோக்ஷமாவது அடையப் பட வேண்டியதோர் புருஷார்த்த மன்றோ? அதற்காகவேனும் மனத்தின் முயற்சி ரூபச் சலனம் அவசியமல்லவா?" என்றால், "பரமான்மா நித்திய சித்த மாகையால் 'எய்துதல்' என்பதே மோக்ஷ விஷயத்திற் பொருத்தமற்ற ஒன்று" என்றும் இந்நூல் ஒளிகாட்டி விளக்குகின்றது. இவ்வாறு எதுபற்றியும் சிறிதும் சலனமுறாத பரிபூரண நித்திய சித்த நிச்சல ஸ்திதியையே இந்நூல் அளிப்பதால் இதனினும் சிறந்த பயன் — புருஷார்த்தம் — வேறே துளது என்பது கருத்து. இந்நூலின் 1204 ஆவது உபதேசத்தை ஆதாரமாகக் கொண்டது இச்செய்யுள்.

9. சுகவடிவாகவே விளங்கும் தன் ஆன்ம சொருபமே இகபர சுகங்களுக்கெல்லாம் இருப்பிடம் (மூலம்) ஆகும். (ஆகையால் இகபர சுகங்களின்) சிறப்பைப் பொருட்படுத்தி அவைகளில் மயக்கமுறாமல் தன் ஆன்ம நிட்டையில் ஊன்றுவதே இந் நூலாற் சிறப்பாக நாம் அடையும் பயனாகும்.

## ௪. அவையடக்கம்

10. ஆராயுமிடத்து, இனிய இக் குருவாசகக் கோவை என்னும் நூல், மந்தவிவேகமும் கலங்கிய சித்தமும் படைத்தவனான நான் என் மனத்தால் நினைத்துப் பாடிய தல்ல. மனோதீத நிலையில்என்னைப் பாட்டுவித்தவன் அந்தப் பரம புண்ணியனான பகவான் ஸ்ரீ ரமணனே யாகும்.

11. 'நான்' என்னும் கர்த்ருத்துவ புத்தியால் எழுதப் படாத இந் நூலுக்கு நான் எவ்வாறு அவையடக்கம் பாடுவது? (பாட வேண்டியதில்லை என்றவாறு). மகான்கள் தமதுள்ளத்தில் அனுபவிக்கும் பரமோன சமாதி நிலையால் அறிகின்ற அந்தப் பரம புருஷனான ஸ்ரீ ரமண பகவானுக்கே இந்நூலின் பொறுப்பு ஏற்புடைய தாகும்.

## ரு. சமர்ப்பணம்

12. சூதுவாது எதுவும் அறியாத நற்குணசாலியான என் தாய், நான் அஞ்ஞானம் நீங்கி ஆன்ம ஞானப் பேறு பெறும் படிச் (எனக்குப் பிறவியைச்) செய்வித்தாள். ஆதலால் அன்னை

யின் திருவுள்ளத்திற்கு இந்நூல் நன்ருக சமர்ப்பணம் ஆகட்டும் என்று அளிக்கின்றேன்.

## சு. ஆக்கியோன்*

13. எல்லாப் பேறுகளின் முழுச்சிறப்பும் தன்னை ஆட் கொண்ட ஸ்ரீ ரமண பகவானின் திருவடிகளை அடைவதே எனத் தன் அருட்பார்வையாற் காணுகின்ற **முகவைக் கண்ண முருகனர்** தமது சற்குரு நாதனின் சிற்சில உபதேச வசனங்களை ஓர் கோவையாகக் கோத்து மிகவுயர்ந்ததோர் ஞான நிதியாக (இந்நூலைப்) பாடினர்.

* இது வேருேர் அன்பராற் பாடப்பெற்ற செய்யுள்.

## முதலாவது

# தத்துவ ஆராய்ச்சி யியல்

### மங்கலம்

14. கடலாற் சூழப்பட்ட இப் பூமிதேவி (பூவுலக மக்கள்) செய்த தக்க பெருந்தவத்தின் பயனுக, மாட்சிமிக்க சுத்தப் பிரம்மமே சிறப்பின் சிகரமான ஸ்ரீ ரமண சற்குருவாகத் திரு மேனி தாங்கிவந்துள்ளது. அந்தப் பரிசுத்த மெய்ஞ்ஞானத் திருவடிகளை நாம் அகத்திற் கொள்வோ மாக.

15. எல்லாப் பொருள்கட்கும் இதயமாக விளங்கும் ('அஹம்' என்னும்) ஒரு மொழியான சுத்தப் பிரம்மமே, அஞ்ஞானிகளின் மயக்கத்தை யொழிக்கின்ற ஞான நூலான இக் குருவாசகக் கோவைக்கு அருட்சுவை யூட்டும் நல்ல மங்கல மாகும்.

விளக்கக் குறிப்பு :—அஹம்—நான்—ஆன்மா.

"ஓரெழுத்தென் றுந்தானு யுள்ளத் தொளிர்வதா
மாரெழுத வல்லா ரதை."

என்று ஸ்ரீ பகவான் அருளிய குறட்பாவிலும் 'தான்' என்னும் ஆன்மசொருபமே எழுதாவெழுத்தாக என்றும் இதயத்து விளங்கும் 'ஓரெழுத்து' என்று குறிப்பிடப்பட்டது காண்க.

16. ஞான நிறைவாம் பரம வஸ்துவான நம் நிஜ சொரு பானுபவமானது பூரண மோன இயல்பாக விளங்குவதாயும், 'தேகமே நான்' என்றெழும் போலித் தன்மை யுணர்வுக்கு அதிஷ்டானமான மெய் அக உருவாய்ப் பரந்து விளங்குவதாயும் உள்ளது. அந்தப்பரிசுத்த பரமாத்ம சொரூபமான திருவடிகள் நம் தலைமேல் ஆகுக.

17. அகமுக நாட்டத்தை மேற்கொண்ட முமுக்ஷுக்களுக்குத் தெவிட்டாது மேன்மேலும் ஆன்மாவில் திளைத்திருக்க ஆர்வத்தையுண்டாக்கும் தெளிந்த பரமானந்தச் சுவைதருந் தெய்வீகக் கனியாகவும், ஆன்ம லக்ஷியத்தை யடைவதற்கு வழி காட்டும் தூண்டா மணிவிளக்காகவும், தூங்காமல் தூங்கும் துரியமே தன் உண்மை வடிவமாகவும் விளங்குகின்ற ஸ்ரீரமண சற்குருவின் அருள் ஒன்றே (அடைவதற்கான) அரும் பொருளாம்.

விளக்கக் குறிப்பு :— அகமுக நோக்கமுடையார்க்கு அடையத் தக்க பொருள் ஆண்டவனுடைய அருளே. ஆண்டவன் எப்படிப் பட்டவன் எனில் தூங்காமற் றூங்குந் துரிய நிலையையே தன் உண்மைவடிவாக உள்ளவன். முமுக்ஷுக்கள் அடையவேண்டிய அவ்வாண்டானது அருள் ஒரு கனியாகவும் ஒரு விளக்காகவும் இப்பாடலில் உருவகிக்கப்பட்டுள்ளது. கனி எப்படிப்பட்ட தெனின் உவட்டாதது; மேன்மேலும் புசிக்க ஆர்வமெழுப்பும் பரமானந்தத் தீஞ்சுவை பொருந்தியது. விளக்கு எத்தன்மைத்ததெனின் உள்ளம் அல்லது ஆன்ம லக்ஷியத்தைத் தவறுது சென்றடைவதற்கு வழிகாட்டக் கூடியது. மேலும் இடையிடையே ஒளிமங்குவதாய், தூண்டிவிட வேண்டியதாய் உள்ளதல்ல. 'நான் நான்' என்று இருளிலும் துயிலிலுங்கூட இடைவிடாது விளங்குவதால் தூண்டவேண்டாத சுயவிளக்கமுடையது. ஆகவே ஆண்டவனது திருவருள் 'நான் நான்' என இதயத்தில் இடைவிடாது விளங்கி, தன்னில் ரமித்திருக்க ஆர்வம் எழுப்பக் கூடியதான ஓர் உயர்ந்த நிதி. முமுக்ஷுக்கள் அடைய வேண்டிய பொருள் இதுவே. இவ் அருளே அடியார்க்குப் பொருள்!

18. பற்றலும் விடலு மற்ற உள்ளத்தை யுடையவனும், ஆன்ம ஞானத்தால் மெய்த்துறவின் பேரழகு வாய்ந்தவனும், பிரமாதத்தால் (மறதியால்) நேரும் துன்பம் அறவே நீங்குமாறு என்னை ஆட்கொண்டவனுமான ஸ்ரீரமண பகவானது திருவடி களே மெய்ப்பொருள் லக்ஷணங்கட்கெல்லாம் ஓர் லக்ஷியம் (எடுத்துக்காட்டு) ஆகும்.

விளக்கக் குறிப்பு :—(1) ஞான + துறவு; (2) ஞானத்து + உறவு; (3) ஞானத்து உற என்றவாறு மூவிதமுப் பொருள் கொள்ளலாகும்.

உறவு—ஒழிவு; விருப்பு—வெறுப்பு; பந்த—மோட்சம் என்றும் கொள்க.

"தானன்றி யாருண்டு?" என வரும் உள்ளது நாற்பது—அநுபந்தச் செய்யுள் 38ல் கண்டவாறு யாவும் தானும் பரிபூரணத்துவமே தனது சொரூபமா யுடையவர் ஸ்ரீ பகவான். ஆதலின், "ஒன்றை உறுதல்— ஒன்றினின்றும் ஒழிதல்"என்பவை அவரிடம் பொருந்தா என்றவாறு.

## க. உலகுண்மைத் திறன்.

19. காரணமாகிய சின்மயமே காரிய வடிவான உலகமாய்க் காணப்படுவதால், சாத்திரங்களால் நாமரூபங்களாக மாத்திரம் வருணிக்கப்படும் இப்பெரிய உலகத்தின் மூலகாரணமான சின் மயமோ உள்ளங்கை நெல்லிக்கனி போன்ற உண்மையாதலால் இப்பெரிய பிரபஞ்சமும் சின்மய உண்மையேயாகும் என்று கொள்க.

விளக்கக் குறிப்பு :— சாத்திரங்களால் நாம ரூபமாக இவ்வுலகம் வருணிக்கப் படுகின்றது. இந்த நாமம் ரூபம் இரண்டும் காரண பிரம்மத்தின் காரியங்கள் எனலாம். சத்து, சித்து, ஆனந்தம், நாமம், ரூபம் எனப்படும் பிரம்மத்தின் ஐந்து அம்சங்களுள் முதல் மூன்றும் சத்தியாம்சங்கள்; நாமம் ரூப மிரண்டும் மித்தியாம்சங்கள். சச்சிதானந்தமோ சுய விளக்கமுடையன. ஆனால் நாமரூபாதிப் பிரபஞ்சமோ அவ்வாறல்ல; சச்சிதானந்த அதிஷ்டானத்தின் இருப்பால் இருப்புள்ளன போற் காணப்படுவன. ஒருவனது நிழல் அன்னியனைக் குறிக்காமல் அவனையே குறிப்பதாயினும் அந்நிழல் அம் மனிதனே யாகாது. மனிதனின் இருப்பால் நிழலும் இருப்பு (உண்மை— உள்ளதன்மை) அடைவதுபோல, காரண வஸ்துவான பிரம்மத்தின் இருப்பால் (உண்மையால்) காரியவஸ்துவான பிரபஞ்சமும் உண்மை (இருக்கும்தன்மை) உடையதாகின்றது. எனவே நாம ரூபத்தை நீக்கி இவ்வுலகின் சத்தியாம்சத்தைக் கொண்டு, இவ்வுலகு உண்மையாகின்றது.

20. இடைவிடாது விளங்கும் மூல காரணமான ஆன்ம அறிவாற் பார்க்கும்போது, மூவுலகாகவும் கீழ்மேல் ஏழுல காகவும் சொல்லப்படும் இவ்வுலகங்களெல்லாம் எப்போதும் விளங்கிக்கொண்டேயிருப்பதால் உண்மையே யாகும். இவ்வாறு அழிவற்றதுபோற் காணப்படும் காரிய வடிவான நாமரூபப் பிரபஞ்சத்தை மட்டும் கருத்திற் கொண்டு பார்க்கும் போது காரண வஸ்துவாகிய சத்திய ஆன்மாவுங்கூட முற்றிலும் இல்லாததோர் சூனியமாகவே தோன்றும்.

21. தம் முன் காணப்படும் உலகத் தோற்றத்தை மெய் யெனக்கொண்டு களிக்கும் அஞ்ஞானிகளுக்கு இவ்வுலகம் ஈசனது படைப்பென்று சாஸ்திரங்களிற் கூறப்படவேண்டி வந்தது. ஆனால், பந்தப்படுத்துங் கற்பனை மயக்கமுள்ள இவ் வுலகத் தோற்றமானது, தடையற்ற தன் உண்மை சொரூ

பத்தை யுணர்ந்த ஞானிகளுக்கோ மனோமாத்திரத் தோற்றமே யாகக்காணப்படும்.

22. சுத்த பரமான்ம சொரூபத்தில் ஐம்புல அறிவு வடிவாய்க் காணப்படும் அற்பமான இந்த நாமரூப உலகத் தோற்ற மானது, அந்த சத்சித்தான ஆன்ம சொரூபத்தில் உண்டானது போலப் பொய்யாய்த் தோன்றும் மனமாகிய மாயையின் திரு விளையாட்டே என்று அறிக.

23. பரமாத்மாவாம் சொரூப திருஷ்டியில் இல்லாத தாகின்ற இவ்வுலகத் தோற்றத்தை, 'பரிபூரண அறிவுருவான தன்னைத்தவிர அன்னியம் யாதொன்றும் இல்லை' என்றறிந்த ஞானிகள் நிறைவுள்ளதோர் மெய்ப்பொருளாகச் சொல்ல மாட்டார்கள்.

24. தோன்றும் உலகை மெய்யான ஒரு பொருளாக எண்ணி, இலவுகாத்த கிளிபோல், அதில் (சுகம் தேடி) உழலும் மனிதனே! இந்த உலகம் காணப்படுவதால் மட்டும் உண்மை யாகும் என்று நீ கொள்வாயாகில், காணப்படுவதால் கானல் நீரையுங்கூட உண்மையான தென்று நீ கொள்ளலாமே!

25. காண்பானாகிய உனது மூல உண்மைச் சொரூப அறிவைவிட்டுவிட்டு (காணப்படும்) உலகத்தோற்றத்தை உண்மையானதென்று நீ பிரமித்து (விரும்பி) அதன்பின் செல்லாதே. (ஏனெனில்) இவ்வுலகத் தோற்றம் மறைந்து போகக் கூடியதால் அது உண்மையல்ல. ஆனால், காண்ப வனாகிய உனது மூல சொரூபம் (எக்காலத்தும்) மறைபடுவ தில்லை. அதுவே சத்தியமானது என்று கண்டு கொள்க.

26. ஆன்மாவின் மாயா விகார வடிவான மன அறிவுக்குத்தான் இவ்வுலகம் தெரிகிறதே யன்றி, அம் மாயாவிகாரமுடைய மனத்தின் பிறப்பிடமாக உள்ள ஆன்ம சொரூப அறிவில் விளங்குவதில்லை. ஆகையால் இவ்வுலகத்திற்குச் சத்தியத்துவம் பொருந்துமா? பொருந்தாது என்க.

27. சொப்பனமானது (தூக்க மென்னும் இருளை அடிப் படையாகக்கொண்டு) தோன்றுவது போல, தன் நிஜ சொரூ

பத்தை மறந்தமயக்கம் என்னும் இருளை (அறியாமையை) அடிப்படையாகக்கொண்டு தோன்றுகின்ற இந்தத் துச்சமான உலகைக் கண்டு பயப்படாதீர். அடர்ந்த இருள் சேர்ந்த பாச மனத்தின் பொய்த்தோற்றமான இவ்வுலகம் சச்சிதானந்த பரம அறிவொளியின் முன் நிற்காமல் (இருப்பற்று) மறைந்து விடுகின்றது.

28. உலகத்தைக் கண்டு பயந்து விலகும் சாதகர்களே, அவ்வாறு உலகம் என்னும் இடம் ஒன்றுமே (உண்மையில்) இல்லை! காணப்படும் இப் பொய்யுலகத் தோற்றத்திற்கு அஞ்சுதல் கயிற்றில் தோன்றும் பொய்ப் பாம்புக்கு அஞ்சுவதைப் போன்றதே!

29. நினைவுகளின் எழுச்சியுள்ள நனவிலுங் கனவிலும் மட்டுமே இவ்வுலகம் சந்தேகமின்றிக் காணப்படுகிறதே யன்றி, நினைவுகள் கொஞ்சமும் எழாத தூக்கத்தில் காணப்படுகிறதா? (இல்லை, ஆகையால்) நினைவு (வாசனை) களே இவ் வுலகத்திற்குச் சத்தாகும்(ஆதாரமாகும்).

30. நினைவுகளின் விளக்கமே காணப்படும் இவ் வுலகம் என்றால், நினைவுகளற்று (விழிப்புக் காலத்தில்) அமைதியாயிருக்கும் சிலசமயங்களிற் கூட (தியான காலத்தில்) கனவு தோன்றுவதுபோல் திடீரென எழுந்து (மனோராஜ்ய) உலகத் தோற்றம் உண்டாவது(ஏனெனில்), முன்பு நனவில் ஏற்படுத்தப்பட்ட மனோ கற்பனையின் வேகத்தினால்தான் என்று கண்டு கொள்க.

31. வாய்க்குள்ளிருந்தே வலைநூலை வெளிப்படுத்தி, மீண்டும் அதைத் தன் வாய்க்குள்ளேயே இழுத்துக் கொள்ளும் விசித்திர சக்தியுள்ள சிலந்திப் பூச்சியைப் போலவே, மனமும் தன்னுள்ளிருந்தே இவ் வுலகத் தோற்றத்தை வெளிப்படுத்தி, மீண்டும் தன்னுள்ளேயே மறைத்துக் கொள்கின்றது.

32. மனம், மூளை வழியாகவும் ஐம்பொறிகளின் வழியாகவும் வெளிப்படும் போது (உலகமாகிய) நாம ரூபங்கள் உள்ளிருந்தே (மனத்தின் கூடவே) வெளித்தள்ளப் பெற்றுத் தோற்றமாக்கப் படுகின்றன. (அவ்வாறே) மனம் அகமுகப்பட்டு இதயத்தில்

தங்கியிருக்கும் போது அந்த நாமரூபங்களாகிய உலகம் மீண்டும் உள்ளே புகுந்து இதயத்தில் மறைந்து விடுகின்றது.

33. நாம ரூபங்களாலே பேதமாகத் தோன்றும் இவ்வுலகம் நாம ரூபக் கற்பனை நீங்கிஞல் பிரம்மமாகவே விளங்கும். அற்ப புத்தியுள்ள மனிதன் மெய்ப் பொருளாகிய பிரம்மத்தை நாம ரூபக் கற்பனையால் மேலே மூடி, பிறகு அதை உலகமாகக் கண்டு (அதன்மேல் ஆசை அச்சமாதி கொண்டு வீணே) மயங்குகின்ருன்.

34. தன்னை இவ்வுடலாகவே கருதித் தடுமாறுகின்ற தேகாத்மபுத்தியே (அகந்தையே) கற்பனையாற் பொருந்துகின்ற நாமரூப மாத்திரமாகக் காணப்படும் இவ்வுலகை உண்மை போலக் காட்டி ஆசை யுண்டாக்கி, வலிய பந்த பாசத்திற்குள் (தன்னையே) திடீரென வசப்படுத்திக் கொள்கின்ற ஓர் மகா மாயை (பெரும் வஞ்சகம்) ஆகும்.

35. மன நினைப்பில் மட்டுமே விளங்கும் இரட்டைகள் முப்புடிகளோடு கூடிய இவ் வுலக மென்னும் விவகாரமானது, நிறைந்த சிற்கன ஆன்ம சொரூப திருஷ்டியில் அறவே இல்லாததும், கொள்ளிவட்டம் போன்று கற்பனையாய்த் தோன்றுவதுமான பொய்யறிவாம் மனத்தின் சுழற்சியேயாகும் என்றறிக.

36. பெரியோர்களாகிய ஞானிகள் நியாயத் தகுதியோடு உபதேசிக்கும் சிறந்த போதனைகளை அறிய வியலாத இலௌகிக புத்தியுடைய மனிதனே! அடர்ந்த மயக்கத்தே பார்வைப் பிழையாற் பெருத்துக் காணப்படும் இவ்வுலகமானது தக்கவாறு சோதிக்கப்படின், உன்னுடைய வாசனைகளின் சூதால் விரிவாகிக் காணப்படும் (வெறும்) பொய்த் தோற்றமே யாகும்.

37. அளவுக் குட்பட்டதாய் உன்ஞல் காணப்படும் இவ்வுலகம் முழுவதும்—மஞ்சட் காமாலை யுடையவனது கண் மயக்கத்தால் யாவும் மஞ்சள் நிறமாகத் தோன்றுவது போல — அகந்தையுடன் சேர்ந்த வஞ்சகமான காமக்குரோதாதி வாசனைகளால் நிறைந்த மஞேமயத் தோற்றமே யாகும். ஆஞல் உண்மையில் அது எப்போது முள்ள கேவல ஞான பூரணமே!

38. வெய்யிலின் முன் மஞ்சள் நிறம் வெளுத்து விடும். அது போலவே (ஞான ஒளியில் இந் நாமரூப உலகத் தோற்றம் நீங்கி விடுவதால்) ஞான சூரியனுன பரம் பொருளின் படைப்பு அல்ல இவ் வுலகம்! பிரகாசமான இவ்வுலகம் (பின் யாதோ எனின்) மயில் இறகுகளின் சேர்க்கையில் தோன்றும் அழகிய வண்ணச் சித்திரங்களைப் போலவும், மனம் என்னும் ஓர் கண்ணுடியில் பிரதி பலித்துக்காணப்படும் சித்தம் (வாசனைகள்) என்னும் ஓர் மாயப் பெண்ணின் பிரதி பிம்பம் போலவும் (வாசனுவடிவான) பொய்த்தோற்றமே யாகும்!

39. ஆன்ம சொரூபானுபவ அறிவில் இந்த உலகத் தோற்ற மானது வானத்திற் காணப்படும் கொழுத்த நீல வண்ணத்தைப் போன்றதே (உண்மையற்றதே) யாகும். 'தேகமே நான்' என்ற மயக்க வடிவான அகந்தை மோகத்தாற் கலங்கி எதிரிட்டறியும் புல அறிவினுற் காணப்படும் இவ்வுலகம் வெறும் கற்பனையே (உண்மையல்ல) என்றறிக.

40. (ஆன்ம ஞானிகளைத் தவிர) எத்தகைய அறிவாளியின் புத்தியையும் ஏமாறும்படிக் கலக்குகின்ற கொடிய பெரும் பொய்த் தோற்றமாகிய இவ் வுலகம் (எப்படி உண்டாயிற்று என்ருல்) ஆன்ம சொரூபமான தன்னையே தான் பற்றி நிற்பதி னின்றும் நழுவிய குற்றத்தினுலேயே (உண்டாகிக்) காணப் படுகிறதே தவிர வேறு எவ்விதத்தாலும் உண்டானதே யில்லை!

41. விருப்பு வெறுப்பாதிகளையே மூலமாகக் கொண்டு நடக்கும் இவ் வுலக வாழ்க்கை யென்னும் மயக்கமானது, (அஞ் ஞானத்தில்) உறங்கும்போது மெய்போலக் காணப்பட்டு (ஞான) விழிப்புற்ற போது உண்மையில் வெறும் பொய்யாய்ப் போவதற்கே வந்து தோன்றிய பயனற்றதோர் கனவே யாகும்.

42. தனது பரிசுத்த சிற்பர ஆத்ம சொரூபத்தில் சித்த மானது கரைந்து உருவழிந்தால் இச்சை முதலாகச் (இச்சா சக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்று) சொல்லப்படும் பல வித சக்திகளும் பரிசுத்தமான தன் ஞான சொரூபத்தில் (இவ்வளவு காலமாகப்) பொய்க் கற்பனையாகத் தோன்றிக் கொண்டிருந்தவை களே என்று தீர்ப்படைந்து (இனி என்றென்றும் அம் மாயத் தோற்றமின்றி) நீங்கி விடுவனவாம்.

43. சிற்பரா சக்தியின் விலாசமாகக் காணப்படும் முப்புடி வடிவான இவ் வுலகச் சித்திரமானது, சிற்பரமான சிவம் அதிஷ்டானத் திரையாக இருக்க, அதன் மேற் காணப்படும் படக் காட்சியே யாகும் என்றறிக.

44. உண்மையில் இருப்பற்ற இவ் வுலகம் புலப்படுவதால் மட்டும் (உள்ளதாகக்) காணப்படும் பொய்த்தன்மையானது, கயிற்றிற் பாம்பும், கட்டையிற் கள்வனும், மேலும் மயக்கம் சேர்ந்த காட்சியான கானல்நீர்த் தோற்றமும் போன்றதே யாகும்.

45. பொன்னையே மூலப் பொருளாகக் கொண்டு அதன் மேல் உண்டாகித் தோன்றும் பலவித நாம ரூபங்களைக் கொண்ட ஆபரணங்களைப் போலவே, தன்னையே மூலமாகக் கொண்டு, தன்னிடத்திலேயே தோன்றித் தனக்கே காணப்படும் இந்தச் சராசர நாமரூபப் பிரபஞ்ச மெல்லாம் தன்னைத் தவிர வேறோர் அன்னியப் பொருளாகுமா? ஆகாது. எவ்வாறெனின், காணப்படும் பலவித ஆபரணங்களும் பொன்னின் இயற்கையையே உடையன வாகின்றது போலவே யென்க.

46. ஜகம் தோன்றும் போது (ஆன்ம) சொரூபம் (தோன்றாது) மறையும். இல்லையெனில், சொரூபம் தோன்றும் போது ஜகத் தோற்றம் மறையும். தவிர, ஆன்ம சொரூபமும் ஜகத் தோற்றமுமான இரண்டும் மேற்கூறிய வேறு வேறான, இரண்டு வகைகளில்* ஒரே சமயத்தில் விளங்குவதில்லை. (எவ்வாறெனின், கல்லாற் செய்யப்பட்ட நாய்ச் சிலையில்) நாயுங் கல்லும் வேறுவேறாக ஒரே சமயத்தில் விளங்க முடியாததைப் போலவே என்க.

47. ஆன்ம சொரூப விளக்கத்தை மறைத்து முன்னிலை யாகத் தோன்றிக் காணப்படும் உலகம் கனாத் தோற்றம் போன்றதே யாம். எதிரிற் காணப்படும் உலகம் ஆன்ம சொரூப தரிசனத்தால் கவர்ந்து விழுங்கப்படும்போது அது ஆன்ம சொரூபமாகவே விளங்கும்.

---

*மூல நூற் செய்யுளில் "இரண்டும் வெவ்வேறு வகைப்பட" என்றது சொரூபத்தின் வகை (இயல்பு) நாமரூபமல்ல. ஜகத்தின் வகை (இயல்பு) சச்சிதானந்த (சைதன்ய) மல்ல. ஆகையால் நாமரூப மித்யாம்சம் தோன்றும் போது சச்சிதானந்த சத்யாம்சம் விளங்காது. இரண்டும் இவ்விதம் வெவ்வேறு வகையானவையாம்.

48. மறுக்க முடியாத உண்மை போலக் காட்டி நம் புத்தியைத் தடுமாற வைக்கும், முப்புடிகளாலான, மயக்கந் தரும் இவ் வுலகம் முழுவதும் மேலான அப்பரம் பொருளாம் ஆன்மாவுக்கு வேருகாததும் எப்போதும் ஆன்மாவையே இருப் பிடமாகக் கொண்டதுமான சிற்சக்தியின் வடிவமே யாகும்.

49. புகையிஞல் மூடப்பட்டு, உள்ளே பிரகாசித்துக் கொண்டிருக்கும் அக்கினியைப் போல, உலகமாம் நாமரூபக் கூட்டத்தால் மூடப்பட்டு ஞானஜோதி பிரகாசித்துக் கொண்டி ருக்கின்றது. அதன் தனிப்பெருந் திருவருட் கருணையால் நாம ரூபக் கலக்கம் நீங்கி அறிவு தெளிவடையுமே யாஞல் இவ் வுலகத்தின் உண்மை மாண்பானது அஞ்ஞான நாமரூபமா யில்லாமல் சத்திய சிற்சோதியேயாக விளங்கும்.

50. சுட்டறிவுகளுக் கெல்லாம் அடிப்படை யுண்மையாகிற தன் ஆத்ம ஞானத்தை நழுவ விடாத ஞானிகளுக்கு (இவ் வுலகங்களெல்லாம்) தன் ஆத்ம சொரூபமேயாகும். அந்த ஆத்ம திருஷ்டியிஞல் ஞானிகள் உலகத்தைச் சத்தியம் என்று கூறுவதின் உண்மையை, அந்த ஆத்ம ஞானத்தை அடையாத அஞ்ஞானிகள் எப்படி உணர முடியும்?

51. உலக அறிவு எனப்படும் ஐம்புல உணர்வுகளுள் யாதொன்றும் மிஞ்சவிடாது துறத்தலோடு, பிறகு என்றுமே அவற்றிஞேடு பற்ருது நின்று சுயமே விளங்கும் பரமாத்ம தத்துவ ஞானமும் பெற்று, மாயையின் தீய ஆதிக்கம் அறவே ஒழியப்பெற்ற மனத்தை யுடையோரான ஸஹஜ ஞானிகளே **"உலகம் உண்மை"** என்பதன் பொருளை உள்ளபடித் தெளிவாக அறிவோ ராவர்.

52. தன் பார்வையை ஞானமயமாக முதலில் மாற்றிக் கொண்டு அந்த மெய்ஞ்ஞானமயமான பார்வையால் ஒருவன் பார்ப்பாஞகில், ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களாலாகிய இவ்வுலகமும் ஞானமயமான ஆத்ம வஸ்துவாகவே மெய்யானது என்பது விளங்கும். அவ்வாறு பார்ப்பாயாக.

குறிப்பு:— "ஞானமயச் செம்பொருளா மெய்யாகும்" என மூல நூலிற் கொண்டு கூட்டுக.

- chk & add if needed

53. ஒருவன் தனது குறைநோக்கை (தோஷ திருஷ்டியை) மெய்ஞ்ஞான பிரம்ம சொரூபமாகச் (திருஷ்டியாகச்) செய்து கொண்டு அச் சொரூப திருஷ்டியால் (ஞான நோக்கால்) பார்ப்பா ஞகில் துன்பக் கடலாக (முன்பு) அவனுக்குத் தோன்றிய இவ்வுலகம் பேரின்பக் கடலாகவே விளங்கும்.

54. 'காணுங்கண்ணின் தன்மைக்கு வேருகக் காட்சியின் தன்மை இராது' என்ற நியாயப்படி, மனச் சேட்டை யற்றதால் சச்சிதானந்த மாகவே தீரப்பெற்ற தமது பார்வையைக் கொண்டு பார்க்கும் மெய்ஞ்ஞானிகளுக்கு இவ் வுலகமும் உண்மையில் அச் சச்சிதானந்தமே யாகும் என்றறிக.

55. மயங்கிய நோக்கத்தாற் காணப்படும் கனவைப் போலவே, மஞே மாத்திரமாகவே காணப்படும் இவ் வுலகத் தோற்றத்தின் உண்மையானது, மன மாயையைக் கடந்து விளங்கும் பரிபூரண சந்மாத்திர ஞான திருஷ்டிக்கே சரியாக விளங்கும்.

56. உனது மயமாகவே தோன்றிக் காணப்படும் கனவைக் கண்டு எப்போதும் மிகவும் மயங்கும் மாயமாம் பேதை நெஞ்சமே! உனது உண்மையியல்பை நீ அறிவா யாகில் சச்சிதானந்தமாகிய அவ் வியல்பிற்கு வேருக இவ் வுலகம் இருக்குமா? (இராது என்றவாறு).

57. பலவித நாமரூபமாக விரிந்து, மயக்கத்திற்கு ஏது வாய்த் தோன்றும் இப் பாழான (வெறுமையான) உலகமானது, அதன் (நாமரூபத் தோற்றம் உண்டாகாத) ஆதி நிலையில் ஏகமான (சச்சிதானந்தாத்ம) சுக வடிவே யாகும். எவ்வாறெனின், பல நிறங்களை யுடைய பச்சை மயில் அதன் முட்டைக் கரு வடிவில் (பல்வேறு நிறமில்லாமல்) ஒரே விதமா யிருப்பது போலவே. உலகின் இவ் வுண்மையை ஆன்மசொரூப நிஷ்டை யிலிருந்து பார்ப்பாயாக. (அப்போது இதை நீ அறிவாய்).

58. ஞான லக்ஷியங் கொண்டு சித்தியுற்ற மேலோர்கள் பல (நாமரூப) விகாரங்களை யுடைய உலகமாக இதை ஒரு போதுமே பார்க்கமாட்டார்கள். உலகமாகத் திரண்டுள்ள இந்

நாமரூப வேற்றுமைகள் முழுவதும் (விகற்பமற்ற) ஒரே பொரு ளான சிற்சத்தியின் அருள் விலாசத்தளவே யாகும்.

59. பொருந்திய உட்லொன்றை 'நான்' என்று அபி மானிக்கும் அகந்தை யுணர்வின் தொடர்பற்று, ஆத்ம சொரூப ஸ்திதியில் நிலைபெற்ற மெய்ஞ்ஞானியான பெருந்தகைக்கு (ப்ரஹ்ம வரனை நிட்டனுக்கு) இவ் வுலகம் தன் ஆத்ம சொரூப உணர்வாகவே விளங்குவதால், நாம் (இவ் வுலகை அவனது அனு பவத்திற்கு) வேறான ஜடநாம ரூபங்களாகக் காண்பது தவறாகும்.

60. இவ் வுலகத் (நாமரூபத்) தோற்றத்தை அறவே யொடுக் கும் அகமுகத் திறமையால் உலக மயக்கம் நீங்கும்படிச் செய்து, அவ்வாறு உலகத் தோற்றம் நீங்கியபின் உள்ள சூனியத்தை "இது சூனியம்" என்று திருசியமாகப் பார்ப்பவனாகிய தன் ஆன்மசொரூப அறிவுக் கடலில் அந்த சூனியத்தையும் அமிழ்த்தி யொழித்து, மிஞ்சி நிற்பாயாக.

குறிப்பு:— நாம ரூபப் பிரபஞ்சத்தை முன்னிலைப் பொருளாகக் காண்பது போலவே, அது ஒடுங்கிய சூனியத்தையும் "இது சூனியம்" என்று சுட்டியறிய முடிவதால், அந்தச் சூனியமும் ஒரு முன்னிலை விஷயப் பொருளாகி விடவே "இச் சூனியத்தைப் பார்ப்பவன் யார்?" என்று விசாரித்தால் "நான்" என்ற ஆன்மவுணர்வு பளிச்சிடுவதால் (ஸ்புரிப்பதால்), முன்னிலை விடயமாய்க் கண்ட சூனியமும் நீங்கும். இதுவே பாழை அறிவாழியில் 'அழித்தல்' என்ற மூலத்தின் விளக்கமாகும்.

61. எந்த அறிவு வடிவாய் இவ் வுலகமெல்லாம் இருந்து விளங்குகின்றதோ அந்த சத்சித் சொரூப மாகவே நீயும் இதயத் தில் நிலைபெற்றுவிட்டால் இவ் வுலகமானது பயத்தை விளைவிக்கும் மயக்கம் பொருந்திய பொய்த்துவிதத் தன்மை நீங்கி (உன் மெய்த் தன்மையான) ஆன்ம சொரூபத்தோடு ஏகமாய் (இருமையற்று) விளங்கும்.

62. புலனறிவாகப் பொருந்துகின்ற இவ் வுலகத் தோற் றத்தை பரமாத்ம ஞான சொரூபமாகவே யார் காண்கின்றாரோ அந்த ஞானி அவ் வான்ம சொரூபத்தையே ஐம்பொறிகளாலும் அறிந்து அனுபவிப்பவ ராகின்றான் என்றறிக.

## உ. உலக மித்தைத் திறன்.

63. "கண்ணுக் கெதிரே காணப்படும் இவ்வுலகம் நித்தியமான தல்ல (அழிவுடையதே) என்றாலும் (இருக்கும் இப்போதாவது) அது சத்தியப் பொருளே" என்று சிலர் வாத மிட்டுச் சாதிக்க முயல்கின்றனர். ஆனால் நாமோ "அழிவற்று எப்போதும் இருக்கும் தன்மையும் அவ் வுண்மைப் பொருளுக்கு அமைய வேண்டியதோர் அடையாள மல்லவா?" என்று அவர்கள் கூற்றை மறுக்கின்றோம்.

64. "தோன்றும் இவ் வுலகம் அகண்ட ஏக வஸ்துவாயில்லாமற் பாகுபாடு உடையதானாலும், உண்மைக்குப் புறம் பாகாது" என்று சிலர் வாதாடுவர். ஆனால் நாமோ பாகுபடும் மாறுதல் இல்லாத அகண்டத்தன்மையும் (ஏகத்துவமும்) அவ் வுண்மைப் பொருளுக்கு அமைய வேண்டியதோர் அடையாள மல்லவா?" என்று அவர்கள் கூற்றை மறுக்கின்றோம்.

குறிப்பு:— அழிவின்மை, மாற்ற மின்மை, தானே விளங்கல் (சுய விளக்கம்) இம் மூன்றும் சத்தியப் பொருளின் இலக்கணமாகக் கொள்ளப்பட வேண்டியது என்பது ஸ்ரீ ரமண பகவானது தீர்ப்பு.

65. காலம் என்னும் சக்கராயுதத்தால் அழிக்கப்படுகின்ற இவ் வுலகை மெய்ஞ்ஞானிகள் உண்மைப் பொருளாகக் கூற மாட்டார்கள். உண்மைப் பொருளின் இலக்ஷணம் யாதெனில் காலாதீதமும் தேசாதீதமுமான பூரண நித்திய சுய விளக்கமேயாம்.

66. அந்த சாந்திமயப் பரம்பொருளான ஏக சதாசிவமே சர்வ சம்மதமும் பூரணமுமான மெய்ப்பொருள். இங்கு காணப்படும் உலகத் தீமைகள் யாவும், கற்பனையான வேறுபாடு களாகப் பிரிவுற்ற மனத்தின் பொய்யுணர்வே.

67. அறிவை (ஆன்மாவை)த் தவிர தனக்கு வேறோர் தனியிருப் பற்ற இப் பிரபஞ்சம் முழுவதையும் அறிவே சொரூபமான ஆத்மாவுக்கு அன்னியம் போல், நாம ரூபச் சின்னத்தோடு கூடிய அகந்தை மதியால் (தேகாத்ம புத்தியினால்) வேறொரு இரண்டாவது பொருளாக உணர்தல் விரிந்த அஞ்ஞான மயக்கத்தின் விளைவேயாம்.

68. இலௌகிக வழியில் உழன்று இளைத்துத் துன்புற்ற மனமே! நீ இனியாவது ஆராய்ந்து அறிந்து சீர்தூக்கிப் பார்த்துச் சொல்வாயாக; (அதாவது) பொய்யாகிய இவ்வுடலிலுள்ள ஐம்புலன்களால் அறியப்படுவன யாவும் பொய்யே ஆவனவா? அல்லது அதற்கு மாறுன மெய் ஆவனவா? (பொய்யே என்பது தீர்ப்பு).

69. அந்தோ! உண்மை வடிவான தமது சுவஸ்த (ஆத்ம) நிலையினின்றும் நழுவி, பொய்யான அஞ்ஞான இருளில் (ஆவரணத்தில்) முழுகிப் போய், (அங்கு விக்ஷேபத்தால்) 'உடலே நான்' என்று தம்மைப் பாவித்து நிற்கும் ஜீவர்கள் தம் எதிரே தோன்றுவதாகக் காண்கின்ற இவ் வுலகம் இல்லாத பொருளே (அவஸ்துவே) தவிர, உள்ள பொருள் (வஸ்து) அல்லவே யல்ல என்பதாம்.

70. சித்தம் எனப்படும் சித்தின் பிரதிபிம்ப ஒளியிலே உண்மை போலத் தோன்றி மயக்குகின்ற வியாவகாரிக இவ் வுலகத் தோற்றமானது, பரிசுத்த ஞானன்ம ஒளியில் (தோன்ற முடியாத) வெறும் பொய்யே என்றறிக.

குறிப்பு:— சித்தின் (ஆன்ம அறிவின்) பிரதி பிம்பமே சிதா பாசம் எனப்படும். 'சித்' என்ற சுத்த அறிவோடு 'தம்' என்னும் மலவுபாதி சம்பந்தத்தால் உண்டானது போல் தோன்றும் பொய்யறிவே 'சித்தம்' என்பதாம். இதன் விளக்கமாகிய இக்கோவை 244வது பாடற் பொருளை ஈண்டு நோக்கியறிக.

## ௩. உலக மயக்கத் திறன்

71. (யாதொரு பயனுமின்றி) ஆட்டின் முகவாயின் கீழே ஆடியலைந்து கொண்டிருக்கும் தாடியை (மாமிச உறுப்பை)ப் போலவே, இலௌகிக மேன்மைக்கான கர்மங்களைப் பின் பற்றி ஒழுகுவதற்கு மிகுந்த ஆவலோடு வீணுக மக்கள் அலைந்து திரிகின்றனர். நிலையான மோக்ஷந்தரும் ஆன்ம சாதனங்களை வெறுத்துக் கோபிக்கின்றனர். அந்தோ! இத்தகையோரது திறமையோடு கூடிய உழைப்பு முழுவதும் பார்க்கச் சகிக்காத பரிதாபகரமான காரியமாக இருக்கிறது!

72. மக்கள் எள்ளளவு சுகத்திற்காகத் தம் மனத்தை வஞ் சகமான ஐம்புலன்களின் வழியே தொழிற்படுத்தி (புலனறிவுத்

திறமைகளாகிய அபர வித்தைகளில் சாமர்த்தியம் எய்த) மிகப் பாடுபட்டு ஏங்குகின்றனர். ஆனால் எல்லா எண்ணங்களும் எங்கிருந்து முளைத்தெழுகின்றனவோ அந்த விளைநிலமாகிய உள்ளத்தை 'நான் யார்?' என்ற விசாரத்தால் உழுது, அதனால் விளைகின்ற (ஆன்ம சாட்சாற்காரமாகிற) அளவற்ற பேரின்பத்தை விரும்ப மாட்டார்கள்! இது என்ன ஆச்சரியம்!

73. ஆதி தொட்டு (எப்போதுமே) ஆன்மாவாம் சூரியனுக்குத் தர்மபத்தினி யானதால், தன் ஆன்ம வீடான இதயத்திலேயே இருக்க வேண்டிய சந்திரனும் ஜீவன் (மனம்) என்னும் பெண், ஆன்ம சுகத்தை விட்டுவிட்டு (ஐம்பொறிகளின் வழியே) வெளியுலகத்தை அனுபவிக்க விரும்பி ஓடுவதானது அருமையான தன் கற்புநிலை தவறிய பைத்தியக்காரியின் புத்தியற்ற செயலுக்குச் சமானமாகும்.

74. உலகின் மேல் எழும் ஆசையாகிய மயக்கம் ஒழிந்தால்தான் சத்தியமான உயர்ந்த முத்திநிலை கைகூடும். (இவ்வுலக ஆசைகளை விட்டுவிடுவதற்கு மனமில்லாதவர்கள்) உலகத்திற்குச் சத்தியத்துவத்தை (அது இல்லாததாயினும்) வலிய வாதாடி நிலைநிறுத்த முயலுதல், ஒருவன் தன் காம மிகுதியால் ஓர் பரத்தையைக் 'கற்புடையவள்' என்று புகழ்ந்து சாதிக்க முயல்வதையே ஒத்ததாகும்.

குறிப்பு:— பரத்தை கற்புடையவளாகக் காணப்படுவதற்குக் காமுகனின் காம மிகுதியே காரணமாவது போல, இவ்வுலகம் சத்திய வஸ்து என்று வாதிக்க மக்கள் பலரும் கிளம்புவதற்குக் காரணம் உலக சுகங்களின் மேல் அவர்களுக்குள்ள ஆசையே என்பது கருத்து.

## ச. உலக வறட்சித் திறன்

75. பொய்யான இவ்வுலகை மெய்யென்று கருதிக் கலங்கும் பித்தர்களுக்குத்தான் இவ்வுலகப் பொருள்கள் இரமிப்பதற்கு ஏற்றவையே தவிர, ஞானிகளுக்கு அறிவுமயமான பிரம்மத்தையன்றி இரமிப்பதற்குத் தக்க சுகப்பொருள் வேறொன்று மில்லை.

76. உண்மைப் பொருளான ஆன்மாவிற் பதிந்த உணர்வுடைய ஞானிகள் இகழத் தக்க உலகாயத வழிகளில் பிரவேசிப்பார்களா? (பிரவேசிக்கமாட்டார்கள்). பொய்யான இவ்வுலக

நடையில் இறங்குதல் மனவுறுதி யற்ற அற்ப மிருகங்களின் ஐம்புல வுணர்ச்சியே யல்லவா? (மிருக இயல்பே என்றவாறு.)

77. "அளவற்றனவா யுள்ள விஷய போகங்களைப் புறக் கணித்து விட்டு, வெறும் அறிவை மட்டும் அடைவதால் என்ன பயன்?" என்று கேட்பீர்களே யானுல், அவ் வறிவினுலுண்டா கும் பயனுவது, உள்ளத்தில் இடைவிடாமல் எப்பொழுதும் ஆன்ம சொரூபானந்தம் இயல்பாகவே அனுபவிக்கப் படுவதே யாம்.

குறிப்பு:— உலக சுகங்கள் எதுவும் இடைவிட்டும் அற்பமாகவுமே அனுபவிக்கப்படுவன வாதலால், இடைவிடா அகண்டானந்தமான ஆன்ம சுகமே சிறந்தது என்பது கருத்து.

78. உலகத்திலுள்ள எந்த ஒரு பொருளிலிருந்தும் சுகம் உண்டாவது என்பதே யில்லை. உலகப்பொருள்களிலிருந்து சுகம் அடையப்படுவதாக இந்த மூட மனம் எண்ணி மயங்கு வது எப்படித் தகும்? (தகாது என்பதாம்).

79. தற்போது கையிற் பெற்றிருக்கும் விஷயபோகப் பொருள்களைக் கண்டு இறுமாப்பால் சந்தோஷப்படுகின்ற மூட மக்கள் துன்பமடையும்படி அப்பொருள்கள் குன்றி (ஒரு நாள்) அறவே நீங்கிவிடவும் கூடும் !

80. சுழன்று சுழன்று வருகின்ற பண்டை வாசனை களால் தோன்றுகின்ற பயனற்றதும் பாழானதுமான உலக வாழ்வுக் கனவென்னும் பாலைவனத்தில் எல்லா உயிர்களும் அலைந்து திரிந்து, மூவாசைத் தீயின் வெப்பத்தை யடைந்து வருந்துகின்றனர். அந்த வெம்மையை அறவே தீர்த்து வைப்ப தாய், துரீய மெய்ந்நிலையில் (கனவற்ற உண்மை விழிப்பில்) இருந்து விளங்குவது அகன்ற போதி (ஞான) விருக்ஷம் (நிழல்) ஆகிய ஆன்மாவே யாகும்.

## ரு. உலக நடைத் திறன்

81. தன் நிஜ சொரூபம் இன்னதென் றறிந்து, தெளிந்து, இதய மெய்தி, எப்போதும் உபாதியற்ற ஆதார வஸ்துவான பிரம்ம மாகவே இருந்து கொண்டு, தான்கொண்டுள்ள மனித

வேடத்துக்குப் பொருந்தும்படி, சுக துக்கங்களை அடைபவன் போல, உலக நடைமுறைக்கு ஒவ்வுமாறு வாழ்வுத் திரு விளையாட்டை நடத்துவாயாக.

82. அறிய வேண்டியதெல்லாம் அறிந்து, அடைய வேண்டியதெல்லாம் அடைந்திருந்தாலும், நெறிதவறி ஒழுகுவது மேலோர்களுக்குத் தகுதி யுடையதல்ல. ஆகையால், வெளி யுலகில் எந்த இனத்தோடே (நாடு, வர்ணம், ஆசிரமம், மதம்) நீ சேர்ந்தவனாகக் காணப்படுகின்றாயோ, அந்த இனத்தின் நெறி முறைகளுக்குப் பொருந்துவது போலவே ஒழுகுவாயாக.

## கூ. விவர்த்த சித்தாந்தத் திறன்

83. நன்மக்கள் அடைவதற்கான மெய்ப்பொருட் பேறாகிய முடிபை உபதேசிக்க எழுந்தருளிய ஸ்ரீரமண சற்குரு, தாம் அருளிய "உள்ளது நாற்பது" என்ற நூலின் முதல் வெண் பாவில், "நாமுலகம்.......... தானுமவன்" என்று தேர்ந்து கூறியுள்ள காரணத்தால், தாம் மற்ற சித்தாந்தங்களை விலக்கி (மந்த, மத்திம, தீவிர, அதிதீவிர பக்குவிகளுள் தீவிர பக்குவிகளின் சந்தேகங்கள் நிவர்த்தி யாவதற் கேற்ற) விவர்த்த சித்தாந்தத் தையே உண்மை சித்தாந்தமாகக் கொள்ளும்படி (அவ் வுள்ளது நாற்பது என்னும் நூலால்) உபதேசிக்கிறார் என்று அறிக.

குறிப்பு:— ஸ்ரீ பகவான் ரமணரின் நிஜானுபவ சித்தாந்தம் அஜாதமே யென்றாலும் விவர்த்தத்தையே உள்ளது நாற்பதின் உபதேச நெறியாகக் கொண்டனர்.

இவ் வுலகைக் கடவுள் சிருஷ்டித்தார் என்று கடவுளைக் காரணமாகவும் உலகைக் காரியமாகவும் கொண்டபிறகு, அவை என்றும் தனித்தனியே நிலைபெறுவனவை என்பது ஒருவித சித்தாந்தம்; இரண்டும் பிறகு ஒன்றாகி விடும் என்பது மற்றொரு சித்தாந்தம்; இப்போதே இரண்டும் ஒன்றாகவேயிருக்கின்றன என்று இன்னொரு சித்தாந்தம்; இன்னவையன்ன பல வேறு சித்தாந்தங்கள் வழக்கில் உள்ளன. ஆனால் இவை மந்த, மத்திம அதிகாரிகளுக்கே ஏற்புடையன. தீவிரர்களுக்கோ இவ் வுலகத் தோற்றமும், அதை விளக்கும் அறிவும், அது விளங்கும் ஆதாரமும், அதை விளங்கிக் கொள்ளும் ஜீவனும் காரண காரிய பேதமின்றி ஏக காலத்தில் தோற்றும் ஒரே பொருளே என்று தீர்ப்பளிப்பது விவர்த்த சித்தாந்தம். இது காணப்படும் உலகின் இருப்பிற்கு ஓர் சமாதானமே. ஆனால் அஜாதமோ, உலகம் தோன்றிற்று என்றோ, காணப்படுகிறது என்றோ கூட ஒத்துக்

கொள்வதில்லை. உள்ளது உள்ளபடியே என்றும் உள்ளது என்று சித்தாந்திப்பதால் அது அதிதீவிரர்களுக்கு மட்டுமே விளங்கக்கூடிய உயர்வறவுயர்ந்த சித்தாந்தமாகும். ஆனால் ஸ்ரீ பகவான் அதைத் தவிர்த்து ஒருபடி இறங்கியே வந்து விவர்த்தசித்தாந்தத்தை உள்ளது நாற்பதில் உபதேசிக்கின்றனர். இதையே 'நயந்துரைத்ததால்' என்ற இந் நூலின் மூலவாசகம் குறிக்கின்றது.

தீவிரர், தம்மால் கிரகிக்க முடியாத அஜாதத்திலும், தம்மால் ஒத்துக் கொள்ள வியலாததோர் பொய்போற் றோன்றும் துவிதம் முதலிய இதர சித்தாந்தங்களிலும் தம் மனம் அமைதியடையாத காரணத்தால், அன்னார் மன வமைப்புக் கேற்ற விவர்த்தத்தையே, மற்றவற்றைத் தவிர்த்து, உபதேசித்தார் என்று கண்டுகொள்க.

84. *மனத்தின் வழியாக (மனம் தொழிற்படும் ஐம்புல வழியே) வெளியே வந்து காணப்படும் நாமரூபப் பிரபஞ்சம் முழுவதும் புதையலைப் போல இதயத்தில் வாசனைகளின் வடிவில் முன்பே புதைந்திருந்தவையே. அவை இப்போது எதிரே ஐம் புலவழிக் காணும்படி வெளிப்படுத்தப்பட்ட பழங்கதையே என்று நன்றாக அறிந்து கொள்க.*

85. *ஆன்மா தானே (தன் மாயையால்) பல வித நாமரூபப் பிரபஞ்சமாகக் காணப்படுகிறதே தவிர தான் ஒரு காரண கர்த்தாவாக (ஈசுவரனாக) இருந்து கொண்டு உலகைப் படைத் தல், காத்தல், அழித்தலாகிய முத்தொழிலைச் செய்பவ னல்ல.*

86. *'தானே இவ் வுலகமாகக் காணப்படுகிறோம்' என்ற உண்மையைத் தானே அறிய முடியாமல் தனக்கோர் தடு மாற்றம் (கலக்கம்) ஏன் தான் ஏற்பட்டதோ என்று கேட்காதீர். (அவ் வுண்மையை அறிய, சரியான வழி யாதெனில்) "இந்தத் தடுமாற்றம் யாருக்கு உண்டாகிறது?" என்று விசாரித்துத் தன் உண்மையை உணர்வீரேல் இந்தத் தடுமாற்றம் ஆன்மாவாம் நமக்கு என்றுமே இருந்ததில்லை என்பது விளங்கும்.*

குறிப்பு:— தான் அல்லாததும் பொய்த் தோற்றமுமான அகந்தைக் குத்தான் இத் தடுமாற்றமே தவிர தனக்கு என்றும் இல்லை என்ற அஜாதானுபவம் விளங்கும். இது அடுத்த பாடலில் தரப்படுகின்றது.

87. *'ஆன்மா தானே உலகமாகக் காணப்படுகிறது' என்பது எவ்வாறெனின், ஒரு கயிறு தானே பாம்பாகத் தன்னைக் காண்பது போலாகும். ஆராயுமிடத்துப் பாம்பே அங்கில்லை*

என்பதால், தோன்றுவது போன்ற இவ்வுலக சிருஷ்டி ஒரு காலத்திலுமே உண்டானதே யில்லை என்பதே (*அஜாதமே) பரம உண்மையாம்.

88. விசாரிக்குமிடத்து, எந்த ஓர் மயங்கிய நினைவைத் தவிர்த்து அப் பாம்பு வேருகாதோ, அந்த நினைவே யல்லவா கயிற்றில் அன்னியமானதோர் பாம்பைத் தோற்றுவித்து (சிருஷ்டித்து), அதைக் கண்டு பயந்து துன்புறுவதால் அத் தோற்றத்திற்குக் காப்பும் (ஸ்திதியும்) செய்து, (பின் தன் தெளிவால் அப் பாம்புத் தோற்றத்தை) நீக்குவதும் (அழிப்பதும்) ஆகும்!

குறிப்பு:— எனவே சிருஷ்டி, ஸ்திதி, லயாதிகளுக்கு அவிசாரத்தால் விளைந்த அஞ்ஞானமே காரணமும் கர்த்தாவுமாகுமே தவிர கடவுட் பரம்பொருளாகிய ஆன்மா வல்ல. இந் நூலில் 91 ஆம் பாடற் பொருளையும் இங்குக் கருதுக.

89. விதை முளை இவை போன்றவை ஒன்றுக்கொன்று காரணமாய்த் தம்முள் ஒருங்கே ஒத்தும், (காரிய வடிவானபின் காரணம் மறைதலால்) பிறகு ஒன்றுக்கொன்று முரண்பட்டு அழிந்தும் போவனவாம். இக் காரண காரிய வியவகாரம், அறியாமை வடிவான மனத்தின் கற்பனையே தவிர, உண்மையில் அவ்வாறு அவை ஒன்றிலிருந்து ஒன்று காரியப்பட்டுத் தோன்றுவதே யில்லை.

90. ஓர் கயிறே பார்க்கின்றவனுகிய அறிவு வடிவாயிருக்குமாளுல், பாம்பாகக் காணப்படுவதற்கு அது தனக்கு அன்னிய ஸத்தாக எவனையும் (எந்த வஸ்துவையும்) நாடுமா? (வேண்டாது என்க). ஆகவே, ஆன்மாவே அறிவு மயமான உண்மைப் பொருள்; உலகமோ அவ் வறிவின் திரிபேயாகும்.

குறிப்பு:— மூல நூலில், "ஓர் பழுதை அறிவாக மேவினுல் பாம்பாயிடற்கு அன்னியமா யாவனையும் வேண்டுமோ" என்று கொண்டுகூட்டிக் கொள்க.

91. ஆன்மா தன் இருப்பு மாத்திர (சன்மாத்திர)த் தன்மை நீங்கிச் சலன முற்றதனுலோ அல்லது வேறு எக்காரணத்தினுல் இவ்வுலகம் ஏற்பட்டதோ என்று கேட்டால்,

---

* இக்குருவாசகக் கோவை 100-ம் பாடலை ஈண்டு நோக்குக.

பொய்யான அஞ்ஞானத்தினுலே (இவ்வுலகம்) தோற்ற முற்றதே தவிர, ஆன்மாவுக்கு ஒருகாலும் ஒரு சலனமும் இல்லை யென்றறிக.

92. (குடத்தி லிருக்கும் ஆகாயத்தை) அகண்டமான மகாகாசத்தினின்றும் வேருகாததாய்க் காணும் ஏகதிருஷ்டியில் உபாதியாக வேறுபட்டுத் தனிவடிவமுள்ள குடமே தோன்று தென்றால், அந்தக் குடத்தின் அசைவால் குடத்தினுள்ளிருக்கும் ஆகாயம் அசைவதாகக் கூறுவது மிகையேயாம். (பிழையேயாகும்).

93. பரிபூரண ஆன்ம விளக்கத்தின்கண் அனுத்ம உடல் உலகங்களாகிய பின்ன வஸ்துக்கள் ஒருபோதும் விளங்க முடியாது. அப்படியிருக்க, அழிவுறும் உடல் உலகங் களின் சலனத்தால் ஆன்மாவுக்குச் சலனம் உண்டாவதாகக் கூறுவது அறிவீனமே.

94. பரிபூரண நிறைவால் சலன மற்ற ஆன்மாவானது, (கற்பனை) உபாதியான மனத்துக்கு நேரும் சலனத்தால் தாமே சலிப்பது போலத் தோன்றினுலும், ஆன்மாவின் பிரதிபிம்பமாக (சிதாபாசமாக) 'நான்' என்றுதிக்கும் மனத்திற்குத்தான் சலனமே தவிர, மெய்யான பரமான்மாவிற்கு எக்காலத்தும் சலனமே யில்லை யென்றறிக.

95. இரண்டற்ற பரமான்மாவிற்கு இருள்மயமான (மனம்-புத்தி-சித்தம்-அகங்காரம் என்னும் அந்தக்கரண உபாதி) மனோபாதி எப்படி வந்த தென்றால், மயக்க வடிவான ஜீவனின் திருஷ்டியால்தான் (திருஷ்டியில் மட்டும் தான்) உண்டாயிற்றே தவிர (அதாவது உண்டானதுபோல் தோன்றுகின்றதே தவிர) அறிவு உருவான ஆன்மாவிற்கு உபாதி சம்பந்தம் உண்மையாக ஏற்பட்டதே யில்லை என்பதுதான் தீர்ப்பு. இவ்வாறு உணர்ந்து கொள்க.

விளக்கக் குறிப்பு:— ஆன்மாவிற்கு உபாதி வந்திருப்பதாகவும் அது எப்படி வந்தது என்றும் ஐயுற்றுப் பிரஸ்தாபிப்போர் (உண்மை இருப்பற்ற) அஞ்ஞான வடிவ ஜீவர்களே தவிர, ஆன்ம சொரூபிகளான ஞானிகள் அல்லர். ஆன்மாவின் (ஞானியின்) திருஷ்டியில் தமக்கு அந்தக்கரண உபாதிகள் உண்டாயிருப்பதான அனுபவமே யில்லை. பிரமை பிடித்தவன் திருஷ்டியில்தான் ஓர் கயிறு பாம்பாகத் தோன்றுகிறதே தவிர, கயிற்றுக்குப் பாம்புத் தன்மை மெய்யாகவே வந்துவிடவில்லை.

அதாவது கயிறு பாம்பாக மாறிவிட்டதல்ல. ஆகையால் சித்துக்கு (ஆன்மாவிற்கு) உபாதி என்றுமே வந்ததில்லை என்பதே அனுபவம்;

''சரி, அவ்வாறுயின், அந்த தோஷ திருஷ்டியாவது ஆன்மாவிற்கு எப்படி வந்தது?'' என்று ஞானிகளை வினவலா மல்லவா என்றால், அதுவும் சரியல்ல. ஏனெனில், தோஷ திருஷ்டி வந்திருப்பதாகவே அவர்கள் ஒப்புக் கொள்பவரல்லர். ஆதலால், அது வந்திருப்பதான அனுபவ முடைய அஞ்ஞானிகள் தான், ''அது எப்படியிருக்கிறது? அது எது? அது யாருக்கு?'' என்று ஆராயக் கடமைப் பட்டவர்களே தவிர, அப்படி எதுவுமே வந்திருப்பதாக ஒப்புக் கொள்ளாத ஞானிகள், அது வந்ததற்கு ஏன் காரணம் சொல்ல முனைவர்? அதனால் தான் ஸ்ரீ ரமண பகவான் ''வந்ததோ, அது இருப்பதோ உண்மையென்று நீயே சொல்வதால், நீ தான் அதை (அகந்தையை) யார் என்றும், எங்கிருந்து எப்படி என்றும் நாடிப்பார்த்து விடையளிக்க (கடமைப்பட்டவன்) வேண்டும்'' என்று அடிக்கடிக் கூறி வந்தனர்.

96. *(அகண்டமாய் ஜ்வலிக்கும் தீப்பிழம்பிலிருந்து பொறி கிளம்ப முடியாது. ஏனெனில் அகண்ட தீப்பிழம்பிற்கு, அன்னியமாய்ப் பொறி கிளம்பவோ, விழவோ இடம் ஒன்றும் மீதியில்லாததால். ஆனால்) கண்டமான தீப்பிழம்பிலிருந்து மட்டுமே தீப்பொறி வெடித்து எல்லா விடத்திலும் தெறித்து விழுவதுவாம். அது போலவே, அகண்ட பரிபூரண ஞானமயப் பரம்பொருளினின்றும் ஜீவன் 'நான்' என்றதோர் அணுமாத்திர அறிவாய்க் கிளம்பவே இயலாது என்க.*

குறிப்பு:— எனின், ஜீவேசுவர ஜகத்தாகக் காணப்படும் சிருஷ்டி, பின்னப்பட்ட சிதாபாசனின் கற்பனைக்கே தோன்றிக்காணப்படுகிறதே தவிர, ஞான கன பரமான்மாவிடம் சிருஷ்டியாதியில்லை.

97. மாயையின் வலிமையால் மருண்டு விகாரப்பட்ட மனத்தின் பகிர்முகத் திருஷ்டிக்கே தேகம் என்று ஒன்று தோன்றுகின்றதே தவிர, சத்திய ஆன்மாவின் (இயல்பான) யதார்த்த திருஷ்டியில் தேகம் என்பதே யில்லை யாகையால் கேவல ஞானவெளியான (சிதாகாச) ஆன்மாவை 'தேகி' என்று கூறுவது தவறு.

குறிப்பு:— 'க்ஷேத்ரம்-க்ஷேத்ரஜ்ஞன்' என்றும் 'தேகம்-தேகி' என்றும் பகவத்கீதையில் கூறப்படுவது, அஞ்ஞான மனத்திற்கு வேறு விதமாகக்கூறின் விளங்காதே என்று பகவத் கிருபையாற் கூறப்பட்ட உபசார வார்த்தைகளே; அன்றி உண்மையில் அல்ல என்றவாறு.

98. 'தேகமே நான்' என்றெழுந்து அகந்தை வியவகரிக்கும் சமயத்தில் தவிர, சராசரமான உலகம் என்னும் ஓர் அன்னியப் பொருள் தோன்ருது என்ருல் ஜீவன் அபரம் (தாழ்ந்தவன்), கடவுள் பரம்' என்று (இன்னும் இது போன்ற பர அபரங்களும்) மயக்கத்தால் தோன்றுகின்ற நானுவிஷயங்கள் இல்லாத நிலையில் (அன்னியம் தோன்ருத ஏக சுத்த நிலையில்) ஆன்மாவை "சாட்சி" என்று கூறுவதும் குற்றமே !

விளக்கக் குறிப்பு:— ஆன்மா 'ஜீவசாக்ஷி, சர்வ சாக்ஷி என்றெல்லாம் நூல்களிற் கூறப் பெற்றுள்ளது மேலே முன் பாடலிற் சொல்லியபடி உபசாரமே தவிர உண்மையல்ல. ஏனெனில், பிற பொருள்களைக் காணும்போது மட்டுமே காண்போன் அவற்றின் சாக்ஷியாக முடியும். பிற பொருளே யற்ற ஏக நிலையில் எதையுங் காணுத அவன் எதற்குச் சாக்ஷியாவான்? ஆகவே ஆன்மாவை 'சாக்ஷி' என்று சொல்வதும் இழுக்கே என்றனர்!

99. உடலை விட்டு உலகமில்லை, உடலும் மனத்தை யன்றி ஒரு பொழுதும் இராது. மனமும் உணர்வு (அறிவு) வடிவான சித்தை விட்டு ஒருகாலும் நிற்காது. அந்தச் சித்தும் உள்ள (உண்மைப்) பொருளாகிய சத்தை விட்டு ஒருகாலும் அன்னியமாக இராது.

குறிப்பு:— எனவே உலகம் முதல் யாவும் சச்சித் ரூப ஆன்மாவே என்பது முடிவு; அல்லது ஆன்மாவே உள்ளது; மற்றவை என்று ஒன்றுமேயில்லை என்று முடிவு.

## எ. அஜாத சித்தாந்தத் திறன்

100. (தம்மிடம் வந்து வினவும் மக்கள்) அவரவர் கொள் கைக்கும், நிலைக்கும், பக்குவத்திற்கும் ஏற்ப சற்குரு பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகள் அநேகவித சித்தாந்தங்களை (தீர்ப்புக் களை) அவரவர்க்குச் சொல்வதுண்டு; எனினும், அவர்தம் நிஜானுபவமானது அஜாத சித்தாந்தமே என்று அவர்கூற யாம் கேட்டிருகின்ழேம். ஆகையால் *அஜாதமே சத்தியம் என்று அறிந்து கொள்க.

---

*அஜாதம்: முக்காலத்தும் மூவிடத்தும் ஜக, ஜீவ ஈசுவரர்கள் என்னும் திரிபதார்த்தத் தோற்றம் யாதொன்றும் உண்டாகவே யில்லை; உள்ள பொருள் உள்ளபடியே விளங்கிக் கொண்டிருக்கிறது என்ற உண்மை.

101. முன்பு அருச்சுனனுக்குக் கண்ணபிரான் கீதையின் ஆரம்பத்தில் (இரண்டாவது அத்தியாயத்தில்) கூறியதும் உயர்வற வுயர்ந்த இவ் வஜாத சித்தாந்தமே தான். ஆனால் அருச்சுனன் அதைக் கிரகிக்கும் ஆற்றல் அற்றவனாய்த் தடுமாறியதால்தான் ஸ்ரீ கிருஷ்ணன் ஏனைய சித்தாந்தங்களையும் அதன் பிறகு பதினாறு அத்தியாயங்களாக்கிக் கூறவேண்டி வந்தது என்று கண்டுகொள்க.

## அ. படைப்புடன்பாட்டுத் திறன்

102. *சாஸ்திரங்கள் பிரபஞ்ச சிருஷ்டி முறையைப் பற்பல விதமாக (ஒன்றுக்கொன்று முரணாக) கூறுகின்றனவே, அதன் கருத்து இதுவேயாகும். இன்னவாறுதான் உலகம் உண்டாயிற்று என்று போதிப்பதல்ல அந் நூல்களின் நோக்கம் ! உலகத் தோற்றத்தின் மூலமான முதற் பொருளை விசாரித்து அறியுமாறு சாதகனைத் தூண்டுவதே அவைகளின் நோக்கம் (உள்ளக் கிடக்கை) ஆகும்.*

விளக்கக் குறிப்பு:—— சிருஷ்டி வந்தது உண்மையாயின் வந்த விதத்தை வருணிக்கும் சாஸ்திரங்கள் பலவும் தம்முள் முரணின்றி ஒரே விதமாகத்தான் சொல்ல முடியும். அவ்வாறின்றிப் பற்பல விதமாய் முரண்பாடாகச் சொல்லப்பட்டிருப்பதிலிருந்து 'வந்தது' என்பதே பொய் என்று தீவிர பக்குவிகள் கண்டு கொள்ளட்டும் என்றும், அதே சாஸ்திரங்கள் உலக சிருஷ்டி முறையைப் பற்றிக் கூறும்போது மட்டுமே முரண்பாடாகக் கூறுகின்றனவே தவிர, பரவஸ்துவாகிய ஆன்மாவைப் பற்றிக் கூறும்போது, அதன் ஏகத்துவம், அகண்ட நிலை, அழிவின்மை, மாற்றமின்மை, சுயவிளக்க முடைமையாதிகளை ஒரே விதமாகவே கூறுகின்றனவாதலால், இதிலிருந்தும் ஆன்மாவின் அஜாத ஸ்திதியே சத்தியம் என்று பக்குவிகள் கண்டு கொள்ளட்டும் என்றும், அந்தரங்க நோக்கங் கொண்டே சாஸ்திரங்கள் சிருஷ்டியை முரணாகக் கூறின; அன்றி, சிருஷ்டிக் கிரமத்தைத் திட்டவட்டமாகச் சொல்லித் தீர்ப்பதல்ல அந் நூல்களின் நோக்கம் !

## ஆ. இறைதொழிற் றிறன்

103. *நிர்விகார ஆன்மா (நித்தியப் பிரத்யட்சமாய்த் தான் பிரகாசித்துங் கூட) தன் மாயாசக்தியால் தான் விளங்காமல் மறைந் திருந்துகொண்டு, நனவு கனவு துயில் என்னும் மூவவஸ்தைகளாகிய கயிற்றை மனாகாசத்தில் வீசி எறிந்து*

நிறுத்தி, தேகாபிமான முடைய ஜீவனை அவ் வவஸ்தைகளிற் சஞ்சரிப்பவனுக் அதன் மேல் ஏற்றிச் சுழற்றித் திருவிளையாடல் புரிகின்றான்.!

விளக்கக் குறிப்பு:— காணப்படும் சகல பொருள்களின் இருப்புக்கும் ஆன்மாவின் இருப்பே ஆதாரமாக இருந்துங்கூட ஆன்மா யாருக்கும் விளங்காம லிருப்பதை 'மாயத்தாலே தான் மறைபட்டு நின்று' என்று ஆசிரியர் கூறுகின்றார்.

செப்படி வித்தைக்காரன் ஆகாயத்தில் கயிற்றை எறிவதும் அது அங்கே நிற்பதும், பிறகு அவன் தனக்குட்பட்ட ஒருவனை அக் கயிற்றின் உச்சியில் ஏறி நிற்கச் செய்வதும் அசம்பாவித மாயவித்தையாவது போல, இதயத்தில் மறைந்து நிற்கும் ஆன்மாவின் இருப்புமாத்திர சந்நிதியில் பொய்யாகத் தோன்றும் மனகாசத்தில் மூவவஸ்தைகளுக் குட்பட்ட வாழ்வினனைய்த் தான் உழல்வதாகத் தேகாபிமானியாம் ஜீவன் தன்னைக் காண் கின்றான் ! மூலநூலில் 'அவிகாரி' என்றதால் 'ஆன்மா ஆடுகின்றான்' என்று கொள்ளாமல் ஜீவனே தன்னை விகாரியாகக் **காண்கின்றான்** என்று பொருள் கொள்க.

104. மாயைக்கு அதிகாரம் கொடுத்த பரமேசுவரனை கடவுள், அவ்வதிகாரம் பெற்ற மாயை யானவள் செலுத்தும் வஞ்சகமான கட்டளைகளுக்கு (அஞ்ஞானத்தாற் பாசபந்த முறும் படி ஜீவர்களை மயக்கும் சக்தியின் லீலைகளுக்கு)த் தானுங்கூட அடங்கி ஒழுகுவது போன்று (கட்டுப்பட்டது போல) பகிர்முக ஜீவர்களது திருஷ்டிக்கு (புத்திக்கு)த் தோன்றுவான்.

விளக்கக் குறிப்பு:—மாயைக்கு அதிகார மளித்தலின் தத்துவமாவது; நாம் நிச்சலத் தன்னிருப்பில் உள்ளபோது வாசனைகளினால் எண்ண வடிவுறும் விருத்தியை அவ்வாறு பரிணமமுற நாம் அனுமதிப்பதே மாயைக்குப் பரமேசுவரன் அதிகாரம் அளிப்பதாம். அதன் பிறகேபோலித் தன்மை யுணர்வான 'நான் தேகம்' என்னும் முதலெண்ணமும் பிறகு அதன் விரிவான முன்னிலை படர்க்கையாதி உலக சிருஷ்டியும் உண்டாகின்றன. முதலில் உற்பத்தி (சிருஷ்டி)யாகிய 'நான்' என்னும் ஜீவனது திருஷ்டியில் (தான் பந்தப்பட்டிருப்பதால்) தன்னால் அனுமானிக்கப்படும் கடவுள்-ஞானிகள் ஆகியோரும் மாயையின் ஆணைக்கு உட்பட்டவர்கள் போலவே அவனுக்குத் தோன்றுவதில் ஆச்சரியமில்லை.

கடவுளும் ஜீவன்முத்தர்களுங்கூட சிற்சில சமயங்களில் மாயையின் ஆதிக்கத்திற்கு உட்பட்டதுபோலப் பாமரர் அறிவுக்குத் தென்படுவது ஜீவர்களது அஞ்ஞான திருஷ்டி தோஷமே தவிர உண்மையல்ல. ஸ்ரீ பகவான் ரமணரின் உடல்வாழ் நாட்களில் அவர்

உலகாயதர்களின் போக்கிற்கு உடன்பட்டாற் போன்று சிலசமயம் பாமரர்கட்குத் தோற்றுவது இத்தன்மைத்தே என்றறிக.

105. சங்கற்ப மின்றியே ஆகாயத்தில் உதிக்கும் சூரியனின் சந்நிதி மாத்திரத்தாலேயே பலவகையான சேதன அசேதன சராசரங்கள் தொழிற்படுகின்றதைப் போலவே, இறைவனுல் தான் யாவும் நடைபெறுகின்றன என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

106. காந்தக் கல் அக்கினியைக் கக்குவதும், தாமரை மொட்டின் உள்ளிதழ்கள் மலர்வதும், ஆம்பற் பூ குவிவதும், அளவற்ற சகல உயிரினங்களும் எழுந்து, உழைத்து, ஓய்வதும் (இவை யாவும்) சூரியனின் சந்நிதி மாத்திரத்திலே நடை பெறுகின்றனவே தவிர சூரியனிடம் சங்கற்பமோ கர்த்ருத்வமோ இல்லை என்பது தாற்பரியம்.

107. இறைவன் (சிருஷ்டி, ஸ்திதி, லயம், திரோதனம், அநுக்கிரகம் என்னும்) பஞ்ச கிருத்தியங்களையும் பற்றற்றுச் செய்கின்றான் என்பது எவ்வாறெனின், காந்தத்தின்முன் ஊசி நகர்வதும், சந்திரனின் முன் சந்திரகாந்தக் கல் நீர் வடிப்பதும், குமுதம் மலர்ந்து தாமரை குவிவதும் போல, நடை பெறுவன வேயாம்.

108. சங்கற்ப மற்றவரான இறைவனது சந்நிதியில் எண்ணற்ற தொழில்களுக்கு (கர்மங்களுக்கு) உள்ளாகின்ற ஜீவர்கள் தாமே தம்மை ஈடுபடுத்திக் கொள்கின்ற பல்வேறு வழிகளில் தத்தம் கன்மானுசார விதியின் போக்கின்படியே புகுந்துழன்றும், (பிறகு அவைகளின் நிஷ்பிரயோசனத்தை அறிந்து தெளிந்து வைராக்கியத்தால்) திரும்பி உண்முகப் படுவதால் வீடும் பெறுகின்றனர்.

விளக்கக் குறிப்பு:— மூல நூலில் "தாம் பொருத்துங் கதிபலவும் கன்மானுசார விதிவழி புக்கு, மீண்டு வீடு எய்துவர்" என்று கொண்டுகூட்டிக் கொள்க.

பந்தமுத்திகளுக்கு ஜீவன் காரணமே யன்றி ஈசன் காரணமல்ல. விரும்புங்கால் பந்தமும், விரும்புங்கால் மோக்ஷமும் நேர்வது ஈசனது சந்நிதியின் அனுக்கிரக விசேஷமே யெனினும் ஈசன் காரணனல்ல.

109. உலகில் நடக்கும் சுபாசுப காரியங்கள் சூரியனை யொட்டாதது போலவும், மற்ற (மண், நீர், நெருப்பு, காற்று ஆகிய) நான்கு பூதங்களின் குணங்களும் (முறையே (1) உருவ

கனமாதிகள் (2) சலனம் (3) வெப்பம் (4) வேகம் முதலியன) எல்லையற்ற ஆகாயத்தை ஒட்டாதது போலவும், உலக உயிர்களின் கர்மங்கள் மனோதீதனான இறைவனைப் போய்ச் சேரவே சேரா. இது திண்ணம்.

குறிப்பு:— 'கருத்தனைக் கன்மம் உறுச் சீர் இத்தன்மைத்து' என்று மூல நூலின் தாற்பரியம் கொள்க.

திண்ணமாகவே ஜீவர்களின் கர்மம் கடவுளைச் சேராத சீர்மையது; அஃது எவ்வாறெனின் இவ்வாறும் என்று இரு உதாரணங்கள் தந்தனர்.

## க0. திரி பதார்த்தத் திறன்

110. 'ஜீவன் (மனம் - நான்) யார்?' என்று இதயத்தில் உறுதியாக முடிவுவரை விசாரித்தால் 'ஜீவன்' என்று ஒன்றுமே இல்லாமல் சிவனே (ஆன்மாவே) பரவெளியாக விளங்குவது அனுபவமாகும். இந்த உலகை ஆவலோடு காண்பவனாகிய ஜீவன், மேற்கண்டவாறு இல்லாமற் போனபின், காட்சியாகிய உலகு என்று ஒன்று உள்ளதாகக் கொள்வது வெறும் பைத்தியந்தான் !

விளக்கக் குறிப்பு:— விசாரத்தால் 'காண்பான்' பொய்யாயொழிந்த பின் 'காட்சி' யாகிய உலகம் மெய்யான ஒரு பொருளாக எப்படி மிஞ்சியிருக்க முடியும்? ஆகவே காண்பானின் சத்தியமே காட்சியின் சத்தியமுமாம். அதாவது திரிபதார்த்தங்களுள் இறையாகிய ஆன்மா ஒன்றே மெய்ப்பதார்த்தம்.

111. இவ்விதம் விசாரிப்பதால் ஜீவன், உலகம் என்னும் இரண்டும் நீங்கிய பிறகு நேரே (சாக்ஷாத்) விளங்குவது (ஆன்மாவாம்) சிவம் ஒன்றே. இதுவே குறைவற்ற (பாரமார்த்திக) உண்மை யாயினும், (எண்ணுகின்ற) தான் (ஜீவன்) இறந்த பிறகு அவ்வுண்மையை, 'இது அத்துவிதம்-இரண்டற்றநிலை' என்று கூட எண்ணுவது எப்படி அல்லது யார் எண்ணுவது?

குறிப்பு:— எண்ணப்படாததால் அத்துவிதம் ஓர் மதமல்ல. மதிக்கு அப்பாற்பட்டது.

112. இறைவனைப் போலவே ஜீவனும் உலகமும் எப்போது முள்ள இரு வேறு உண்மைப் பொருள்கள்தான் என்று வாதிப்ப தென்றால், அது இறைவனது பரிபூரணத் தன்மைக்குக்

குறைபாடு கூறுவதே யாகும். இறைவன் பின்னப்பட்டவன் (பூரண னல்ல) என்று ஒத்துக்கொண்டா லன்றி ஈச ஜீவ ஜகம் மூன்றும் சத்தியம் என்று வாதிப்பது கூடாததாகும்.

விளக்கக் குறிப்பு:— மும்முதலும் மும்முதலே என்று கூறும் துவைதிகள் இறைவனைப் பூரணன் என்று ஒப்பாதவர்களாகி விட நேரும். ஆகையால், அவர்கள் ஒன்று துவிதவாதத்தைக் கைவிட வேண்டும் அல்லது இறைவனை அபூரணன் என்று இகழ்ந்து தள்ளியவர்கள் ஆக வேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப் படுகின்றது.

113. *அறிவுப்போலி யாகத் தோற்றும் ஜீவன் தான் மெய்யாகவே பரத்திற்கு வேறான ஓர் முதற் பொருளாய் இருக் கின்று னென்றால், 'ஜீவனது செயல்கள் (தான் ஓர் பொரு ளல்லாததால்) சிவனது செயல்களே யாகும்' என்று ஆன்றோர் கூறியருளிய முடிபு அனுபவத்தா லன்றி வெறுங் கற்பனை யாலேயே கூறப்பட்டவை என்பது போல் ஆகும். (அவ்வாறு நாம் கொள்வது சரியா? கூடாதாகலின் ஜீவன் பரத்தினும் வேறான தோர் உண்மை என்பது தவறு என்க).*

114. *(படக் காட்சிச் சாலையினுள் திரையின்மேல் வீசப் பட்டிருந்த) சிறியதோர் விளக்கொளியானது (பட்டப் பகல் வெயிலான சூரியவொளி உள்ளே பிரவேசிப்பதால் அப்) பெரிய ஒளியில் கரைந்து மறைந்து போவதால் அந்த விளக்கொளி யினால் விளங்கிக் கொண்டிருந்த படக்காட்சி அப்போதே மறைந்து போகும். அதுபோலவே, நிலைபெற்ற சத்திய சித்பிர காசத்தில் பிரதிபலன மனவொளி கரைந்து அழிந்தால் (அம் மனவொளியினால் விளங்கிய) ஜீவேசுவர ஜகத்தான பொருட்காட்சியும் முடிவடைந்து மறையும்.*

115. *"இவ்வாறு உண்மைப் பொருள் ஒன்றேயா யிருக்க உயிர், உலகு, இறை என்னும் மூன்று முதற் பொருள்கள் இருப்பன போல் எம்மதமும் (நூல்களும் பெரியோர்களும்) நல்லது என்று முதலில் ஒப்புக்கொண்டு ஞான போதனையை ஆரம்பிப்பது ஏன்?" என்றால், சுட்டி யறியப்படும் முன்னிலை நாட்டத்திலேயே உழலும் பாமர உயிர்களுக்கு அவ்வாறு உடன் பட்டுக் கூறுவதைத் தவிர, இறைவனின் அந்த ஏகத்துவ உண்மை கூறப்பட்டால் அது அவர்களது உணர்வுக்கு உட்பட மாட்டாது என்பதற்காகவேயாம்.*

விளக்கக் குறிப்பு:— 'எம் மதமும்' என்றும் 'முன் கொள்ளும்' என்றும் ஸ்ரீ பகவான் உள்ளது நாற்பதின் இரண்டாவது பாடலிற் கூறியது இங்கு கருதத் தக்கது. முதலில் 'நல்லது' என்று உபதேசிப்பதும், பிறகு கிரகிப்போனின் பக்குவ முதிர் விற்கு ஏற்றபடி 'நல்ல தல்ல' என்று மாற்றி யுரைத்துத் தேற்றுவதும் சகல மத நூல்களின் மரபும் ஆகும்.

## கக. திரோதானத் திறன்

116. பிறரை வருத்தியும் பிறரால் வருத்தப்பட்டும் கணக் கற்ற பிறவிகளில் உயிர்கள் அடைந்துள்ள (துன்ப) நிகழ்ச்சி களின் ஞாபகங்கள் மனத்தில் நிலேக்காமல் நன்ருய் மறந்து போகும் மறைப்பானது (ஜீவர்களின் மன அமைதிக்காகச் செய்யப்பட்ட) இறைவனது திருவருளே என்றுணர்க.

117. இந்த ஒரு பிறப்பில் நடந்த (நடக்கின்ற) சில துக்க சம்பவங்களே மனத்தில் நினேவு வடிவாக எழுப்பி விடுகின்றதாகிய ஞாபகமே அவரவர் வாழ்வைத் துன்பமய மாக்க வல்லதா யிருக்கின்றதளுல், மறப்பு தான் (மறதிதான்) யாவராலும் விரும்பத் தக்கது.

குறிப்பு:— முற்பிறப்புக்களே அறியும் சக்தியைப் பெற சில சாதகர்கள் விரும்புவது அறிவீனமே என்பதை மேற்கண்ட 116, 117 இரண்டு பாடல்களும் உபதேசிக்கின்றன. உலகும் உலக வாழ்வும் எண்ண மயமே. யாவினும் முதல் எண்ணமாகிய 'நான் இன்ஞர்' என்னும் அகந்தைக்கு உண்டாகும் பிற எண்ணங்களே இவ்வாழ்வு. இந்த முதல் எண்ண எழுச்சியே நமது ஆனந்தத்தின் சத்துருவாக இருப்பதால், இதனின்றெழும் மற்ற எண்ணங்களுள் சுகம் எவ்வாறு இருக்கமுடியும்? ஆகவே வாழ்வின் சுக துக்கங்கள் இரண்டும் துன்பமே. எனவே அவை (துன்பங்கள்) மறக்கப் பெறுவதே உண்மையில் விரும்பத் தக்கது என்பது கருத்து.

## க உ. வியத்தித்துவத் திறன்

118. தனித்தனித் தெய்வங்களும் அவைகளுக்கு உள்ளன வாகக் கருதப்படும் வல்லமை (சக்தி)களும் அவற்றை வியப்பார் தம் மனக்கற்பனேயால் உண்மை போலத் தோன்றுவனவாம். உயிர்களேத் தடுமாற்றம் செய்யும் அந்த மன மாயையானது மனங்கடந்த மெய்ப்பொருளாம் ஆன்மாவினிடத்து முக்காலும் பொய்யே யாகும்.

விளக்கக் குறிப்பு:— ஆன்மாவுக்கு அன்னியமான வியக்திகளாக தெய்வங்களுக்கு ஓர் இருப்பும் அவர்களின் காரியமாகக் கருதப்படும் சக்திகளும் மனக்கற்பனையான மயக்கமே. எனவே, மன மாயை யற்ற ஆன்ம திருஷ்டியில் வியத்தி - சக்தி விவாதங்கட்கு உண்மையில் இடமே இல்லை என்க.

119. *(வியக்தாவ்யக்தம் இரண்டுங் கடந்த)* உண்மைநிலை யுற்ற முக்த புருஷனுக்கு *(அவனது உணர்விலுங் கூட தனக்கு)* ஒரு வியக்தி *(தனி யிருப்பு)* உள்ளது என்று கூறுவது அசத்திய, பாசபந்தப்பட்ட புலனறிவுடைய மக்களின் அற்பபுத்தியேயாகும். கற்பனையற்ற பரிபூரண சத்திய வஸ்துவான பரவெளி வடிவின ராம் ஞானிகளின் வியக்தியானது அவ்வியக்தியே ! *(அவர் களுக்கு ஒரு வியக்தி இருப்பதாகத் தோன்றுவது)* அவர்களைக் காண்போரது வியக்தியின் பிரதிபிம்பமே தவிர வேறல்ல.

விளக்கக் குறிப்பு:— ''ஞானிக்கு ஓர் வியக்தியிருப்பதாக உணர்வது நாம் மட்டுமல்ல; ஞானியும் அவ்வாறே தன்னைப் பற்றி யுணர் கின்றான்'' என்று பாமரர்கள் கூறுவது தவறு என்றும், அவ்விதம் மக்கள் தம் முன்னர் மகான்களாகக் காணும் வியக்தியானது காண்ப வர்களது வியக்தியின் சாயையே என்றும் வலியுறுத்துகின்றார்.

120. ஆன்ம விசார சீலர்களின் உள்ளத்தில் ஞானமே மெய்ப்பொருளாய் நிலைத்து விளங்குவதால், தேகாபிமானம் நீங்கிய பின் அவர்களைக் குறித்து 'அவர் ஓர் ஒப்பற்ற ஞானி; இவர் ஓர் ஞானி' என்று உலகோர் ஞானியைப் பன்மையராய்க் குறிப்பிடுவது என்ன விந்தை ! அப்படிக் குறிப்பிடுவதற்கு ஞானியர் உண்மையாகவே அவ் வுடலுருவங்கள் தாஞ என்ன? *(அல்லர் என்பது கருத்து).*

121. மிகுந்த ஆச்சரியத்தோடு "அந்த மஹாத்மாவைப் பார்க்க வேண்டும்; இந்த மஹாத்மாவைப் பார்க்க வேண்டும்" என்று ஆவலாய் அலைகின்றீர்களே ! இங்கே உமதுள்ளத்துள் விளங்கும் உமது சொந்தமான மஹா ஆன்மாவை (மஹாத்மாவை - ஆன்ம சொரூபத்தை) இதயத்தில் விசாரித்தறிந்து அடைந்து நின்றால், எந்த மஹாத்மாக்களும் *(தானாகிய ஆத்ம சொரூபம்)* ஒன்றே என்பது விளங்கும்.

122. தான் ஒரு தனித்த ஜீவன் என்னும் (தேகமே நான் என்னும்) வியக்தி பாவனை ஒருவனுக்கு இருக்கும் வரையில், அவன் மக்களால் வியக்கத் தக்க எத்தகைய சிறப்பான தவ நிலையை உடையவனுகக் காணப்படினும், முயற்சியற்ற ஸஹஜ மெய்ஞ்ஞானி யாகான். சற்று உயர்ந்ததோர் சாதகனே அவன் என்று கருதுக.

விளக்கக் குறிப்பு :— "தனக்கு வியத்தி சம்பந்தம் உள்ளதாகத் தான் உணர்கின்ற போது (அதுவரை) ஒருவன் தன்னைச் சாதகனுகவே கருதிக் கொள்ளட்டும்" என்பது உபதேசம். அது பிறர் அவனை வியக்தி நீங்கியவன் என்றோ நீங்காதவன் என்றோ கூறுவதைப் பொறுத்ததன்று. வியக்தி சம்பந்தம் உள்ள வரையில் கர்த்ருத்துவமும் அதனுல் முயற்சியும் இருப்பது தனக்கே உணர்வாகு மாகையால், "வியக்தி சம்பந்தியாய்த் தான் மேவுகிறோமா?" என்று அவன் தன்னையே கவனித்துத் தன் உணர்வைச் சுத்தீகரித்துக் கொள்ள வேண்டும் என்பது கருத்து. தவிர, இப்பாடல் பிறரை அளவிட்டு 'ஞானி, அஞ்ஞானி' என்று தீர்ப்புக் கூறுவதற் கல்ல.

123. தனக்கு என்று ஓர் எல்லைக் குட்பட்ட தனியிருப்பு (வியக்தித்துவம்) நீங்கப்பெற்ற ஆன்மவுணர்வு ஒன்றைத் தவிர, (தான் ஒருவன் இருந்து கொண்டு) ஆற்றும் பல அணிமாதி அஷ்ட சித்திகளும் அவலமே (வீணே). தன் ஆத்ம சொரூப மகிமையை யுணராது, வியக்தித்துவத்தை விடாப்பிடியாய்ப் பற்றும் வீணர்களைத் தவிர (ஜீவபோதமற்று மெய்யுணர்வில் நிற்கும் ஞானி) எவர்தான் அத்தகைய பைத்தியக்காரத்தனமான சித்திகளை விரும்புவர்? (யாரும் விரும்பார் என்பது தீர்ப்பு).

விளக்கக் குறிப்பு :— வியக்தித்துவமாவது, பிரமாதத்தால் உயிர்களுக்கு இருப்பதாகத் தோன்றும் "தாம் இன்னர்" என்று ஒரு உருவம் பற்றிய தனித்தன்மை.

சித்திகள் ஊழால் வந்தடைந்த போதும் உண்மையுணர்ந்தோன் சாக்ஷிமாத்திரமாய்த் தன் ஆன்மாவில் மகிழ்வதேயன்றி, அந்த சித்திகளுக்குக் கர்த்தாவாய்த் தன்னைக் கருதிச் சந்தோஷ மடையமாட்டான். உள்ளது நாற்பது அநுபந்தச் செய்யுளும், இந்நூலின் (ப 2) பாடலுமாகிய "சத்தியினுற்றுமியங்கும்...." என்னும் உபதேசம் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

124. (வியக்தித்துவம் அழியப் பெற்றதால்) உருவற்றவனும் அம் மேலான பரமாத்ம ஞான நிஷ்டனே சகல சித்தர்களின்

தொகுதியும் ஆவான். (அவ்வேனைய சித்தர்களால் நடைபெறுவன போலத் தோன்றும்) சகல சித்திகளும், அவைகளுக்குச் சாக்ஷி மாத்திரமாகத் தன்னிலையில் நிற்பதால், அந்த ஞானியினதே யாம். அவன் ஸ்ரீ தக்ஷிண மூர்த்தியே என்றறிக.

விளக்கக் குறிப்பு:— அணிமாதி அஷ்டமா சித்திகளும் ஆற்றவல்ல அன்னிய சித்தர் அனைவரும் ஞானசித்தனும் ஆத்ம நிஷ்டனின் எதிரில் ஆடமாட்டாது அடங்கி நிற்றலால், அவர்களெல்லாம் அவனிடத்தில் ஐக்கியம் எனவும், எல்லா சித்திகளும் இறைவனுடையதேயாதலால் அவையாவும் (நீரிற் பனிக்கட்டி கரைவது போல் இறைவனோடு இரண்டறக் கலந்த) ஞானியினதே எனவும், உபசாரத்தாலன்றி, உண்மையாகவே கூறினர்.சாமானியர் கருதுவது போல அந்த ஞானி ஒரு தனி மனிதனல்ல; மற்றும் **வியக்த மூர்த்திகளாய் நாம் கருதும் ஈசுவராதிகளுள் எவ்வொருவரது அம்சமுமல்ல.** திரிமூர்த்திகளினும் மேலானவர் குருமூர்த்தியா தலால் அதை இலக்க ''அவன் தக்ஷிணமூர்த்தியே'' என்றும் கூறினர்!

## கரு. பொய்யுறவுத் திறன்.

**பகவான் (1)**

*(நிந்திக்கத்தக்க) அற்ப உடலை 'நான்' என்று கருதுவதொழிக. எப்பொழுதும் நீங்காத பேரின்பமான தன்னை (ஆன்மாவை) அறிக. அழியும் இவ்வுடலைப் போஷிக்கும் முயற்சியையும் வைத்துக்கொண்டு, தன்னை அறியவும் கருதுவது, ஆற்றைக் கடக்க முதலையைத் தெப்பமாகப் பற்றிக் கொண்டதற்குச் சமானமாகும்.*

விளக்கக் குறிப்பு :— "உடல் ஓம்பல்" என்ற பதத்திற்குப் பொருள் கொள்வதில் தவறு நிகழ்வ துண்டு. காயசித்திக்கான முறைகளைக் கையாண்டு நீண்ட ஆயுளைப் பெற்றால் தான் அதிகநாள் தவம் செய்து தன்னை அறிதலாகிய ஞானமடைய முடியும் என்று முயலும் சாதகர்களை எச்சரித்தது இச் செய்யுள். அதுவுமன்றி, உடலின் நல்லமைப்பு, வசீகரம், ஆரோக்கியம், வலிமை, இவைகளையே சாதனையின் முக்கிய அடையாளங்களாகக் (பிழையாய்க்) கருதிக்கொண்டு, சரீரத்தைப் பற்றிய நினைப்பிலேயே மிகவும் ஊன்றிப் போகின்ற சாதகர்களையும் எச்சரித்ததாகும். அதாவது, துயிலெழும் நேரம், உண்ணும் நேரம் இவைகளை நிர்ணயித்துக் கடைப்பிடிப்பதில் அதிக கவனம் காட்டுதல், பத்திய, சாத்வீக ஆகாரங்களை அலசி அலசி ஆராய்ந்து கொண்டு, அவற்றுள் சில சற்று பிசகி விட்டாலும் உடனே மிகவும் கிலேசப்படுதல், பிடிவாதமான சங்கற்பங்களோடு இன்னதுதான்

(பால், பழம், பயறு போன்றவைதான்) சாப்பிடுவேன் என்று ஹடம் பண்ணுதல்; இன்னும் இது போன்ற வீண் வேலைகளிலேயே மிக்க கவனம் செலுத்தித் தன்னையும் தன்னையுண்பிக்கும் சமூகத்தாரையும் பெரிதும் பாடுபடுத்துகிற, "யோகிகள்" என்று பெயர் வைத்துக் கொண்டுள்ள சாதகர்களின் விவேகமற்ற செயல்களையும் கண்டித்தது இச்சொல்லால். அதே சமயத்தில் அத்தியாவசியங்களாகிற பசிக்குணவு, வியர்வைக்குக் குளித்தல், வெய்யில் மழை பனிக்கு உடலை மறைத்தல் (ஆடை, இடம் போன்றவைகளை necessities) இவைகளை மட்டும் அதிகக் கவலையின்றித் தனக்கும் பிறருக்கும் சிரமமற்ற நிலையில் மிதமாகத் தேடிக் கொள்வதை "உடலோம்பல்" என்று கொள்ளக் கூடாது என்றே ஸ்ரீ பகவான் கூறுவதுண்டு. சுருங்கக் கூறின், உடலைப் பற்றிய எண்ணம், கவனம் மிகுந்தால் தற்கவனம் அல்லது ஆன்ம கவனம் அசாத்திய மாகிவிடும். உடற் கவலையானது தன் வாழ்நாள் முழுவதையும் சாதனை செய்ய விடாது. அது, தானே ஒருவனது வாழ்நாளைச் சாப்பிட்டுவிடுவதானது, முதலையே (தெப்பமே) நம்மை விழுங்கிவிடுவது போலாம் என்பதே. உடலைப் பற்றிய எண்ணம் குறைய வேண்டும் என்பதே ஸ்ரீ பகவானது நோக்கம் என்பது 126வது பாடலால் நன்கு ஊர்ஜித மாகும். "சருகரிப்பதன்றிக் குளிர்காய்வ தின்றும்" என்பது முதுமொழி.

125. அற்ப உடலின்மேல் ஆசை நிரம்பியவர்களாய் அதே சமயம் ஆன்மாவையும் (விசாரத்தால்) அறிய முயற்சி செய்வ தாகக் கூறிக்கொள்ளும் சாதகர்களின் நிலைமை, ஆற்றைக் கடக்க ஓர் முதலையைத் தெப்பமென்று கருதிச் (பிடித்துச்) செல்லும் ஒருவனை ஒத்ததாகும்.

126. மனோவாக்குக் கெட்டாத அதி சூக்ஷ்மமான சச்சி தானந்தமாம் தன்னை (ஆன்மாவை) தியானிக்காமல் தூலமான உடலைப் பாதுகாக்கும் பொருட்டுச் செய்யும் தொழிலிலேயே வாணாள் முழுவதையும் செலவிடுவதானது, ஏற்றம் ஏறி மிதித்து (மிகப் பாடுபட்டு) நெல்லுக்கு நீர்பாய்ச்சாமல் விழற் புல்லுக்கு நீர் பாய்ச்சுவதற்குச் சமமாகும்.

விளக்கக் குறிப்பு :— அதிசூக்ஷ்ம ஆன்மாவை நாடும் நிவிருத்தி மார்க்கத்தை விட்டுத் தூலத்தைக் கருதும் பிரவிருத்தி மார்க்க மானது நெல்லை விடுத்துப் புல்லைப் போஷிப்பதாம்.

கடை வாடகை கொடுப்பது மட்டுமே ஒரு வியாபாரியின் தினசரி உழைப்பாக இருந்துவிடக் கூடாது. வாடகை கொடுத்து, அங்கு வியாபாரம் செய்து, இலாபம் அடைவதே வியாபாரியின்

நோக்கம். அதுபோல, உடலிற் குடி புகுந்த நாம் உடலின் அத்தியாவசியங்களைப் பூர்த்தி செய்வதே நாம் கொடுக்கும் குடி வாடகையாகும். ஆனால் அதற்கு மட்டுமே உழைத்து வாணாள் முழுவதையும் போக்கிவிடக் கூடாது. ஆன்ம விசாரம் செய்யவே இம் மனிதவுடலிற் குடி புகுந்தோம். வாடகை கொடுக்காமல் அதிற் குடியிருக்க முடியாது; குடியிராமல் விசாரம் செய்ய முடியாது ! ஆனால் வாடகை கொடுப்பது மட்டுமே நாம் வந்த வேலையல்ல. வியாபார லாபமாகிய ஆன்ம சாக்ஷாத்காரமே இவ் வுடலிற் குடியிருப்பதன் குறிக்கோள். வாடகையும் கொடுபட வேண்டும்! இவ்வாறு "உடலோம்பல்" என்ற பதத்தைப் பொருள் கொள்ள வேண்டும்.

127. தேகத்தையே 'நான்' என்று கொள்ளும் கருத்துடைய அற்பமான உயிர் வாழ்க்கையை மேற்கொண்ட பாமர மக்கள் தம் உள்ளத்துள் அனுபவிக்க விருக்கின்ற சிறந்த, எல்லையற்ற சதானந்த வாழ்வை இல்லாததே போல இழந்தவர்களே யாம்.

128. கண்முன் காணப்படும் உலகம் தனக்குக் கேட்டை யுண்டுபண்ணுவதை அறியாமல் அது நன்மை தரக்கூடியதோர் உண்மையான பொருள் என்று கருதி அதைப் பற்றி நிற்போர் மிதந்து வரும் கரடியைத் தெப்பமெனப் போய்ப் பற்றிக் கொண்டு அதனுடன் மிதந்து சென்ற ஒருவனைப் போல் பிறவிக் கடலில் மூழ்கி யழிவர்.

விளக்கக் குறிப்பு :— நல்லதோர் தெப்பமென்று அறியாமையால் முதலில் எண்ணிப் பற்றிக் கொண்ட பின் 'அது கரடி' என்றறிந்தாலும், அதை விட்டுவிடக் கருதி முயன்றாலுங்கூடி அது நம்மை விடாதது போல், உலகம் சத்தியம் என்ற அறியாமையால் அதன்பால் விசுவாசத்தோடு வளர்க்கப் பெற்ற வாசனைகளின் வலிவானது, மெய்யுணர்ந்த பெரியோர்களால் பிறகு "அது அசத்தியக் கற்பிதம்" என்று போதிக்கப்படும்போது கூட அதை விட நினைத்தாலும் மீண்டும் மீண்டும் நம்மை பகிர்முக விருத்திகளிலேயே இழுத்து ஆழ்த்தி வருத்தும் என்றவாறு.

129. தாம் ஏறிச் செல்லும் வண்டி முதலியவாகனங்களின் போக்கு வரத்தை தம்முடைய போக்கு வரத்தாகவே கருதுவது போல, அகந்தையாகிய போலி யுயிருக்கு நேருகின்ற பிரவிருத்தி ரூப சம்சாரத்தை ஆன்மாவாகிய தமக்கே வந்ததாகக் கொண்டு தம் உண்மை சொரூபத்தை யறியாத அஞ்ஞானிகள் துன்பம் அடைவர்.

130. உடலையும் உலகையும் மெய் யெனப் பற்றிக்கொள்ளும் அறிவீனன் சாந்திபெற வேண்டுமானல், அவை மெய் என்ற அறியாமையை விட்டு, இதயத்தில் விளங்கும் ஆன்மாவை உடும்பு (பிடிகொள்வது) போல் விடாமற் பற்றிக் கொள்வானுக. பிறகு எக்காலும் அவன் துன்பமே யடைய மாட்டான்.

131. அகந்தை வாழ்வாகிய பொய் விஷயாதிகளை விரும்பி மகிழும் மக்கள் மிகவும் மனம் மயங்கிக் கெடுவர். (ஆகையால்) அகந்தையற்ற, ஆன்ம சொரூப வாழ்வான அருட் சிற்பரம்தான் ஒருவன் அனுபவிக்கத் தக்க இன்பமாகும்.

## கச. பண்டிதத் திறன்

132. ஆதிமுதல் (இப் பிறவியில் மட்டுமன்றி, பண்டைப் பிறவிகள் பலவற்றிலும்) கற்றறிந்த கலைகள் யாவும் வெறும் அறியாமையே யாவதை யுணர்ந்து, அவைகளைக் கற்றவனுகிய 'தான் யார்' என்று தன்னை விசாரித் தறியும் அறிவே உண்மையான, ஞான பண்டிதனுக்கு முக்கிய அறிகுறியான பண்பாகும்.

விளக்கக் குறிப்பு :— ஆய கலைகள் அறுபத்து நான்கினையும் ஏய உணர்ந்துவிட்டவன் பண்டிதன் அல்லன் என்கிருர் ஸ்ரீபகவான்! அவைகளை அறிவின் அறிகுறியாகக் கருதாமல் அறியாமையின் அறிகுறியாகக் கண்டு கொள்வதே இங்கு வலியுறுத்தப்பட்டதாம். மக்கள் தன்னை (ஸ்ரீ பகவானை) பல்வேறு துறைகளில் (ஸ்ரீ பகவானது கவித்துவ மேன்மை, நூலாராய்ச்சி, ஞாபகசக்தி, மதிநுட்பம், தொழிற்றிறன், சித்திரம், வைத்தியம், பன்மொழிவன்மை, வாதத்திறன் இன்னவைகளைக் கண்டு கவர்ச்சியுற்று "பெரும் பண்டிதன்" என்று வியப்பதை மறுத்தலே நோக்கமாய்) பாண்டித்தியம் பெற்றிருப்பதாகக் கூறுவது தவறு என்கிருர். ஆனுல் உண்மையான ஞானபண்டிதனும் அவரே என்பதை மக்கள் அறிந்துகொள்ள வேண்டியது எவ்வாறெனின், அவர் ஆற்றிய ஆன்ம விசாரத்தால் எய்திய (தன்னறிவை) ஆன்ம ஞானத்தைப் பற்றியே என்க.

தன்னை உடலாக அறியும் அறியாமையே அகந்தை. எனின் இவ் வறியாமையால் அறியப்பட்ட கலையறிவு அனைத்தும் அறியாமை யாகத் தானே முடியும்! ஆதலால் தன்னைத் தவிர வேறு எதை யறிவதும் அறியாமையே. இவ்வாறு கண்டு கொள்பவனே உண்மையான பாண்டித்தியம் பெறத் தக்கவன். அதனுல் அவன் தன்னை விசாரிக்க ஆரம்பிக்கிருன். இவ் விசாரமே மெய்ப் பண்டிதனுக்குரிய பண்பு அல்லது அடையாளம் எனப்பட்டது.

133. கலைகளைக் கற்றவனாகிய நான் யார் என்று இதயத்தில் ஆழ்ந்து தன்னை ஆராய்வதால் 'கலைகளை அறிந்தவன் நான்' என்னும் அகந்தை அடியோடு அழிய, அதனோடு அதனால் அறியப் பட்ட கலைஞான உணர்ச்சியும் கழன்றுபோகவே, எஞ்சி நிற்கும் தன் உண்மை நிலையைத் தவறின்றி, உள்ளபடி அறிந்தவனே பண்டிதன் ஆவன். அன்றி, அவ்வான்ம சொரூபத்தை அறியாத அகங்காரி பண்டிதனாவது எப்படி? சொல்க!

விளக்கக் குறிப்பு :— தன் மெய் கண்டவன் பண்டிதன்; தற் கண்ணதவன் அகங்காரி என்றார்.

பாட்டு 119ல் "பொய்யுறு பெத்தப் புலவோர்" என்றபோது "புலவோர்' என்ற பதத்திற்குப் 'புலன் அறிவினர் — அகங்காரி' என்பதே பொருள். சிலர் 'புலவோர்' என்றால் 'பண்டிதர்' என்று பொருள் கொள்ள விரும்பினால் 'பொய்யுறு பெத்த' என்றதால் 'அறியாமையாகிய கலையறிவுடைய பண்டிதர்' என்று இழிவு காட்டினதாகக் கொள்க.

134. சுட்டறிவாற் கற்றறிந்த யாவற்றையும் அடியோடு மறக்கக் கற்று, ஆத்ம விசாரத்தால் உள்ளே யொடுங்கப் பெற்றவரே உண்மை நிலையில் தெளிவோடு இருப்பவ ராவர். அன்றி, மறந்து போன புலனறிவுகளை (விஷய ஞானங்களை) யெல்லாம் மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்வோர் (அ) அசத்தியப் பொருளான சமுசார தாபாக்கினியில் வீழ்ந்து, பதைத்து, நொந்து கலங்குவர் (அல்லது) (ஆ) பாவனமாத்திரமான அசத்தியத்தில் (சமுசார துக்கத்தில்) விருப்பு வெறுப்புக்களான பதைப்புக்களால் நொந்து கலங்குவோரே யாவர்.

விளக்கக் குறிப்பு :— சுட்டறிவும் அதன் பயனாகிய 64 கலைகளும் நினைப்பே யாகும். மறப்பதே அவைகளை அறியாதிருத்தல். இந்நினைப்பும் மறப்பும் ஆன இருமை, உள்ளொடுங்கிய ஏக நிலையில் இராது. எனவே வெளி விடயங்களைப் பற்றிய இந்நினைப்பு மறப்புக்களுக்கு இருமை யுணர்வுள்ள ஓர் பொய் பாவனை அவசியப்படுகிறது. அதனால் 'பாவகமாம் பொய்' என்று உலகையும் அதன் அறிவையும் குறிப்பிட்டார். நினைப்பு, மறப்பு இரண்டும் அறிவல்ல. ஆச்சரியமான ஞாபக சக்திகள் அறிவின் கலக்கமே என்று காட்ட 'கலங்குவர்' என்றார். நினைப்பு மறப்பற்று உள்ளடங்கிய நிலையைத் 'தெளிந்தார்' என்றும் குறிப்பிட்டார். "தூக்கத்தில் முற்றறிவு இருக்கிறது; விழிப்பில் பூரண அறியாமை இருக்கிறது" என்ற ஸ்ரீ பகவானது வாக்கும் (ஸ்ரீ மஹரிஷி வாய்மொழி) இங்குக் காண்க.

135. *(தன்னைத் தவிர)* ''எல்லாக் கலைகளையும் கற்றறிந்தோம் என்று இறுமாப்படையும் அற்ப மனிதா! எல்லாவற்றையும் அறிந்த நீ யார் என்று கற்றனையோ?'' என்று ஆன்ம நிஷ்டன் உன்னை வினவுங்கால், புத்தி தடுமாறி நாணமுற்றுத் தலைகுனியும் மேதாவியே! மூடமான உன் அகந்தை மதி மண்ணுகி அழியட்டும்.

விளக்கக் குறிப்பு :— 'அற விளிக' என்றது சபித்தலல்ல, அகந்தை அழிவதால் மடம் நீங்கி ஆன்மா விளங்கட்டும் என்ற ஆசீர்வாதமாம் இச் செய்யுள்.

136. சந்தேக விபரீதவடிவான மயக்க அறிவு (அஞ்ஞானம்) அழிந்து முற்றும் தெளிந்த மெய்ஞ்ஞானத்தால் பொய்தீர்ந்த சாசுவத நிலையான தன்மய நிஷ்டையில் ஊன்றிய ஞானியே ஞானக் கலையின் கரைகண்டவ ஞவான்.

விளக்கக் குறிப்பு :— பொய்தீர் – மனமே பொய்யாகையால் அது அழியப் பெறுநிலையே பொய்தீர்தலாம்.

137. 'நான்' என்னும் இயல்பான தன்மையொருமைப் பெயரும் (எழுவாய்), 'இருக்கிறேன்' என்னும் வினையும் (பயனிலை) கூடி விளங்கும் பரம்பொருளாகிய ஆன்மாவை ('நான் இருக்கிறேன்' என்று மட்டும் சச்சித்தாய் விளங்கும் தன் இருப்புணர்வை, 'நான் உடம்பாக, மனிதனுக, இன்னுராக இருக்கிறேன்' என்ற உபாதியைக் கூட்டி உணரும்)அகந்தையற்று, உள்ளபடி எவன் உணர்கின்ருனோ, அவனே குற்றமற்ற மெய்ப்புலவன் என்றறிக .

விளக்கக் குறிப்பு :— 'யான் என்னும்' என்ற சொற்ருெடரில் 'யான்' என்பது ஆன்மா; 'நான் இன்ருய்' என்றதில் 'நான்' என்பது அகந்தை. 'உள்ளபடி உணர்கிற்பன்' என்றது உள்ளத்தே உள்ளமாய் ஒன்றியிருக்கும் ஆன்ம நிஷ்டையால் அபரோக்ஷமாக அறிதல்.

## கரு. கவித் திறன்

138. கவியானவன் மனிதரைப் பாடிய தன் நாவின் கீழ்மையை எண்ணிக் கலங்கி, மனம் மிகவும் வருந்தி, 'இனி இறைவன் பெருமையையே பாடுவேனுக; அன்றி முன்போல் இகழத் தகும் நரஸ்துதி பாடவே மாட்டேன்', என்று உறுதி பூண்டு சிறப்புற வாழ்வானுக.

139. இறைவன் அருளால் தாம் பெற்ற கவிதா சக்தியை அவ் விறைவ னடியைத் துதிப்பதற்கே உரியதாக்காமல், தொடு தற்குச் சற்றுந் தகுதியற்ற நரசரீரத்தை (மானிடரை)ப் புகழ்ந்து பாடுவோர், தாம் பெற்ற நாவன்மை என்னும் பெண்ணை (அல்லது கலைமகளை) வேசித் தொழிலுக்கு உட்படுத்தியோரே ஆவர். என்ன பரிதாபம்!

140. உண்முகத் தன்னுட்டத்தால் தானல்லாதவையான அன்னமய கோசம் முதலிய ஐந்து கோசங்களுள் எதன்மேலும் 'நான்' என்னும் அபிமானம் உண்டாக வொட்டாமல் ஒழித்து அதனுல் அமைதியுற்ற உள்ளத் தெளிவி லிருந்துதான் உண்மைக் கவித்துவம் (அருட் கவித்துவம்) உண்டாகும்.

## கசூ. கலை யவலத் திறன்

141. உயிர்களை உய்விக்க வழிகாட்டுகின்ற எல்லா ஞான சாஸ்திரங்களும், 'மனத்தை யடக்குவதே முக்திக்குச் சிறந்த வழி' என்று கூறுவதால், ஒரே முகமாக வற்புறுத்தும் அந் நூல்களின் உள்ளக் கிடக்கையானது மனமடங்கி (இதயத்தே) நிலை பெறுவதே என்று (ஓரளவு நூலாராய்ச்சியினுல்) கண்டறிந்த பிறகு (முழு முயற்சியோடு மனமடக்கும் விசார நிதித்தியாசனத்தில் ஈடுபடுவதை விட்டு) மேலும் பல சாஸ்திரங்களைக் கற்றுக் கொண்டே போவதால் ஒருவன் அடையும் பயன்தான் என்ன? (ஒன்றுமில்லை).

குறிப்பு :— 'நான் யார்' என்னும் நூலிலும் வரும் இக் கருத்தைக் கவனிக்க.

142. ஆஸ்திக வாழ்க்கைக்கே தகுதியற்ற கீழான நடத்தை யுடைய மக்கள், மிக நுட்பமான வேதாந்த நூலாராய்ச்சியில் ஈடுபடுவதால் பரம பரிசுத்தமாகப் பிரகாசிக்கின்ற அவ் வேதாந்தத்தை தமது போலி நடையால் அசுத்தப்படுத்துபவர் களேயாகின்றனர்.

குறிப்பு :— ஞான மார்க்கத்திற் செல்வோர்க்கு அகத்தூய்மை மிக அவசியம் என்பது கருத்து.

143. நிலையற்ற மாமிச உடலை 'நான்' என்று அபிமானித்து வாழும் மக்கள் (தம் புத்திக்குச் சுமையாய்க்) கற்றுச் சுமக்கும் கலை யறிவுகள், சித்தமா யுள்ள இறைவன் திருவருளை முன்னிட்டுக் கொண்டு, அகங்காரம் அடங்கி இதயம் சேர்வதற்கு உதவா தென்றால், அவை, வீணே ஆட்டின் கழுத்திற் சுமையாய்த் தொங்கிக் கொண்டு ஆடி யலைபடும் தாடிக்குச் சமானமாகுமே தவிர, வேறென்ன வாம்?

குறிப்பு :— புலையாடு மாந்தர் - புலையுடலை 'நான்' என்று அபிமானித்துத்திரியும் மக்கள் ; ஆட்டின் அலைதாடி - அஜாகளஸ்தம்.

144. எந்தச் சாதனத்தாலாவது மன மிறந்து, சுவசொரூப (ஆன்ம) விளக்க முற்று, அதனால் மனக்கலக்கம் அடியோடொழிந்தா லன்றி, வெறுங் கல்வியால் மட்டும் அஞ் ஞானம் நீங்கப் பெறுவது என்பது குதிரைக் கொம்புபோல் அசாத்தியமே. 10

விளக்கக் குறிப்பு :— உபாயம் - ஆன்ம விசாரம், ஆன்ம சமர்ப்பணம் என்ற இவ் விரண்டும் ஸ்ரீ ரமண பகவானால் சிலாகிக்கப் பட்டவையான சாதனங்கள்; அதாவது ஞானமும் பக்தியுமாம். 'மனமிறந்து' என்றும் 'சிந்தைக் கலக்கம் அறின்' என்றும் குறிப்பிட்டவைகளை முறையே 'மனோ நாசம், வாசனாக்ஷயம்' என்று கொள்க.

145. காற்றைப் போல எப்போதும் அலைந்து தடுமாறும் உறுதியற்ற, சிதாபாசனான ஜீவனுக்குத் தன் உற்பத்திஸ்தானமான இதயம்தான் (ஆன்மாவே) உபசாந்த நிலைக்களம் (சங்கமமாகும் இடம்) ஆகுமே தவிர, தான் கற்கும் கலைகளெல்லாம் (அமைதியற்ற) வெறும் ஆரவாரச் சந்தைக் கூச்சலே யாகும்.

விளக்கக் குறிப்பு :— ஆரவாரச் சந்தைக் களத்திற் சாந்தி யிராதது போல கலை ஞானத்தில் உபசாந்தி ஏற்படாது என்றதாம். ஓடும் கிரியையுடைய நதிக்கு அதன் உற்பத்தி ஸ்தானமான கடலில்தான் ஓட்டம் நீங்கி நிலை ஏற்படுமே யன்றி வேறெங்கும் நிலையில்லை. அவ்வாறே, அலையும் மனவடிவ ஜீவனுக்கு அமைதி (திருப்தி) கலைகளாற் கிட்டாது. மனோ விருத்திரூப விசேஷங்களே கலைகளானதால், இதயம் புகுந்து நிஷ்டை பெறுவதே முடிவான நிலை. ஸ்ரீ அருணாசல அஷ்டகம், 8வது பாடல் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

146. மிக விரிந்த வேத ஆகமக் கர்ம முறைகளைப் பின் பற்றாமல் (அவை தனக்குப் புறம்பாயிருத்தலால்) ஆத்ம விசார

சாதனையால் உள்ளே நாடும் விசார வல்லுநரே மெய்ப்பொருளின் அறிவால், சாரமற்ற விஷய ஆசைகளை அறுத்தெறிய முடியும்.

147. "இவை குற்றமற்ற ஞான நூல்கள்" என்று அவைகளைக் கற்கும் பேராவலுடன் ஒருவன் கற்றுத் தேர்ந்த ஞான நூல்களைக்கூட, இதயத்தில் நிலை (நிஷ்டை) பெற முயலும் நிதித்தியாசன காலத்தில், மறந்து, அவைகளை விட்டு, தான் தனிப்பட வேண்டியே வரும்!

விளக்கக் குறிப்பு :— 'குற்றமறு ஞானம் என்றுவது, 'குற்றமறு நூல் என்றுவது மூலத்தைப் பொருள் கொள்ளலாம். 'செறிவு முயலுங்கால் — சிரவண காலத்தில் ஞான நூல்களின் மேல் பெருகிய காதல் தோன்ற வேண்டுவது அத்தியாவசியமே. மனன காலத்தில் அந்நூல்களின் கருத்துக்களில் (முடிபுகளில்) நாம் மனம் ஒப்பி, நம் இயல்பை அவைகளுக்கேற்ப மாற்றிக் கொள்வதால், அவை புதுமையற்றுப் போகின்றன. அதனுல் அவைமேல் காதல் நீங்கி மீண்டுங் கற்கும் அவா ஓய்கின்றது. பிறகு நிதித்தியாசன காலத்தில் மனம் உண்முகப் படுவதற்கு, கற்றவைகளால் ஏற்பட்ட சாஸ்திர வாசனைகள் பெருந்தடையாய் அமைவதை உணரும் முமுக்ஷுவால் நூல்கள் நிராதரவு செய்யப்பட்டு (உதாசீன பாவத்தால்) அகன்று மறைய, சகல அறிவும் சகல மனத் தொழிலு மற்றுத் தான் மாத்திரமாக மிஞ்ச வேண்டியது அவசிய மாகின்றது. அதனுல் ஞானநூல்களும் மறக்க வேண்டியவைகளே யாகின்றன!!

## கஎ. வேதாந்த வுண்மைத் திறன்

148. அழிவைத் தரும் புத்திமயக்க முற்ற இலௌகிக மக்கள் ஐம்புல விஷயானுபவங்களைத் தவிர, மற்றொரு அழிவற்ற மெய்ப்பொருள் உண்டு என்பதை அறிய மாட்டார்கள். ஐம்புல விஷயங்களில் தீவிர வைராக்கியம் அடைவதால், அத்தகையோர் முமுக்ஷுக்களிடம் செழித்து ஓங்கும் ஞான வளத்தை 'வறட்டு வேதாந்தம்' என்று சொல்வர்!

விளக்கக் குறிப்பு :— ஞானம் வறண்ட தென்பதும், புல விஷயங்கள் செழிப்பானவை என்பதும் பாமரர் கூற்று. அதற்கு நேர்மாறாக 'செழிப்புறு ஞானம் என்றும், புல விடயங்கள் பொருளல்லாத 'புத்திக் கிறுக்கு' - வறண்டது என்றும் கூறினர். கூகைக்கு (கோட்டானுக்கு)ச் சூரியன் இருளாவது போல் புல விஷயப்

புல்லர்கட்கு வைராக்கிய விளைவான ஞானம் வறட்சியாய்க் காணப்படும். 'தத்துவங் கண்டவற்கு....' என்ற உள்ளது நாற்பது அநுபந்தம் 29வது வெண்பாவில் ஞானத்தை வசந்த ருதுவிற்கு ஒப்பிட்டிருப்பது இங்குக் காணத் தக்கது.

149. ஆசைகள் யாவற்றையும் அறவே விட்டவர்களுக்கே வேதாந்த அநுபவம் கைகூடும். ஆசையுடையவர்களுக்கு அது வெகு தூரமாகும். புல விஷய (உலக) ஆசை யுள்ள மனத்தோர் விருப்பு வெறுப்பற்ற இறைவனிடத்து வேட்கை (பக்தி) பூண்டு, இதர ஆசைகளின் மயக்கம் ஒழியத் தவம் இயற்றுவதே தக்க செயல்.

விளக்கக் குறிப்பு :— புல விஷயங்கள் முன்னிலை படர்க்கைகள். அவைகளின் மேல் ஏற்படும் ஆசைகள் கடவுளாசைக்கு எதிர் மறையாவதால் கடவுள் முன்னிலை படர்க்கைகளுக்கு எதிர்மறை என்பது தேற்றம்! புற வேட்கை நீங்கி அக வேட்கை யுறுவதே, **ஸ்வாத்ம பக்தியே** உண்முக உபாசனையான தவத்தை மேற்கொள்வதென் றறிக. 'ஆத்மாநுசந்தானமே பரமேசுவர பக்தி' என வரும் (ப-13) பாடலில் ஸ்ரீ பகவானது உபதேசம் இதுவே.

## கஅ. ஊழ் நடைத் திறன்

150. பிராரப்தப் பிரகாரமே ஒருவனது புஜிப்புக்கள் (அனுபவிக்கும் பொருள்கள்) அமைவதை அறிந்த விவேகிகள் தம் வாழ் நாளில் அப் போக்கியப் பொருள்களுக்காக என்றும் மனங் கலங்கி வருந்த மாட்டார்கள். அவைகளை விரும்பி வேண்டினாலும் வேண்டாவிட்டாலும் எவருக்கும் அவை (பிராரப்தப்படி) வந்து சேரத் தவறவே தவறாது. இதை யுணர்ந்து கவலை யொழிக.

151. ஜீவன் ஒவ்வொருவனும் அவனவனது பிராரப்தத்தை அவனவனே அனுபவிக்கின்றான். இறைவனோ அதற்குதவும் சாந்நித்திய சாக்ஷி மாத்திரமாக இதயத்தில் விளங்கிக் கொண்டிருக்கின்றான். எனவே, எவனொருவன் தான் கர்ம பலனை புஜிக்கும் போக்தாவாகத் தன்னை நினைத்து மயங்காமல் தான் சச்சித் ஆன்மா மாத்திரமாகவே உணரக் கூடியவனாயிருக்கின்றானோ அவனே பரன்.

## கக. ஊழ் வலித் திறன்

152. (விளக்கைச் சுற்றிலும் சற்று தூரத்தில் நின்ற இருளெல்லாம் விளக்கொளியால் உடனே நீங்கப் பெற்றும்) விளக்கின் அடியில் நின்ற இருள் மட்டும் நீங்காமல் என்றும் இருப்பது போல, எல்லையற்ற ஞான சொரூபியான சற்குருவின் திருவடிகளினின்றும் (உடலால் தூரத்திலும் உளத்தால் நெருங்கியும் உபாசித்தோர் பலரும் உய்வடையவும்), சற்குருவின் திருவடியருகிலேயே அசையாமல் முதுமைப் பருவம் வரையிலும் வசித்துங்கூட அகங்கார மயக்கவிருள் நீங்காமல் மடிவோரின் நிலைக்கு அவர்களது முன் வினையாற் சூழ்ந்த அபக்குவமே காரணம் என்க.

இப்பாடலுக்கு ஸ்ரீ முருகனார் அளித்த விளக்கம் :— ஞான குருவை அதிருஷ்ட வசத்தால் அடைந்தோர் தாம் எதற்காக அவனை வந்தடைந்தோமோ அந்தக் காரியத்தை மறந்து விடாமல் அல்லும் பகலும் அதுவே கண்ணாய், அவன் அருளைத் துணை கூவிக் கொண்டு ஆன்ம லாபத்தை யடைந்தே தீரவேண்டும் என்பதாம்.

பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும் — என்னே
பயனில் பொழுதாக் கழிப்பாரே நல்ல
நயமி லறிவி னவர். — நாலடியார்.

153. அஷ்டமா சித்திகளும் ஆன்ம ஞானமுமாகிய இவ்விரண்டையும் ஒருவன் தான் விரும்பியவாறே ஒருங்கே யடையப் பெறாமல் போவது ஏனோ எனக் காரணம் சுட்டி வினவினால், அடையும் அஷ்டசித்தி (ஐசுவரிய) சம்பத்தும் ஆன்ம ஞான சம்பத்தும் ஒன்றுக்கொன்று எதிர்மாறான இருவித உலக வியற்கையே யாம்.

விளக்கக் குறிப்பு:— இப்பாடலின் பிற்பகுதி ஒரு திருக்குறள். இக்குறளுக்கு உரை காண்போர் பலர் 'திரு, தெள்ளிமை' இரண்டையும் 'செல்வம், கல்வி' என்று முறையே பொருள் கொள்வது வழக்கம். ஆனால் ஸ்ரீ பகவான் ரமணரது வழி வந்தோர்க்கு 'திரு - அஷ்டசித்தி, தெள்ளிமை - ஆத்ம ஞானம்' என்று பொருள் காட்டுவதே இப்பாடலின் சிறப்பு.

ஊழால் அமையும் அஷ்டசித்தியும், அருளால் அமையும் ஆன்மஞானமும் உலகில் ஒன்றுக்கொன்று எதிர்மறையான இருவித இயல்புடையன. ஞானம் அடையுமுன் (அஞ்ஞான காலத்தில்-

முற் பிறவிகளில்) சித்திகளை விரும்பி முயன்ற காமிய கர்ம பலனுல் ஊழாக்கப்பட்டு வந்தடைந்தாலன்றி ஞானி ஒருவனிடம் ஞானத்தோடு அஷ்டசித்திகள் இடம்பெரு. பிராரப்தமானது மூவித கர்மங்களுள் ஒன்று. அம் மூவித கர்மங்களின் கர்த்தாவோ அகங்காரமாகிய ஜீவன். ஞானத்தின் கர்த்தாவோ கடவுள் அல்லது ஆன்மா. 'கர்மமானது ஞானம் தராது என்னும் ஆன்ருேர் வாக்குப்படி சித்திகளுக்குக் (காமிய) கர்மமும், ஞானத்திற்கு இறை திருவருளுமே காரணமாம். அருளும் பொருளும் போல் ஞானமும் சித்தியும் ஒன்றுக்கொன்று எதிர்மறை. 'இரண்டும் ஒன்றப் பெருமை என்னே' எனச் சுட்டின், இவ் வெதிர்மறையான இருவே றியல்பே காரணம் எனக் கூறினுர்.

ஸ்ரீ முருகனுர் அளித்த விளக்கம்: இதனுல் சிலர் கருதுவது போல் சித்தர்கள் எல்லாம் ஞானிகளாகவும், ஞானிகள் எல்லாம் சித்தர்களாகவும் இருக்க வேண்டு மென்ருே, அன்றி மற்றும் சிலர் கருதுவது போல அவ்வாறிருக்கக் கூடாது என்ருே எதற்கும் ஆவசியக மின்மை அறிக.

## உ0. ஆன்ம சீவ வியற்றிறன்

154. குட்டிச் சாத்தானைப் போல (துருதுருப்புற்ற பேயைப் போல) ஆரவாரித்து, வஞ்சகமான இழி செயல்களைப் புரிவதும், ஒரே நெறி நில்லாது பல திறத்தில் நடப்பதும், பலவித கற்பனை களை விரிப்பதும், அவைகளை எதிரிட் டறிந்து இன்ப துன்பங் களில் உழல்வதும், ஆகிய இவைகள் பொய்யுருவான ஜீவனின் மனே தர்மம் (இயற்கை) ஆகும். ஆனுல் ஆன்மாவாம் நம் உண்மை யியல்போ மேற்கண்டவா றில்லாமல், இருப்பறிவாக (சத்சித்தாக) ஒரே தன்மையாய் விளங்குவதே.

## உக. வாதனை வலித் திறன்

155. சில சிறிய ஜந்துக்கள் ஆகிய மனிதர்கள் ஆற்றங் கரை யாகிய ஆன்ம நிலையில் ஏறித் திரமாக நிற்க முடியாததால், ஆற்றின் சுழல் நீரோட்டமாகிய உலக சமுசார வாழ்வில், துஷ்டச் சிறுவர்களாகிய (தத்தம்) வாசனைகளால் தூக்கி எறியப் பட்டுத் துன்ப மடைகின்றனர்.

விளக்கக் குறிப்பு :— ....இப்பாடல் உருவகமாக அமைந்திருப்பதால் பொழிப்புரை சற்று விரிக்கப் பெற்றது.

ஆற்றோட்டத்தில் அகப்பட்டுத் தவிக்கும் சிறு பிராணிகள் சில, உயிர் பிழைக்க ஆற்றங் கரையை நெருங்கி வந்து, கரை மேல் ஏறித் திரம்பட நின்றுகொள்ள முயன்று கொண்டிருக்கும் போது, துஷ்டச் சிறுவர்களால் மீண்டும் ஆற்றின் சுழல் நீரோட்டத்திலேயே தூக்கி எறியப்பட்டுத் துன்பம் அடைவதே போல, சாதனைக் காலத்தில் ஆன்மநிலையில் திரம்பட நிற்க வியலாமல் முயன்று கொண்டிருக்கும் ஜீவர்கள் அவர்களது பூர்வ வாசனைகளின் வலிமையால் மீண்டும் பகிர்முக உலக நடையிலேயே உந்தித் தள்ளப்பட்டுத் துன்புறுவர்!

## உஉ. அகந்தை முடித் திறன்

156. காண்பானாகிய ஜீவனின் மெய்த்தன்மையான சிதாகாச பூரண ஆன்ம வளத்தையே (அழகையே) கண்டு நிற்க வேண்டிய நம் கவனசக்தி, ஆணவமாம் பிரமாதத்தால் ஆன்ம கவனம் தவறி 'நான் இது (உடல்)' என்று எண்ணி ஒரு வியக்தியாய் எழுச்சியுற்ற குற்றமே (அவ்வான்மாவாம் தன்னையே) தன் முன்னுள்ள புலவிஷய உலகப் பொருள்களாகப் பார்க்கும் குறைபாடு ஆகும்.

விளக்கக் குறிப்பு :— அகண்ட நம் சுபாவ இருப்பை, அகங்கார மாகிய உடல்ளவு இருப்பாகக் குறுக்கி எல்லைக்குட்படுத்திக் கொண்டு பார்த்தால் அப்போது, எங்கும் என்றும் உள்ள நம் (ஆன்ம) சொரூபமே பார்க்கும் நமக்கு அன்னியமான உலகமாகவும் கடவுளாகவும் தோன்றுகின்றது என்பதாம். இத் தோற்றம் ஜீவனாகிய அகந்தைக்கே தவிர ஆன்மாவுக் கல்ல என்பதை மறந்துவிடக் கூடாது.

இதே கருத்து 158வது பாடலிலும் விளக்கப்படுதல் காண்க.

157. புலையுடம்பை மெய் போல 'நான்' என்று அபிமானித்து வஞ்சம் புரியும் உண்மையற்ற மூல அகங்கார முடிச்சு (சித்ஜடக் கிரந்தி ஜீவன்) ஆகாயத்திற் காணப்படும் கற்பித நீல நிறம் போல, பல் வேறு விடயங்களை (புலன் உணர்வுகளை)க் கண்டு அறிவு கலங்கி, அவைகளை விரும்பி, அவ் வாசையின் வலிவால் மேன்மேலும் இறுகிக் கெட்டிப்பட்டு (உரப்பட்டு)ப் போகின்றது.

விளக்கக் குறிப்பு :— ஆன்ம சொரூபத்தை இல்லாத தாகவும், இருப்பற்ற வெறும் புலனுணர்வாம் உலகை-விடயங்களை-மெய் போலவும் காட்டுவதால், 'வஞ்ச முடிச்சு' என்றார். அம் முடிச்சும் சத்திய இருப்பற்றது என்பதைக் குறிக்கவும் அதுவே முதலெழுச்சி என்று காட்டவும் 'பொய்ம் மூலாகங்கார முடிச்சு' என்றார்.

158. பற்றற்ற தன் ஆன்ம சொரூபத்தை அறியாத மயல் படர்ந்த தோஷ திருஷ்டியே (அஞ்ஞானப் பார்வையே) பஞ்ச கோச உடலங்களைத் 'தான்' என்று எண்ணி, அவைகளால் தன்னையே மறைத்துக் கொண்டு, தன் எதிரில் உலகத் தோற்றம் என்னும் முன்னிலைப் பொருள்களாகவும் தானே தனக்குத் தோன்றிக் கொண்டிருக்கின்றது.

விளக்கக் குறிப்பு :— 'பாசமிலாத் தன் சொரூபம்'—தனக்கு அன்னியம் ஒன்றுமில்லாமையால் ஆசையாற் கட்டுப்படும் பாசவுணர்வு ஆன்மாவுக்கு என்றுமே யில்லை. அகந்தைக்கே பாசமுள்ள அன்னிய திருஷ்டி யுண்டு. அதுவும் தன் சொரூபப் பான்மையைப் பாராததால் தான் வந்தது. மற்ற விளக்கம் பாடல் 156ல் கண்ட படியே.

159. உடலைத் தன் இடமாகவும், 'அவ்வுடலே நான்' என்றும் எண்ணி அறியாமையால் வாழ்கின்ற புலையகந்தையாம் ஜீவ வாழ்வு, பரமான்ம சிவ சொரூபத்தில் கற்பனையாகக் காணும் கனவே யன்றி உண்மையாகாது.

விளக்கக் குறிப்பு:— 'ஊத்தை யகங்கார வாழ்வு'—மங்கலம்மிக்க பரமான்ம சொரூப வாழ்வுக்கு மாறானதால் அகந்தை வாழ்வை 'ஊத்தை' என்றார். சிவம்-மங்கலம். மூலத்தில் 'உயிர் வாழ்க்கை கனுக் கடவது' என்று கூட்டிப் பொருள் கொள்க.

160. "நான் தேகம்" என்ற அகந்தை வடிவில் விய வகரிக்கும் போலி உயிரான ஜீவனும் (நிழற்படக் காட்சியில் தோன்றுவது போல்) உலகச் சித்திரப் படங்களுள் ஒன்றே யாகும்.

விளக்கக் குறிப்பு:—அசைபடக் காட்சியில் ஆதாரத் திரை போன்றது ஆன்மா. அதுவே நிஜ உயிர். திரையிற் காணப்படும் படங்களே இவ் வுலக நாமரூபச் சித்திரங்கள். இவற்றைக் காண்பானான ஜீவனுங் கூட இப் படங்களுள் ஒன்றேயாய்த் திரையில் தோன்றுபவனே! படமாகிய இப் போலி உயிர் மறைந்தால் (மனோநாச மெய்தினால்) திரைபோன்ற ஆதார உணர்வான ஆன்மாவே யாதொரு விகற்பமு மின்றி என்றும் விளங்குவதாகும்.

ஓர் திரைப்படக் காட்சியிற் காணப்படும் அரசனெருவன் அங்கு அவனுடைய அரசவையைக் கண்டுகொண்டிருக்கும் ஓர் 'காண்பான்' ஆகிருன் அல்லவா? ஆனுல் அதே சமயம் அவனும் காட்சியாகிய சித்திரங்களுள் ஒருவனே யல்லவா? அவ்வாறே, உலகைக் காண்பாளுகிய ஜீவனும் உலகமாகிய பொய்த்தோற்றப் படங்களுள் ஒன்றே தவிர உண்மை யுயிர் அல்ல.

## உ௩. அகந்தை வலித்திறன்

161. *அகந்தையழிந்தால்தான் ஒருவன் உண்மையான பக்தனுவான். அகந்தையழிந்தால்தான் அவன் அறிவறிந்த ஞானியு மாவான். அகந்தையழிந்தால் அவனே அழிவற்ற கடவுளு மாவான். அகந்தையழிந்த அக்கணமே அருளும் வெளிப்பட்டதாகும். (அல்லது அவனது நிஜசொரூபம் அருளா காசமாக, எல்லேயற்று, விளங்கும்), என்பதாம்.*

விளக்கக் குறிப்பு :— அகந்தையே தன்முனைப்பு வடிவமானதால் ஆண்டவனுக்கு அடிமையாகும் பேற்றைத் தடுப்பது அதுவேயாகின்றது. அதன் அழிவால் மெய்யடிமை சித்திக்கின்றது. சுட்டறிவான அஞ்ஞானமே அகந்தையின் இயல்பு ஆகையால் அதன் அழிவால்தான் மெய்யறிவான ஆத்மஞானம் உதிக்க முடியும். தன்னை இறைவனுக்கு வேருனதோர் தனி வியக்தியாகக் கருதிவரும் அகந்தை யுணர்வே இறைவனிட மிருந்து நம்மை வேருகத் தோன்ற வைக்கின்றது. அது அழிந்தால் இறைவனே நம் உண்மை சொரூபமாக விளங்குவதால் அகந்தை யழிந்த ஜீவன் சிவனே என்பதாம்.

உடலாகிய எல்லேயுணர்வு உடையது அகந்தை யாதலால், அது அழிந்தால் அக் கணமே அவன் பராகாச வடிவாகின்ருன் எனப்பட்டது.

அகந்தையைத் தவிர 'மருள்' வேறென்றில்லேயாகையால், அதன் அழிவே அருளின் பொழிவாக (விளக்கமாக) ஆகின்றது.

162. *உடலகந்தையை ஒழித்த தீரனே உண்மையான துறவியும் உண்மையான பிராம்மணனு மாவான். அப்படியிருக்க, தேகாபிமானமுள்ள ஆசிரமத் துறவிகளும், வர்ணப்பிராம்மணர் களும் முறையே "நான் சந்நியாசியாகிய மேலாசிரமத்தான்; நான் பிராம்மணனுகிய மேல் வருணத்தான்" என்றவாறு தருக்கிச் சுமந்து திரியும் அகந்தைப் பளுவானது அடியோடு தீருவதென்பது, அம்மம்ம, மிகமிகச் சிரமமான தாகும்!*

விளக்கக் குறிப்பு :— வருண ஆசிரம பேதங்கள் தேகத்திற்கே உரியன. ஆகையால், "தேகம் நான்" என்ற அகந்தைபாவம் உடையவனே 'நான் சந்நியாசி, நான் பிராம்மணன்' என்று தருக்கித் திரிய முடியும். அது அகம்பாவமே யாதலால் அதை நீத்தவனே உண்மையான துறவியும், பிரம்மத்தை யறிந்ததால் உண்மையான பிராம்மணனும் ஆவன் என்பதாம்.

'ஊனவகந்தை' என்றது, ஊன்மயமான, தேகவடிவான அகந்தை என்றும், பரிச்சின்னமான, குறைபாடான சுபாவமுள்ள அகந்தை என்றும் பொருள் கொள்ளலாம்.

163. தனக் கன்னியமாகவும் பலவாகவும் சுட்டியறியும் திருஷ்டி யுள்ளவன் (அவ்விதம் பார்ப்பவன்) நான்கு வேதங் களையும் கற்றறிந்ததால் மாத்திரம் பிராம்மணனுகிவிடமாட்டான். தன் அகங்கார நாசத்தை (தன் இழப்பை)ப் பார்த்தவனே வேதப் பொருள் (ஆன்மாவை) உணர்ந்த பார்வையை உடையவன் (பார்ப்பான்) ஆவான். அவ்வாறு அல்லாதவனே கீழ்மையுற்று, நல்லோராற் பழிக்கப்பட்டு மனம் புழுங்க வேண்டியவனே யாவன்.

விளக்கக் குறிப்பு :— 'அன்னியமா நானு வறிவு' என்றது, அன்னியமாகிற பலவற்றை அறியும் அறிவு என்றும், அன்னியமாகவும் நானுவாகவும் அறியும் அறிவு என்றும் இரு விதமும் பொருள் கொள்ளலாம்.

ஸ்ரீபகவான் தொகுத்த 'பகவத் கீதாசாரம்' என்ற நூலில் 15 வது வெண்பாவான 'எல்லாவுயிர்களில்.....பார்ப்பான்' என்ற பாடலின் பிற்பகுதியான ''பார்ப்பதற்கொண்ணுப் பரமேச்சுரனை யெவன் பார்ப்பானவனே பார்ப்பான் அயலார் — பார்ப்பாரோ'' என வரும் (கலி வெண்பா) அடிகளையும் இங்கு நோக்குக. (ஸ்ரீமத் பகவத் கீதையின் 13வது அத்தியாயத்தில் 27வது சுலோகத்தின் மொழி பெயர்ப்பு).

164. பக்தித் கனிவால் தன் கண்ணையே பறித்துக் கடவு ளுக் களித்த கண்ணப்பரிடமும் கூட, அக் கண்ணைப் பறித்து அப்பும் வரையிலும் 'நமக்குச் சிறப்பான கண்கள் இருக் கின்றன' என்ற உணர்வால் உடலகந்தை இருந்தது என்றுல், அவ் வகந்தையை அறவே யகற்றல், அம்மம்ம, மிக அரிய செயலே!

விளக்கக் குறிப்பு :— சரித்திரங்களிலும் சாஸ்திரங்களிலும் காணப்படாத பல நூதனக் கருத்துக்களைப் பகவான் ஸ்ரீ ரமணர் பல சமயங்களில் நாம்

ஆச்சரியப்படும்படிக் கூறியருளியதுண்டு. பகவத் கீதையின் தோற்றம் உபதேசமுறை இவை பற்றிய பல நுட்பங்களும், விசேஷப் பொருள்களும், கண்ணபிரானின் கூற்றில் உண்மையை விளங்கவல்லார் விளங்கிக் கொள்ளட்டும் என்றே கையாளப்பட்ட தந்திர வசனங்களும், இன்னும் பலவும் போலவே, இங்கு ஸ்ரீ பகவான் சொல்லித்தான் நாம் தெரிந்து கொள்ளக் கூடியதான கண்ணப்பர் சரிதக் கருத்தொன்று வெளிப்படுகின்றது. அதாவது, கண்ணப்பருக்கு விசேஷ அழகுடன் கூடிய கண்கள் இருந்தன என்பதும், அக்கண்ணழகில் கண்ணப்பரும் தற்பெருமை கொண்டிருந்தார் என்பதும் ஸ்ரீபகவானது கூற்றால் தெரியவருகிறது. கண்ணப்பருள்ளத்தின் அன்பு நிலைமையும், அவருக்கும் கண்மீது சிறிது அபிமானமிருந்ததும், அக் கண்ணைத் தாம் வாங்கிக் கொண்ட காளத்திரமண சிவனுக்குத் தானே நன்கு தெரிய முடியும்! அதனால் தான் கண்ணப்பரின் பெருமைப் பொருளாகிய கண்களைத் தாம் பறித்துக் கொண்டு, அதன் மூலம் கண்ணப்பரின் அபிமானம் முழுவதும் ஈசனாகிய தன்னைத் தவிர வேறொன்றிலும் கொஞ்சமும் மிஞ்சி நிற்காதபடி அருள் செய்து விட்டார். ''என் பக்தனின் அபிமான ஆவற்பொருள்களையெல்லாம் நான் பறித்து விடுவேன். அதனால் அவன் என்னை மட்டுமே முழுமனத்துடன் விரும்பி நிற்க வைப்பேன்'' என்பது ஆண்டவன் கருத்தன்றோ?

இப்பாடலிலும் அடுத்த பாடலிலும் வரும் கண்ணப்பரைப் பற்றிய விபரத்தை ஸ்ரீ பகவான் கூறியபடியே ஸ்ரீ முருகனாரிடம் நேரிற் கேட்டு விளக்கக் குறிப்பாகச் சேர்க்கப்பட்டது.

165. தாம் அழகியகண்களோ டிருக்கிறோம் என்ற உடலபிமானத்தோ டிருந்த கண்ணப்பரின் கண்ணை அவர் கொடுக்க, சிவபிரான் வாங்கிக் கொண்டதின் கருத்து யாதெனின், ஜடவுடலை நான் என்றுகொள்ளும் அகங்காரத்தினால் தன் பக்தனுக்கு உண்டாகும் கேட்டைத் தவிர்ப்பதே. இதுவே சிவபக்தியின் மாட்சியும் சிவபிரானின் பெருங்கருணைத் திறமுமாகும்.

## உச. அகந்தை நடத்திறன்

166. ஆராய்ந்து பார்க்குங்கால், முழுமுதற் பொருளான கடவுளின் நியதி கீழ்க்கண்டவாறாகும். அதாவது, இங்கு அகந்தை எழுந்தால் அனைத்தும் எழும்; அகந்தை அடங்கினால் சகலமு மடங்கும் என்பதே.

விளக்கக் குறிப்பு :— பின் இரு வரிகளே உபதேசம். இதை 'நான் யார்?' என்னும் ஸ்ரீ ரமணோபதேச நூலின் கடைசியில் "தானெழுந்தால் சகலமு மெழும்; தானடங்கினால் சகலமு மடங்கும்' என்று வரும்

வாக்கியங்களாகக்கொள்க. 'ஞாலத்து' என்ற உலகைக் குறித்த பதம் 'இங்கே' என்ற பொருளில் உபயோகிக்கப்பட்டது.

167. பெரும் மயக்கத்தாற் கட்டுண்டு மூவுலகத்திலும் வாழும் எல்லா ஜீவர்களின் வாழ்க்கைகளும், சுடுகாட்டில் பிணத்தின் மேல் ஓர் பேய் ஆவேசித்து (செத்த உடலிற் புகுந்து பற்றிக் கொண்டு) ஆடுகின்ற ஆட்டத்திற்குச் சமானமே தவிர, வேறல்ல!

விளக்கக் குறிப்பு :— தனக்கொரு உருவற்ற அகந்தையானது பேய் போன்றது. இவ் வுடல் உண்மையில் ஒரு பிணம் போன்ற ஜடமே. ஆகையால், சுடுகாட்டிலுள்ள பிணத்தில் ஓர் பேய் ஆவேசித்து அவ்வுடலை ஆட்டுவிப்பது போன்றதே இம் மூவுலகத்திலும் அகந்தை குடிபுகுந்த உடலோடு ஜீவர்கள் பெருமிதமாய் வாழும் வாழ்க்கைகளும் ஆகும் என்பது கருத்து.

168. இவ்வுலகில் நல்லதொரு அதிசயம் இருக்கின்றது; கேளுங்கள்! பாரபட்ச மற்று எல்லா வுயிர்களிடமும் கருணை யுள்ள சிற்சக்தி (கடவுள்) தமக்கு நினைக்கும் சக்தியைக் கொடுத் தாலன்றித் தாமாகவே ஒன்றும் நினைக்கக் கூட இயலாத மாந்தர், கர்ம மோகத்தால் (தாம் அதைச் செய்தோம், இதைச் செய்வோம் என்று) துள்ளுவதே அது!

169. "மாறுபட்ட பகைவர்களது சேனை முழுவதையும் நான் ஒருவனுகவே எதிர்த்து அவர்களைப் பிணக்குவியலாகக் கொன்று தோற்கடிப்பேன். ஆனுல் என்னை மட்டும் யாரேனும் ஒருவர் தூக்கி நிறுத்த வேண்டும்" என்று ஒரு முடவன் சொல்லியதற்குச் சமானமே இக்கர்மப் பித்தர்களின் துள்ளல்!

**பகவான் (2)**

*(பாடல்கள் **168, 169** இரண்டின் கருத்தையும் ஒரே வெண் பாவில் தொகுத்து ஸ்ரீ பகவான் அருளியது இப் பாடல்).*

*மனம் மொழி மெய்களால் தமக்கு இயக்கம் உண்டாவதற்கே ஈசுவர சக்தியின் கருணை தேவை என்ற உண்மையை அறியாமல், 'பற்பல விதமான அஷ்ட சித்திகளிலும் நான் வல்லவன்' என்று கர்வித்துச் சித்தாடல் புரிகின்ற (அறிவுக்கேடுற்ற) பைத்தியக் காரர்களின் (சித்தர்களின்) செய்கைகள், 'என்னைமட்டும் எழுப்பி நிறுத்த யாராவது உதவினுல் இப் பகைவர்களின் கூட்டம் எனக்கு எம்மாத்திரம்?'' என்று (மார்தட்டிக்) கூறும் முடவனின் கதையைப் போன்றதேயாம்.*

விளக்கக் குறிப்பு :— 'வினைப்பித்து' என்று ஸ்ரீ முருகனார் குறித்ததை ஸ்ரீ பகவான் 'சித்திகளாற் சேஷ்டை' என்று தெளிவாக்குகின்றார்!

170. அந்தோ! அற்பமான, இலேசான ஒரு துரும்பை அசைத்துத் தள்ளவோ அன்றித் தகிக்கவோ முறையே வாயு, அக்கினி ஆகிய வலிமை மிக்க தேவர்களுக்குங் கூட சிறிதும் சுயமான வலிமை கிடையாது என்றால், 'நான்' என்று அகங் கரித்துத் தமது வலிவால் எந்த ஒரு காரியத்தையும் செய்து முடிப்ப தென்பது எவர்க்கு எவ்வாறு சாத்திய மாகும்?

விளக்கக் குறிப்பு:— 'அவனன்றி யோரணுவு மசையாது' என்ற உண்மையைக் கேனோபநிடதத்திற் காணும் ஓர் உதாரணத்தின் மேல் வைத்துக் கூறப்பட்டது.

171. மறைப்பால் தன்னறிவு (ஆன்ம உணர்வு) விளங் காமற் போகவே, பாப கர்மபலன்களாற் கட்டுண்டு, துயருற்று, மெய்க்காட்சி நீங்கி, பரம்பொருளின் இருப்பையும் அருளையும் அறிய மாட்டாதவர்களாய், 'நான்' என்று அகங்கரிக்கும் ஜீவர் களின் முனைப்பு வடிவான காரியங்கள், கோபுரம் தாங்கி போல் அமைக்கப்பட்டுள்ள பொம்மையின் உருவிற்குச் சமானமாய் நகைப்புக்கு இடமானதாகும்.

172. சுமப்பதற் கரிய பெரும் பாரங் கொண்ட பல சுமைத் திரள்களை ஒரு துரும்பு போல் நீராவியின் வலிமையால் எளிதாக இழுத்துக் கொண்டு, நெடுந்தூரம் விரைந்தோடும் புகை வண்டியில் பிரயாணம் செய்யும் அறிவுள்ள மனிதர்கள் தம் மூட்டைகளை மட்டும் தம் தலைமேற் சுமந்து கொண்டிருப்பார்களா? மாட்டார்கள்.

173. அது போலவே, அகில பராசக்தியே பல்வேறு வகை யான உலக பாரங்களையும் ஒருங்கே தன் சுபாவத்தால் செவ் வனே தாங்கி வருவதால், ஜீவர்கள் தமது மனக் கவலைகளான பெருஞ்சுமைகளையும் அந்தச் சிற்சக்தியி னிடத்திலேயே ஒப் படைத்து விட்டுக் கவலையற்றிருப்பதே சிறப்புடையதாம்.

**பகவான் (3)**

(பாடல் **171, 172, 173** ஆகிய மூன்றின் கருத்துக்களையும் தொகுத்து ஒரே வெண்பாவாக ஸ்ரீ பகவான் அருளியது இப்பாடல்).

உலக சம்ரக்ஷணையைக் கடவுள் வகித்துக் கொண்டிருக்க, உண்மை யிருப்பு அற்ற ஜீவன் (மனிதன்) அதைத் தாங்க முயல்வது, கோபுரத்தைத் தாங்குவது போல அக் கோபுரத்திலேயே செதுக்கப்பட்டிருக்கும் சிலையின் பொறுப்பைப் போன்று நகைப்புக்கு இடமானதாகும். பெரும் சுமைகளை இழுத்துச் செல்லும் புகை வண்டியிற் போகும் பிரயாணி ஒருவன் தனது (சிறிய) சுமையையும் அவ் வண்டியிலேயே போட்டுவிட்டுச் சும்மா இராமல், தன் தலைமீது சுமந்து கொண்டு அல்லற் படுவானுகில், அது யாருடைய குற்றம்? (ஜீவனது அறியாமையே அது).

விளக்கக் குறிப்பு:— உலகின் துயரங்களைக் கண்டு, ''இவ்வுலக சிருஷ்டி ஸ்திதி முறையையே மாற்றியமைக்க வேண்டும்'' என்றும் அதற்கு யோகம் புரியவேண்டும் என்றும் கருத்துடைய சாதகர்களும் நம்மிடையே காணப்படுகின்றனரன்றோ? அவர்களின் மடமையை எடுத்துக்காட்டி வழி பிறழாமல் இறைவனை அடைய ஆத்ம சமர்ப்பண மார்க்கத்தை இதன் மூலம் ஸ்ரீ பகவான் புகட்டுகின்றார்.

174. தியானம் (சமாதி) கூடும் சமயத்தில் பயமும் உடல் நடுக்கமும் ஏற்படுதல் அகந்தை சற்று மீந்திருப்பதால் தான். தேகாத்ம புத்தி அறவே ஒழிந்து சிதாகாச வெறு வெளியாய் நிற்கையில் உபசாந்தம் மட்டுமே வியாபிக்க, மேற்கூறிய உடலில் நடுக்கம் முதலியன தாமாகவே நீங்கி விடும்.

விளக்கக் குறிப்பு :— அகந்தையின் அழிவே ஆத்மசித்தியாகையால், தன் அழிவு நெருங்குங்கால் உடல் வடிவானதோர் அறிவாகிய அகங்காரம், அவ் வுடலைச் சார்ந்தே இது வரை பிழைத்திருந்ததால் விசாரத்தால் அவ்வுடற் சார்பு நீக்கப் பெறும் போது மரணவஸ்தையைப் போன்ற அநுபவத்தை அடையும். அதனுல் பயமும், உடலுறவிலிருந்து கிரந்தி பேதிக்கப் பெறுவதால் போலியுயிர்க் கூட்டுறவு நீங்குவதை யாற்றாமல் உடல் நடுங்குவதும் சிலருக்குச் சிலசமயம் ஏற்படுவதை யொட்டி இச்சந்தேக நிவர்த்தி கூறப்பட்டது.

175. தடைபடாது அலைந்து திரிகின்ற மனப்பேயின் அஞ் ஞான மயக்கம் நீங்கப் பெற்று விளங்கும் மெய்யறிவினுல் அலை யற்ற கடல் போல, அகந்தை யெழுச்சி யடங்கி, ஆன்மாபிமுகப் பட்டு நிற்றலே (நிஷ்டையே) சிறப்பாம்.

விளக்கக் குறிப்பு :— மனப் பேயின் குற்றமாவது மேன்மேலும் மயங்கியலைதல், அலையுந்தன்மை நீங்கினுல் மனத்தின் பேய்த் தன்மை

நீங்குவதால், அதுவே உண்மையான புலம் அல்லது மெய்யறிவு நிலே எனப்பட்டது. அந்தப் புலத்தால் ஆன்மாவில் திரமாய் ஒருமுகப்பட்டு நிற்கும் நிஷ்டையே அரிய சிறப்பாகும். புலத்தாற் குவிந்து கிடத்தல்—அறிவால் அடங்கி நிற்றல்.

176. அறியாமையே வடிவான அகந்தைக் கலக்கத்தினின் றும் விலகி, எல்லாம் இறைவன் செயலாய் உணர்ந்து, பெருங் குற்றமான கர்த்துருத்வம் அறவே அழியப் பெறுவதே உண்மை யான தவசக்தி பெற்ற நிலேயாகும் என்றறிக.

விளக்கக் குறிப்பு :— கல்லா அகந்தை-கர்த்துருத்துவம் அறும் வழியைக் கற்காத அகந்தை.

தவம் தாங்கும் சக்தி - புதுப்புது யோகங்களேக் கற்பித்து அவற்றைப் பயிலுவதான தவத்தால் சக்தி சம்பாதித்து, அச்சக்தியால் பெருங்காரியங்களேயும் (உலகைத் திருத்திச் சுவர்க்கமாகச்) செய்ய வல்லவர்களாக ஆவது உண்மையான தவசக்தியல்ல. "நான் அவ்வாறு செய்ய வல்லேன்; செய்கிறேன்" என்ற கர்த்ருத்வம் கழன்ற நிலேயே மெய்யான தவசக்தி நிலே என்பது உணர்த்தப்பட்டது. "தரி" என்ற பதத்திற்கு 'இவ்வாறு மனத்திற் கொள்' என்றும் 'அப்படிப் பட்ட மெய்யான தவசக்தியை நீ பெறுக' என்றும் இருவிதமாகப் பொருள் கொள்ளலாம்.

## உரு. ஆன்மாபகாரத் திறன்

177. நாஞவாய்க் காணப்படும் பலவுலகங்களும் ஆங்காங் குள்ள உயிர்களும், உண்மையில், காணுகின்ற தானே எனக் கண்டு அவற்றைத் தன்னில் ஒடுக்கும் சிதாகாச ஆன்ம நிலேயை அறியாது மயங்கியவர்களே, ஆன்மாபகாரமாகிய பாபத்தைச் செய்தவர்கள் ஆவர்.

விளக்கக் குறிப்பு :— தன்முகமாய்த் தோற்றி - நானே எனக் கண்டு, ஆன்மாபகாரம் - ஈசனுடையதை அபகரித்தல். ஜீவ ஜகமாய்த் தன்னேத்தான் மயங்கிக் காண்பதே ஈசத்துரோகம் எனப்பட்டது. தான் ஒருவன் தனி வியக்தி என்று கிளம்புவதே ஈசனது பூரணத்துவம் என்னும் உடைமைக்கு ஊறு விளேப்பதாம்.

## உசு. சொர்க்க நரகத் திறன்

178. மனிதர்களே, சொர்க்கம் முதலாகக் கூறப்படும் பற்பல உலகங்களின் இருப்பினுண்மையைப் பற்றி நீங்கள் தம்முள் ஒருவரோ டொருவர் வாதமிட வேண்டாம். நாம் வசிப்பதாக உணரும் இவ்வுலகம் எது வரையிலும் எவ்வளவு

உண்மையோ அது வரையிலும் சொர்க்கம் முதலிய உலகங்களும் அவ்வளவு உண்மையாக இருப்பதாகவே நீங்கள் கொள்ளலாம்.

விளக்கக் குறிப்பு :— "சொர்க்கம், நரகம் முதலிய இதர உலகங்கள் இருப்பது உண்மையா?" என்று வாதிப்பதில் மக்கள் மிகவும் சுவை கொள்வர்! காண்போனும் ஜீவனுகிய தன்னைச் சத்தியம் என்று வைத்துக் கொண்டுதான் அம்மக்கள் தனக்கு அன்னியமாகக் காணப்படும் இவ் வுலகத்தையும் சத்தியம் என்று கொள்கிருர்கள். பிறகு சாஸ்திரங்களிற் கூறப்படும் சுவர்க்க, நரக உலகங்கள் தம் கண்களுக்குக் காணப்படாததால் அதை வெறும் கற்பனையாக இருக்குமோ என்றும் ஐயுறுகிருர்கள். அதனுல் அவற்றின் உண்மையைப் பற்றி வாதமிடுகிருர்கள். இவர்களது அறிவில் எங்கு பிழையிருக்கிறது என்பதை பகவான் இப்பாடலில் சரியாக விளக்குகின்ருர்.

உலகங்களைக் காண்பானுகிய தான் எவ்வளவு சத்தியமோ, காணப்படும் இவ்வுலகின் சத்தியமும் அவ்வளவேயாகும். அதாவது, 'கண் எப்படியோ காட்சி அப்படி' என்ற நியாயத்தால். எனவே சாசுவத இருப்பற்றவனுகிய தான், (ஜீவன்) அகந்தை, அசத்தியமானதோர் பொய்த் தோற்றமே என்று ஆன்ம ஞானத்தாற் கண்டு கொண்டால், பிறகு ஜீவனுற் காணப்படும் இவ் வுலகமும் இப்போதே பொய் என்றறிய முடியும். பிறகு அவ்வாறே மறு உலகங்களாகிய சொர்க்க நரகங்களும் பொய்யே என்ற முடிவுக்கு வரலாம். ஆனால் ஆன்ம ஞானம் பெறுவதற்கு முன் தானுகிய ஜீவனும் இவ்வுலகமும் மெய் என்றே காணப்படும் போது, சொர்க்க நரகாதி உலகங்களும் அவனவனது பாப புண்ணியப் புஜிப்புக்கு ஏற்ப வாழ விருக்கும் மெய்யான உலகங்களே என்று அவன் ஒப்புக் கொண்டேயாக வேண்டும்! அவைகளைப் பொய்யாக்க வேண்டுமானுல், அவைகளோடு சமசத்தியமுள்ள இவ்வுலகமும், இதைக் காணும் தானும், இதில் வாழ்வதாகத் தோன்றும் 'தன் வாழ்வு' என்ற தோற்றமும் யாவும் பொய்யெனக் காண்பதே தக்க வழியாம்.

179. இந்த உடலும் உலகமும், இதோ! உண்மையாகவே இருக்கின்றன என்று தம் புத்தியாற் கண்டு தீர்மானிக்கும் அறிவாளிகள் எம்முடன் இருந்து ஆராய்வார்களே யானுல் (காணப்படும் இவ் வுலகம் மட்டு மன்றி நூல்களிற் கூறப்படும்) சொர்க்கம், நரகம் முதலிய எண்ணிறந்த பிற உலகங்களுங்கூட உண்மையாகவே உள்ளன என்றுதான் அவர்களோடு நாம் உரையாடுவோம்!

விளக்கக் குறிப்பு :— விஞ்ஞான ஆராய்ச்சி யாளர்களுங்கூட "பொறிகள் வழியாகப் புலனுகும் பொருள்கள் உண்மையில் அவ்வாறே இருக்கின்றன என்று சொல்ல முடியாது. பொறிகள் பொருள்களின்

தன்மையை உள்ளபடி உணர்த்த வல்லன அல்ல; ஆதலால் அவ்விஷயத்தில் பஞ்சேந்திரியங்கள் நம்பத்தகுங் கருவிகளல்ல" என்று தற்போது கூறுகின்றனரன்றோ? ஆகையால், இவ்வுலகு நமக்குத் தோன்றும் வண்ணமே சத்தியமானது என்று தீர்மானித்தல் தவறு. அப்படித் தீர்மானிப்போர் அறிவிலிகளே. அவர்களைப் 'புலவோர்' என்றது வஞ்சப் புகழ்ச்சியணி என்க.

"எனின், இத்தகையோர்க்கு உலகங்கள் பொய்யென்றல்லவா உபதேசிக்க வேண்டும்? அவ்வாறின்றி, ஸ்ரீ பகவானும் அவர்களோடு பேசும் போது இவ்வுலகமும் மறு உலகங்களும் மெய் என்றே பேசுவேன் என்று கூறுகின்றனரே" என்றால் "காணப்படும் உலகங்கள் யாவும் காண்பானை யன்றி யில்லாத காரணத்தால் ஆன்மாவில் தோன்றுங் கற்பனைகளே" என்று தம் அனுபவத்திற் கண்ட ஞானிகள் கூட அவ்வாறு 'உலகம் மெய்' எனக் கூற இரு காரணங்கள் உண்டு.

(1) தன்னை அற்ப, அசத்திய ஜீவனாகக் காணாமல், அகண்டான்ம ஞான சொரூப சத்திய வஸ்துவாய்க் காண்பதால் ஞானிகளின் பார்வையில் 'காண்பானெப்படி, காட்சியப்படி' என்ற நியாயப்படி, அதிஷ்டான பிரம்ம தரிசனத்தால் அனைத்துலகும் பிரம்மமே யாவதால் 'பிரபஞ்சம் மெய்யே' என்று கூறுவர்.

(2) அகந்தையாற் காணப்படும் நாமரூபப் பிரபஞ்சம் பொய் என்பதை உள்ளது உள்ளவாறு கூறின், தத்துவம் அறியாத வாசனை வயத்தரான பாமர மக்கள் நரகம் முதலிய உலகை நம்பாமற் போவதால் இவ் வாழ்வில் தீயகர்மங்களான பாபத்திற்கு அஞ்சாதவர்களாகவும், சொர்க்கம் முதலிய உலகங்களை நம்பாமற் போவதால் சற்கர்மங்களில் (புண்ணியகாரியங்களில்) அசிரத்தை யுடையவர்களாகவும் மாறிப் போய், இகம் பரம் இரண்டும் கெட்டு அதோகதி யடைவரே என்பதற்காகவும் 'அவை மெய்யே' என்று கூறுவர்.

"ந புத்தி பேதம்.......ஸமாசரன்" எனவரும் ஸ்ரீமத் பகவத்கீதை 3-26 வது சுலோகம் இங்கு காணத் தக்கது.

## உஎ. நரக பயத்திறன்

180. துன்பத்தின் சொரூபம் எதுவென்று (அகந்தை என்று) உணராதவர்களே தாம் நரகத்திற்கு அஞ்சி நடுங்குகிறோம் என்பர். நரக வடிவான அகந்தைக் குற்றத்தின் தன்மையை அறிந்தோர், அதை அழிக்கும் உபாயம் அறிந்து நிச்சயமாய் தாமே மெய்ந்நிலை யடைவர்.

விளக்கக் குறிப்பு :— மேவினர் - திண்ணமாய் மேவி விடுவர் என்ற தேற்றத்தால் இறந்த காலத்திற் கூறினர். முதல் அடியில் 'நரகம்' என்றது துன்பஸ்தானமான நரகலோகம். இரண்டாவது அடியில் 'நரகம்' என்றது துன்பம் என்ற பொருளில் வந்தது.

## உஅ. நரக ஜயத்திறன்

181. ஸ்ரீமந் நாராயணன் நரகாசுரனைக் கொன்றார் என்பது புராணம். துன்பத்திற்கு இடமான இவ் வுடலையே 'நான்' என்று வியவகரிப்பவனே (அகந்தையே) அந்த நரகாசுரனாகும். இந்த நரகாசுரன் எங்கிருந்து உதிக்கிறான் என்று விசாரித்து அகந்தையை அழித்தோர் யாவரே யாயினும் அவரே நரகாசுரனைக் கொன்ற ஸ்ரீமந் நாராயண மூர்த்தி என்று அறிக.

182. நரகன் வசிக்கின்ற இடம் ('நான்' உதிக்கும் ஸ்தானம்) எது என விசாரித்துச் சென்று அவ்வகந்தையாம் நரகனை அழித்து, ஞானஸ்நானம் செய்வதே (ஆத்ம ஞானமடைவதே) நரகாசுரனை வெற்றிகொண்ட ஞாபகச் சின்னமான நரகசதுர்த்தசி ஸ்நானம் (தீபாவளித் தைல நீராடல்) ஆகும்.

**பகவான் (4)**

*(பாடல்கள் **181, 182,** இரண்டையும் தொகுத்து ஸ்ரீ பகவான் அருளியது இப் பா).*

" 'துன்பமய இவ்வுடலே நான் ஆகும்' என்ற தேகாத்ம புத்தியால் நரக உலகத்தை ஆளுபவனான நரகாசுரன் (துன்ப வாழ்வில் உழலும் அகந்தை) எங்கே யுள்ளான்?" என்று விசாரித்து ஆத்ம ஞானமாகின்ற சக்கராயுதத்தால் நரகனும் அகந்தையைக் கொன்றவனே ஸ்ரீமந் நாராயண னாவான். அவ்வாறு அகந்தை யழிந்த திருநாளே நரகசதுர்த்தசி என்னும் நன்னா ளாகும்.

183. மாமிசக்குவியலாய் உடல்வடிவான மலப்பிண்டமாம் நரகத்தை 'நான்' என்று அபிமானித்துச் சீரழிந்த நரகாசுரனாகிய அகந்தையை, தானே விசாரித்துக் கொன்று வீழ்த்தி, என்றும் பிரகாசிக்கும் பரமாத்ம ஜோதியாய் விளங்குவதே தீபாவளி யாகும் என்று தெளிக.

**பகவான் (5)**

நரக வடிவான துன்பவுடலாம் இப் புலை வீட்டையே 'நான்'

என்று அபிமானித்துக் கேடடைந்த நரகாசுரனை மகா பாவியை விசாரித்துக் கொன்று, ஆன்மாவே தானைப் பிரகாசிப்பதே தீபாவளியாகும் என்று தெளிக.

### உகூ. அகமுக மாட்சித் திறன்

184. அன்னியத்தைப் புலன்களால் அறியும் சுட்டறிவாம் அகந்தையின் உண்மை சொரூபமான ஆன்மாவே உரிய பற்றுக் கோடாயிருக்க (அதை உண்முகப்பட்டுப் பற்றிக் கொள்ள முயலாமல்) சாதகர்கள் அதற் கன்னியமான முன்னிலை-படர்க்கைப் பொருள்களில் ஏதேனுமொன்றைத் தியானலக்ஷியமாகப் பற்றிக் கொண்டு பாடுபட்டு உழைப்பது, பொருளை விட்டுவிட்டு அதன் நிழலைப் பற்றிக் கொள்வது போன்றதே (அறியாமையே) யாகும்.

குறிப்பு: பாடல் 354 ஐயும் இங்கு ஒத்து நோக்குக.

185. தன்முன் காணப்படும் குறிகுணங்களோடு கூடிய பொருள்களையே (முன்னிலை படர்க்கைப் பொருள்களையே) நோக்கிச் சீர்குலைந்து துன்புறும் தனது மனம் ஆன்மாவில் நிலை பெறும் வழி என்னவென்றால், அவ்வாறு அற்பப் புலப் பொருள்களையே எதிரிட்டறியும் அறிவாகிய 'நான் யார்?' என்று தன் இருப்பறிவை நாட ஆரம்பிப்பதுதான்.

186. பார்க்கின்ற அறிவைப் பார்க்க உள்ளே திரும்பாமல் பார்க்கப்படு பொருளையே பார்ப்பதனால் துன்பப்படும் பார்ப்பாரே! (புற நோக்குடையோரான மக்களே!) நீங்கள் உங்களுக்கு அன்னியமானவற்றின்மேல் பார்வையைச் செலுத்தாமல், உள் நோக்கி (அகமுகமாகி) இரண்டற்று நிற்பதே சுகம்.

விளக்கக் குறிப்பு:— 'பார்ப்பாரே' என்றது ஓர் இனத்தவரை மட்டுமன்றி பகிர்முகிகள் யாவரையுமே குறித்ததாகக் கொள்க. 'உள் முகம்' 'அந்தர்முகம்' எனக் கூறப்பட்டாலும், தேகத்தை முன்னிட்டே 'உள் வெளி' என்ற பதங்கள் உபயோகப் படுவதால், தேகத்தில் உள்ளே பார்ப்பது என்று பொருள் கொள்ளாமல் தன்னைப் பார்ப்பதே அது என்று கொள்ள வேண்டும். உள்வெளியற்ற தன்னைக் கவனிக்கும் அந்த நாட்டமானது 'அந்தர்முகம்' அல்ல; அது அகமுகமே!

187. நெஞ்சமே, நீ உன்னை விருத்தி வடிவாய் பகிர் முகமாக்கிக் கொள்வது அறிவுடைமை யாகாது. இதயத்துட் சென்று நீ

ஒடுங்குவ தொன்றே சிறந்த பயனாகும். உன்னை வெளிமுகப் படுத்தித் துக்கத்தால் அழிய வைப்பதற்காகத் தந்திரம் புரியும் மாயையின் கையில் அகப்படாமல் இதயத்துட் புகுந்து ஒளிந்து (மறைந்து) வாழ்வாயாக.

குறிப்பு :— "நீ புகழ்நாடி உன்னை விளம்பரப்படுத்திக் கொள்வது அறிவுடைமையாகாது" என்றும் பொருள் பொருந்தும்.

188. வெளிமுகப்பட்டு, அலைந்து, வியப்பான பொருள் களையே (அடைந்து அனுபவிக்க) விரும்பி, அவற்றை அடைவ தால் களிப்பு மிகுந்து (அதனால் புத்தியின் சமம் தவறி) ஆடிக் குதித்து வாழ்நாளை வீணாகக் கழிக்காமல், அருளால் (விசார அறிவால்) தன் உள்ளத்துள் தன் ஆன்ம சொரூபத்தைத் திட மாய் உணர்ந்து, அதிலேயே நிலைபெற்று வாழ்வதே சிறப்பாகும்.

189. துவித பாவமே (துவித வுணர்வே) துக்க காரணமாய் தத்தம்முடைய உபசாந்தியைக் கெடுப்பதால், அந்தத் துவித மயக்கம் தம்மைக் கவர்ந்து கொள்ளாதபடி, சித்த விருத்தி ஒடுங்க வேண்டியதே நெறியாம்.

விளக்கக் குறிப்பு :— இப் பாடலில் 'தொந்தக் கருத்தே துக்க ஹேது' என விளக்கப்பட்டதும், 186வது பாடலில் 'தொந்தமறுத்தல் சுகம்' என்று குறிப்பிடப்பட்டதும் கவனிக்கத்தக்கனவாம். துவித பாவத்திற்கு இடந்தராமையே (நான் என்று தனிவியக்தியாக எழாமையே) சித்த விருத்தி நிரோதம் எனத் தீர்மானிக்கப்பட்டதாம்.

190. சிவம் தனதுள்ளே இருப்பதை யுணராமல், சிவ தரிசனத்திற்காக ஊரூராய்ப் பறவைகளைப்போலப் பறந்தலைந்து தேசாடனம் செய்பவர்களே! உள்ளத்தில் அறிவானது சற்றும் அலைவு (எழுச்சி) உறாமல் அடங்கி நிற்பதே பரமசிவம்! (பரம சிவதரிசனமாம்.)

விளக்கக் குறிப்பு :— சத்சித் தான 'இருப்புணர்வு' எழுச்சியாகி அலையாதபடி இருக்க வைத்தலே சிவத்தைத் தேடி அடைவதாம் எனப்பட்டது.

191. கப்பலின்மேலே விரித்திருப்பதால் பாய்மரம் காற்றால் அலைத்து அழிக்கப்படுகிறது. அதுபோல, மனம் பகிர்முகப்பட்டு விரிந்தால் கேடடையும். அவ்வாறின்றி, பெரிய கடலினுள் மூழ்கிப் பதிந்து நிலைபெறும் நங்கூரம் போல மனம் இதயத்துள் ஆழ்ந்து நிலை பெறுவதே ஞானம்.

விளக்கக் குறிப்பு :— வெளியே பரந்து அழிபடுவது மனம்; உள்ளே புகுந்து பதிந்து தரிப்பது அறிவு அல்லது ஞானம் என்றவாறு. அறிவு - அறிவுடைமையாகும் என்னலும் பொருந்தும்.

192. புறமுகத்திற் பாயும் புத்தியைத் தடுத்து உள்ளே திரமாய் நிறுத்திக் காப்பதுதான் இதயேசனுன பரப்பிரம்ம சொரூபத்தைக் காண்பதற்கான முமுக்ஷுக்களின் தீவிர அதிகாரித்துவம் ஆகும் என்றறிக.

குறிப்பு :— பதி—ஸ்தலம், க்ஷேத்திரம் என்று கொண்டால் 'இதயத்தலத்தில் வசிப்பவனுன' என்றும் பொருள்படும்.

193. புற விஷயங்களேயே நோக்கியலேந்து திரியும் அகந்தையின் கவனசக்தி தனது உண்மையான (ஆத்ம) இயல்பை—இருப்புணர்வை-நாட ஆரம்பிக்குமாயின் அப்போது, இதய வடிவாய் நிறைந்து விளங்குகின்ற தனது மெய்யறிவால் அற்ப அகந்தையுணர்வு அழியப் பெறுவதோடு, அன்னியங்களும் ஒழிந்து (இரண்டற்று) விடும்.

விளக்கக் குறிப்பு :— இப் பாடலால், மனம் தன்னே நாட ஆரம்பித்தால் தன்மையாகிய தானும் அழிவதோடு (மனோநாசமடைவதோடு) முன்னிலே படர்க்கைகளாகிய எண்ண வடிவங்களும் அழியப் பெறும் என்றுணர்த்தி, விசார நெறியின் முழுமையும் கூறி, உளவையும் பயனேயுங்கூடக் கூறி விடுகின்றுர்.

## ௩0. பரலோகத் திறன்

194. (சிவலோகம்) கடவுளுலகம் எங்கேயோ இருப்பதாக எண்ணம் தோன்றுவதற்குக் காரணம், "இவ்வுடலே நான்" என்ற தேகாத்ம புத்தியின் மயக்கமே. நாம் போய் அடைவதற்கான அச் சிவபிரானின் பரிசுத்த உலகம் நம் இதயத்திலன்றி வேறெங்கும் வெளியில் இல்லே என்றறிக.

விளக்கக் குறிப்பு :— சிறிய, அற்ப தேக அளவினனுக நம்மை நாம் குறுக்கி மேற்கொண்ட பாவத்தினுல், அதற்கு அன்னியமாக, பெரிதாக, அரியதாகக் காணப்படும் இவ்வுலகமும், அதைப் படைத்த சிறப்பான கடவுளும், அவர் இருக்கும் உலகமும் மிகமிகச் சிறப்பாகவும், புதிதாகவும், அரியதாகவும், வெளியிலும் எங்கேயோ இருப்பதாகக் கருத வேண்டிய அவசியம் வந்து விடுகின்றது! உண்மையில் நம் யதார்த்த பரந்தாமத்திலிருந்தே ஜக, ஜீவ, ஈசக் கற்பனேகள் சிருஷ்டியாவதால், அச் சிருஷ்டியின் மூலஸ்தானமாகிய

நம் ஆன்ம சொரூபமே (இதயமே) கடவுளும் கடவுளுலகமும் எனத் தேற வேண்டியது கடன்.

"The Kingdom of God is within you — பரலோக சாம் ராஜ்யம் உன்னுள் ளிருக்கின்றது" என்ற விவிலிய மறையின் விளக்கம் இதுவே.

195. *அந்தச் சிவலோகம் இருப்பதற்கு இடமளிப்பதோடு, அதை ஓர் மிக்க விசித்திரமான உலகமாக விளக்கிக் கொண்டிருப்பதற்கும் பூரண, சுய, அறிவொளி நீயேயாக இருப்பதை உணர்வதே அறிவு. அச்சிவனுலகம் உன்னுள்தான் இருப்புக் கொண்டுள்ளது !!*

விளக்கக் குறிப்பு :— 'கண்ணலாற் காட்சியுண்டோ?' என்றபடி, தன் இருப்பால் பிறவுலகங்களின் இருப்பும், தான் இருக்கிறேன் என்ற அறிவால் பிற வுலகங்களைப் பற்றிய அறிவும் ஏற்பட்டு விளங்குகின்றன என்பது கருத்து.

"நிகழக்காண்டல் காண்"-என்ற சொற்றொடருக்கு 'இருக்கக் காண்பதே அதைக் காண்பது மாம்' என்றும் பொருள் கொள்ளலாம்.

196. *அடியார்களாகிய (மேலோராகிய) அன்பர்களது ஒடுங்கிய மனத்தில் (நிஷ்டையில்) இதுகாறும் காணுததோர் புதிய அனுபவம் போலப் பூரணமாய்ப் பொங்கியெழும் துரியாதீத வெளிதான் ஆன்மசொரூப ஞானப்பிரகாசத்தால் விளங்கக் கூடிய, (யாரும் அடைதற்கு) அரிய, உண்மையான, சிவலோகம் என்றறிக.*

விளக்கக் குறிப்பு :— சிவலோகம் என்பது புலன்களுக்கு உணர்வாகும் தேவர்களாலும் பொருள்களாலும் நிரம்பிய ஓரிடம் என்று கருத வேண்டாம்; புலன்களுக்கு அதீதமான (எட்டாத) வெறும் வெளியே — அறிவு வெளியே — உண்மையான, அரிய சிவலோகம் என்று குறிப்பிடுகின்றார் !

## ௩௧. சிவநிலைத் திறன்

197. *சிதறுண்டலையும் சித்தம் எனப்படும் அஞ்ஞானப் பேயகந்தை நீங்கவே, அதனுல் சித்து ஜடம் என்னும் பேதத் தன்மை (இருமை)யும் ஒழிந்து, அதிசுத்தமும் சாந்தமுமான சகஜ சமாதியின் ஞானவொளியில் ஊறித் திளைக்கும் ஒருவன் பரிசுத்த சிவமே யாகும்.*

198. தான் ஓர் தனியான (வேறுபட்ட) வியக்தியாகக் கருதி உழலும் அகந்தை நீங்கி, ஞான வடிவாம் ஆன்மாவே தான் என்ற போதத்துடன் இதயத்துள் ஊன்றி நிற்கவே, அங்கு இதுகாறும் நிறைந்து கிடந்த சகலவிதக் கற்பனைகளும் (வாசனை களும்) நீங்கி அழிந்தபின் அங்கு அனுபவமாகும் சுத்தசித்தமே சிரேஷ்டமான சிற்சொரூபமாகக் கண்டு கொள்ளப்படும் சிவம் ஆகும்.

விளக்கக் குறிப்பு :— 'பிறிதா மகந்தை பிரிய' என்ற சொற்றொடருக்கு "தானல்லாத, அநாத்மாவான, அகந்தை நீங்கி" எனவும் பொருள் கொள்ளலாம்.

'சித்தம்' என்றதில் 'தம்' என்ற பதம் அசுத்தத்தை, அஞ்ஞானத்தைக் குறிப்பது. அது நீங்கினால் மிஞ்சுவது சித்தே - ஆன்மாவே. ஆக, சித்தத்தின் மலமான 'தம்' கழிவதால் 'சிவமாதல்' என்ற மணிவாசகர் மறை உணர்த்தப்பட்டது. 244வது பாடலும் இங்குக் காணத் தக்கது.

199. எங்கும் தானேயாக வியாபித்து, எல்லாவற்றையுங் கடந்து விளங்கும் அழிவற்ற அதிசூக்ஷ்மப் பொருளே கடவுள் எனப்படுவதாம். விரிந்தலையும் மனம் மலமகன்று, தன் மூல ஸ்தானமான இதயத்தே ஒடுங்கி ஒன்றாகித் தெளிந்து நின்றால், அந்நிலையே சிவ சொரூப மாகும்.

## ௩௨. அரியர வபேதத் திறன்

200. அரனே உயிர்களுக்கு ஞானத்தைக் கொடுப்பவ னென்றும், அரியே வானுலக போகங்களை (உயிர்களுக்கு இன் பத்தை) வழங்குபவ னென்றும் மக்கள் பிரித்துக் கூறுவது வழக்கம். (ஆனால் உண்மை என்னவென்றால்) திடமான ஞானமே கடவுளாகவும் பேரின்ப (சுவர்க்க) மாகவும் விளங்குவதால், அது ஒன்றே அரனும் அரியும் ஆகும் என்றறிக.

## ௩௩. சத்தி சிவத் திறன்

201. தனிமுதலாகிய எந்தத் தன்னை (ஆத்ம சொரூ பத்தை) விட்டுவிட்டு, மனமே தன் வடிவாக எழுகின்ற அந்த அற்புத சிற்சக்தி சிறிதளவும் (இருக்கமுடியாதோ) இல்லையோ, மனத்தின் எழுமிடமான அவ் வுள்ளமே (ஆன்ம சொரூபமே) சுத்த சிவமாகும்.

விளக்கக் குறிப்பு :— 'எந்தத் தனே' என்று கூறியதால் 'தனே' என்றது அகந்தை நான் அல்ல; ஆத்ம சொரூபமான நான் (சிவம்) என்று கொள்ள வேண்டும். தில்லை வாழ் சிவம் - தில்லை என்பது ஓர் இடத்தையும், சிவம் என்பது அங்குள்ள இறைவனையும் குறிப்பதாகக் கொண்டால், உள்ளம் - இடம், தான் - அங்குள்ள ஆன்மா என்று உருவகத்தை விரித்துப் பொருள் கொள்ளலாம். அன்றி, இடமும் இடத்தானும் ஒன்றே என்ற நியாயத்தாலும், "உன் பேர் தான் இதயம் என்றிடுவர்" என்ற ஸ்ரீ பகவானது வாக்கினுலும், உள்ளம், இதயம், தான், ஆத்மா, சிவன் இவை ஒரு பொருட் பன்மொழியாகவும் கொள்ளலாம்.

202. எதை யடைந்தபின் மனம், நிலை பெற்ற பேரின்பம் அனுபவிப்பதால், பின்னும் சுக நுகர்ச்சிக்காக அன்னியப் பொருள்களைத் தேடி ஓடாதோ, அந்த நிறைந்த, புத்தம் புதிய ஞானுனுபவத்தை மனத்திற்குத் தரும் உள்ளமாகிய சிவமே (ஆன்மாவே) மனோரஞ்சிதமாகும்.

203. ஆன்மக் காதல் மேவிய நல்லோர் சித்தமே கண்ண னிடம் அளவற்ற காதலால் மயங்கி நின்ற கோபிகைக ளாகும். விட்டிற் பூச்சியைக் கவர்ந்திழுத்து அழிக்கும் சிவந்த தீபச் சுவாலையைப் போல, தன்வயப்படுத்தி அகந்தையின் சீரை அழிக்கும் ஆன்மாவே கோபிகா நாதன் (ஸ்ரீ கிருஷ்ணன்) ஆகும் என்று குறித்தறிக.

## ௩௪. சிவபூஜைத் திறன்

204. பரிபூரண ஆத்ம சொரூபமாம் சத்சித்துடன் வேறு காதவாறு அகண்டாகார விருத்தியால் (மோனமுற்ற நினைப் பால்) ஒன்ருய் இணைந்து நிற்கும் உபசாந்தத் தன்மையே சுத்த சிவ பூஜை என்று திடமாய் அறிக.

விளக்கக் குறிப்பு :— மோன நினைப்பு - அகண்டாகார விருத்தி (அதாவது விருத்தியற்ற நிலை) 'சமுத்திராகார நதி' என்று கூறுவதுபோல

அகண்டாகார விருத்தி என்பது அகண்ட மோனமே. மனோவிருத்தியற்ற போது கண்டமாதல் இல்லாததால், 'அகண்டாகார விருத்தி' அல்லது 'மோன நினைப்பு' என்று எதிர்மறைச் சொற்களை யிணைத்த பிரயோகத்தால் விளக்கப்பட்டது.

ஆன்ம சொரூபத்தினின்றும் அதற்கு வேறுபோல் பின்னப்பட்டுக் கிளம்பும் மனோ விருத்தியே ஆன்மாவை இகழும் செயலாகும். அதற்கு மாறாக, அவ்வாறு தனி வியக்தியாக அகந்தை விருத்தி எழாது ஆன்மாவோடு அனன்னியமாய் நிற்பதே — ஆன்ம நிஷ்டையே - ஆன்மாவைப் பூஜிப்பதாகும். ஆகையால் இதுவே 'சுத்த சிவ பூஜை' எனப்பட்டது.

205. தனக்கு விதிக்கப்பட்ட வாணாள் எல்லையையும் கடந்து பிழைத்திருக்கும்படி மார்க்கண்டன் எமனை எதிர்த்து வென்றான். ஆகையால் வலிய காலநாசன் (காலகாலன்) ஆகிய சிவனை அன்போடு ஆராதிப்பாராயின் அப்பூசனையினால் கால பாசமானது நைந்து அறுந்து போகும் (என்றறிக).

விளக்கக் குறிப்பு :— "வன்கால நாசனை சிவ பூசனை ஆற்றுமாயின் காலபாசம் நைந்துபரியா நிற்கும்" என்று மூலத்திற் கொண்டு கூட்டிக்கொள்க. பரிதல் - அறுதல்.

''கூற்றங் குதித்துய்ந்தாரிங்கில்லை'' என்றதோர் பழைய பாட்டின் கருத்தை மறுத்துரைப்பவராய் இப் பாடலைக் கூறினார். ஸ்ரீ பகவானைப் போலவே வள்ளுவரும் ''கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின் ஆற்றத் தலைப்பட்டவர்க்கு'' என்றார். 'மறலி யுயிர்க்குடித்த கான்முளையே போலுங் கரி' என்றது நீதி நெறி விளக்கம்.

"சிவாய நமவென்று சிந்தித் திருப்பார்க்
கபாய மொருநாளு மில்லை—யுபாயம்
இதுவே மதியாகு மில்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்"

என்றார் ஔவையார். ஸ்ரீ பகவான் கருத்தே சரியென்பதற்கு இன்னும் பல பழைய ஆதாரங்களு முண்டு.

206. எண்ணத்தால் தோன்றி யிருப்புள்ளனவான அழகிய (மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், ஜீவன் என்னும்) எட்டு வடிவங்களாலான (அஷ்ட மூர்த்தமான) இவ் வுலக மனைத்தும் இறைவனது வடிவங்களாகவே காணும் அபேத திருஷ்டி யடைந்தவராய் (விருப்பு வெறுப்பின்றி) அவற் றிற்கு, அவ்வக் காலதேச அவசியங்கட்குத் தக்கவாறு ஹிதம் புரிவதான வழிபாடு சிறந்த சிவபூஜையே என்றறிக.

விளக்கக் குறிப்பு :— "எண்ணுவனவாம்" - 'கணக்கிடப்படுகின்ற' என்றும் 'சிந்திக்கப்படுகின்ற' என்றும் இருவிதமாகவும் பொருந்தும். "எண்ணுருயாவும்....ஈசனற் பூசனை யுந்தீபற" என்ற உபதேசவுந்தியார் 5 வது உபதேசமும் இக் கருத்துப் பற்றியதே.

## ௩௫. வணக்க வுண்மைத் திறன்

207. குறைபா டுடையவனுன ஜீவன் தன்னையாளும் இறைவன் திருவடியின் கீழ் கௌரவமுள்ள தன் தலையைச் சாய்த்துப் பொருத்திச் செய்யும் நமஸ்காரத்தின் உண்மை என்னவென்றால், 'தேகமே நான்' என்னும் அகங்கார ஜீவ வுணர்வை யடக்கி, அதன்மேல் அங்கு சிவபோதமான ஆன்மவுணர்வு தலையெடுத்து விளங்குவதேயாம். (தலையெடுத் தோங்கும் சிவபோதத்தில் ஜீவபோதம் அடங்கி மறைதலே வணக்கத்தின் தத்துவமாம்).

## ௩௬. விக்கிரக ஆராதனைத் திறன்

208. விக்கிரக ஆராதனை செய்வதில் உள்ள மிக முக்கியமானதோர் இரகசியத்தை, உள்ளம் நெகிழ்ந்துருகும் அன்பால் அனுபவித் தறியாதவனுய், அதைத் தூஷிக்கும் மனிதனே ! நீ மட்டும், நடமாடும் ஜடமாயிருக்கும் உனது இவ்வுடல் வடிவமாம் விக்கிரகத்தைச் சைதன்யமான நீயே அது என்று (ஆவாஹனம் செய்து) தவருகக் கருதி (தினமும் தவருமல் அவ் வுடலாகிய விக்கிரகத்திற்கு நீராட்டல், உடை, உறையுள், ஊணுதிகளை அளித்து) ஆராதிப்பது எப்படி நியாய மாகும்?

விளக்கக் குறிப்பு :— உடலுருவையே 'தான்' என்று கருதும் வழக்கம் இருக்கும் வரையில் விக்கிரகங்களைக் கடவுளாக எண்ணி வழிபடுவதில் தவறென்று மில்லை. ஆராய்ந்து பார்க்கின், முன்னதே பின்னதற்குக் காரண மாயிற்று என்றறிக. ஆகையால் தன் தேகாராதனையைச் செய்து கொண்டிருப்போர் விக்கிரக ஆராதனையை நிந்தித்துக் கண்டிப்பது தவறு. அவர்கள் முதலில் 'தான் தேகம்' என்ற பாவனையை விடாது பற்றிக் கொண்டிருப்பதை நிந்திக்கட்டும்; விட்டொழிக்கட்டும். பிறகு, அவசியப்பட்டால், விக்கிரக ஆராதனையைக் கண்டிக்கலாம் என்பது உபதேசம்.

## ௩௭. திருநீற்றுத் திறன்

209. அநாதி காலமாய் உள்ளத்திற் சேர்ந்திருந்த பண்டை வாசனைகளையுடைய போலியுயிராகிய அகந்தை ஞானுக்கினி

யினால் வெந்து அவ் வுள்ளத்தில் இரண்டறக் கலந்துபோய், அதன் பின் சாம்பலாகி மிஞ்சி நிற்கும் (உண்மையுயிரே) சிறந்த மெய் யுணர்வே இறைவனது விபூதியின் வடிவ மாகும்.

விளக்கக் குறிப்பு:—கள்ளமான அகந்தை வெந்தபின் மிஞ்சிநிற்கும் உண்மையான ஆன்மாவே விபூதி என்பது கருத்து.

210. குருவடிவ மெடுத்துள்ள அருட்பெருமானான ஞான விழியோன், உலகில் பதறலுற்ற (சீடனது) ஜீவபோதம் வெந்து உருவழியும்படி ஒப்பற்ற உபதேச மொழியை (தூல வாக்கா லல்லாமல்) மோன மொழியாகிய பரா வாக்காற் புகட்டி, தூய ஞானத் தீயை அதன்கண் மூட்டி, பரிசுத்த இதயத்திற் புடம் வைத்து, எடுத்து அளித்தருளும் பிரம்ம ஞானமே அந்தப் பரா விபூதி (திருநீறு) ஆகும் என்றறிக.

விளக்கக் குறிப்பு :— ஜீவன் பசுத்துவ முடையவனாதலால் இழிந்து வாடும் ஜீவ போதமே கழிந்து காய்ந்த பசுஞ்சாணம். 'சுடர் கொளுவுதல்' என்பது "எது நான்?" என்று தன்னை நாடும் விசாரத் தீயை மூட்டிவிடுதல். பூத—பரிசுத்தமான என்று ஸ்ரீ முருகனார் பொருள் கூறினர். மூல நூலில் "அருள்வது அது ஆகும்" என்று மாற்றிக் கூட்டுக.

211. அத்தகைய விபூதியை அணிந்துள்ளவர்கள் இப் பரந்த உலகத்தில் எல்லாவிதத்தும் இணையில்லாதவர்கள் ! மன மற்றதும், அற்புதமானதுமான இம் மெய்ஞ்ஞானானுபவமே (விபூதியே) அழிவற்ற மெய்ச்செல்வம் (பரம் **பொருள்**) ஆகும்.

212. ஞான மகிமையான (விபூதியான) இச் சத்திய வஸ்துவை விரும்பி முயல்வோர் ஞானமே—விபூதியே—தாமாகி நிற்பர். இவ்வாறு அகந்தையழிந்து ஞானத்ம சொரூபத்தை யடைவதுதான் விபூதியின் தத்துவம் என்று கொள்க.

213. ஆன்ம நாட்டத்தால் உண்முகப்பட்டு இதயத்தில் ஒடுங்க ஆரம்பித்த ஜடமான அகந்தையானது, விண்ணும் மண்ணும் பர்தலமும் எங்கும் ஒன்றாய் மூண்டு முற்றும் அழியும் படி எரியும் ஞானச் செந்தீயின் சின்னமே, சிறந்த, சிவந்த, குங்குமமாம்.

விளக்கக் குறிப்பு :— 'மற்று' என்றது மற்றுமுள்ள பாதலத்தை என்று கொள்க. தன்னாட்டத்தால் மாய்தலுற்ற ஜடவகந்தை பின்னர் உருவழியத் தீப்பிடித் தெரிகின்றது. ஆகையால் 'அழிய' அல்லது 'ஒடுங்க' என்று கொள்ளவும்.

## ௩அ. இடப வாகனத் திறன்

214. காளை வாகனம் முதலிய பல பிராணிகளையும் சிவ பிரானால் உவந்து ஆட்கொள்ளப் பட்டவைகளாகக் கூறப் படுவது ஏனெனில், சிருஷ்டியிலுள்ள எல்லாச் சராசர உருவங்க ளையும் கொஞ்சங் கொஞ்சமாக, கடவுளின் உருவங்களாகவே கருதும் அடிப்படையான ஞானக் காட்சியை மக்களிடம் உண்டாக்குவதற்காகவே எனக் கொள்க.

விளக்கக் குறிப்பு :— சிவபிரானையே யன்றி ஏனைய தெய்வங்களையும், வாகனமாகவும், அணிகலனாகவும், கொடியாகவும், கோலமாகவும் நல்ல - கொடிய ஜீவராசிகள் அடுத்துள்ளதாக ஆகம நூல்களில் இணைத்துக் காட்டப்பட்டுள்ள நோக்கம், எண்ணுருயாவும் இறையுரு வாகவே கருதப்பட வேண்டும் என்ற கருத்தைப் பாமரர்க்கும் ஊட்டுவதே யாம்.

## ௩௯. சத்தி சாந்தித் திறன்

215. ஆன்ம வலிவால் சாதிக்க முடியாத காரியம் எதுவு மில்லை. ஆன்ம சக்தி என்பது திருவருட் சக்தியே யாகும். "ஆன்ம சக்தியால் முடியாது; வாள் பலம், படை பலத்தால் தான் இக் காரியம் முடியும்" என்று சிலர் வாதிப்பது தேகாத்ம புத்தியாக லீலை புரியும் மாயையின் ஆணவ தோஷமே யாகும்.

குறிப்பு:— இப்பாடல் நம் தேச சுதந்திரப் போர் ஆன்ம சக்தியாலேயே வெற்றியடைந்தமையை விளக்குவதாம்.

216. ''சக்தி வேறு, சாந்தி வேறு'' என்று அவற்றை அன்னியமான இருவேறு பொருள்கள் போல் பேசுவோர், அவற்றின் உண்மையை (அனுபவத்தில்) உள்ளவாறு அறியா தவர்களேயாவர். அந்தர்முகத்தில் எது சாந்தியாய் அமைவ தென்று கூறப்படுகின்றதோ, அதுவே தான் புறமுகத்தில் சக்தியாய் விளங்குகின்றது.

**பகவான் (6)**

உண்முகநாட்டத்தில் எது சாந்தி என்று அனுபவிக்கப் படுகின்றதோ, அதுவே தான் புறமுக நோக்கத்தில் சக்தியாகக் காணப்படுகின்றது. தன்னை (அகம்-புறம் என்னும் இருநிலை களிலும்) நன்கு ஆராய்ந்து உண்மை கண்ட ஞானிகளுக்குச் சக்தியும் சாந்தியும் ஒன்றே, வேறானவை யல்ல என்பது தெரியும்.

விளக்கக் குறிப்பு :— *"வெள்ளம், தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து விடுத்த லரிதோ விளம்பு"* என்ற முதுரை குறிப்பாலுணர்த்துவதன்படி, பெருவலியோடு வெளியில் அலையும் மனம் அதனினும் மிக வலியதான எந்த அருட்சக்தியால் தடுத்து அசையாமல் உள்ளே சாந்தியுடன் நிற்க வைக்கப்படுகிறதோ, அந்தத் திருவருட் சக்தியின் லவலேச அனுமதியால்தான் மனம் புறமுகப்பட்டு எண்ணிலாச் சராசரங்களைக் கற்பனையால் உண்டாக்கிக் காண முடிகின்றது! ஆகவே, உண்முகப் பெருவலியான சாந்தியின் அற்பப் பிரதி பிம்பப் புறமுக விலாசமே இப்பிரபஞ்சச் சிருஷ்டி ஸ்திதி காரிய சக்தி என்பதை அறியின், விவேகிகள் அணிமாதி அஷ்டசித்திகளிலும், சிருஷ்டி ஸ்திதியாதி சக்திகளிலும் சிறிதும் வியப்புறார் என்பது பெறப்பட்டது.

217. உயர்ந்த அறவொழுக்கங்களைக் கடைப்பிடிக்கும் உத்தமன் ஒருவனிடம் பிறரைத் தண்டிக்கும் பலவித சக்திகள் ஏற்பட்டிருக்குமாயினும், தக்கதாகிய அடக்க முடைமையைப் பெற்றிருக்கும் இயல்பே அவன் தெய்வசக்தி வாய்ந்த மெய் யுணர்வை (ஞானானுபூதியை) அடைந்துள்ளான் என்பதற்கு (அழகு) அடையாள மாகும்.

விளக்கக் குறிப்பு :— பிறரைத் தண்டிக்கவல்ல புறமுகச் சக்தியைப் பெற்றிருப்பதைவிட அவரை மன்னித்து அமைதியா யிருக்கும் சாந்தியே உண்மையான, உயர்ந்த சக்திவிலாசம் என்று கூறும் முகத்தால், சென்ற பாடலுக்கு மேலும் விளக்கம் தந்ததாயிற்று.

## ௪0. மகத் தணுத் திறன்

218. சிறிதும் பெரிதுமாக உருவில் வேற்றுமைப்பட்ட இரு காந்தங்களின் எதிர்திசை நுனிகள் சேர்க்கப்படும்போது, தன்னைச் சம்பந்தித்திருக்கும் பெரிய காந்தத்தின் பெருஞ்சக்தி யையே சிறிய காந்தமும் பெற்றுப் பெரிய காந்தத்தினோடு ஒரே காந்தத் தன்மையுடையதா யாகி விளங்கும்.

விளக்கக் குறிப்பு :— இச் செய்யுளில் உபமானம், மட்டுமே கூறி நிறுத்தப்பட்டது. உபமேயமாவது :— மகத்து ஆகின்ற இறைவனது பாதங்களும், அணு ஆகின்ற ஜீவனது சிரமும் இருவேறு (பெரிய-சிறிய) காந்தங்களின் எதிர் திசை முனைகள் ஆகும். இறைவனடியில் ஜீவன் சிரந் தாழ்த்தல் அவ் வெதிர் திசைகள் சேர்க்கப்படுவ தாகும். இறைவனடியில் ஜீவன் அடங்கித் தன் தனித்தன்மை அழியப்

---

*உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க — வெள்ளந்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு.

— துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் நன்னெறி - பாடல்.8.

பெறுவதால் ஜீவன் சிவனேயாகப் பிரகாசிக்கின்றான். அசத்தாகிய அகந்தை ஆன்மாவில் அடங்கி யழிந்தால், தன் அணுத்துவம் நீங்கி ஆன்ம மகத்தாகவே விளங்கும் என்பது கருத்து.

## சக. சித்தி வேட்கைத் திறன்

219. *(தன் அடியார்க்கு)* யாவுமான தன்னையே கொடுக் கின்ற கடவுளிடத்து, ஆசையோடு அற்ப சித்திகளை யாசித்தல், எல்லாம் தரும் உதார குணமுடைய பெருவள்ளலான ஒருவனிடம் போய் அற்பமான பழங்கூழை யாசிக்கும் காரியமே யாகும்.

விளக்கக் குறிப்பு :— அனைத்தும் தானே யாவதால் தன் அடியவர்களுக்குத் தன்னையே யளிக்கும் இறைவன் எல்லா வற்றையுமே அளித்தவ னாகின்றான். ஆகையால் இறைவனிடம் அஷ்டசித்தி போன்ற அற்ப காமியங்களை நயந்து வேண்டுதல் அறிவீனம் என்பது கருத்து.

220. எல்லையற்ற சிதாகாச வடிவ ஆன்ம சொரூபமாம் சித்த லோகத்தில் வந்திருந்து கொண்டு (ஞானியரிடம் வந்த மர்ந்து) அணிமா முதலிய அஷ்டசித்திகள் சிலவற்றை வேண்டு வது, அழியாத் தன்மை தரும் உணவான தேவாமிருதத்தையே வழங்கும் தெய்வலோகம் ஒன்றிற்குச் சென்று, அமர்ந்து, அங்கு புளித்த காடியாகிய பழைய கூழை ஒருவன் விரும்புவது போன்றதே யாகும்.

விளக்கக் குறிப்பு :— 'ஆன்ம சித்த லோகம்' என்றது, 'நித்த சித்தமா யிருக்கும் ஆன்மாவின் அடியிலேயே இவ் வகந்தை (சாதகன்) வாழ்வு கொண்டிருந்துங்கூட' என்றும் 'ஆன்ம ஞானிகளின் திருவடி நிழலில் வந்து சேர்ந்துங்கூட' என்றும் பொருள்படும்.

சகல சித்தர்களும் வாழும் ஓர் உலகம் சித்தலோகம் எனப்படும். ஆனால் எந்த சித்தரும் ஆன்மாவுக்கு அன்னியராக இருக்க வியலா தாகையால், ஆன்மாவே 'சித்தருலகம்' என்றதாக அறிய வேண்டும். ஆன்ம ஞானம் பெற விருப்புள்ள சாதகன் ஒருவன் சித்திகளை விரும் புவது எவ்வளவு அறிவீனம் என்பதை இப்பாடல் விளக்குகின்றது.

221. வீசியெழும் பரபக்திக் கனலின் சுவாலை பற்றி எரியும் அடியார்களிடம் (கடவுளின் மகிமையால்) எல்லாவித சித்திகளும் திரண்டு வந்து சேர்ந்து விளங்கும். ஆயினும் அப் பக்தர்கள் இறைவனது திருவடிக்குத் தாம் முழுவதும் ஊணுகி ஒழியும் பேராசையால் அந்தச் சித்திகளின்மேல் விருப்பம் கொள்ளவே மாட்டார்கள்.

222. முத்தி வழியிற் செல்லும் சாதகர்கள் (இடையிற் கைவரும்) பலவித சித்திகளிற் சிந்தை வைப்பார்களேயானுல், அகந்தை வளர்ச்சியே மேன்மேலும் ஓங்கி, அதனுல் பந்த மிகுதியே மேலும் பலமடையும்.

விளக்கக் குறிப்பு :— இப்பாட்டின் பின் இரு வரிகளில் "பந்தம் பலப்படுவதால் அகந்தை மேன் மேற் கொழுக்கும்" என்று அமைந் திருந்தாலும்"முத்தி நெறிக்கண் முயல் சாதகர்" என்று முதலிற் கூறப்பட்ட கருத்திற் கேற்ப "அகந்தை கொழுப்பதால் பந்தம் பெருகும்" என்று முடித்துக் கொள்வது நல்லது. முத்திக்காகச் செல்பவன் அதற்கு மாருக பந்தத்திற் சேருகிருன் என்னும் விளக்கம் பொருத்த மாகும்.

"காண்" என்ற சொல்லை அசையாகவோ, விளியாகவோ, 'அறிக', என்ருே எவ்வாறும் பொருள் கொள்ளலாம்.

**பகவான் (7)**

அலைதலே இயல்பான சித்தம் அலைவு நீங்கிச் சாந்தம் ஆதலே முக்தியடைவதாகும் என்று பெரியோர்களால் முடிவு கூறப்பட்டிருப்பதால், சித்தத்தின் இயக்கமில்லாமல் நடக்க முடியாதவையான அஷ்ட சித்திகளில் மனம் நாடும் முமுக்ஷுக்கள், சித்தக் கலக்கம் அறவேயில்லாத முத்தி சுகத்தை எப்படி அடைய முடியும்? சொல்க. (முடியவே முடியாது என்றவாறு).

விளக்கக் குறிப்பு:— சித்திகளைச் செய்யச் சித்தச் சலனம் அவசியம் என்பது பெறப்படுகின்றது. ஆனால், சித்தச் சலன மழிந்த ஞானிகளிடம் (இறைவனது விருப்பப்படி) தாமாகவே காணப்படும் அற்புதங்களை அவர்கள் ''நாம் செய்கிறோம்'' என்ற கர்த்துருத்வ உணர்வு அறவே இல்லாமலிருப்பதால், பாடலிற் கூறியபடி அச்சித்திகளில் அவர்களுக்குச் சித்தச் சேர்க்கையில்லை என்ற இரகசியத்தை உணர்க. அவ்வாறின்றி, ''நான் சித்திகைளச் செய்கிறேன், செய்வேன்'' என்று உணர்பவர் ஞானிகள் அல்லர் என்பது வெளிப்படை.

223. மனிதரே ! யாதொரு கலப்பு மற்ற பரிசுத்த சிதாகாச சொரூபாத்மாவான நீர், கை, கால் முதலிய உடலுடன் கூடி (பொய்யான சிச்சடக் கிரந்தியே யாயினும்) ஓர் உண்மைப் பொருள் போல் எழுந்து, கன்மானுசாரம் ஜனன மரணதிப் பெருங் கூத்தடிப்பதே மிகப் பெரியதோர் சித்தியாகிய விந்தை யாகுமே தவிர மற்ற அணிமாதி அஷ்ட சித்திகள் ஓர் விந்தை யல்ல !

விளக்கக் குறிப்பு :— 'சுத்த' என்றதால் உடல் மனமாதி உபாதிகள் அற்றவர் நீர் என்று உணர்த்தப்பட்டது. 'ஆகாச சொரூப ஆன்மா' என்றதால், கைகால் முதலிய ஸ்தூலமல்ல நீர் என்று உணர்த்தப்பட்டது. 'சிதாகாசம்' என்றதால் நீர் ஜடமான உடலல்ல என்று உணர்த்தப்பட்டது. இவ்வாறு ஹஸ்த பாதாதி யுடலுடன் சிறிதும் பொருத்த மற்று, முற்றும் மாறுபட்டு நிற்பவரான நீர், விரோத தர்மமுற்ற உடலாதியே உமது சாசுவத உண்மைச் சொரூபம் போலக் கற்பித்துக் கொண்டு, சிச்சடக்கிரந்தியாம் ஜீவனாக மாறியுள்ளது ஓர் பெரிய விசித்திரம் என்றார். போக்கு வரவற்ற ஆன்மாவாகிய நீர் அகந்தையாக எழுந்து வந்துள்ளது மேலும் விசித்திர மாம். அசல சொரூபமான நீர் அலையே வடிவான அகந்தையாய்க் கூத்தாடுவது அதனினும் பெரும் விந்தையாம். இக் காரணங்களால், மனிதர்களாம் அகந்தையின் எழுச்சியும் ஆட்டமும் (உற்பவமும் லீலையும்) ஏனைய அணிமாதி அஷ்ட சித்திகளினும் மிக்க விந்தையானது என்றார். சிறுமையே யறியாத ஆன்மா சிறுமையே வடிவான அகந்தையாக மாறியதாகக் (மனிதர்களாகக்) காணப்படுவது பெரியதினும் பெரிய சித்தியல்லவா என்பது கருத்து.

224. முக்தி விளக்கமும் முழுமுதற் பொருளுமான தன் ஆத்ம சொரூபத்தை அடைவதுதான் மெய்ஞ்ஞான சித்தி யாகுமே தவிர, ஏனைய அணிமாதி அஷ்டவகைச் சித்திகளும் அறியாமை வடிவாம் மனக்கற்பனை சக்தியின் கலக்கங்களிற் சேர்ந்தனவே யாம்.

## ௪௨. அமுத நிலைத் திறன்

225. விரும்பத்தக்க சச்சிதானந்தமான தனது நித்தியத் தன்மையை (அழிவின்மையை)த் தான் அறிய வொட்டாமல் மறைத்துள்ள, பாழான, நாற்றப் புலாலுடம்பை 'நான்' என்று அபிமானித்து உழலும் அகந்தைப் பேயை அழித்தார்க்கு மட்டுமே நீங்காத (அமுத நிலை) நித்தியத்துவம் கிடைக்கும்.

விளக்கக் குறிப்பு :— உடலை அழியாமல் நெடுங்காலம் வைத்தல், அல்லது என்றுமே வாழவைத்தல் ஆகியவைகளையே அமுதத்துவம் என்று கருதி அதற்காக யோக முயற்சியில் ஈடுபட்டுள்ளார் பலராதலின், அவர்கள் பாற் கொண்ட பேரிரக்கத்தால் ஸ்ரீ பகவான் மெய்யான அமுதத்துவம் இதுவென உபதேசித்தனர்.

226. அன்னியமான இவ்வுடம்பே தனதுண்மை என்ற மயக்கத்தால்தான் பிறப்பிறப்பு தனக்கே உண்டாவ தாகின்றது. ஆகையால் இம் மயக்கம் ஒழிந்தபோதுதான் தன் சுயநிலையான அமுதநிலை (அழியாத் தன்மை) கிடைக்கும்.

விளக்கக் குறிப்பு :— பிறந்து இறப்பது உடல். ஆனால் தன்னை அவ்வுடம்பாகக் கருதுவதால்தான் தனக்கே ஜனனமரணம் உண்டாவதாக மனிதன் உணர்கின்றான். அவன் ஜனன மரணமற்ற அமுதநிலை பெற விரும்புவானாயின் "இவ் வுடலே நான்" என்னும் பிழையறிவை ஒழிக்க வேண்டும். அப்போது, ஆன்மாவாம் தான் என்றுமே பிறப்பிறப்பற்ற நித்தியன் என்ற உண்மை விளங்கும்.

227. தனக்கு அன்னியமா யிருக்கும் தேகமே 'நான்' என்று தோன்றும் மயக்கத்தைத் தவிர மரணம் என்று வேறொன்று மில்லை. மயக்க வடிவான இவ் வகந்தை ஒழிந்து உண்டாகும் அனன்னிய ஆன்ம ஞான சுகமே அமுதத்துவம்.

விளக்கக் குறிப்பு :— தன் நிஜ நிலை இழக்கப்பட்டதாகவே ஆவதால் இவ் வகந்தையை மேற் கொள்வதே அபாயமான மரணமாகும்.

228. 'இத்தேகமே நான்' என்றிருக்கும் ஒருவன் இத் தேகத்தின் மரணத்திற்குப் பயந்து (இத்தேகாத்ம புத்தியாகிய) 'நான் யார்?' என்று ஆராய்ந்து, ஆன்மாவாய்த் தன்னை யுணர்ந்து, அவ்வகந்தைமதி யழிந்தா லன்றி சாகாத் தன்மை சித்திக்குமோ? (வேறெவ் வகை முயற்சியாலும் அமுதத்துவம் சித்திக்காது என்பது கருத்து).

விளக்கக் குறிப்பு :— 'சிந்தைதனை ஆய்ந்து' என்பதில் உள்ள சிந்தையாவது முதலெண்ணமாகிய 'நான் இன்னார், நான் தேகம்' என்ற வடிவில் எழுந்துள்ள அகந்தையே.

229. சித்த விகார மயக்கமற்ற ஞானத் தெளிவே சிறந்த அமுத நிலையாகக் கொள்க. சுத்த உணர்வான இதை விட்டு மற்ற எதனாலும் உள் மயக்கமான சாவு நீங்கவே நீங்காது.

விளக்கக் குறிப்பு :— சித்தவிகாரம் - 'சித்' விகாரப்படுவதே சித்தம்—சித்தமாகிய விகாரம். எனவே 'சித்தம்' விகார ரூபமே. மனம் போற்றுக-மனிதனே அறிக. 'மரணம்' என்பது வெறும் பிழையறிவே யாகையால் மெய்யறிவான சுத்த உணர்வு—ஆன்ம ஞானம்—ஒன்றினாலன்றி வேறு எதனாலும் அதை நீக்க முடியாது என்பதை வலியுறுத்த "அதனை யொழிந்த பிறிதாலே சாவு தணவாது" என்றார்.

## சஙு. காய கற்பத் திறன்

230. கண்டம் உறுவதாயும் (குறைபா டுடையதாயும்) மாயமாய்த் தோன்றி மறைந்து போவதாயும் உள்ள உடலை

உறுதிப் பொருளாக (உள்ள பொருளாக)க் கூறுவது ஒரு உபசாரக் கூற்றே. யாவராலும் அறியப்படவேண்டிய முடிபாம் முற்றுண்மையான ஆன்மவுணர்வு ஒன்றுதான் உறுதிப் பொருளாகும் என்றறிக.

விளக்கக் குறிப்பு :— 'காயம்' என்ற சொல்லுக்கு நிலைபே றுடையது என்பது பொருள். ஆனால் உடலைக் குறித்துப் பண்டை மரபாக உபயோகப்படும் 'காயம், மெய்' என்னும் சொற்கள் வெறும் உபசார வார்த்தைகளே தவிர உண்மை யல்ல; இராட்சசனைப் 'புண்ணியஜனன்' என்பது போல. இப்பாடலைப் பற்றி ஸ்ரீ முருகனாரது கருத்தாவது :— அர்த்த காமங்களே யன்றி அறந்தானும் அனுபவத்தா லழிவதாக, அதற்கு முற்றிலும் மாறாய் ஆன்மஞானானுபவம் அவதியின்றி மேன் மேல் வளர்தலால் அதன் வடிவான சதாமுத்தி யொன்றே சாசுவத மாதலின் அதனையே மெய் யென்று கூறினார்.

231. மீண்டும் மீண்டும் எழுகின்ற அகந்தை அதன் மூலத்தில் ஒடுக்கம் அடையவே, அப்போது விளங்கும் அதி பரிசுத்த உண்மைத் தெளிவான, சிறந்த, ஆத்ம ஞானமே உண்மையான கற்பம் ஆகும் என்றுணர்க.

## சச. காய சித்தித் திறன்

232. எல்லாப் பிணிகளையும் தோற்றுவிக்கும் மூலப்பிணி யான உடம்பின் இழிவை அறியாதவர்கள்தான், நோயை வெறுத்து அகற்றுவதற்கு மாறாக, அந்த மூல நோயை (உடலை) நெடுநாள் வைத்திருப்பதற்காக விரும்பி, விழலுக்கு நீர் இறைப் பவர்போல, காயசித்தியை விரும்பி முயன்று தவம் செய்வர்.

233. வருத்தும் கொடிய நோய்களுக் கெல்லாம் அடிப்படை யானதும், விஷத்தின் இயல்பை யுடையதும், (ஆனால்) உண்மை யில் இருப்பற்றதுமான அகங்காரத்தையே வடிவாய்க்கொண்ட (ஜீவ)வீணர்கள் தான், (முன்பே தம்மைப் பீடித்துள்ள) நோய் வலுக்கும்படிப் பெரும் மருந்துகளை உண்பவர்களைப் போல், உடல் வலிவு பெறுவதற்காகச் சலிப்பின்றி முயன்று பல்வேறு தவ வினைகளில் ஈடுபடுவர்.

விளக்கக் குறிப்பு :— எல்லா ஜீவர்களும் அகந்தை வடிவினரே என்றாலும், இவ்விதத் தவமுயற்சி செய்வோர் சாதாரண ஜீவர்களைவிட அறிவிலிகள் என்று குறிப்பா லுணர்த்தவே 'ஆங்காரப்பாழ் வீணர்' என்றார்.

234. ஒருவன் மிகவருந்தி வேண்டி வறுமையை அடைந் தாற்போல, தாம் பலகாலம் பாடுபட்டுச் சரிவர அருந்தவம் செய்து அதனுல் பரிபூரண மோனநிலையிற் பொருந்தி நிற் பதைப் பயனுகப் பெற விரும்பாது, அதைக்கொண்டு உடலகந் தையை (காயசித்தியை) வலிவுப்படுத்த விரும்புதல் மிகத் தடித்த அறியாமை மயக்கமே யாகும்.

235. மெய்ஞ்ஞான முதிர்வால் (ஞானக் கண்ணுல்) அறிகின்ற ஞானிகளுக்கு (நாம் வாழும்) இவ்வுடல் வாழ்க்கை யானது வெறும் மனுே மாத்திரமாய், உண்மையற்றதாய் விளங்கும். ஆகவே தவத்தால் இவ்வுடல் வாழ்வை நீட்டிப்பதால் ஜீவர்கட்குப் பெருத்த கேடே தவிர நற்பயன் ஏதுமில்லை என்றறிக.

## சரு. வைராக்கியத் திறன்

236. வைராக்கியத்தோடு தவம் புரியும் நல்லோனே! உன்னிடம் உலக மக்கள் அணுகித் தத்தம் கோரிக்கைகள் நிறைவேற வேண்டி உன் மனம் சந்தோஷிக்கும்படிச் செய்யும் புகழுரைகளும் பூஜையாதி உபசாரங்களும் உன்னைப் பந்தத்திற் சிக்க வைக்கவேண்டும் என்றே மாயையாற் போடப்படுகின்ற, பொன்னுலான தூண்டில் முள் என்றே கண்டு கொள்வாயாக.

விளக்கக் குறிப்பு:— பிறர் செய்யும் புகழ் பூஜை இவற்ருல் தன் உள்ளம் சிறிதாவது பூரிப்பு அடையுமேல் அப்போது அது தூண்டில் முள்போல் ஒரு சாதகனுக்குப் பெருங் கேட்டை விளைக்கும். கர்த்ருத்துவம் கழன்ற ஜீவன் முத்தனிடம் செய்யப்படும் இப்புகழ் பூஜைகள் அவனைப் பந்திக்காது. இவ்வித்தியாசத்தை உணர்த்தவே ''வீரியத்தோ டாண்ட தவத்தோய்'' என்று சாதகர்களை விளித்தார். சாதகர்கள் பலர் முடிவான அகங்காரநாசம் வரையிலும் சென்றடை வதற்கு முன்பே, தமக்கு உலகத்தார் செய்யும் புகழாதிகளில் மகிழ்ந்து, மயங்கி, தம் மூல நோக்கத்தை மறந்து, புகழ் பூஜையாதிகளையே நாடித் தேடி ஊரூராய் ஓடுவது, உபதேசிப்பது, ஆசீர்வாதம் செய்வது இன்னும் இவை போன்ற பல தற்கேடுகள் புரிந்து கொள்வதையும் தடுத்துப் பாதுகாக்கவே இவ்வுபதேசம்.

பெருமை மிக்க பொன்னு லாக்கப்பட் டிருப்பினும் தூண்டில் முள் மீனின் உயிரை யழிப்பதே போல, மக்கள் செய்யும் புகழ் பூஜையாதிகள் பெருமைக்குரியதாய்த் தோன்றினும் சாதகனின் அகந்தையை வளர்த்து அவனது உண்மையான முன்னேற்றத்திற்கு அழிவையே உண்டாக்குகின்றது என்று எச்சரிக்கின்ருர்.

237. முற் பிறவிகளில் செய்துள்ள நற்றவத்தால் இப்போது எவருள்ளத்தில் இவ்வுலக-மறுவுலக இன்பங்கள் இரண்டிலும் இயல்பாகவே நிராசை தலைப்பட்டு நிற்கின்றதோ அன்னார்க்கே சுலபமாக மெய்யுணர்வு (ஆன்ம ஞானம்) சித்திக்கும்.

விளக்கக் குறிப்பு :— இனி அடையப் போகும் சுவர்க்கம் முதலிய உலகங்களில் அனுபவிக்க விரும்புகின்ற சுகபோகங்களுக்காக யாக யஜ்ஞங்களாகிற ஆகாமிய கன்ம முறைகளில் முயலவேண்டும் என்ற நோக்கம் உடையவர்களாய் நாம் இருப்போ மாயின், நம் மனம் மறுமையின்பம் விரும்பி நிற்பதற்கு அது அடையாள மாகும். ஆகவே பிராரப்த வசமாய் இப்போது நம்மைச் சேர்ந்துள்ள இம்மை இன்பங்களில் மகிழாமலும், ஆகாமிய மார்க்கமாய் எதிர்கால இன்பத்திற்கு ஏங்காமலும் இருப்பவரே முற்பிறவியில் நற்றவம் செய்தவர் என்றறிய வேண்டும். இவர்களையே "உம்மையுள திண்மையுறு பாக்கியத்தார்" என்று குறிப்பிட்டார்.

238. அறிவின்பமான (ஞானனந்தமாகிய) சாந்தியானது ஆன்ம சொரூபத்தில்தான் கிட்டுமே தவிர, இவ் வுலகின் மோக வாழ்க்கையில் அற்பமும் கிடையாது என்ற உண்மையை யுணர்ந்து, (மனோநாசமான) மகாமௌன நிலையாய் முடிவுறு கின்ற ஸ்வஸ்வரூப அருளாகாசமான ஆன்ம ஞானத்தையே யடைவாயாக.

239. அடர்ந்த மயக்க விருளும் ஆசைகளும் அழியுமாறு நசுக்கி விலக்கி அறிவுச் சுடரேற்றும் என் அன்பனை வைராக்கி யமே, உன்னுடன் நட்புப் பூண்டொழுகும் உரிமை கொண்ட என்னை நீ எக்காலத்தும் விட்டு விலகாதே. (கை விடாதே).

விளக்கக் குறிப்பு :— வைராக்கியத்தை ஓர் நண்பனாக உருவகப்படுத்தி, முன்னிலைப்படுத்திக் கூறுவதாக இச் செய்யுள் அமைந்துள்ளது. எக்காலத்தும் எதை முன்னிட்டும் வைராக்கியத்தை நாம் துறக்கக்கூடாது என்று உபதேசிக்க, "வைராக்கியமே, நீ என்னைத் துறக்கக்கூடாது" என்று நயம்படக் கூறப்பட்டது.

240. பேயொடு நட்புக் கொண்டாற்கூட பிரிய முடியாது என்பர் ஆன்றோர். அஃது அவ்வாறாக, எப் பிறப்பிலும் என்பாற் கொடிய துன்பங்கள் அணுகாதவாறு காத்து, உறுதிப் பொரு ளோடு என்னைச் சேர்ப்பிக்கும் நற்குண வைராக்கியமாம் நண்பனே! உன் நட்புரிமையை நான் (விடமுடியுமோ? விடவே முடியாது) விட்டுவிட நேரின், அஃது, எல்லோரையும் பகைத்துக் கொள்வதையும் விடப் பெரும் பிழையாகும்.

விளக்கக் குறிப்பு :— "பேயொடு நட்டாலும் பிரிவரிதேல்" என்றதாவது: இது தவறான நட்பு என்று பின்பு ஒருகால் உணர்ந்து விட்டுவிடுவதற்கு எண்ணும்போதுகூட, மிக்கக் கெட்டவர்களோடு பூண்ட நட்பு விடமுடியாத இயல்புள்ளதா யிருக்கும் என்பதைக் காட்டவே 'பேயொடு நட்டாலும் பிரிவரிது' என்றார். தீய நட்புங்கூட விரும்பின் விடமுடியா தென்றால் நன்னட்பாம் விராகம் நாம் விட விரும்பாத போது நம்மை விடுமோ? விடாது என்பது உணர்த்தப்பட்டது.

241. எவ்வெவ் வெண்ணங்கள் எழுந்தாலும் சோம்பலால் தளர்வடையாமல், அவை யாவற்றையும் ஒன்று கூட சிறிதும் எழுந்து விரிய விடாது அக் கணத்திலேயே அவை உதித்த விடத் திலேயே அழித்துவிடுவது அதி தீவிர வைராக்கியம் ஆகும்.

விளக்கக் குறிப்பு :— ஆசைகளை வெறுத்து ஒதுக்குவதே வைராக்கியம் என்று பொதுவாக இதுகாறும் கருதப்பட்டு வந்த கருத்தினும் சிறந்ததாக, எண்ணங்கட்கு எழும்ப இடந்தராது, மனத்தின் மூலத்திற் சதாகாலமும் நாட்டம் வைத்திருப்பதே அதி தீவிர வைராக்கியம் என இங்கு உபதேசிக்கப்படுகின்றது. ஸ்ரீபகவானருளிய 'நான் யார்?' என்ற வினாவிடை நூலில் 19வது கேள்வியாக இக்கருத்தை வசன வடிவிற் காண்க.

242. சித்தம் எனப்படும் கோட்டையிலிருந்து வாசனை களாகிய பகைவர்கள் எண்ண வடிவாய் வெளிவரும்போதெல்லாம், எண்ணிக்கையில் மிகுந்த அப் பகைவர்கள் ஒவ்வொருவரையும் அற்புதமான ஆத்மவிசாரத்தால் ஒவ்வொருவராக அழித்து வந்தால் முடிவில் அவ் வெதிரிகளின் கோட்டை (சித்தம், மனம்) நம் வசப்படும்.

விளக்கக் குறிப்பு:— உள்ளது நாற்பது - அநுபந்தம் 19வது செய்யுளில் ''..........அகமுள சிறுதுளை யதனிலா சாதியோடு அமர்ந்துளது இரும்தமம்...அது வளி, மனது, ஒளி அவற்றின திருப்பிடம்'' என்றபடியும், அருணாசல அஷ்டகம் 7வது செய்யுளில் ''அகமுதிதலம் எதுவென உள்ளாழ்ந்து உளத்தவிசு ஒன்றியுறுக—'' என்று கூறப்பட்ட படியும் வாசனைகட்கெல்லாம் இருப்பிடம் ஸஹஸ்ராரமல்ல, இதயமே என்ற ஸ்ரீ பகவானது கருத்து உபதேசிக்கப்படுகிறது. 249வது பாடலும் இங்கு உய்த்துணரத் தக்கதாம். நாம் இவ்வாறு வெற்றியால் எய்தும் பகைவர் வசித்த கோட்டை நம் பாரம்பரிய உரிமையான இதயாபுரியே என்பது இப் பாடலாற் சுட்டப்படுவது காண்க. ஆகவே 'பகையரணம்' என்றது நம் சொந்த இடமே - இதயமே. 'பகைவர் நம் வசப்பட்டு அழிதலாவது மனம் நம் வசப்பட்டு நாசமாவதே'. பகையரணம் கைப்படுவதாவது உளத்தவிசு வுறல். இக்கருத்தையும் ''நான் யார்?'' என்ற நூலில் வசன வடிவிற் காண்க.

## சசு. ஞான வைராக்கியத் திறன்

243. காணப்படும் உலகம் காண்பானினும் வேருகத் தோன்ருமை ஞான விளக்க மாம். மனம் புறவுலகைப் பற்ருமல், இதயத்தில் ஊன்றி, உலகை ஒன்றுமில்லாததாய் (வெறும் பாழ்த்தோற்றமாய்) மதித்து விலக்குவதே வைராக்கிய மாம்.

விளக்கக் குறிப்பு :— ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் உலகம் தோன்றினும் ஞானிக்குத் தோன்றும் உலகம் அவனுக்கு அன்னியமான ஒன்று அல்ல. அது ஞானநிலை. அவ்வாறின்றி, இவ் வுலகம் அன்னியமாகத் தோன்றுமேல் அது அப்பியாச நிலையே யாகையால், அதைப் பற்றுவதை விட்டு, ஆன்மாவைப் பற்றிக் கொள்வதற்காக, அத்தோற்றத்தை வெறும் கற்பிதமாக மதித்தலும் துறத்தலும் அவசியமான வைராக்கியமாம். 'நான் யார்? என்ற நூலில், 'அன்னியத்தை நாடாதிருத்தல் வைராக்கியம்; தன்னை விடாதிருத்தல் ஞானம்' என்று கூறப்பட்ட கருத்தே இச் செய்யுள்.

## சஎ. சித்த மாட்சித் திறன்

244. அருகிலுள்ள செம்பரத்தம் பூவின் செந்நிறம் சேர்வதால், ஓர் நிறமற்ற கெட்டிக் கண்ணுடித் துண்டு தானும் ஓர் செந்நிறக் கண்ணுடித் துண்டாகத் தோன்றுவது போல, 'சித்' ஆனது தன்னைச் சமீபித்திருக்கும் ஐம்புல விஷய தோஷங்களின் பொய்ச் சேர்க்கையால் 'சித்தம்' என விளங்குகின்றது. அதிலிருக்கும் 'தம்' என்ற பகுதியாகிய கறை நீங்குமாளுல் அந்தச் சித்தமே பற்றற்ற சிறந்த சத் பொருளாகிய 'சித்' ஆகி விடும். 'தம்' என்ற சொல் மாயையைக் குறிக்கும்.

விளக்கக் குறிப்பு :— உண்மையில் அக் கண்ணுடித் துண்டு எக்காலும் நிறமற்றதே. சமீபித்திருக்கும் செம்பூவின் நிறம் அதில் உண்மையாகவே ஒருக்காலும் ஏறிவிடவில்லை யல்லவா? பூவை அகற்றிஞல் அக் கண்ணுடித்துண்டு முன்போலவே நிர்மலமாக இருப்பது விளங்கும். அவ்வாறே 'சித்தம்' என்ற கூட்டுப் பெயராற் குறிப்பிடப்படும் ஒன்றிலிருந்து, அன்னியத்தை நாடியறியும் தோஷதிருஷ்டியாகிய மாயையை மட்டும் தன்னுட்டம் என்னும் ஆன்ம விசாரத்தால் நீக்கிவிடுவோமாயின் சித்தமல மற்றுச் சிவமாகவே என்றும் நாம் விளங்குவது தெரியவரும் என்பது கருத்து.

## சஅ. சித்த சுத்தித் திறன்

245. (உலகில் காணப்படும்) பல வேருன அழகுப் பொருள்கள் ஐம்புல விஷயங்களாக மயக்கக் களிப்பை உண்

டாக்கி இம்மை மறுமை இரண்டிலும் மிகுந்த கேட்டை விளைவிப்பனவே. ஆனால் அப் புறப் பொருள்களைப் போல் அல்லாமல் அகத்தூய்மையானது (ஆன்ம ஞான விளக்கமா யமைவதால்) பேரானந்தம் தருவதாகின்றது. அதனால் அகத்தூய்மை பெற்ற ஒருவனை ஆன்றோர், ''இது கடவுளே வெளிப்பட்டு உலவும் ஓர் உண்மை மிகுந்த உயிரோவியம்'' என்று வியந்து கொண்டாடுவர். (அகத் தூய்மை பெற்றோன் இறைவனே என்பது கருத்து).

விளக்கக் குறிப்பு :— ஸ்ரீமுருகனார் கூறியது — உயிரோவியம்-புருடன். ஞானானந்தம் நல்கலான், ஆன்ம சைதன்யம் அவிர்ந்து விளங்கும் உளத்தூய்மையே உண்மை யழகாம். ஆதலான், 'உண்மை மிக்க உயிரோவியத்தின் கண் தெய்வத்தன்மை வெளிப்படுதல்' என்று அதனை ஆன்றோர் கொண்டாடுவர்.

246. அகத்தின் அழகை விட்டுப் புறத்திலுள்ள அழகை விரும்பினால் பேரழிவே சம்பவிக்கும். அது, தீபச்சுவாலையின் முகப்பிரகாசத்தைக் கண்டு விட்டிற்பூச்சி ஆவலுற்று மயங்குவதையும், நாகப்பாம்பு விரியன் பாம்பின் பெண்ணினத்தை விரும்பிக் கூடுவதையும் போன்றதே யாம்.

விளக்கக் குறிப்பு :— நாகம் பெண் இனம் என்றும் அது சாரைப்பாம்புடன் கூடியே இனவிருத்தி செய்கிற தென்றும் உலக வழக்குள்ளது. ஆனால் இப் பாடலில் வந்துள்ளது சாரை யல்ல; விரியன் பாம்பின் பெண் இனமே கூறப்படுகிறது. உலக வழக்கை ஒட்டிப் பொருள் கொள்வராயின் "நாகம் விரிக்கின்ற படத்தை ஓர் பெண்மை என்று கருதி அதனுடன் விளையாடப் போகும் ஓர் மனிதனைப் போல" என்று கொள்ளலாம். ஆனால் உலக வழக்குக்கு மாறாக நாகராஜா, ஆதிசேடன், ஆகிய நாகங்கள் ஆண் இனமாகவும் நூல்களிற் காட்டப்படுவதால், நாகத்தை ஆணினமாகக் கொண்ட உரையையே பொழிப்புரையாக மேலே கொடுக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ முருகனார் வாசகமே இப் பொழிப்புரை. விட்டிலின் கேட்டிற்கு விளக்கு ஏதுவாதல் போல நாகத்தின் கேட்டிற்கு விரியன் பெடையின் சம்பந்தம் ஏதுவாம் என்பதே கருத்து.

## சசு. மிருத்தியுத் திறன்

247. பேரன்பின் நிலைக்களனாய், பேரின்ப மயமாய், சிறந்த மெய்ஞ்ஞான ஆகாசமாய், முழுமுதற் பொருளாய் (மூலவஸ்துவாய்) அழிவில்லாததாய் உள்ள பரிபூரண ஆன்ம நிலையினின்றும் நழுவுதலே (இயமன்) மரணமாகும்.

விளக்கக் குறிப்பு :— உழுவலன்பு—ஏழ்பிறப்பும் தொடர்ந்து வரும் நாயகன் நாயகி உறவு; இங்கே, அதுபோன்றதோ டன்றி அதனினும் அதிகம் தொடர்வதான ஆன்மாவுக்கும் ஜீவனுக்குமுள்ள உறவு. 'எழுவாய் அழிவு இலா' — பிறப்பு இறப்பு அற்ற என்றும், பிரபஞ்சம் அனைத்திற்கும் தானே எழுமிடமாகவும், அழிவற்ற தாகவும் உள்ள ஆன்மா என்றும், எழுச்சிவடிவுற்றுத் தன் இயல்பு நிலை அழிந்து போகாததுமான என்றும் மூவிதமும் ஆகும். 'பிரமாதமே மிருத்யு' என்ற ஆன்றோர் வாக்கை வலியுறுத்துவது இப் பாடல்.

248. ஆன்மாவை யகன்று, கருவில் உருப்பெற்றுப் பிறவிதோறும் தான் வருந்துவதின் காரணம் இன்னதென்றறிய, சற் குருவிற்குச் சேவை செய்து, அக் குருவருளால், ஆன்மா வினின்றும் தான் அகந்தையாக எழுந்து பிரிந்ததே காரணம் என்றுணர்ந்து, மீண்டும் தன்னைத்தான் குருவருளால் அறிந்து, ஆன்மாவில் ஆழ்ந்து பதிந்து திடமாய் நிலைபெறுதலே ஒருவற்கு ஏற்றமாம் (வாழ்வின் சிறப்பாம்).

விளக்கக் குறிப்பு :— கருவைக் காத்து ஏங்கல்-தாயின் கர்ப்பத்தில் உருப்பெறுதலும், துன்புறுதலும். 'ஏது ஓர்ந்து பிரிவை' என்றதை 'பிரிவின் ஏதுவை ஓர்ந்து' என்று கூட்டிக்கொள்க. 'அழிவற்ற ஆன்மாவே நான்' என்ற உணர்வினின்றும் நீங்கி, 'அழியும் உடலே நான்' என்று உணர்வதே பிரிவு எனப்பட்டது. இதை ஓர்தலே பிரிவின் ஏதுவை உணர்வதாம். இரண்டாவதாகக் கூறப்பட்ட 'உணர்ந்து' என்பதாவது: ஆன்ம வுணர்வுறும்போது 'இப்பிரிவு என்றுமே ஏற்பட்டதில்லை; பிரிவற்ற ஏக சத்திய நானே என்றும் உள்ளேன்' என்று விளங்கும் தன் யதார்த்த உண்மை யறிவால் பிரிவின் உண்மை பொய்யே என்று உணர்வதாம்.

## ௫0. உயிர்நிலைத் திறன்

249. கற்பனைக் குட்படாத இதயத்தில்தான் ஜீவன் (உயிர்) உறைகின்றான். ஆகையால் அவனது வாசனைகளும் அங்கே தான் இடங்கொண்டுள்ளன. அவ்வாறின்றி, மேலேயுள்ள மூளையில் (ஸஹஸ்ராரத்தில்) அவ்வாசனைகள் உறைவன வாயின், மூளையின் அழிவால் (தலை வெட்டப்படின்) வாசனாதிகளும் அவனை விட்டு நீங்கி அழிந்துவிட வேண்டுமன்றோ? அவ்வாறு அழியாததால் இதயமே உயிரின் (வாசனைகளும் சேர்ந்ததோர்) இருப்பிடமாகும் எனக்கொள்க.

விளக்கக் குறிப்பு :— காவிய கண்ட கணபதி சாஸ்திரிகள் ஒருமுறை ஸ்ரீபகவானிடம் 'ஸஹஸ்ராரமே உயிர்நிலை; வாசனைகளின்

இருப்பிடமும் அதுவே' என்று வாதித்தார். அது சரி யல்ல வென்று ஸ்ரீபகவான் மறுத்து இவ் வுபதேசத்தை யருளினர்.

250. குண்டலிக் கனல் மூலாதாரத்தினின்று மேல் நோக்கியே எழுவதாலும், மதி அமுதமாகிய தாரை தலையில் (ஸஹஸ்ராரத்தில்) இருந்து கீழ் நோக்கியே வழிந்து வருவதாலும், இவ் விரண்டின் நோக்கிடமான இதயமே மூலஸ்தானம்—உயிர்நிலை—என்றறிக.

விளக்கக் குறிப்பு :— 'அண்டர் மதி' என்றது, தேவர்கள் மேல் உலக வாசிகளாதலின் அதுபோலவே மேற்பகுதியான தலையிலுள்ள மதியின் இயக்கஸ்தானமாகிய ஸஹஸ்ராரத்தைக் குறித்தது.

251. தம் ஆன்மநிலை உடலில் எவ்வெச் சக்கரங்களில் இருப்பதாக மனிதர்கள் தியானிக்கிறார்களோ, அவரவர்கட்கு அவ்வவ் விடத்தில் ஆன்மா விளங்குவதாகவே அவரவர்களது எண்ண வலிவால் தோன்றும். எனினும் 'நான்' என்னும் ஜீவனுக்குத் தான் உதிப்பதற்கும் ஒடுங்குவதற்கும் இடமாகச் சொல்லக்கூடிய இதயமே முக்கிய ஸ்தானமும் புகலிடமுமாகும்.

252. எல்லா அவஸ்தைகளிலும் அகந்தைக்குத் தொடர்புள்ள இடமாகிய இதயமாம் தன்னை (ஆன்மாவை) விட்டு, மற்ற ஆதாரங்களுள் எவ்வொன்றில் தான் இருப்பதாக நினைத்துத் தியானிப்பவனும் அவ்வவ் வாதாரங்களிற் சிறிது காலம் லயித்து மயங்கிக் கிடப்பானே தவிர, உள்ள பொருளாகிய தன்னை யறிந்து உய்வடையப் போவதில்லை.

விளக்கக் குறிப்பு :— ஆறுதாரங்களில் ஏதேனு மொன்றில் மனத்தை நிறுத்தித் தியானிக்கும் ஒருவன் அந்த ஸ்தானத்திலேயே ஒரு வித லயத்தில் வீழ்ந்து கிடந்து, பிறகு முன்வினைப்படி எழுச்சி யுற்றுப் பிறவியை (வியவகாரிக நிலையை) அடைவானே தவிர, ஆன்ம ஞானம் பெற்று மோக்ஷமடையப் போவதில்லை. ஆதலால் அவ் வப்பியாசிகளது அறியாமையை நீக்கி, தியானத்தில் யாதொரு ஸ்தான லக்ஷியமுங் கொள்ளாமல் 'நான் இருக்கிறேன்' என்ற தன்

ஆன்மவுணர்வு மாத்திரமாய்த் தன் நாட்டம் ஊன்றலே உண்மையான யோகப் பயிற்சி என்பது இப்பாடலால் உபதேசிக்கப் பெற்றதாம்.

## ௩க. இதயத் திறன்

253. தள்ள வேண்டிய ஒன்றாகவும் கொள்ள வேண்டிய ஒன்றாகவும் இதயம் இருவேறு விதமாகக் கூறப்படும். இகழத் தக்கதாய், புலன்களுக்கு விஷயமாகக் கூடியதாய் மார்பின் இடது புற முள்ள (மாமிசப் பிண்டமான) இதயம் ஜடமானதால் அது தள்ளத் தக்க முதல் வகுப்பைச் சேர்ந்ததாம்.

விளக்கக் குறிப்பு :— 'வெவ் வேறாம் - இவை இரண்டும் வேறுவேறு ஆனவையே. மாமிசப்பிண்டமாய் மார்பின் இடது பக்கம் உள்ள இதயத்தினுள் ஆன்மாவாகிய உயிர் இருந்து கொண்டு துடிப்புக்களை உண்டாக்குவதாகச் சிலர் கருதுகிறார்கள். அதனால் மாமிசப் பிண்டமான இதயத்திற்குள்தான் ஆன்ம ஸ்தானமான இதயமும் (spiritual heart) இருக்கக் கூடும் என அவர்கள் கருதுவதுண்டு. அவர்களது எண்ணத்தின் பிழையை நீக்கி அவர்களது கருத்தை மாற்றவே "வெவ்வேறாம்" என்றார். "கொளத் தக்கதுந்தள்ளத் .........அன்றாம்" எனவரும் உள்ளது நாற்பதின் அநுபந்தச் செய்யுள் 22-வது பாடல் இங்கு ஒப்புநோக்கத் தக்கது.

254. ஞானிகள் அறிவதாய், உடலின் உள்ளும் அதன் வெளியிலும் எங்கும் வியாபித்து ஒளிரும் இதயம் (இவ் வுடலில் அதற்கு ஓர் இடம் சுட்டப்பட வேண்டுமாயின் அது) வலது மார் பகத்தில் உள்ளதாம். நிந்திக்கத் தகுந்த உடலையே 'நான்' என மயங்கியுள்ள அஞ்ஞானிக்கே மாமிசப் பிண்ட வடிவாய் மார்பின் இடதுபுறம் இதயம் இருப்பதாக எண்ண முண்டாகிற தென்றறிக.

விளக்கக் குறிப்பு :— "The wise man's Heart is at his right; but a fool's heart at his left" — *Ecclesiastes X-2*.

மார்பின் வலது பக்கம் இதயம் இருப்பதாகக்கூறப்பட்டாலும், உடலில் அந்த இடத்தை தியானகாலத்தில் நினைத்துக் கொண்டே இருக்க வேண்டுமென்று ஸ்ரீபகவான் கூறுவதில்லை என்பது ஸ்ரீபகவானை நன்கு புரிந்துகொண்ட சீடர்கள்அறிந்த விஷயமாகும். உள்ளது நாற்பதின் அநுபந்தம் 22வது செய்யுளில் "அஃது உள்ளும் புறமும் உளது: உள், வெளியில் உள்ளது அன்று...." என்னும் ஸ்ரீபகவா னருள்வாக்கை ஊன்றிக் கவனியாது, அவசரப்பட்டுச் சில ரமணபக்தர்கள் சாதகர்களை வலது மார்பகத்தே தியானிக்கும்படிக் கூறியும் எழுதியும் வருவது தவறான வழிகாட்டே யாதலால் வருந்தத்

தக்கது. (ப-87 பக்கம் 85) என இந்நூலில் வரும் ஸ்ரீபகவானது அருள்வாக்கை 'ஏகான்ம பஞ்சக' த்திற் கண்டு இவ்வுண்மை யுணர்க.

255. உயிருக்கு உடையோனுன ஆன்மா ('நான்' என்னும் சொல்லுக்கு உண்மையான பொருளான ஆன்மா) உடம்பில் மார்பின் வலது புறம் வீற்றிருந்து யாதொரு தடையு மற்று விளங்கிக் கொண்டிரா விடில், மனிதர் எவரும் 'நான் நான்' என்று தம்மைக் குறிப்பிடும் போது அவ்விதயம் இருக் கின்ற மார்பின் வலப்புறத்தையே தமது கையால் தொட்டுக் கூறும் வழக்கம் உடையவராதல் எங்ஙனம் முடியும்? (யாவரிடத்தும் அவ்வழக்கமே யுள்ளதால் மார்பின் வலப்புறமே (ஆன்ம) இதய ஸ்தானமாகும்).

256. இன்னதென்று யாராலும் கூறிவிட முடியாத அந்த உண்மை இதயமானது இப் பிரபஞ்ச மெல்லாம் தோன்றும் ஓர் நிலைக்கண்ணுடி போன்றது எனலாம். "இருக்கின்றேன்" என்ற பிரஜ்ஞை மாத்திரமான வெற்றுணர்வுடன் மட்டும் மிஞ்சிநின்று (தனித்து நின்று) விளங்கும் பரிசுத்த ஆத்மாகாசமான அதுவே மோன முழுமுதற் பொருளாகும்.

விளக்கக் குறிப்பு :— 'தனித் தொளிரும் வெற்றுணர்வு' உபாதி ஏதுங் கலவாத தன்மை ஒருமை யுணர்வான 'இருக்கிறேன்' என்னும் பிரஜ்ஞையானது 'அறிகிறேன்' என்றதோர் சுட்டறிவல்ல. இன்னென்றை அறியும் அறிவு 'சார்பறிவு' (relative knowledge) அல்லது சுட்டறிவாகையால், 'வெற்றறிவு' (absolute knowledge) என்பது 'தன்னை அறிகிறேன்' என்றவாறு கூடத் தோன்றுமல் 'தான் இருக்கிறேன்' என்று மட்டுமே உணர்வாகின்றபடியால் அதனை வெற்றறிவு என்றூர். 'தானுயிருத்தலே தன்னையறிதலாம்' என்னும் உபதேசவுந்தியார் இதனை வலியுறுத்தும்.

257. இதயமாம் அம் மூலமே யாவற்றின் அடி, இடை, கடையு மாகும். பரமாகாசமான அது உருவ மற்ற (சத்திய ஜோதியாம்) சத்சித் தாகும்.

விளக்கக் குறிப்பு :— அகந்தையே அனைத்து மாதலால் அகந்தை யுதிக்கு மிடமாம் இதயமே 'கரு' என்று குறிப்பிட்டார். இதயமே அகில சராசரங்கட்கும் தோன்றிநின்றொடுங்கும் இடமாம். ஆதலால் அது

பாமரர் கருதுமாறு வடிவ மாத லின்றும். பூரணமான உண்மை (சத்) விளக்கமாம் (சித்) பரமா காசமே அது.

258. அறிவு வடிவ சமுத்திரமாகிய தன் ஆன்மாவில் மனம் உருவழியக் கரைவதே சதாமௌனம் எனப்படும். சாந்தி வடிவான ஆனந்தக் கடலாம் இதயப் பராகாசமே உண்மை யான, அன்புருவான நாம் (நமது சொரூபம்).

விளக்கக் குறிப்பு:— உண்மையான நாம் என்பது அறிவு வடிவ சமுத்திரம் என்றும் சாந்தி வடிவ சமுத்திரம் என்றும் கூறப்படுவது நாம் 'சத் சித் ஆனந்த சமுத்திரம்' என்பதின் விளக்கமேயாகும். (உண்மை-சத்; அறிவு-சித்; சாந்தி, அன்பு-ஆனந்தம்; அகம்-நாம்).

259. தன்னிலும் வேருன இரண்டாவதொரு பொருள் இல்லாமல் பிளவற்ற பரிபூரணமாக உள்ள பரவஸ்துவை உன் ஞல் (மனத்தால்) மதிப்பிட முடியாது. அம்மனம் ஓய்ந்து, எவ் வெண்ணமுமின்றி 'இருக்கிறேன்' என்ற ஸ்வப்பிரஜ்ஞை மாத்திரமாய் விளங்கும் சச்சிதானந்தமே இதயம். அதுவே அண்ணமலை எனப்படும் நம் ஆன்ம சொரூபம்.

விளக்கக் குறிப்பு :— பிரம்ம விஷ்ணுக்களாகிய புத்தி அகங்காரம் இரண்டிஞலும் அண்ண முடியாத வஸ்து வாகையால் அண்ணமலை எனப்பட்ட பரம்பொருளானது மனத்தால் மதிக்கரிய ஆன்மா என்று நயம்படக் கூறப்பட்டது. ஸ்ரீ பகவான் அருளிய ஆன்மவித்தைக் கீர்த்தனத்திலும் 'அண்ணமலை என் ஆன்மா' என்று ஓதப்பட்டது காண்க.

260. அந்த இதயத்தை அறிந்தோர் கேடுருர். அவர்களே பந்தமற்றவர் ஆவர். அவர்கள் பரம்பொருளேயாவர். அவர்களே துவந்த நினைவெழுச்சியற்றவர். மோகமற்று உள்ளே மெய்யான பரமானந்தத்தை அனுபவிப்போரும் அவர்களேயாவர்.

விளக்கக் குறிப்பு :— பந்தமதி கெட்டார்-பந்தப்பட்டதாகக் கருதும் பொய்யுணர்வு நீங்கினவர் ஆவர். பரமானந்த முனைப்புற்ருர்-சகல துன்பங்கட்கும் ஏதுவாவது அகந்தை முனைப்பே. அதற்கு மாருக, அகந்தையழிந்து ஆன்மாவில் திளைக்கும் பேரின்பலஹரியைப் பரமானந்த முனைப்பு என்ருர். அகந்தை முனைப்பானது 'நான் இத்தேகம், நான் மனிதன், நான் இன்ஞர்' என்னும் தேகாத்ம புத்திவடிவாய்

முனைத்து எழும். இதற்கு மாருக, 'நான் நானே' என்று விளக்கமுறுவது ஆன்ம ஸ்புரணம் ஆகும். "நான் நான் என்று ஒன்று அது தாஞகத் தோன்றுமே யுந்தீபற" என்றும், "தோன்றினும் நானன்று பொருள் பூன்றமாம் அஃதே பொருளாமால்" என்றும் ஸ்ரீ பகவான் இவ்வான்ம ஸ்புரணத்தைப் பற்றிக் குறிப்பிட்டமை காண்க. ஆதலால் அகந்தையெழுச்சி போலல்லாத இவ் வருளெழுச்சியையும் ஓர் முனைப்பு என்றது விசேஷத்தால் என்க.

261. *அவ் விதயம் உள்ளும் புறமும் இருப்பதாயினும்* **உடலின் உள்ளேயோ வெளியேயோ மட்டும் அது இல்லை**. ஏனெனில் உள்-வெளி என்னும் பேதத்திற்கு இடமாகத் தோன்றுகின்ற இவ்வுடலே நினைக்கும் மனத்தின் ஓர் கற்பனை என்றறிக. (ஆகவே ஆன்மா உடலின் உள்ளேயோ, அல்லது கடவுளாக எங்கேயோ பரலோகத்தில் வெளியேயோ இருக்கின்றது என்பதும் கற்பனையே. உண்மையில் அது அதீதம்).

விளக்கக் குறிப்பு :— இப் பாடலின் கருத்தையும் பின்ஞல் வரும் (ப-8) என்னும் உபதேசக் கருத்தையும் நாம் நன்ருகச் சிந்தித்தறிய வேண்டிய அவசியம் உள்ளது. இவ்வுடல் உள்பட அண்ட சராசரம் அனைத்தும் உண்மையில் நம் (ஆன்மாவின்) உள்ளே இருக்க, அதையறியாமல் தான் இந்தச் சடவுடலுள் இருப்பதாக நினைக்கும் மந்தாதிகாரிக்காகவே உடலுள் மார்பின் வலதுபுறம் இதய ஸ்தானமாகக் குறிக்கப்பட்டதே தவிர* மார்பின் வலதுபுறம் தியானம் செய்வதற்காக வல்ல. ஏனெனில் உடலானது மனத்திலிருந்து உதித்தது; மனமோ ஆன்மாவில் உதித்தது; ஆகையால், அவ்வான்மா உடலுக்குள் அகப்பட்ட ஒன்றல்ல என்பது தீர்ப்பு. "………அஃதுள்ளும் புறமுமுள துள்வெளியி லுள்ளதன்ரும்" எனவரும் உள்ளது நாற்பது அநுபந்தம் 22வது பாடல் இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

262. *(உண்மையில்)* ஆன்மாவாகிய தன்னுள் *(அகிலமும் இருக்க, அதில் ஒன்ருன)* இவ் வுடல் இருக்கவும், அதற்கு மாருகத் தான் அவ்வுடலுள்ளேயே இருப்பதாக மூட அகங்காரத் தால் நினைக்கின்ற ஓர் மனிதன், படக்காட்சியிற் காணப்படும் படங்களுக்கு மூல ஆதாரமாக உள்ள திரையினிடத்தில் தோன்றி ஆடும் நிழற்படத்தின் உள்ளேதான் அத்திரை இருப்ப தாகக் கருதும் ஒருவனே யாவான்.

---

* 'ஸ்ரீ மஹர்ஷி வாய்மொழி' என்னும் நூலில் காண்க.

**பகவான் (8)** - (ஏகான்ம பஞ்சகம் - பாடல்-3)

ஆன்மாவாம் தனதுள்ளே இவ்வுடல் இருக்கவும், தாஞகிய ஆன்மா அந்த ஜடமான உடலுக்குள்ளேயே இருப்பதாக நினைக்கும் ஒருவன், படக்காட்சியில் தோன்றும் சித்திரங்களி னுள்ளேதான் அந்தச் சித்திரங்கட்கு ஆதாரமாயுள்ள திரை இருக்கிறது என்று தவருகக் கருதும் மூடனே யாவான்.

விளக்கக் குறிப்பு :— திரையையும் சித்திரங்களில் ஒன்ருகக் கருதுவதால் மூடமனிதன் சித்திரத்தின் உள்ளே திரை இருக்கிறது என்று கருத நேருகிறது. படங்களின் ஊடே காணப்படும் திரை, படங்களுள் ஒன்றல்ல என்றறியாததுபோல், உடல் உயிர்களாகக் காணப்படும் இப்பிரபஞ்சத் தோற்றத்தில் ஆன்மாவும் ஓர் சுட்டுப்பொருளாக இருக்கும் என்று கருதுவதால் தான் மனிதன் தன் உடலுள் அவ்வான்மா ஒரு பொருளாய் இருக்கிறது என்று மயங்குகின்ருன்.

263. ஆகவே, இவ்வுடல் வடிவான 'நான்' என்னும் அகங்காரம் இறக்கப் பெற்ற சமர்த்தரே (ஞானிகளே) மயக்கம் எல்லாம் அறவே நீங்கிய நுட்பமதியால் (அதாவது சித்தத்தா லன்றிச் சித்திஞல்) இவ் விதயத்தை எங்கும் வியாபித்ததாய் அனுபவித் தறிந்து உயர்வு அடைவர்.

விளக்கக் குறிப்பு :— 'சாகலைத்தாம் கண்ட சமர்த்தரே'-சாகலைக் கண்டது எது? மதியா? அல்ல வன்ருே? அகங்காரத்தின் சாவைப் பார்ப்பது மதியல்ல; சித்தே. அதுவேதான் 'மோகமறத் தெளிந்த நுட்பமதி' என்றவாறு, 'மதி' சப்தம் கொடுத்து அழைக்கப்பட்டது. 'சேர்வர் உயர்வு' என்றபடியால் இதயம் என்பது ஓர் இடமல்ல என்றும், அது ஆன்மாவே யென்றும் உணர்வதே சிறப்பாம்.

264. இறைவனது சிறப்பான, மோன, அருளனுபூதி சேர்ந்து விளங்குகின்ற இவ் விதயந்தான், அடைதற்கரிய பல வகைப் போகானுபவமுள்ள சொர்க்கம் முதலான எந்தப் பதவி களும் (நிலைகளும்) தன் முன் அற்பமாய்ச் சுவையற்று மங்கிப் போகும்படி வெற்றி கொள்கின்ற (பேரின்பமான) ஒப்பற்ற கைவல்ய ஸ்திதி யாகும்.

விளக்கக் குறிப்பு :— இதயமே கைவல்யம் என்பது கருத்து. இரவில், இலைகள் அடர்ந்ததோர் மரத்தினடியில் இலைகளின் ஊடே ஊடுருவி வந்து புள்ளியளவாகத் தரையிற்படும் சந்திரனின் ஒளித் துகள்களை, ஜீவர்கள் பிரம்மலோக பரியந்தம் சென்று அனுபவிக்கும் போகானுபவ சுகங்கட்கும், வெட்டவெளியில் வீசிக் கொண்டிருக்கும்

பூரணச்சந்திரனின் அகண்ட நிலவொளியை ஞானியின் அனுபவமான ஆத்ம சுகத்திற்கும் ஒப்பிட்டு ஸ்ரீபகவான் கூறுவதுண்டு.

265. எண்ணற்ற நினைவுகளாக எழுந்து அலையும் அலைச்சலும் (விக்ஷேபமும்) அதற்குக் காரணமான தன்மறதி யாகிய மறைப்பும் (ஆவரணமும்) அறவே நீங்கப் பெற்று, உண்மை மாத்திரமாய் ஏகமாய் மிஞ்சி நின்று விளங்கும் இவ் விதயமே, இனிய பல சுகபோகத்தைத் தரும் வானுலகை யாளும் இந்திரன் முதலானோரும் அடைய விரும்பி ஏங்கிக் கிடக்கும் சிறப்புடைய பரமாத்ம உலக மாகும்.

விளக்கக் குறிப்பு :— விக்கேப மோகம் - விக்ஷேப ஆவரணம் என்றாலும் சகல கேவலம் என்றாலும் பொருந்தும். ஏயும் சுத்தம் - விக்ஷேப ஆவரணங்களின் அழிவால் மேலெழும் ஜாக்ர சுஷுப்தி என்னும் ஆன்மஞானமாம் உண்மை விளக்கம். ஆன்ம உலகு, கடவுளுலகு, உண்மையுலகு என்பன பேதமற்ற ஒன்றேயாம்.

## ௫௨. குரு வாராய்ச்சித் திறன்

266. தூல, சூட்சும, காரண சரீரங்கள் எனப்படும் முத்தேகங்களுள் (அல்லது பஞ்சகோசங்களுள்) எந்த ஒரு உடலிலும் 'நான் இது' என்னும் அபிமான மில்லாமல், பற்றற்றிருந்து விளங்கும் சத்சித்தே (சத் பிரகாச நிலையே) படைப்பிற் காணப்படும் சகல உயிர்களின் உள்ளத்தும் தன்மயமாக வீற்றிருக்கும் அகில பராசக்தி நிலையாகும்.

விளக்கக் குறிப்பு :— எந்த உடலேனும் - ஐங்கோசங்களையும் ஐந்து உடல்களாகக் கொள்ளினும், அல்லது அவற்றைத் தொகுத்துத் தூலசூட்சுமகாரண முச்சரீரங்களாகக் கொள்ளினும் பொருந்தும். யான் என்னும் எண்ணம்-தேகாத்மபுத்தி அல்லது தேகாபிமானம். சத்பானம்-இருப்பு உணர்வு, சச்சித்து. தன்மயமாத் தங்கும்-ஒருடலே நான் என்னும் எண்ணம் ஒழிந்து, உபாதியற்ற வெறுவெளியாய் நின்று விளங்கும் உண்மை விளக்கத்தால் ஞானி, பின்னவுயிர்கள் அனைத்துள்ளும் அபின்ன விளக்கம் உடையோனாகின்றான். ஆதலின் அவனது நிலையே சகல உயிருளத்தும் தன்மயமாகத் தங்கும் அகில பராசக்தி நிலையாகும். அகில பராசக்தி-சச்சித்தான இருப்பு மாத்திர வெற்றுணர்வே மகாசத்திமயம் ஆகும்.

'குருவாராய்ச்சி' என்ற தலைப்பில் 'பராசக்தி' என்று கூறப்பட்டுள்ள கருத்து யாதெனில், சச்சித்தாய் சும்மாவிருக்கும் நிலையே அனைத்தாற்றலும் நிரம்பிய நிலையாதலால் அதைப்

பெற்றிருப்பவனே பராசக்திவாய்ந்தவ ஞகையால் அத்தகையோனேயே குருவாக அடைய வேண்டும் என்று 268வது பாடலிற் கூறப்போவதால் என்க.

267. இரட்டைகள் அற்று இதயத்தில் சச்சிதானந்தமாக சும்மாவிருக்கும் இத்தகைய தமது மெய் இயல்பே (ஸத் ஸ்வ பாவமே), அகந்தை வடிவான மூட அசுரமதிக்கு அனுபவப் படாத மோனம் என்னும் ஞானவரம்பு (எல்லை) ஆகும்.

விளக்கக் குறிப்பு :— சும்மா இருந்தொளிரும் இந்த உணர்வு-இருத்தல் ஒளிர்தல் ஆகிய சத்சித் அனுபவநிலை. இவ் இருப்புணர்வான சத்சித்து என்பது அடையப்படுவதோர் அற்புத சக்தி வாய்ந்த புதுநிலை யல்ல என்பதை உணர்த்தவே அந்நிலையை 'நம் மெய்யியற்கை நிலை' என்று குறிப்பிட்டார்.

அகந்தையின் காரியமாகிய அநேகவித மாயங்களான அஷ்டசித்தி வகைகளும் மகாசக்தி அல்லது பராசக்தியின் பாற்பட்டதாகக் கொள்ளக்கூடாது என்பதற்காக, 'மந்த அவுண இயல்பு-மூட இராக்ஷசத் தன்மை என்று கூறுகிறூர். இராக்ஷச வலிமையினும் பெருஞ் சக்தி வாய்ந்தது கடவுள் இயல்பான பராசக்திநிலை யாகையால் அதைக் குறிப்பிடும்போது, "சும்மா விருந்தொளிரும் மெய்யியற்கை நிலை" என்கிறூர். 'மவுனமெனும் ஞான வரம்பு'-ஞானம் எல்லையற்ற நிலையுடையது. அதை ஒரு வரையிட்டுச் சொல்லவோ எண்ணவோ முடியாமல் வாக்கு மனங்கள் செயலற்றுப் போவதால் மௌனமே ஞானத்தின் எல்லை என்று கொள்ளப்படுன்றது. ஞானத்தின் சின்னம் மோனமே.

மேற்கூறிய இரு பாடல்களாலும் சற்குருவின் இலக்கணம் விளக்கப்பட்டது. சற்குருவினிடமுள்ள, உண்மையான மகிமையாவது சும்மா **'நான் இருக்கிறேன் (சத்சித்)'** என்ற சுபாவ நிலையாக மட்டும் (Natural state) மிஞ்சி நிற்கும் மகா மௌனமே என்றும், அம் மௌனமே மகாசக்தி வாய்ந்த நிலை அல்லது அகில பராசக்தி நிலை என்றும் அறிவுறுத்தி, இனி அப்படிப்பட்ட நிலையுடையவனேயே ஆராய்ந்து குருவாகக் கொள்ளவேண்டு மென்றும் அடுத்த பாடலாற் கூறுகின்றூர்.

268. அத்தகைய பராசக்தி நிலையான மகாமௌன சக்தி வாய்ந்தவனே தன்னைச் சரணடைகின்ற எத்தகைய உயிரையும் காரணம் வேண்டாக் கருணையாகிய தனது இனிய அருளால் இரண்டற்றதும் சொல்லுக்கு எட்டாததுமான ஞானன்ம சொரூ பத்திற் சேர்க்கப் பெரு வலிமை மிக்க சற்குரு ஆவான் என்றறிக.

விளக்கக் குறிப்பு :— 'தன்னடைந்த எந்த உயிரையும்' - தகுதியில் (பக்குவத்தில்) மிகக் குறைந்தவராய் மனித வர்க்கத்திற் கடைப் பட்டவரையும், இன்னும் முக்திக்கு உரிமை யற்றவர்களாகச் சாஸ்திரங்களாற் பொதுவாக விலக்கப்பட்ட அஃறிணை உயிரினங்களுள் எவையாயினும் சரி, அவைகளையும் சற்குரு தனது அவ்வியாஜ, அபரிமித கருணையாலும் மகா சக்தியாலும் சொரூப சாட்சாற்காரம் அடைவிக்க முடியும் என்பதைக் குறிக்கின்றார். இக்காரணம் பற்றியே சற்குருவை "மிக வல்ல குருவாக மதி" என்றார்.

269. பிரம்மமாம் மோனநிலையின் பேரொளியில் 'நான்' என்ற அகங்காரம் அழிந்தால் தோன்றுகின்ற பரபக்தி யூற்றான ஞானானுபவத்தின் திடமே உத்தம சற்சீட நிலையாகும். இவ் வுத்தமச் சீடநிலை பெற்றவனே உத்தம குருத்துவம் பெற்றவனாகத் தீர்மானித்துக் கொள்.

270. உயிர்களை ஆன்ம சொரூபத்தை நோக்கி யழைத்துச் சென்று பரமாத்மபோதம் அளிக்க வல்லவனே, ஆத்ம சொரூப மான சர்வேசுவரவடிவம் என்று அறிஞராற் போற்றப்படும் குரு பரனாகக் கண்டு தெளிந்து அவனையே சரணாகப் பற்றிக்கொள்.

விளக்கக் குறிப்பு :— அறிஞர்கள் சற்குருவைச் சர்வேசுவரன் என்றே போற்றுகின்றனர். அந்த சர்வேசுவரன் என்பது ஆன்ம சொரூபமே தவிர அன்னியமானதோர் வியக்தியல்ல. ஆகையால் (குருவை யாராய்ந்து கண்டு கொள்ள விரும்பும்) உன்னுடைய ஆன்ம சொரூபமும் உலகின் கர்த்தாவாகிய சர்வேசுவரனுடைய சொரூபமும் இதோ உன் கண் முன் நரவடிவாய்க் காணப்படும் குருவடிவமே என்று அறிஞர்கள் தீர்மானிப்பதால் அவனையே சரணடைக. ஆன்ம சொரூபத்துக்கு நம்மை அபிமுகமாக்க வல்லவனே குரு என்பதும், சற்குரு சர்வேசுவரனே என்பதும் கருத்து.

அபிமுகம் - நேர்முகம்; சாந்நித்யம்

271. தன்னைச் சரணடைந்த சீடனுக்கு அவன் மேலும் செய்ய வேண்டிய சாதனமாக ஒன்றை உபதேசித்துச் செய்யச் சொல்லுகின்ற குரு ஒருவன், அச்சீடனைப் பிடித்து நரக லோகத்தில் தண்டனைக் குள்ளாக்கும் கொடிய இயமனும், மேலும் மேலும் அவனைப் பிறப்பிக்கும் பிரம்மாவுமே யாவன்! (அவ்வாறின்றி, கர்ம பந்தத்திற்குப் பயந்து வந்து தன்னைச் சரணடைந்த) சீடனை "இனி நீ யொன்றும் செய்யேல் ; சும்மா இரு" என்று உபதேசித்து அவனைச் செய்யவேண்டியன வெல்லாம் செய்து முடித்தோனாய் (கிருதகிருத்தியனாய்) உணர வைப்பவனே (அவனது

மனமொழி மெய்களின் செயல்களுக்கு முடிவு இடுபவனே) உண்மையான தெய்வீகமும் அருளும் பொருந்திய சற்குரு என்று தெரிந்து கொள்க.

விளக்கக் குறிப்பு :— பலகோடி பிறவிகளூடே ஜீவன் மனமொழி மெய்யாற் கணக்கற்ற கர்மங்களைப் புரிந்து அவைகளின் பலனாய் சுக துக்காதிகளை அனுபவிப்பதே கதியாய்க் கிடந்து அக் கர்மங்களிலும் கர்ம பலன்களிலும் அலுத்துப்போய், பூரண ஓய்வாகிய முக்தியை நாடித் தன்னிடம் வந்து சரணடையும்போது, ஒரு குரு, மேலும் அச் சீடன் செய்ய வேண்டியவைகளாகப் பூஜை, ஜபம், தியானம், யோகம் ஆகிய கர்மச் சுமைகளை அவன் மீது ஏற்றித் துன்புறுத்துவானாயின் அந்த குரு அவனுக்கு இயமன் ஆகின்றான். ஆன்ம சாதனங்கள்போல் தோன்றும் இவைகளைச் செய்யவுங் கூட 'நான்' என்று ஒரு கர்த்ருத்துவம் வைத்துக் கொள்ளப்பட வேண்டு மன்றோ? கர்த்ருத்துவம் உள்ள வரை கர்மமும் அதன் பலனுமான பிறவியும் விடாதன்றோ? அவ்வாறு மீண்டும் பிறவியில் தள்ளுவதால் அந்த குரு அவனுக்குப் பிரம்மா ஆகின்றான்! இதனால் மோக்ஷம் என்னும் பேச்சும் அச் சீடனுக்கு இல்லாமற் போவதால் எந்தக் கர்மங்களை விதிப்பவனும் உண்மையான குருவாக மாட்டான். இவ்வுண்மையைத் தாம் உணர்ந்தவராகையால் சற்குரு தன் மெய்ச்சீடனை யாதொரு கர்ம தர்ம யோகானுஷ்டானங்களிலும் ஏவாமல் "**சும்மா இரு**" என்று உபதேசித்து, அபயம் தந்து, அச்சீடனின் மனோவாக்குக் காயங்களைச் சாந்தப்படுத்திப் பரமோனத்தில் ஆழ்த்திக் கிருத கிருத்தியன் ஆக்குகின்றார். இந்நூலின் 773-வது பாடலையும் உடன் வாசித்துணர்க.

"சும்மா விருசொல் லறவென் றலுமே...." என்று அருணகிரியாருக்கு ஞான பண்டித சுவாமியான குமரகுருபரன் அருளிய உபதேசத்தை இங்கு நோக்க வேண்டுவதாம்.

"ஏக மிரண் டென்னுமற் சும்மா விரு வென்றான்.......சீர்காழி நாடன்" என்று ஞானசம்பந்தப் பெருந்தகையின் உபதேச மாட்சியைக் குறிக்கும் ஒழிவி லொடுக்கமும் இங்கு கவனிக்கத் தக்கதாம். 'சதுர்யோகங்களையும் செய்' என ஏவும் பிற குருக்களைப் போலல்லாமல், "அவைகளைச் செய்யும் நீ யார்?" என்று தடுத்து, விருத்தியை நிறுத்திச் சும்மாவிருக்கும் ஓர் உளவாகத் தன்னுட்டம் உறச்செய்வதால் சற்குரு ஸ்ரீரமண பிரான் நம்மைச் சும்மாவிருக்கவே வைத்துவிடுகிறார்! இதுவே மெய்யான சற்குருவின் இயல்பாகும் !

272. (உலகம் மெய்யென்றும், அதில் தனக்கு ஆக வேண்டியவை பற்பல வென்றும்) பித்தேறிய கருத்தால் உற்சாகப் பிரவிருத்தியோடு மனம் வெளிமுகமாய் ஓடி அலையக் கிளம்பி, இதயத்தில் மெய்யறிவான ஆன்மா சதாகாலமும் விளக்கி அறிவித்துக் கொண்டிருக்கும் "**சும்மா இங்கே இரு**" என்னும்

சத்திய உபதேசத்தைக் கேட்க மாட்டாத காரணத்தால்தான் (அதே உபதேசத்தை வெளியிலிருந்தும் செய்வதற்காக) வெளியே மனித வடிவில் குரு ஒருவர் அவசியப்படுகின்றது.

விளக்கக் குறிப்பு :— பக்குவிகளுக்கு 'நான் நான்' என்ற ஸ்புரிப்பு மாத்திரமாய் உள்ளே உதயமாகி, மனத்தை இதயத்துள் இழுத்துச் சென்று, கரைத்துச் சும்மாவிருக்க வைத்துவிடுகின்ற ஆன்மா வாகிய திருவருளே குரு. 'அஹமஹம்' என்னும் அத் திருவருளின் ஸ்புரிப்பையே நாடி, விரும்பி, இதயத்துள் முழுகுவதே அவ் வுபதேசத்தைக் கேட்டல். அதைக் கேளாதவர்க்கே (அவ்வாறு தன்னை நாடாதவர்க்கே) புறத்தில் ஒரு குரு தேவைப்படுகிறது. எனவே வெளியிற் காணப்படும் குரு மெய்யான சற்குருவாக இருப்பானே யாகில் அவன் முன் பாடலிற் கூறியபடி, தன்னை யடைந்தோரைத் தான் யார் என்று தன்னுள் நாடும்படி ஆன்மாபிமுகப்படுத்திச் சும்மாவிருக்கவே வைப்பான் என்பதும் இதிலிருந்து விளங்குகின்றது. இவ்வடையாளத்தைக் கொண்டு தமக்கு உண்மையான குரு யார் என்பதை, வெளியிற் குரு ஒருவரைத் தேடும் சாதகர்கள் கண்டு கொள்வார்களாக.

273. எல்லாப் பொருள்களிலும் தானே அவ் வெல்லாப் பொருள்களுமாய் இருந்து விளங்கும் சமரச இருப்புணர்வே (சத்சித் சொரூபமே) குருவாகும்.

விளக்கக் குறிப்பு :— குரு என்பது எல்லா நிலைகளின் அகமாகவும், எவற்றிலும் சமரசம் காண்பதுமான சற்போதம் என்றார்.

274. மனித வடிவிற் காணப்பட்டாலும் ஆன்ம பராகாச சொரூபியாய் விளங்கும் ஞான குருவை நாமரூபாதீதப் பரம் பொருளாகக் கருதாத மக்கள் துராசாரப் பாவிகளுட் சிறந்தவர்க ளாவர்.

விளக்கக் குறிப்பு :— நராகாரம் - மனித வடிவம். தோன்றும் ஞான குரு-குரு நராகாரம் ஆனவ ரல்ல; நரவடிவமாய் நம்மாற் காணப்படுகின்றார், தோன்றுகின்றார் என்பதே. நிராகாரன் வடிவற்றவன், நாமரூப மற்றவன். நெஞ்சம் இலாதார் - கூர்மதி இல்லாதவர். துராசார - தவறாக நடக்கின்ற; அதாவது மெய்யான நிராகார சத்சித்தைப் பொய்யான நராகார ஜடவுடலாகக் கருதுவதால் துராசார பாபம் செய்தவர் ஆகின்றனர். துரந்தரன் - முக்கிய மானவன், மேலானவன்.

## ௩௫. குருவருட் டிறன்.

275. அடர்ந்த பெரு மயக்கமான அஞ்ஞான விருளால் தேடப்பட்ட நல் தீ வினைகளால் அடைந்த சமுசார துக்கத்தி

லகப்பட்ட ஜீவர்களுக்கு, தம்மை ஆட்கொண்ட சற்குருவின் திருவருளிற் கொள்ளும் ஆனந்தமே மனத்துயரை மாற்றும் மருந்தாகும்.

விளக்கக் குறிப்பு :— இருவினையாற் சமுசாரமும், சமுசாரத்தாற் சீவர்களுக்குச் சித்த விருத்தியும், சித்த விருத்தியால் துக்கமும் உண்டாகின்றன. சிந்தையின் விட்சேபமே துக்கமாதலின் குருவருளைச் சிந்தித்து அவரது உபதேசத்தை மேற்கொள்ளும் மனநிறைவே மிகுந்த ஆறுதல் தரும் மருந்தாகும்.

276. பிணிக்கின்ற விருப்பு வெறுப்புக்களுடன் (கர்த்ருத்து வத்தை மேற்கொண்டு) செய்வதால் பழியைத் தருகின்ற வினை களின் வசத்தால் அலைக்கழிக்கப்பட்டுத் தன்னை வந்தடைந்த ஜீவர்களின் துயரத்தை (பலஹீனத்தை) நீக்கி முக்தியின்பங் கொடுப்பவரே சற்குரு வாவர்.

விளக்கக் குறிப்பு :— பசை.........செயல் - விருப்பு வெறுப்புக் குட்பட்டு அவற்றால் உந்தப்பட்டுச் செய்யும் காமிய கர்மங்கள். இக்காமிய கர்மங்கள் பழிப்பிற் குரியனவே யாதலின் 'வசை சேர் வினை' என்றார்.

277. துருவேறிய இரும்பையும் தங்கமாக்க வல்ல சிறந்த ஸ்பரிசவேதியைப் போல, உபாதி தோஷ வசப்பட்ட இழிந்த ஜீவர்களையும் சற்குரு தேவனின் அருள் விழிகள், குற்றமற்ற மெய்ஞ்ஞான ஆன்ம சொரூபப் பசும் பொன்னாக மாற்றும் ஆற்றல் வாய்ந்த தாகையால், (அவரிடம் நம்பிக்கையின்மையால் ஏற்படும் சந்தேக விபரீதங்களாகிய நமது) மனக் குற்றங்களை நன்கு ஆராய்ந்து நீக்கி, மிக்க சிரத்தையுடன் நாம் போற்றத் தக்கதோர் கடவுள் தரிசனம் அதுவே (சற்குரு கடாக்ஷமே) யாகும்.

278. பிரபஞ்சத்திலுள்ள ஸ்தூலச் சுடர்களாகிய சூரிய சந்தி ராக்கினிகளையும் விளக்கக் கூடிய ஆன்ம ஜோதியே தன் சொரூபமான சற்குரு, அசத்திய தேகாதிப் பிரபஞ்சத்தைச் சத்திய மென்று கருதும் ஜீவர்களுக்கு அம் மாயாசத்திய உலகாதிகளைப் பொய்யாக விளக்கிக் காட்ட வல்லவராகும்.

விளக்கக் குறிப்பு :— மாய மெய் - மித்தியா சத்தியம், வியவகாரிக சத்தியம், உண்மை யற்றது. 'தூலமா யுற்ற சுடர்க்குஞ் சுடரொளி' என்றது ஆன்ம ஒளி. தூலச்சுடர்களான சூரிய சந்திராக்கினிகளைக் கண் விளக்குகின்றது. கண்ணை மனமும் மனத்தை ஆன்மாவும் அறிய

விளக்குவதால் தூல சூக்குமச் சுடர்கள் யாவற்றினும் சிறந்தது ஆன்மச்சுடர் எனப்பட்டது. "ஒளியுனக்கெது....." எனவரும் உள்ளது நாற்பது அனுபந்தம் 7 வது செய்யுள் இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

279. ஸ்திரமும் அதிசூட்சுமமுமான அருளாகாயமாம் மெய்ஞ்ஞான மூர்த்தியான சற்குரு, அற்பனும் (நினைப்பென்னுங் காற்றால் உந்தப்பட்டு) உழலும் இலகுத் தன்மை யுடையவனு மான ஜீவனை, அவனது அற்பத்தன்மையான தேகாத்ம புத்தியை அடியோடழித்து, பரிபூரண ஞான கன சொரூபமாம் மெய்த்தன்மையில் அழுந்தப் பதிய வைப்பவ ராகும்.

விளக்கக் குறிப்பு :— லகு, குரு என்பன முறையே இலேசான, கன மான என்று பொருள் தரும் எதிர்மறைப் பதங்கள்.

280. தான் அளவற்ற மகிமை வாய்ந்த பரமாத்மாவே யாக விளங்கும் மெய்ஞ்ஞான குருவானவர், உலக மயக்க மாகிய குற்றம் மலிந்த அற்ப இலௌகிக வாதிகளைத் தோற்கடித்து வீழ்த்தும் மகாமௌன சிரேஷ்ட ராகும்.

விளக்கக் குறிப்பு :— மதிநுட்பத் திறம் வாய்ந்த வாதத்தாற் பிற கொள்கையினரைத் தோற்பிப்பதினும் அருட்சக்தி வாய்ந்த தமது ஆன்ம பரமோனத்தாற் சற்குரு உலகாயத மனத்தரை வெற்றி கொள்கின்றார். ஏனெனில், வாதத்திறத்தால் தோற்பிக்கப்படும் வாதிகளின் உள்ளம் தோல்வியால் வெதும்பிச் சீற்றமுற் றிருக்குமே தவிர, தம்மை வெற்றி கொண்ட வித்தகரிடம் உண்மையாகப் பணிவு கொள்ள இணங்காது. ஆனால் சற்குரு தமது அருள் மோனத்தால் வாதிகளை வெற்றிகொள்ளும் போது அன்னாரது உள்ளத்துள் அன்பறிவு வடிவாகத் தமது வெற்றி விளக்கத்தை உண்டாக்குவதால், அன்னோர் அக்கணம் தொட்டு சற்குருவின் பாதங்களில் உண்மையான பேரன்புடையவர்களாய் மாறிப் பூரண சரணாகதி யடைகின்றனர். இத்தகைய வெற்றியே சாசுவதமான தாகையால் மோனத்தால் வெல்லும் வல்லுநரே உத்தம சற்குரு எனப்பட்டது.

281. உண்மையில்லாத தேகாதிப் பிரபஞ்சங்களை இல்லா தனவாகவே ஆகுமாறும், ஏகப் பரஞ்சுடராயுள்ள ஆன்மாவே உள்ள வஸ்துவாகுமாறும் வெகு விரைவில் விளங்க வைத்து, உண்மையில் இல்லாததாய் ஆனால் உண்மைபோற் காணப்படு கின்ற ஜீவனும் அகந்தையைச் சற்குரு தன் கடாக்ஷத்தாற் (இரு கண்களின் அருட் பார்வையாற்) கொல்லாது கொல் கின்றார்.

விளக்கக் குறிப்பு:— மங்கிய அந்தியொளியால் கயிற்றில் தோன்றும் பொய்ப் பாம்பை, சூரியனின் பேரொளி பாய்வதால் ஒரே நொடியிற் பொய்யாக்கி வைப்பது போல, மதியறிவால் விளங்கும் பிரபஞ்சப் பொய்யை ஆன்மப் பேரறிவால் இல்லாததாய் விளக்குபவர் சற்குரு எனப்பட்டது. கொல்லாது கொல்லல் சமுத்திரத்திஞல் விழுங்கப்பட்ட நதி தன் வடிவம், ஓட்டம் முதலிய சுபாவங்கள் முற்றிலும் அழிக்கப்பட்டாலும் அதன் நீரானது துளியும் அழியாமல் நிற்பது போல, கொல்லப்பட்டது ஜீவனின் உபாதியுணர்வே தவிர அகந்தையின் சத்திய சொரூபமான **இருப்புணர்வுக்கு (சத் சித்திற்கு)க் கேடு சம்பவிப்பதே இல்லை** என்பதாம்.

282. மெய்ஞ்ஞான மாகிய வெற்றி வாளால் மனப்பேயை வெட்டி யழித்த வீரராகிய சற்குருவின் அருள் வலிமையால் நமது அடங்கா மனமான குரங்கின் சஞ்சல அலைவு நீங்கிஞலன்றி, பரமாத்மாவின் அற்புதமான மெய்ஞ்ஞானத் திருநடனத்தை (ஞாஞனுபவத்தை) உள்ளத்திற் காண்பது அரிதாகும்.

விளக்கக் குறிப்பு :— சற்குருவின் அருளால் மனக் குரங்காட்டம் அழிந்த பிறகே நடேசனின் தில்லை அரங்காட்டம் (ஆன்ம நடனம்) காண முடியும் என்ருர்.

283. யானை தன் கனவில் தோன்றக் கண்ட சிங்கத்தால் தூக்கம் கலைந்து விழித்தல் போல, அவித்தை என்னும் தனது துயில் மயக்கத்திற் காண்கின்ற கனவாகிய இந்த ஜாக்கிரத்தில் தன் கண்முன் வந்து தோன்றுகின்ற சற்குருவிஞல் சீடன் தன்னைக் கவிழ்த்து மூடியிருந்த அஞ்ஞான நித்திரை நீங்கி ஞான விழிப் படைவன் என்றறிக.

விளக்கக் குறிப்பு :— அவிச்சை நனவாம் கஞ அறியாமையாகிய இந் நனவு வெறுங் கனவே. எதை அறியாமை என்ருல் 'தன்னை யறியாமை' - தன் நிஜ சொரூபத்தை அறியாததால் அல்லது தன் நிஜசொரூபத்தை மறந்ததால் அம் மறதி என்னும் தூக்கத்தில் இந்த ஜாக்கிராவஸ்தை (நனவு) யான கனவு உண்டாயிற்று. நம் மெய்ந்நிலையை அறியாமையே மாபெருந் தூக்கம். அதிற் பற்பல ஜனன மரணங்களாகிய கஞ நிகழ்கின்றது. ஸ்ரீ பகவானருளியஏகான்ம பஞ்சகத்தின் முதற் செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

ஆசாஞற் கவிச்ச மயல் போய்த்தெளிதல் :— சற்குரு விஞற் போக்கப்படுவது இந்த ஜாக்கிரமாகிய கனவு மட்டுமல்ல. அதற்கு ஆதாரமாயுள்ள தூக்கமும் (அவித்தையும்) சேர்ந்தே நீக்கப் படுகின்றது. கனவு மட்டும் நீங்கிஞல் மீண்டும் வேறு கஞ வரலாம். கனவுக்கு அடிப்படையான தூக்கமே கலைந்தால் நிச்சயமாக எவ்விதக் கனவும் (பிறவியும்) வரமுடியா தல்லவா? ஆதலால் சற்குருவானவர் நீக்கித்

# to leave space and read

தருவது நம்மை அனுதிகாலமாய்க் கவிழ்த்து மூடிய அவித்தைத் துயிலேயே என்க.

காணப்பட்ட சிங்கம் யானையின் பொய்யான கனவில்தான் வந்ததென்றாலும் அதனால் உண்டாக்கப்பட்ட விழிப்பு மெய்யாகி, விழித்த பின் அச் சிங்கமும் பொய்யாவது போல, தூலமாய் நரவடிவாய் நாம் நனவிற் காணுமாறு வந்த சற்குருவின் நாமரூபத் தோற்றம் நம் ஞான விழிப்பின் பின், நமக்கிருந்த நாமரூபம் போலவே பொய்யாகி (அதாவது சற்குரு நமக்கு அன்னிய மானவர் என்பது பொய்யாகி) ஆனால் அவரால் அருளப் பெற்ற ஆன்ம ஞானமாம் நம் நிஜ சொரூபமே மெய்யாகி அவர் நம் ஆன்ம சொரூபமே யாக (நாமேயாக) விளங்குவர் என்பது பெறப்படுகின்றது.

284. சற்குருவின் அருள்ஞானப் பார்வையில் அகப்பட்டோர், புலியின் வாய்ப்பட்ட மான் மீள முடியாதது போல, அற்பத்தன்மையான அகந்தை யியல்பு அழிக்கப்பட்டுக் கைவல்ய நிலை பெறுவரே யன்றி, ஒருக்காலும் கைவிடப்படவே மாட்டார் என்று உறுதியாய் உணர்க.

285. சூரியனின் ஒளியைப் போல அளவற்ற ஞானப் பிரபாவம் உடையவரான சற்குருவினால் ஆட்கொள்ளப்பட்டு அவரது பாதமாகிய ஞான ஒளியில் மூழ்கிய சீடனின் மனம், ஆன்ம சொரூப அறிவிற் கற்பனையாய்க் காணப்படும் திரிபுடி பேதத்தில் மயங்கி மீண்டும் சிக்கிக் கொள்வதே யில்லை.

விளக்கக் குறிப்பு :— பேதத் திரயம் மூவித வேறுபாடுகள் நனு, கனு, துயில் என்னும் மூவவஸ்த்தைகள்; சத்துவம், ராஜதம், தாமதம் என்னும் முக்குணங்கள்; காண்பான், காட்சி, காண்டல் ஆகிய முப்புடிகள் (திரிபுடிகள்) முதலியன.

சூரிய ஒளியில் திறந்து காட்டப்பட்ட நிழல்படி தகட்டில் (Sensitive Plate) அவ் வொளி ஒரு முறை பதிந்து விடுமானால் பிறகு அத் தகடு மற்ற எந்தப் பொருளின் உருவத்தையும் தன் மீது பதித்துக் கொள்ளும் திறனை இழந்து விடுவது போலவே, குருவருளால் அறிவொளிபட்ட சீடனின் மனம் பிறகு பேதத்திரய அறிவின் பொய்த்தோற்ற மாகிய உலகத்தால் மயக்க மடையாது என்பதாம். ஸ்ரீ பகவானருளிய அருணசல அஷ்டகம் 5வது பாடல் இங்கு காணத் தக்கதாம்.

286. யாவற்றையும் நேதி செய்து தள்ளி ஒப்பற்றதாய் மிஞ்சி விளங்குகின்ற ஆன்மாவைக் காட்டித் தரக் கூடியவாறு

மௌனத்தால் உபதேசிக்கும் ஞான வள்ளலாய் விளங்குகின்ற குருவும் அவருக் கேற்ற சீடனும் கண்ணொடு கண் பொருந்துமாறு சக்ஷு தீக்ஷை கொள்வராயின், குருவின் மூலம் வாய் மலர்ந் தருள வேண்டிய மகா வாக்கியமாதி உபதேசங்கள் கூட என்ன பிரயோசனம் தரும்? தரா; அவசியமில்லை என்பதாம்.

விளக்கக் குறிப்பு:— மூலநூற் செய்யுளில் வரும் 'தரும்' என்ற சொல்லை 'தருகின்ற' என்று எச்சமாகக் கொள்ளாமல் 'தந்துவிடும்' என்ற பொருளில் வினைமுற்றாகக் கொண்டால், பின்வருமாறு பொழிப்புரை காணலாம்:

மோன தேசிகனாய் விளங்கும் குருவும் தக்க சீடனும் தம் கண்ணொடு கண் ஒன்றுபட்டால் (சக்ஷுதீக்ஷையுற்றால்) பிறகு வாய்ச் சொற்களுக்கு என்ன அவசிய மிருக்கிறது? அந்த நோக்கின் இணைப்பே யாவற்றையும் (அநாத்மாவை) விலக்கி மிஞ்சி நிற்கும் ஆன்ம ஒளியைக் காட்டித் தந்து விடும்.

ஸ்பரிச தீக்ஷையினும் சக்ஷு தீக்ஷையும், சக்ஷு தீக்ஷையினும் சங்கற்ப தீக்ஷையும் (முறையே ஒன்றிநொன்று) சூட்சுமமும், வலிமையும் சிறப்பும் உடையன என்று சாஸ்திரங்களிற் கேள்விப்படுகிறோம். மேற்கூறியதோ இடைப்பட்டதான சக்ஷு தீக்ஷை. ஆனால் ஸ்ரீ பகவானோ இம் மூவித தீக்ஷைகளையும் விட பலிதத்தில் தவறாததும் மஹாசக்தி வாய்ந்ததும் மௌன தீக்ஷையே என்று அடிக்கடிக் கூறி வந்துள்ளார். அதைக் குறிப்பாகக் காட்டவே "மோன வள்ளலாய்த் தங்கும் குரு-சீடர்" என்று செய்யுளிற் தருகின்றார். மோன தீக்ஷையில் வல்ல வள்ளலான ஞான குருவினிடம் கண் இணை நோக்கும் ஒக்கின்ற சக்ஷு தீக்ஷையும் கிடைக்கப் பெற்றால், பிறகு வாய்ச் சொல் எதற்கு என்றதால் சீடன் பெறும் ஞானானுபூதியின் நிச்சயம் வலியுறுத்தப்பட்டது.

இப் பாடலின் பின் இரு வரிகள் திருக்குறளாகும். திருக்குறளில் இவ்விரு வரிகளாற் போதிக்கப்படும் அகப்பொருட் கருத்தை ஆன்ம ஞான நெறிக்கேற்ப அழகு பெற அமைத்துக் கையாண்டதால் குறளுக்கோர் புதுப் பெருஞ் சிறப்பைத் தேடிக் தந்துள்ளார் செய்யுள் ஆசிரியர் ஸ்ரீ முருகனார்!

287. ஆட்கொண்ட சற்குருவின் திருவருளால், அறிவதற் கரியதும் மறைமுடி வானதும் அதிபரிசுத்த மோனத்தால் விளங்குவது மான பிரம்ம ஞான முடிவாம் மெய்ப்பொருள், தானாகவே இதயத்தில் 'நான் நான்' என்ற ஸ்புரணானுபவமாகத் தோன்றி விளங்கும் என்று முற்றறிவு பெற்ற திடஞானிகளாகிய ஆன்றோர் கூறுவர்.

## ரிச. உறுதி யுரைத்தற் றிறன்

288. உரைத்தற்கரிய பரமகுருவின் இனிய அருளேக் கிரகிக்க வேண்டிய முறையில் கிரகித்து, நம் கண்முன் காணப் படும் பொய்யும் மாயமுமான பிரபஞ்சத் தோற்றத்தின் ஆசை யிற் புத்தி வையாமற் **சும்மா விருப்பதே சுகம்.**

விளக்கக் குறிப்பு:— அருளே உன்னற் குரியபடி உன்னல் என்பது : "அருள் என்பது ஆன்மாவே. அதுவும் ஒவ்வொருவ ருள்ளும் 'நான் நான்' என்று யாவரு மறிய நிச்சந்தேகமாக விளங்கிக் கொண்டிருக்கும் தன் விளக்கமே" என்று அடிக்கடிக் கூறிய ஸ்ரீ பகவானின் கருத்துப்படி, குருவருளேத் தக்கவாறு கிரகித்தல் என்பது 'நான்' என்னும் தன்மை யுணர்வை விடாது நாடி நிற்பதே. இது, முன்னிலே - படர்க்கைகளேக் கவனியா திருப்பது தான் என்று காட்டவே "முன்னிற்கும் பொய்ம் மாயத் தோற்றப் புணர்ப்பிற் புகுதாது" என்ருர். புறம் நாடாது தன்னே நாடி நிற்பதே சும்மா விருத்தல். இதுவே குருவருளே உன்னற் குரியபடி உன்னல் என்பது கருத்து. சும்மா விருத்தல் என்பது சோம்பி யிருத்த லன்று. ஏது மறியாது விழுந்து கிடக்கும் காஷ்ட லய சமாதிகளு மன்று. **இடைவிடாத பூரண முயற்சி வடிவான தன்னிட்டமே அது.** இந்நிலே நம் சுபாவ ஸ்திதியே என்ற அறிவு உதிக்கும்போது இதுவே ஸஹஜ ஸமாதி யாகின்றது. இதுவே முயற்சி யற்ற பெரு முயற்சி நிலேயாம்.

289. 'நான் யார்?' எனத் தன்னே விசாரிப்பதாலேனும் அல்லது இறைவன் திருவடியை இடைவிடாது பக்தியால் நினேந்து மனம் நெக்குருகுவதனு லேனும், தேகமே நான் என்னும் வஞ்சகமான அகங்கார எழுச்சி அடியோடு அழிக்கப் பட்ட உள்ளமே (நிலேயே) ஞானப் பிரகாச நிலேயாகும்.

விளக்கக் குறிப்பு:— ஆன்ம விசாரத்தாலோ அல்லது இறைவனிடம் கொள்ளும் பரபக்தி யாகிய ஆன்ம சமர்ப்பணத்தினுலோதான் அகங்காரம் நசிக்கும். இவ் விரண்டில் எதுவொன்று தமக்கு விருப்ப மாகவும் பொருத்த மாகவும் தோன்றுகின்றதோ அதன் வழி முயன்று அகந்தை நாசம் பெற வேண்டும். எவ்விதத்தும் அகங்கார' நாசமே குறிக்கோள் என்பது கருத்து. அகந்தை யற்ற உள்ளமே ஆன்ம நிலே என்றும் அது ஞான ஒளிமயமே என்றும் கூறப்பட்டது.

290. யாவரும் விரும்பும் சாந்தி யெனப்படும் பேரின்பம் சற்குருவின் அருளால் மன அமைதி பெற்ற லன்றி எவர்க்கும், எவ்விடத்தும், எவ்விதத்தும் கிடைக்காது. ஆதலால் எப்போதும்

ஒரு முகப்பட்ட உள்ளத்தோடு அந்த சற்குருவின் அருளேயே நாடி அடைக.

291. தாம் உய்ய வேண்டு மென்று விரும்புவாராயின் அம் மக்களுக்கு இது உறுதியாகக் கூறப்படுகின்றது. அதாவது ஐந்து அங்கங்களேயும் உள்ளிழுத்துக்கொள்ளும் ஆமையைப் போல் ஐம்புலனும் தன் வயப்பட்டு அடங்கி யொடுங்கி மன மானது (ஆன்மாபிமுகமாகத்) தன்னுட்டத்திற் குவிந்து நிற்பதே (ஆன்ம நிஷ்டையே) சுகம் என்பதாம்.

விளக்கக் குறிப்பு:— அகப்படுக்கும் - உள்ளே இழுத்துக் கொள்ளும். அகம் நோக்கி— 'நான்' என்ற தன் இருப்புணர்வை நாடி. மடங்கி - முன்பு சென்ற முன்னிலேப்படர்க்கைப் பொருள்களே நாடும் புறமுகத்துக்கு எதிர்த் திசையில் தன்னே நோக்கித் திரும்பி.

'உய்ந்து போவார்க்கு உறுதி யுரைக்குங்கால்' என்றதனுல் "நாம் தற்போது கேடுறும் நிலேயில் இருக்கின்ருேமே; எவ்வாறு உய்வோம்?"என்ற அறிவும் அக்கரையும் ஏற்பட்டு அழிவினின்றும் நீங்கி அமரத்துவம் அடைய வேண்டும் என்ற விருப்பம் (பக்தி) எழுந்துள்ள சித்தம் உடையவர்களான முமுக்ஷுக்களுக்கு மட்டுமே இந்த உளவு உறுதியாகக் கூறப் பட்டது. அவ்வாறின்றி, பகிர் முகப்பட்ட நோக்கங்களும் கர்மங்களும் உடையார்க்கு இது கசப்பாகவும் தவருன முடிவாகவும் தோன்றுவதில் வியப்பொன்று மில்லே. ஆதலால் அவர்களே விலக்கி 'உய்ந்து போவார்க்கு' மட்டும் இவ் வுறுதி கூறப் பட்டதாகக் கொள்க.

292. (என்றும் எவர்க்கும் இடை விடாது அறியப்பட்ட) விளக்கமாய் இருப்பது 'நான் இருக்கிறேன்' என்ற தனது சத்திய இயல்பான இருப்புணர்வே. ஆகையால் அத் தன் விளக்கமே உறுதிப் பொருள் (கடவுள்) என்று உள்ளத்தில் திண்ணம் அடைவாயாக. சந்தேக விபரீதக் குற்றங்க ளற்று மேற் கூறிய உறுதியின்படி உண்மையான கடவுளே ஒரு தன் மய வடிவாகக் கண்டு அனுபவித்தால் பேரின்ப வெள்ளம் பெருக் கெடுக்கும்.

293. எண்ணற்ற விதங்களிற் காணப்படும் இப் பிரபஞ்சத் தோற்றத்துள் ஒரு சிறு பொருளுங்கூடத் தவருமல், பார்ப் பவனுக்கு அன்னிய மானதோர் இருப்பு இல்லாததான வெறும் சொப்பனமே என்று துணிந்து, மனக் கற்பனேயான இந்தப் பிரபஞ்சத்தின் நாமரூபத்தை நாடாமல் (சத்) சிதானந்தமான ஆன்மாவையே நாடி நில்.

விளக்கக் குறிப்பு:— அறிவுருவாம் ஏமம் - சித்ரூப ஆனந்தம், சிதானந்தம். 'பற்பலவுட் சிற்சிலவும்' — அளவிறந்த இத் தோற்றங்களில் ஒரு சிறு தோற்றமும் (காட்சிப் பொருளுங்) கூட விடாமல் யாவும். 'சிலவும்' என்று உம்மை கொடுத்ததால் 'அனைத்தும்' என்று பொருள். பார்ப்பவனுகிய ஜீவனின் உண்மைக்கு வேறுன உண்மை உடையதல்ல என்று கூறியதால், ஜீவனும் அச் சொப்பன உலகத் தோற்றத்தில் ஒருவனே என்பது விளங்குகின்றது. 'நாம ரூபத் துலகை நாடாமல்' என்றதால் 'உலகை நாம ரூபமாக நாடாதே' என்பது பெறப்பட்டது. நாம ரூபத்து உலகைப் பாராமல் சச்சிதானந்த உலகை-உலகல்லா உலகை — ஆன்மாவைப் பார் என்பது உபதேசம். சத்து, சித்து, ஆனந்தம், நாமம், ரூபம் என்ற ஐந்து அம்சங்களுள் முதல் மூன்றும் பிரம்மத்தின் சத்யாம்சங்களும் பின் இரண்டும் மித்யாம்சங்களு மாகையால் நாமரூபத் திருஷ்டியை நீக்கி நோக்கினுல் உலகம் சச்சி தானந்தப் பிரம்மமே யாகும் என்க.

294. தன்மை ஒருமையாய் 'நான்' என்று எப்போதும் இருந்து விளங்குவதும் பிரிவுப் படுத்த முடியாததுமான உபாதி யற்ற தன் ஆன்ம சொரூப நாட்டம் ஒன்றுதான், அஞ்ஞானப் பிராந்தியால் தோன்றிக் காணப்படும் உடலையே 'நான்' என்று அபிமானித் துழலும் ஜீவர்களுக்கு அவர்களது முடிவற்ற பிறவிக் கடலைத் தாண்டுவித்து முக்திக்கரை சேர்க்குங் கப்ப லாகும்.

295. அனுதி காலந் தொட்டு என்றென்றுமே தனக்கு அன்னியமான பொருள் ஒன்று மில்லாத ஆன்ம சொரூபமாகத் தன்னுள் விளங்கும் சுத்த சத்சித்து ஒன்றுதான் உண்மைப் பொருள் என் றறிந்தா லல்லாமல், ஜீவர்களுக்குப் பொய் மயக்கம் என்றும் நீங்கவே நீங்காது.

296. உலக விஷயங்களிலேயே ஓயாது உழலும் விக்ஷேப ஆவரண வடிவான மன மயக்கத்தையொழித்து, தோற்ற வொடுக்க (உதயாஸ்தமன)ச் சலன ரூபம் உள்ள அகந்தை செத்து, உலக வாசனை முற்றும் ஒழிந்து, சுத்த அறிவு மாத்திரமான சிவமயமாகத் தெளிந்து விளங்குவாயாக.

297. தகிக்கின்ற அனுத்ம விஷயங்களான பாலைவனத்தின் வெறும் மண்ணைத் தின்று அலையாதே. நீங்காது நிலைத்திருக்குங் குளிர் நிழலாய் விரிந்துள்ள சாந்தி நிலையமாகிய இதய வீட்டினுள் வந்து இங்குள்ள ஆன்மபோக மாகிய விருந்தை உண்ணுக.

விளக்கக் குறிப்பு:— "மண்ணைத் தின்னாதே; விருந்தை உண்" என்று உபதேசிக்கின்றார். 'அடைந்தவர் விடய மண்தின் றலைவரோ பசியிலாரே' என்ற கைவல்ய நவநீத வாசகத்தை இங்கு நினைவு கூர்க. உலக விஷயபோகம் வெறும் மண் போன்றது ; அழல் போன்றது ; அனாத்மாவாகியது. வெய்யிலில் அலைந்து மண் தின்னாமல், இதயமாம் நிழலில் வந்தமர்ந்து ஆத்மானந்த போகம் அனுபவி என்கிறார். இதய வீடோ பரந்தது, குளிர்ந்த நிழலுடையது, சாந்தி யொளிர்வது என்று கூறப்படுகிறது.

298. உள்ளத்திற் பக்தி பொங்க, பரமன் பாதத்தையே சரணாக அடைந்த புத்தியோடு தவமிருக்கும் சாதகனே, அமானுஷிய சக்தியான அணிமாவாதி அஷ்டசித்திகளின் மேற் பேராசை பிடித்தவனாக நீ மாறி விடாமல், அவ் வாசை அறவே நீங்கித் தெளிந்து, சதாசிவமாம் முக்திப் பேரின்பத்தையே அடைந்து அனுபவிப்பாயாக.

விளக்கக் குறிப்பு:— பரமன் பாதத்திற் பக்தியும் ஆத்ம சமர்ப்பண புத்தியும் மேற்கொண்டு சாதனையில் ஈடுபடுபவர், பிராரப்த வசமாக இடையே நேரும் அணிமா முதலிய அஷ்ட சித்திகளில் ஆசை வைக்கக் கூடாது என்று எச்சரிக்கின்றார். சித்திகளாற் கிடைப்பது புகழ், பொன், பெண் ஆகிய சிற்றின்பமே. இம் மூவாசைகளையும் விட்டு, சித்திநாட்டம் தீர்ந்து, முக்திப் பேரின்பத்தையே தாம் மேற்கொண்ட தவத்தின் பயனாகப் பெறும்படி அறிவுறுத்துகின்றார். சதாசிவமாம் முக்தி - சதாசிவ சாக்ஷாத்காரமே முக்தி யென்பதும், ஆன்மானு பூதியே அச் சிவம் என்பதும் பெறப்பட்டது. 'அண்ணாமலை என் ஆன்மா' என்று ஸ்ரீ பகவான் கூறியவாறு அரன், சிவன், சதாசிவம், சிவன்கழல், குருபதம் என்று வரும் பதங்கள் பலவும் ஆன்மாவையே குறிப்பனவாம்.

299. மனத்தின் நினைப்பு மறப்புகளுக்கு ஆளாகாமல் அருளின் கவர்ச்சிக்கு வசப்பட்டு, நீ அழிவற்ற மெய்யாய் தூய ஞானப் பெரும் பிழம்பாகிய சிவபிரானின் ஒளி பொருந்திய பாதங்களிலேயே ரமித்திரு.

விளக்கக் குறிப்பு:— 'சிவன் கழல்' என்பது 'அனர்த்தம் அறு சத்திய ஞான சொரூபப் பிழம்பாம் ஆன்மாவே'. அதாவது சிவபதமே சிவபாதம் என்றவாறு.

300. மயக்க வடிவான அகந்தையாம் மனிதன் இறைவன் திருவருளையே துணையாகத் தன்முன் வைத்துக்கொண்டு தன் னடக்கம் பயின்றா லன்றி, அச்சுறுத்தும் ஜனன மரணக் கலக்கத்தை ஒருக்காலும் நீக்கிக் கொள்ள மாட்டான். ஏனெ

னில் பூர்வ கர்மங்களால் ஏற்பட்ட வாசனைகளின் வலிமை வெறும் மனிதனின் சக்தியால் மட்டும் வெற்றி கொள்ளப்பட முடியாதது என்பதாம்.

## ௫௫. உச்சிட்டத் திறன்

301. ஆன்ம சித்தனை சற்குரு தன் அனுபவமாகச் சீடனுக்கு அருள்கின்ற ஞானோபதேச மொழியே சற்குரு சாப்பிட்டுச் சேஷமான உச்சிட்ட மாகும். அதைக் கேட்கும் சீடன் பேச்சு மூச்சற்று மனமும் எழ இடம் தராமல் ஆன்ம சொரூபத்தில் நிஷ்டாபரனாக நிற்றலே அவ் வுச்சிட்டத்தைத் தான் மகிழ்வோடு உட்கொள்வ தாகும் என்றறிக.

விளக்கக் குறிப்பு:— தேசு ஆர்மொழி - ஞானவிளக்கம் பொருந்திய மொழி என்றும் ஞானத்தை விளக்கும் மொழி என்றும் கொள்ளலாம்.

302. முழுமுதற் பொருளாகிய மோன குருவுக்குத் தன் தேகாபிமானத்தைச் சமர்ப்பித்த பின் (பிரசாதமாய்) அறிவொளியாய் மிஞ்சிய ஆன்மவுணர்வை இதயத்தில் அனுபவிப்பதே சற்குருவின் பிரசாதத்தைச் சீடன் உட்கொள்வதாகும்.

விளக்கக் குறிப்பு:— "பானமாய் எஞ்சிய தன்னை" - 'நான் இன்னாராக இருக்கிறேன்' என்ற தன் அகங்கார உணர்வில் 'இன்னாராக' என்ற பகுதியே தேகாபிமானப் பகுதியாகும். அது சற்குருவிற்குச் சமர்ப்பிக்கப்பட்ட பிறகு மிஞ்சி நிற்பது 'நான் இருக்கிறேன்' என்ற சத்தும் சித்துமே. இனி, இது, மேலும் கொடுக்கவோ கொள்ளவோ இயலாத ஏக ஆத்மப் பிரஜ்ஞை. 'எஞ்சிய பானம்' என்றது இதனையே. விஞ்சும் உச்சிட்டம் இசைவு - யாவற்றிலும் சிறந்த பிரசாதத்தை உண்ணல்.

303. சத்திலேயே (ஆன்மாவிலேயே) அனுசந்தானித்து (ஆசிரயித்து) வாழும் ஆத்ம ஞானிகள் இப்பூவுலகில் வாழ்ந்திருப்பதே இவ் வுலகிற்குக் கிடைத்துள்ள ஈசுவரப் பிரசாதம் என்று ஆன்றோர் கூறுவர். அதுவே (ஞானிகளின் வாழ்வே) பாவங்களை யெல்லாம் நீக்கவல்ல மகா பரிசுத்தமான உச்சிஷ்டம் ஆகும்.

விளக்கக் குறிப்பு:— ஜீவன் முக்தர்களான ஞானிகள் இவ்வுலகில் வாழக் கிடைப்பதே இவ்வுலகம் பெற்ற ஈசுவரப்பிரசாத மாகும். அகந்தையை இறைவன் உண்டொழித்த பின் மிஞ்சுவது பரம பவித்திரமான ஆன்மசொருப மாதலால் ஆன்மஞானிகளே ஈசுவரப் பிரசாதம் ஆவர்.

பரம பாவனப் பிரசாதத்தால் பாவமெல்லாம் நீங்குவது போலவே ஞானிகளின் வெறும் இருப்பே—சாந்நித்தியமே—(அவர்கள் பேசவோ, உபதேசிக்கவோ, எழுதவோ கூட வேண்டியதில்லை) பூவுலகின் பாவங்க ளனைத்தையும் நீக்கி விடும் என்பதாம்.

## ௫௬. குரு வழிபாட்டுத் திறன்

304. ஆன்ம உரிமையோடு தன்னை ஆட்கொண்ட சற்குருவுக்கு அடிமையுற்ற உத்தம சீடர் ஆற்றும் வழிபாடு முதலிய மரியாதைகள், நன்கு ஆராயுமிடத்து, மனைவி தன் கணவனுக்குச் செய்யும் மரியாதைகளைப் போல வெளி முகத்தில் மட்டுமே யாகும். (அக நோக்கில் இருமையற்ற ஐக்கியத்தால் துவிதமாம் மரியாதை காட்ட இயலாத தொன்றாகும்).

305. குற்ற மற்ற மெய்ஞ்ஞானச் சுடராகிய குருமூர்த்தியின் பாதமே தனக்குச் சகலமு மாம் என்று அவர் பாதத்தைப் பற்றிக் கிடக்கும் தன்மை யுடைய சீடர்க்கு அந்த குரு பக்தியால் வருகின்ற பரம னருளாற் சித்தம் தெளிந்து மெய்ஞ்ஞான சித்தி யுண்டாகும்.

306. சற்குரு பாதமே தமக்குக் கதியாகக் கொண்டு ஆன்ம சமர்ப்பணம் செய்து வாழும் பாக்கியம் பெற்ற சற்சீடர்கட்குப் பக்தி மேன்மேலும் ஓங்கி வளரும். அப்படி ஏற்படும் மெய்யான சிவ (குரு) பக்தியே சிவ (ஆன்ம) ஞானமாகி, மற்றப் பொய் யுலகப் பொருள்களின்மேல் உள்ள எல்லா ஆசைகளையும் நன்றாய்ச் சுட்டெரித்து அறவே அழித்துவிடும்.

307. கருணைக் கடலான கண்ணபிரான் நம் அனைவர்க்கும் அப் பெருமானுக்கும் இடையில் அர்ச்சுனனை ஆடுஉ முன்னிலையாக வைத்துக் கொண்டு (அர்ச்சுனனுக்குக் கூறும் முகமாய் நம்மை) 'நீ என்னை அடைவா யாகில் பாவ புண்ணியம் எனப்படும் இரு வினைகளின் பந்தத்தினின்றும் உன்னை நான் விடுதலை செய்வேன் (மோக்ஷமளிப்பேன்), அறிக' என்று உறுதி கூறித் தன்னையே (ஆன்மாவையே) குறிக்கோளாக அடையச் சொல்கின்றான்.

308. சற்குருவின் பாதத்தையே வணங்கும் வழிபாடாகிய குருபக்தியே உண்மை மந்திரமாகி, எழும்பும் வாசனைகள்

யாவற்றையும் மாய்த்து, மாயையின் மயக்கத்தால் அச்சுறுத்த முடியாத பிரம்ம ஞானத்தையும் ஒருவனுக்கு விளைவிக்கும். ஆகையால் குருபக்தியையே சிறந்த மந்திரமாகக் கொள்வாயாக.

309. நமது ஞானகுருவாக மனித வடி வெடுத்து வந்து நம்மை யாட்கொண்ட பரம சிவபிரானுக்குத் திரிகரண சுத்தி யோடு குற்றேவல்களும் பூஜை முதலிய சேவைகளும் செய்தாலுங் கூட, நம் உயிருக்குத் தலைவனான (ஜீவனுக்கு உயிரளிக்கும் ஆன்மாவான) அப் பரமான்மாவிடம் அகந்தை யற்று ஒன்று படும் (ஜீவப்ரஹ்ம, அல்லது பிரஹ்மாத்ம) ஐக்கியமே சிறந்த வழி பாடாக ஆற்றக் கடவதாம்.

விளக்கக் குறிப்பு:— கருவி கரணங்களால் இயற்றப்படும் ஏனைய வழிபாடுகள் எவையும் ஜீவப்ரஹ்மைக்கியமான வழிபாட்டைப் போல எப்போதும் இடையறாது ஆற்ற முடியாதன வாகும். ஆதலின் ஐக்கியமே, யாவற்றிலும் சிறந்த வழிபாடு எனப்பட்டது. "யானற் றியல்வது தேரின்......." எனவரும் உபதேச வுந்தியாரின் 30வது உபதேசம் இங்கு ஒத்துணரத்தக்கது.

310. மூட அகங்கார மாகிய பெரும் மயக்க நிலையானது, (குரு சொரூபமும் சிவ சொரூபமு மான ஆன்மசொரூப அத் துவிதச் செம்பொருளை) சீடன் - குரு எனவும், ஜீவன் - சிவன் எனவும் இருமை தோன்றும்படிக் காணவைக்கும் பேதபுத்தியை உண்டாக்குகின்றது. அத்தகைய பேதபுத்தி சிறிதும் உதிக்காத மோன நிலை யுறுவதே குருவுக்குச் சீடன் அறிவொடும் பொருந்த ஆற்றும் நமஸ்காரத்தின் பொருளாகும்.

311. இறைவனான ஞான குருவின் அருட் போதமாம் ஞானப் பெருந்தீயால் 'யான் சீடன் (இவர் குரு)' என்னும் இரட்டை யுணர்வு அடியோ டழிந்து வாசனையற்ற பரமோனம் விளங்கும் நிஷ்டையே ஞான குருவிற் காற்றும் உத்தம பூசனை யாகும்.

312. (அஞ்ஞானத்தால்) ஏற்றுக் கொள்ளப்பட்ட (இந்த அகந்தையாகிற்) நான் யார் என்று உள்ளே தக்கவாறு செய்யப் படும் ஆன்ம விசாரத்தால் எழுந்ததும், பூரணமாக அனுபவிக்கப் படுவதுமான குருபோத நிலையில் ஸ்திர நிஷ்டை யுறுவதால், தான் சீடன் என்ற பொய்யறிவு அறவே யழிந்து விளங்குவதே உத்தம சீடர் குருவுக்குச் செய்யும் பூஜையாம்.

விளக்கக் குறிப்பு:— பூரண ஆன்மானுபவ நிலையில் தானன்றி அன்னியம் ஒன்றும் இல்லாததாலும், அவ்வான்மாவுக்கு அன்னிய மாக அகங்கார வடிவ 'நான்' ஒன்று இல்லாததாலும் தனக்கென்று ஓர் வியக்தித்துவம் அனுபவ மாவதில்லை. ஆகையால் 'தான் சீடன்' என்ற உபாதி உணர்வு, அங்கு உண்மையாவதில்லை. எனவே அதைப் ''பொய்ச் சீடபோதம்'' என்ருர். ''பந்த வீடற்ற பரசுகம்.... இந்த நிலை நிற்றல் உந்தீபற; இறை பணி நிற்றலாம் உந்தீபற'' என வரும் உபதேச வுந்தியார் 29வது உபதேசம் ஈண்டு நோக்கத்தக்கது.

313. குருவடிவம் கொண்டு இங்கு வந்துள்ளது மெய்ஞ் ஞான சூரியனுய் எங்கும் வியாபித்த பரவெளியே யாகையால், அந்தப் பரவெளியில் தனக்கோர் ஜீவபோதம் எழாத சிறந்த இயல்புநிலையில் ஒன்றி நிற்கும் நிஷ்டையே செய்யத் தக்க குரு தேவனது பூஜையாகும் என்று தெளிக.

314. 'நான்' என்றும் 'இது' என்றும் ஒன்றை யொன்று அவாவி நிற்கும் தோற்றமாகிய இப் பிரபஞ்ச மெல்லாம் தனது ஞானகுருவின் சொரூபமாகவே சிஷ்டாசார முறையாற் காண் கின்ற 'குருபோதம்' என்னும் கடையிலாக் காட்சியே (ஞானப் பார்வையே) சற்சீடராஞேர் சற்குருவுக்கு உண்மையிற் செய்யத் தக்க குரு பூஜையாகும்.

விளக்கக் குறிப்பு:— அறிபடும் இப்பிரபஞ்சம் முழுவதும் 'அஹம், இதம்' என்னும் இரட்டையுள் அடங்கி விடுவதால் "அகமோ டிதமாகக் கோத்த வடிவு" என்ருர். சீவ போதம் அழிந்த நிலையை வழக்கமாய் சிவ போதம் என்று கூறுவது போல, சீட போதங் கெட்ட சுத்த நிலையே குருபோதம் என்று கூறிஞர். சச்சீடர் - மெய்ச்சீடர்.

315. 'தேக உருவே நான்' என்னும் அகந்தையுணர் வாகிய பனிக்கட்டி, ஆனந்தமே வடிவாய் இருந்து விளங்கும் (சத் சித் ஆனந்த) ஆன்மானுபூதியாகிய குருபோத சமுத்திரத் தில் (இரண்டற்றுக்) கரைந்து விடுவதே உத்தமமான குரு பூஜை என்றறிக.

316. குருவின் அகண்டாகார நிறைவைப் பரிச்சின்ன மாக்கும் (அநேக ஜீவ ராசிகளாய்க் கூறிட்டுக் காணும்) அகங் கார தோஷ திருஷ்டி உண்டாகா திருப்பதே வெள்ளிடை மலை யென விளங்கும் குருவின் சிறப்பான பூஜையாகும்.

317. உடல், பொருள், ஆவி மூன்றையும் சற்குருவுக்குச் சமர்ப்பித்த பின் அவைகளை 'நான், எனது' என்று மீண்டும் அபிமானிப்பதாகிய 'கொடுத்ததை மீண்டும் அபகரிக்கும் (தத் தாபகாரம்)' குற்றம் தவிர்வதுதான் பரிசுத்தமான குரு பூஜை யாகும் என்றறிக.

விளக்கக் குறிப்பு:— ஒருவன் உடலை 'நான்' என்றும் 'என்னுடைய உடல்' என்றும் உணரும் வரையில் அவன் அவற்றை ஆண்டவனுக்கோ குருவுக்கோ அர்ப்பணித்தவ ஞகான்; அல்லது ஒரு முறை அர்ப்பணித்ததை மீண்டும் திருடிக் கொண்டவன் (தத்தாபகாரம் செய்தவன்) ஆவான் என்பதே கருத்து. எனவே அகந்தை யழிவே சம்பூரண சமர்ப்பணசித்தி யென்பது பெறப்பட்டது.

318. எரிகின்ற மூவாசைத் தீயை (தாபத்திரயத்தை) அணையச் செய்து ஆட்கொண்ட சற்குருவின் பாத நிழலை (ஆன்மாவை) விட்டு நீங்கி, தோற்ற மாத்திரமாய்க் காணப்படும் ஐம்புல இன்பங்க ளாகிய, வெப்பமுள்ள, கொடிய, பாலைவனத் தில் மீண்டும் அலையக் கிளம்பும் மனச்சேட்டை அறவே நீங்கி ஆன்மாவிலேயே பதிந்து (ஆன்ம நிட்டையில்) இருப்பதே குருவின் இரு பாத மலர்களுக்கும் செய்யும் நற் பூசனையாகும்.

319. மன வடிவில் இயங்கும் மயலுணர்வான அகந்தையை 'நான் யார்?' எனத் தேடுவதால் இதயத்துள் மூழ்கி ஒடுங்குவது ஒன்றேதான் மனோதீதமான (மனத்தைக் கடந்த) மௌன குரு மூர்த்தியின் பாத தாமரைகளை அர்ச்சிப்ப தாகும்.

320. உடல் ஜடமானதா யிருந்துங்கூட சத்சித்தே (சைதன்யமே) போல நடித்துப் பாசாங்கு செய்யும் அகந்தையின் திருஷ்டியான அஞ்ஞான இருட்படலம் நமக்கு உண்டாகாமற் கவனமா யிருப்பதுதான், பராகாசமாக நின்று விளங்கும் சற் குருவின் அழகிய பாத மலர்கட்கு ஏற்ற பூஜை யாகும்.

## ௱எ. குரு மாட்சித் திறன்

321. சகல குற்றங்களும் தீர்ந்து சற்குணங்கள் எல்லாம் வாய்க்கப் பெற்றவஞ யிருந்தாலும், உறவினரையும் தன்னைச் சூழ்ந்திருந்த சுகங்களையும் விட்டுத் துறந்தவஞ யிருந்தாலும், சுருதிகளிற் கூறப்படும் செய்யத்தக்க நியமங்களான தவங்கள்

எல்லாம் செய்திருந்தாலுங்கூட, ஞான குருவை அடையும் வரையில், ஒருவன் அறிவாற்றலால் எவ்வளவு உயர்ந்திருந் தாலும், பேரின்பமான கைவல்யநிலே பெற முடியுமா? (முடியா தென்க).

322. திரிபுடி பேதமற்று, ஏக சொரூபமாய் விளங்கும் சற் குரு நாதனின் திருவருள் அடையப்பெற்ரு லன்றி, உயர்வற உயர்ந்த நன்மையான (பரம புருஷார்த்தமான) மோக்ஷப் பேரின்பப் பெருவாழ்வை அடைந்து சுகித்தல் யார்க்கும் இயலாத தாகும்.

323. உள்ளே 'நான்' என்றும், வெளியே எதிரிற் காணப் படும் ஒவ்வொரு பொருளு மாகவும் இகத்திலும் பரத்திலும் எல்லாக் கால தேசங்களிலும் அளவற்று அகண்டமாய் வியாபித் துள்ள சற்குரு மூர்த்தி தன் மெய்யடியார் உள்ளத்தில் அறி வொளியான தூண்டா மணி விளக்காய் விளங்கும் ஸ்தாணு (ஸ்தம்பம்) ஆவார்.

324. சற்குருவை அணுகி அளவற்ற குரு பக்தி செய்வ தனுல் அவர் பொழிகின்ற அருட்பார்வை ஒன்றையே (குருவருள் ஒன்றை மட்டுமே) தமக்குக் கதியாக நம்பி நிற்கும் அடியவர்கள் இவ் வுலகில் இந்திரனைப் போல (எக் குறையுமற்று) வாழ்வர். அவர்களுக்கு யாதொரு துன்பமுமே இல்லே.

325. கலிதோஷம் அனைத்தும் அழித்து ஆட்கொண்ட சற் குரு தன் மெய்யடியார் உள்ளத்திற் கொலுவீற் றிருக்கும் நிலே, மலே போற் கம்பீரமானது. அந்நிலேயை அனுபவத்திற் கண்ட வர்கள் (தன்னிழப்பால்) உரைக்க வியலார். அதை வியாக்கியா னம் செய்யும் (மதியறிவு மட்டும் பெற்ற) பண்டிதர்கள் அவ் வுண்மை அநுபவத்தைப் பெற்றிலர். இது மெய்யடியார் அனே வரும் அனுபவித் தறிந் துரைத்த சத்திய வசனமாகும்.

326. அகந்தை மயக்க மற்ற சற்குருவின் மாட்சிமிக்கதும் இயல்பானது மான ஆன்ம நிஷ்டை, தன்னே அன்போடு அடுத்த அடியார்களது இதயக் கிரந்தியை இனிதே வேரோடு அறுத் தெறிய வல்ல அரிவா ளாகும்.

விளக்கக் குறிப்பு:— சற்குருவின் சகஜநிட்டையின் ஆற்றல் இத் தகையது என்று இதிற் கூறப்படுகின்றது. வெளித் தோற்றத்தில் அவர் சும்மா விருப்பது போற் காணப்படுவது கொண்டு

சற்குரு தனக்கு அருள்புரியவில்லையே என்று கருதக் கூடாது. அவரது இயல்பான நிஷ்டையே அருள் வடிவ மாகும். அவர் முன் அக நோக்கோடு மன மடங்கி அமர்ந்திருப்பார் எவர்க்குமே இவ்வுண்மை தாமாகப் புலனாகும்.

327. நற்கல்வியின் பயனாக ஞான விசாரத்தை மேற் கொண்டு, புலன்களின் ஆசையால் மனம் புறத்தே நழுவி விடா மல், திடத்தோடு ஆன்ம ஒளி மாத்திரமாய் இதயத்தில் நிலை பெறுதலே மெய்யுபதேசமாகும் என் றுணர்க.

## ௩அ. சாது சங்கத் திறன்

328. அற நெறி இதுவெனக் கண்டு தன்னுள் அடங்கா மலும், வாழ்வின் குறிக்கோ ளாகிய ஆன்ம ஞானத்திற்கான சாதனைகளைக் கடைப்பிடித்து ஒழுகாமலும், உலகியலையே சிந் தித்துப் பேசி விதண்டா வாத மிடும் வீணரை அறிவுள்ள நல்லோர் நெருங்க மாட்டார்கள்.

329. ஓயாமல் வாயாற் பேசி, மனத்துள் தெளிவற்றிருக்கும் பித்தர்களிடம் (ஞானானுபவ மற்ற பண்டிதர்களின் கூட்டத்தை) நட்புக் கொள்வதால் பல பெருங் கேடுகள் விளையும். மனமிறந்து சுத்த மோனம் விளங்கப் பெற்ற ஞானிகளின் நட்பே உத்தம நட்பாகும் (சற்சங்கமாகும்) என்றறிக.

330. மனமே! தகாத அழிம்புகளையே நியாயம் போற் பேசி, செல்லத் தகாத தீய வழிகளிற் செல்லும் கீழ்மக்களோடு (வினை வசமாய் இத்தனைக் காலமாக) ஏற்பட்டிருந்த தொடர்பை உடனே அறவே விலக்கித் தள்ளிவிட்டு, நீ இனிமேல், சஞ் சலங்கள் ஏதுமற்ற சாந்த ஞான நிலையில் நிற்கும் பெரியோர் களுடன் சேர்ந்து வாழ்வாயாக.

331. சொரூப நிஷ்டையினின்றும் நழுவிய பிரமாதத்தால் தோன்றும் பொய்யான, புறமுக, விஷய இன்பங்களின் களி யாட்டத்தையே (விருப்பத்தையே) அடிப்படையாகக் கொண்டு சகல துர்க்குணங்களும் முளைப்பதால், அந்தப் புறவின்ப வெறி மயக்கம் சேர்ந்த அகந்தையானது அடியோடு நாசமான மெய்ஞ் ஞான உபசாந்த நிலையே எல்லாவித சற்குணங்களும் ஒருங்கு சேர்ந்து நிறைந்த நிலையாகும்.

332. குற்றமற்ற ஆத்ம ஞானிகளே சற்குண முடையவர் களாவர். ஞானமற்ற மற்றவர் இழி குணத்தவர்களே. ஆகை யால் உலக மயலாகிய பொய் நீங்கி ஆன்ம நிலேயில் விளங்கும் ஞானிகளாகிய அப் புண்ணியர்களேச் சேர்ந்துதான் நாம் உய்வு பெற வேண்டும் என்றறிக.

## ருக. அடியார் மாட்சித் திறன்

333. அழிவற்ற ஆன்ம ஞானனுபூதி மாட்சியால் பரப் பிரம்ம மாகவே பரிபூரண நிலேயில் திளேத்து விளங்கும் சற்குரு வின் அருட் பார்வைக்கு இலக்காகும்படியான முற்றவத்தைச் செய்துள்ளோர் (குருபக்தி யுடையோர்) பெருமை உரை கடந்தது என்றறிக.

334. சிவபிரான் தனது அருளொளி பெற்ற அடியார் களோடு அன்புறவு கொண்டு அளவளாவி மகிழ்வதற்காக மிக்க குதூகலம் உடையவராய், தனது தெய்வ வடிவை மறைத்து, வேறோர் மனித உருவை (சற்குரு திருமேனியை) மேற்கொண்ட வராய், திடபக்தியுடைய அவ் வடியார் திருக்கூட்டத்திற் சேர்ந்து திருவிளேயாடல் செய்பவ ராகின்றார்.

விளக்கக் குறிப்பு:— சற்குரு வேடத்திற் காணப்படுபவர் சாக்ஷாத் சிவபிரானே என்று குறிப்பாலுணர்த்தப் பட்டது.

335. அடியார்களது பெருமையை அளவுக் குட்படுத்தவே முடியாது. அடியவர்கள் சிவனினும் விஷ்ணுவினும் பெரியவர்க ளாவர்! சிவனும் விஷ்ணுவும் தம் மெய்யடியார்களுக்குத் தாம் அடிமை பூண்டவர்கள் போல (பல சந்தர்ப்பங்களிற்) குற்றேவல் களும் செய்வோ ராகின்றனர்! வேதங்கள் புகழ்வதும் இத் தகைய மெய்யடியார்களின் பெருமையையே தான் என்றறிக.

## கூ0. பிரம்ம விச்சைத் திறன்

336. காணப்படும் உலகைக் காணுவதை விட்டு, அவ் வுலகக் காட்சியைக் காணும் தான் யார் என்று விசாரித்துத் தன்னேக் காணப் பயில்வதே சாதகர்களாற் போற்றிக் கற்கத் தக்கப் பிரம்ம வித்தையாகும் என்று கிடைத்தற்கரிய ஆன்ம தரிசனம் பெற்ற பெரியோர்கள் கூறுவர்.

337. கானல் நீரைப் போற் பொய்யாகக் காணப்படும் பொருளாகிய இவ் வுலகமும், இவ் வுலகத்தைக் காண்பானுகிய மனமும், கண்களின் மூலம் பிரகாசமாக நிகழும் இக்காட்சியும் (காணப்படு பொருள், காண்பான், காட்சி யாகிய முப்புடியும்) ஆகப் பரிணமிக்கும் தேகாத்மபுத்தி வடிவ ஞன ஜீவனே மீதி யின்றி (ஆன்ம விசாரத் தீயாற்) சுட்டெரித்த பின் மிஞ்சி யிருப்ப தான ஆன்மாவை உணர்வதே (வித்தைகளுட் சிறந்த) பிரம்ம வித்தை யாகும். மற்ற எவையும் வித்தைகளே யல்ல.

**௬௧. சமய வுண்மைத் திறன்**

338. (காண்பானுகிய) தான் இல்லாமல் எப்பொருளும் இருப்புக் கொள்ள முடியாதபடி விளங்கும் தன் இருப்பின் மெய் யியல்பை நோக்கி, "இருக்கும் நான் யார்?" என்று தம்முள் ளேயே சோதித்துப் பார்க்கும் தற்கவனம் (ஆத்ம விசாரம்) ஒன்றுதான் உயிர்களுக்கு உய்வு காட்டும் பல மதங்களின் போதனைக ளுள்ளும் உயிர் நாடியாக ஊடுருவி யுள்ள உண்மை என்றறிக.

339. மணிகள் பலவற் றுள்ளும் செல்லும் சரடு (நூல்) பல வாகாமல் ஒன்றே யாவது போல, அளவற்ற உயிரினங்கள் யாவற்றி னுள்ளும் அன்னியப் பொருள் ஆகாமல் தானேயாக '**நான்**' என்று பிரகாசிக்கும் அறிவொளியே கடவுள். மேலும் அவ்வாறே, எல்லா மதங்களி னுள்ளும் விளங்குவதும் பேதமற்ற ஆன்ம சொரூபமான அவ்வொரே கடவுளே யாகும்.

விளக்கக் குறிப்பு:— "மணிகளிற் சரடென.........நீதான்" என வரும் அருணசல அஷ்டகம் 5வது பாடல் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

340. பலவாகிய அகல்களில் ஏற்றப்பட்ட ஜ்வாலை யொன்றே, பல தீபங்களாகக் காணப்படுதல் போல, பல வேறு நிலையிலுள்ள உபாதிகளைப் பற்றிக்கொண்டு, தானுகிய ஆன்மா ஒன்றே பல உயிர்உலகங்களாகக் காணப்படுகின்றது.

341. இதயத்தில் அதீதமாய் இருக்கும் ஆன்ம சொரூ பத்தை வெள்ளிடை மலையெனத் தெளிவாய்க் காட்டித்தரும் ஒப்பற்ற ஓர் சொல் (மகாவாக்கியம்) மதங்கள் ஒவ்வொன்றிலும்

இல்லையே யானால், இந்த மதங்களெல்லாம் பரம்பொருளை ஆராய் வதாகத் தத்தம் வேதங்களின் மூலம் கோஷமிடும் தத்துவ, தர்க்க வாதங்க ளெல்லாம் பயனற்ற வெறும் சந்தைக் கூச்சலுக்குச் சமானமாகவே முடியும் என்க.

விளக்கக் குறிப்பு:— வெள்ளிடையில் இமயமென - வெட்ட வெளியில் உள்ள மலை மறைப்பின்றி நன்கு காணப்படுவது போல. ஓர் சொல் - மகாவாக்கியம்.

உண்மையான மதங்கள் ஒவ்வொன்றிலும் பரம்பொருளை எளிதில் விளக்கும் ஒப்பற்ற மகாவாக்கியம் ஒன்றுவது இருந்தே தீரும் என்பது மேலே கூறப்படுகிறது. அவற்றிற்கு உதாரணங்களாக ஸ்ரீ பகவான் கூறியது: (1) இந்து மதத்தில் "தத்வமஸி", "அஹம் பிரம்மாஸ்மி" முதலியன (2) இஸ்லாம் மதத்தில் "அனல்ஹக்" எனப்படுவது (3) கிறித்துவ மதத்தில் "I am that I am—நான் நானே" எனப்படுவது போன்ற சொற்றொடர்கள் தன்மை யொருமையின் தத்துவமே கடவுள் என்பதை மலையிலக்காகக் காட்டி நிற்கின்றன என்பதாம்.

342. மக்களின் மனப்பரிபாக வேறுபாடுகளை அடிப்படை யாகக் கொண்டே வேறுபட்ட நெறிகளைப் புகட்டும் பலவேறு சமயங்கள் உண்டாகி யிருக்கின்றன. ஆதலால் (அவ்வப் பரி பாக முதிர்ச்சிக்கு ஏற்றபடி மக்கள்) போற்றி அனுஷ்டிக்க வேண்டிய அப் பல்வேறு மதங்களுள் எவ் வொன்றையும் வெறுப் புணர்ச்சி யற்று நோக்கும் சம புத்தி அடையப் பெறுவதுதான் அறிவுடைமை (விவேகம்) ஆகும்.

## கூ௨. கடையிலாக் காட்சித் திறன்

343. ஆன்ம விசாரத்தால் உண்முகப்பட்டு, இதயத்துள் மூழ்கி ஆன்ம சொரூபத்தை அனுபவித் தறிந்த ஞானிகளின் திருஷ்டியில், தனக்கு அன்னியமாக அவர்கள் அறிந்து கொள்வதாய் எப் பொருளுமே இல்லை. ஏனெனில், உருவமாகிய தேகமே 'நான்' என்று கொள்ளும் அஞ்ஞானம் அடியோ டழிந்துபோய் அவர்கள் கேவல மெய்யறிவு மயமாய், அருவமாய், விளங்குவதால் என்க.

விளக்கக் குறிப்பு:— 'கண் எப்படியோ காட்சியும் அப்படியே' என்ற நியாயப்படி, காண்பவனாகிய நாம் நம்மை உடலுருவமாகவே கருதும் வரை நம்மாற் காணப்படுவனவும் (உலகமும் கடவுளும்) நாம ரூபங்களாகவும், அவை நமக்கு அன்னியப் பொருள்களாகவுமே காணப்படும். நாம் இவ் வுருவ உடலல்ல என்றும் உருவற்ற ஆன்மாவே நாம் என்றும் அனுபவமாகும் பொழுது, இதுவரை நம்மெதிரே அன்னியமாய்க் காணப்பட்ட நாமரூபப் பிரபஞ்சம்

மறைந்து, ஒன்றுகிய தான் மட்டும் பெயர் வடிவற்று விளங்குவ தாகும். ஆகவே, அத்தகைய காட்சியினருக்கு அறிபடுபொருள் ஒன்றுமே இராது எனப்பட்டது.

344. நடமாடுங் கோயிலான இவ் வுடம்பினுள் உத்தமனே (கடவுளை) விசாரித்து, ஐயந்திரிபு அறக் கண்டு தெளிந்த ஞானி கள், ஆச்சரியம் மிகுந்த இவ் வுலகமாகிய பெருங்கோயிலிலும் அக் கடவுளே (ஆன்மாவே) நின்று விளங்குவதைக் காண்பர்.

விளக்கக் குறிப்பு:— ஜீவனே உடலுக்கு உயிராவதுபோல, ஜீவ னுக்கு உயிர் கடவுளே (ஆன்மாவே) யாகின்ற ராதலால் ஜீவன் அல்லது உயிர் எனப்படுங் கோயிலினுள் உறைபவர் ஆன்மா வாம் ஈசன் எனப்பட்டது. 'உயிர்க் கோயிலுள்ளே உடை யானைத் தேடல்' என்றது 'அகந்தை யாவது எது?' என்று தேடும் ஆத்ம விசாரமேயாம்.

உலகப் பெருங் கோயில்' என்ற சொற்றொடருக்கு 'உலகமாகிய பெருங்கோயில்' என்றும் 'வியக்கும் உலகப் பெருங் கோயில்' என்றதால் 'நாட்டில் பல க்ஷேத்திரங்களில் கோபுரங்களாற் சிறக்க நிர்மாணிக்கப்பட்டிருக்கும் தேவால யங்களில் உள்ள விக்கிரகங்களில்' என்றும் பொருள் கொள்ளலாம். ஸ்ரீ முருகனர் கூறியதாவது : யாவருந் தம் மியல்பு பற்றியே உலகை ஓர்வ ராதலின் பரசொரூபத்தை ஐயந்திரிபறத் தம்முள் ஆய்ந்தறியாதார் அதனைப் புறத்திலுங் காணமாட்டா ரென்பதாம்.

345. உயிருக்கு உயிராக ஈசன் இருந்து விளங்கும் உண் மையைத் தெளிவா யறிந்த ஞானிகளுக்கு, மற்றவர்கள் இகழ்ந்து ஒதுக்கும் ஒரு சிறு புழுவின் முன்னிலைகூட விரும்பத் தக்கதாய் விளங்கும் கடவுள் சந்நிதியாகவே தோன்றும்.

346. திருவருளாகிய ஆன்ம சொரூபமே தாமாய் நின்று விளங்கும் ஞானிகட்கு அஞ்ஞான வடிவமேயான மனம் நாச மடையும். மெய்ப்பொருளே வடிவாய் விளங்கும் அன்னரது அனுபூதி நிலையின் உயர் காட்சியில் எல்லாப் பொருளும் எல்லா விடமும் சச்சிதானந்த நிறைவாகவே காணப்படும்.

347. ஊன்கண்ணல் மட்டுங் காண்போருக்கு யாதேனு மொரு ஒளி பொருந்திய வடிவின னுகவும். யோகத்திற் சிறந்தவர் கட்கு அவர்களது இதய கமலத்து வீற்றிருப்பவ னுகவும், வேள்வி செய்யும் அந்தணர்கட்குப் பிரகாசம் பொருந்திய வேள்வித் தீயிலும் மட்டுமே இறைவன் காணப்படுபவ னுகின்றன். ஆனல் அந்தமிலாக் கண்ணுடையாரான ஞானிகட்கு மட்டுமே எங்கும் இறைவன் காணப்படுவான்.

விளக்கக் குறிப்பு:— முதலிற் கூறப்பட்ட மூவகுப்பினரும் காண்பது மனோ பலத்தாற் காணும் கற்பனைத் தரிசனங்களே யாகையால் அவ்வொவ்வோ ரிடத்தன்றி மற்ற இடங்களிற் கடவுட்காட்சி அவர்களுக்குத் துர்லப மாகின்றது. மனோ நாசமடைந்த ஞானி ஒருவனுக்கு மட்டுமே இறைவனின் யதார்த்த உண்மையான காட்சி சித்திப்பதால் அவன் உலகம் அனைத்தும் ஆண்டவனைக் காண வல்லவ னாகின்றான். எண்ணுரு யாவும் இறை யுருவாமென்பதை எண்ணத்தால் எண்ணி வழிபடாமல் இயல்பால் அறிந்து அமைபவன் ஞானி ஒருவனே என்பது உணர்த்தப் பட்டது.

348. தான் இவ் வுடல்வடிவ மல்ல என்று அறவே நீங்கி, துன்பந்தரும் மனம் என்னும் கற்பனையும் நீங்கி, ஏகமாம் சிதாகாச அருள் ஞான மாத்திரமாய் மிஞ்சி நிற்கும் நிலைதான் கடவுளை உண்மையாகவும், பூரணமாகவும் காண்பதாகும்.

விளக்கக் குறிப்பு:—

"எப்பெயரிட் டெவ்வுருவி லேத்தினுமார் பேருருவில்
அப்பொருளைக் காண்வழிய தாயினும் அம்-மெய்ப்பொருளின்
உண்மையிற்ற னுண்மையினை யோர்த்தொடுங்கி யொன்றுதலே
யுண்மையிற் காண லுணர்".

என்ற உள்ளது நாற்பதின் 8வது பாடல் இங்கு தக்கவாறு ஆய்ந்து உணரற் பாலதாகும்.

349. வஞ்சகமான ஐம்புலன்களை அடக்கித் தன் வசப்படுத்திக் கொண்டு, மனத்தின் புறமுக நாட்டமாகிய சஞ்சலக் கற்பனைகளுக்கும் இடந் தராமல், தனதுண்மையாம் உள்ளத்து இருப்புணர்வில் எப்பக்கமும் சரியாமல் (தடஸ்தனாய்) அழுத்தமா யூன்றி நிற்கும் திண்மையை ஒருவன் பெறுவானாகில் அந்நிலையே சிவ நிலையாய் விளங்கும்.

விளக்கக் குறிப்பு:— தெய்வக் காட்சிகளைக் கற்பித்துக் காணும் புலன்களும் மனமும் ஒடுங்கி, கற்பனை கடந்து, ஆன்மாவில் அகந்தை மனம் ஆழ்ந்து பதிந்து உருவழிந்த நிலையையே "அறிவிலே அழுத்தமா நின்ற செறிவு" என்று கூறினார். இத் திடஞான நிட்டையே சிவநிலை அல்லது சிவதரிசனம் என்று அறிவிக்கப்படுகின்றது.

350. கள்ளமற்றதும் கரவற்றதுமான தன் சத்திய ஆன்ம தரிசனமே அருட்பேரின்ப வெள்ளம் பொங்குங் கடலாக விளங்கும் உயர்ந்த நிலையாகும். மனத்தால் நினைக்க முடியாததும் தன்மய மாகவே விளங்குவதுமாய் அங்கு அனுபவப்படும் பர

மௌன ஸ்திதிதான் உயிர்களுக்கு ஒரு குறைவுமற்ற பெரு நிலையாகும்.

## கூரு. தன்னிழப்புத் திறன்

351. துன்ப வடிவேயாக எழும் 'நான்' என்னும் இவ் வகங்காரத்திற்கு (ஜீவனுக்கு) "அகம்—நான்" என்று பெயர் மட்டும் இடப்பட்டுள்ளதே தவிர, ஆராயுமிடத்து இச் சொல்லுக் குப் பொருளாக (அகந்தை என்று) ஏதாவது ஒரு வஸ்து உண்மையில் உண்டா? இல்லையே! அப்படி 'நான்' என்னும் இச் சொல்லின் பொருளாக ஒன்று இருக்கவேண்டு மாயின் கற்பிதப் பாம்புத் தோற்றத்திற்கு யதார்த்த கயிறே பொருளாவது போல, அகந்தையாகிய இந்த 'நான்' என்னும் சொல்லுக்குச் சத்திய ஆன்மாவேதான் பொருளாக முடியும்.

விளக்கக் குறிப்பு:— அகங்காரம் உண்மை யிருப்பற்றது என்றும் ஆன்ம இருப்பின் போலி யுணர்வே அகங்காரம் என்றும் உபதேசிக்கப் பட்டது. உபதேச வுந்தியாரின் 19, 20, 21வது உபதேசங்கள் இங்கு வாசித் துணரத் தக்கன.

352. அகந்தை யழிந்தால் அதன் அதிஷ்டானமாக வுள்ள உயர்வற உயர்ந்த ஆன்ம நிலையே பூரணமாக விளங்கும். இவ் வகந்தை தொலைந்தால் உன் நிஜ நிலையான ஆன்ம சொரூபத் திற்கு யாதொரு நஷ்டமும் வந்து விடாது. ஆகவே நீ இத் தன்னிழப்பை முன்னிட்டுச் சிறிதும் கலங்கா திரு.

353. சுடர்விட்டு ஓங்கும் ஞான விசாரத் தவமாகிய வேள்வித் தீயில் தமது மனத்தை (அகங்காரத்தை) ஆன்மாவாம் சிவனுக்கு ஆகுதியாகக் கொடுத்தோர் (தன்னிழப் புற்றோர்) சிவ சொருபமே யாவர். (a) அத்தகைய ஞானிகளைச் சிவ சொரூப மாகவே தீர்மானித்து வழிபட்டு நாமும் உருவற்ற (தனி இருப் பற்ற) சிவநிலை அடைதல் வேண்டும் (b) அத்தகைய ஞானிகள் சிவசொரூபமே யாகையால், நாமும் அவ்வாறே துணிந்து அகங் காரத்தை விசாரத் தீயில் ஆன்மாவுக்கு ஆகுதியாக்கி, உருவற்ற சிவநிலை தெளிவதே சிறந்த புருஷார்த்த மாகும்.

விளக்கக் குறிப்பு:— பெய்தோர் - ஞானப்பியாசமாகிய விசார வேள்வித் தீயில் தன் மனத்தை நெய்யாகச் சொரிந்தவர்கள், கொடுத்தவர்கள்.

354. ('நான்' என்னும்) இந்தத் தனிப்பட்ட ஜீவ போதத்தை அடியோடு விட்டுவிட்டால் என்ன நேருமோ வென்று சந்தேகமோ பயமோ அடைய வேண்டாம். மரத்தின்மேல் தான் பிடித்திருக்கும் கிளையை ஒருவன் விட்டுவிட்டால் (தரை மேலேயே வந்து சேர்ந்து மேலும் நழுவுதல் என்பது நிச்சய மாகவே சம்பவிக்க முடியாதபடி) பூமியில் என்றும் நழுவாத ஸ்திர நிலை யடைவது போல (அகந்தையை விட்டுவிட்டால்) நம் நிஜ நிலையான ஆன்மாவாக விளங்குவதே நிகழும்.

விளக்கக் குறிப்பு:— எல்லாவிதப் பேறுகளையும் அடைய விரும்பு பவன் ஜீவன். ''இந்த ஜீவத்துவமே விசாரத்தால் அழிக்கப்பட்டு விட்டால் பிறகு என்ன ஆவது? யார் எதை எப்படி அடைவது?'' என்று பக்குவமற்ற சாதகர்கள் பயப்படுவதுண்டு. அன்னார்க்குத் தைரிய முண்டாகுமாறு ''அஞ்சவே வேண்டாம்; அகங்காரம் இழக்கப்பட்டால் அந்நிலையே ஆன்மா அடையப்பட்ட நிலையு மாகும்'' என்று உறுதி கூறப்படுகின்றது. 'மரமேறிக் கைவிட்டவன் கெடுவான்' என்று வழங்கும் பழமொழியையே அறிந்துள்ள மக்களிடம் அதே பழமொழியை ஒருவனது ஆக்கத்திற்கு உதாரணமாக உபயோகித்திருப்பது இப்பாடலில் ஒரு புதுமை யாகும். கிளையைப் பற்றியிருப்பவனின் நிலையைவிட, தரையில் நிற்பவனது நிலையே ஸ்திர நிலை என்ற அளவில் மட்டும் உபமானத்தை எடுத்துக் கொள் வதே உபதேச நோக்கம் என்று நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

355. (ஜாக்கிர சொப்பன) உலகத் தோற்றங்கள் மறையும் தூக்கத்தில் 'நான் இத் தேகம்' என்ற அகந்தையுணர்வு இருப் பற்றதோர் பொய்யாய் ஒழிந்து போக, அப்போதுங்கூட 'நான் இருக்கிறேன்' என்னு மறிவு (ஆன்மஞானம்) மெய்யாய் விளங்கு வதால், 'நான்' என்னும் பதத்திற்கு நிஜமான பொருளாக அழி வற்ற ஆன்மாவையே யாரும் ஒப்புக் கொள்ள வேண்டியது நியாய மாகும்.

விளக்கக் குறிப்பு:— "நானென்னும் சொற்பொருளாம்........." எனவரும் உபதேசவுந்தியார் 21வது பாடல் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

356. '(தேகமே) நான்' என்னும் எண்ணம் கிஞ்சித்தும் எழாத நம் இயல்புநிலையே 'தான்' என்னும் பரதத்துவமாகிய ஆன்ம சொரூப நிலையாகும். தூக்கத்தில் 'நான்' என்னும் இவ் வகந்தை எழாம லிருந்தபொழுது நாம் யாராவது இல்லாமல் அழிந்துவிட்டோமா என்ன? (இருந்தோம் என்பது தேற்றம்).

விளக்கக் குறிப்பு:— தூக்கத்தில் 'நான்' என்னும் அகந்தை யுணர்வு இல்லாத போதும் நமக்கு யாதொரு அழிவும் ஏற்படாதது போலவே, ஆன்ம விசாரத்தில் எய்தப்பெறும் தன்னிழப்பால் நம் சொரூப லாபமே தவிர நஷ்ட மொன்று மில்லை என்று தெளிவாக்கப் படுகின்றது. அதனால் தன்னிழப்பாகிய அகங்கார நாசத்திற்கு யாரும் பயப்பட வேண்டாம் எனத் தேற்றுகின்றார்.

357. ஆராயுமிடத்து, அகந்தையற்ற அந்தத் தன்மை யுணர்வு நிலையே, பொய்ச்சடமாகிய (தேகம் என்னுங்) குற்றம் நீங்கிய நம் நிஜ ஞான சொரூபமாகும். 'தேகமே நான்' என்னும் அக் குற்றம் நீங்கிய ஆன்ம நிலையில் நாம் ஒரு சிறிதும் பாதிக்கப்படாமல் இல்லையா என்ன? (இருக்கிறோம் என்பது கருத்து). இவ் வுண்மையை ஜாக்கிரசுழுப்தி யாகிய சமாதி யால் ஆய்ந்தனுபவித்துக் கண்டறிந்து கொள்க.

358. 'தேகமே நான்' என்னும் அகந்தையற்று நிற்பதே நமது ஞான சொரூப நிலை. இதுவே இன்பமும் சாந்தியுமான சிவமாய் நாம் விளங்கும் நிலை. மீண்டும் ஓர் உடலில் ஜனன மரண மற்றுப் பிரகாசிக்கும் பிரம்ம நிர்வாணம் என்று சிறப் பிக்கப்படும் கைவல்ய நிலையும் இதுவே என் றறிக.

விளக்கக் குறிப்பு:— "தானம் தவம்......தேகான்ம பாவமறல் தேர்" என்று உள்ளது நாற்பது - அநுபந்தம் 13ஆம் பாடலில் ஸ்ரீ பகவான் அருளியவாறு அகந்தையற்ற இந் நிலை யொன்றே எல்லாச் சிறப்பும் ஒருங்கிணைந்த உயர்நிலை என்பது உபதேசிக்கப்பட்டது.

### ௬௪. சுத்தாகந்தைத் திறன்

359. ஜீவ போதமான 'நான்' என்ற அகங்காரம் அடியோ டழிந்தால் அகண்டமான "ஆன்மாவே நான் (நான் நானே)" என்ற நம் சுத்த இயல்பு பிரகாசிக்கும். ஆனால் இவ் வான்ம வுணர்வாகிய 'நான்' என்பது உலகில் உடலுருப் பெற்று உழன்று பந்தப் படுகின்ற (பந்தப்படுத்துகின்ற) 'நான்' என்ற அகந்தையைப் போல ஓர் போலியல்ல. இதுவே மெய்யான நான்.

விளக்கக் குறிப்பு:— சுத்தாகந்தை - அகந்தை சுத்தப்படுத்தப்பட்ட நிலை; அதாவது ஆன்ம நிலை. 'நான் இத் தேகம்' என்று உணர்வதே அகந்தைநிலை. அந் நிலையில் 'நான்' என்ற ஆன்மவுணர்வு தேக அத்தியாசத்தால் அசுத்த மானதாகிறது. தேகோபாதி யற்றுச் சுத்தப்பட்ட 'நான்' உணர்வே - ஆன்மாவே - சுத்தாகந்தை

எனப்பட்டது; அகண்டாகார விருத்தி, சமுத்திராகார நதி என்றெல்லாம் கூறுவது போல சுத்தாகந்தை என்ற பதம் அகந்தையற்ற ஆன்ம நிலையையே குறிக்கும்.

360. இயல்பானதாய், இடைவிடாததாய், எப்போதும் உள்ளதாய், விகார மற்றுத் தெளிவாக விளங்கும் மாட்சி மிக்க இதயம் என்னும் இந்த **"நானே"** ஜீவன் முக்தரிடம் எச் செய லிலும் கர்த்ருத்துவ மற்றபடி விளங்கும் 'சுத்தாகங்காரம்' என்று சொல்லப் படுகின்றது என்றறிக.

361. உடல் நானே என்னுங் குறைபாட் டுணர்வாகிய அகந்தை ஒழிந்து, பூரண மெய்ஞ்ஞான வாழ்வு வாழ்வோர் எக்கவலையு மற்று, மனச்சஞ்சல மற்றுச் சாந்தி நிறைந்தவராய்த் தன்னிலேயே ரமித்திருப்பர்.

## ௬. ஆன்ம வெழுச்சித் திறன்

362. இதயம் என்னும் தன் உற்பத்தி ஸ்தானத்தை விசாரத்தால் அறிந்தால், தானே முதற்பொருள் போல இதுகாறும் கள்ளமாய்த் தோன்றி நின்ற 'நான்' என்னும் அகந்தை தலை சாய்ந் தழியும். அப் போலி முதலாகிய 'நான்' என்னும் உணர்வு அதன் உற்பத்தி ஸ்தானத்தில் அடங்க வடங்க, உண்மை முதற்பொருளான ஆன்மா அபரோக்ஷமாய்ச் சுட ரோங்கி விளங்கும்.

363. அஞ்ஞான இருளினின்றுந் தோன்றி, பிரபஞ்சம் அனைத்தும் தானேயாய்த் தலைவிரித்தாடும் சாரமற்ற அகந்தைப் பேயை, 'இந்த நான் யார் ?' என்று விசாரித்தால், தன்னை யாரென்று யாரும் விசாரிக்காத வரையில் உறவினன் போல நடித்திருந்து விசாரணை கிளம்பியதும் ஓடி மறைகின்ற மாப் பிள்ளைத் தோழனைப்* போல, அது உடனே இருப்பற்று மறை யும். அப்போது மூலமான அஞ்ஞான இருளைப் பிளந்து கொண்டு, சத்தியப் பொருளான ஆன்ம சூரியன் மிக நன்ருய்ப் பிரகாசிக்கும்.

---

*மாப்பிள்ளைத் தோழன் கதையாவது: ஒரு திருமண வீட்டில் அன்னிய னொருவன் புகுந்து தான் மாப்பிள்ளையின் தோழன் என்று கூறிக்கொண்டு, பெண் வீட்டாரிடம் தான் மாப்பிள்ளையின் உறவினன் என்றும், மாப்பிள்ளை வீட்டாரிடம் தான் பெண்ணின் உறவினன்

364. மோன நிலையில் அகந்தை வாழ்வாகிய அகங்காரம் மூழ்கி அழிந்துபோவதுதான் ஞானகாச வடிவாய் வாழும் பர வாழ்வு ஆகும். ஆகவே, கனு ஒன்று பொய்யாவதுபோல் இப் பொய் யகங்காரம் தனது மூலமான மோன வெளியிற் புகுந்து அழியும்போது, உண்மையான '**நான்**' என்னும் ஆன்மா தானுகவே மேலெழுந்து பிரகாசிக்கும்.

365. உடலே சிலுவை. இதன்கண் 'உடலே நான்' என்று தோன்றும் அகந்தையே ஏசு. விசாரத்தால் அகந்தை சிலுவையில் அறையப்படவே (அகந்தை நாசமுறவே) பிறகு யாதொரு துன்பமுமற்று மிஞ்சியுள்ள சத்திய ஆன்மாவாம் பரம் பொருளாக விளங்குவதே அவ் வியேசு மீண்டும் உயிர்த்தெழுதல் என்னும் தத்துவமாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் அளித்தது:— இங்கு 'உடற்றப் படல்' என்றது துன்பஞ் சுடச் சுட நோற்றலாம். 'ஒழிதல்' என்றது சிச் சடக்கிரந்தியாகிற அகந்தை நசித்தலாம். "சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடுந் துன்பஞ் சுடச்சுட நோற்கிற் பவர்க்கு"(குறள்). உடற்சி - வருத்தம், துன்பம். 'உடற்சியற இலங்கல்' எனக் கூட்டி, இறைவனெடு வேறற விளங்கல் எனினும் ஆகும். இப் பொருளில் உடற்சி மாறுபாடு, வேற்றுமை என ஆகும்.

மீட்டும் உயிர்த்தெழல்:— 'தான் பிறந்தது எங்கிருந்து? என உண்முக உணர்வால் உசாவி, தன் பிரம்ம மூலத்திற் போய்ப் பிறத்தல். அவ்வாறு பிறந்தோனே இரு பிறப்பாளன் எனப்படுவான். "சிச்சடமாம் ஜீவன், ஜட வகந்தை செத்தவுடன்....." என இந்நூலின் 973வது பாடலாற் காட்டிய கருத்தோடு இச் செய்யுளின் பொருளை ஒப்பிட்டு நோக்குக.

366. இரண்டற்ற சத்தியவஸ்துவான, அளவற்ற, பரமோன நிலையில் அகந்தை இறந்து ஆன்மா மாத்திரமாய் விளங்கலே கைவல்ய சித்தி எனப்படுவதாம். அந்த ஞான நிலையில் உண்டா

---

என்றும் கூறி நடித்து விருந்துண்டு வந்தான். இரு தரப்பினரும் கூடி ஒரு நாள் 'இவன் யார்? யாருக்கு எப்படி உறவினன்?' என்று விசாரிக்க ஆரம்பித்தபோது அவன் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வீட்டை விட்டு நழுவி விட்டான். அதுபோலவே ஜடமான தேகத்திற்கும் சைதன்னியமான ஆன்மாவுக்குமிடையே இவ்விரண்டின் போலியாய் இவ்விரண்டு மல்லாததாய் முளைத்துள்ள அகந்தையானது 'இது எது' என்று விசாரிக்குமிடத்து இருப்பற்று மறைந்து போகும் என்பது உபதேசம்.

கும் அதீதமும் அதி பரிசுத்தமுமான பேரின்பம் தன் நிஜ இயல்பாகத் (சுபாவமாகத்) தழைத் தோங்கும்.

### கூகூ. துக்க நிவிருத்தித் திறன்

367. எண்ணற்ற குறைகளை மனத்திற் கொண்டு ஏங்கிப் புத்தி மயங்கும் ஜீவன் அம் மனக் கவலைகளெல்லாம் நீங்கிச் சாந்தி பெற வேண்டுமானல், தனக்கு மூலமும் தலைவனுமான அருட்பரம் பொருளையே தனது நிஜ சொரூபமாக அறிந்து கொள்ள வேண்டியதான ஒரே வழிதான் உண்டு.

368. எதை மறந்ததால் இவ் வுலகமாயம் மகாபலம் பொருந்தியதாய்த் தன்னை மயக்கிற்றே அதை (ஆன்மாவை) அறிந்தா லொழிய துன்பம் அணுவளவுகூட நீங்கவே நீங்காது.

369. தனது மனைவி மக்களது சாவால் துன்புற்று அழும் மனிதன் தன் உண்மைநிலை எதுவென முதலில் தன்னை ஆராய்ந்து, அகந்தை யழிவுக்காகப் பிரார்த்தித்து, அழுது பாடுபடுவா னுயின் அவனது துன்பம் முழுவதும் அழிந் தொழியும்.

370. ஒருவரை 'அவ் வுடலே அவர்' என்று அகந்தை யுயிராகக் கருதி நீ அன்பு செய்வா யாகில், அந்த உடல் சாகும் போது அவரே (உயிரே) இறந்து உன்னைவிட்டுப் பிரிந்து விட்டதாக உனக்குத் தோன்றுவதால் உனக்குப் பெருந் துயர முண்டாகும். இத் துயரம் உண்டாகாதிருக்க வேண்டுமானல் அப் போலியுயிரின் (உடலே தான் என்னும் உடலுயிராகிய அகந்தையின்) உண்மை சொரூபமான ஆன்மாவைப் பற்றியே மெய்யன்பு செய்வாயாக. (அப்போது அவ்வான்ம அன்பு பிரிவுத் துன்பம் தராது).

விளக்கக் குறிப்பு:— ஆன்மா இறவாப் பிறவா இயல்புடைய தாகையால் ஆன்ம அன்பிற் பிரிவுத் துயரமில்லை என்பதாம்.

### கூஎ. நிராசைத் திறன்

371. ஆசையானது, அற்பமான ஓர் அணுமாத்திரப் பொருளையுங்கூட அடைவதற்கு முன் மகாமேருவைப் போன்ற பெரியதோர் சிறப்புள்ள பொருளாகக் காட்டியும், அடைந்த பின் எப் பொருளையும் மிக அற்பமாய்க் காட்டியும் மனிதனைத் திருப்தியற்ற வறியோ னுக்கி வைக்கும். ஆகையால் திருப்தி

யுண்டாகும்படி நிறைவேற்றி வைக்கவே முடியாததான இவ் வாசையைப் போல தூர்க்க முடியாத வெறும் பெரும் படு குழியை யாம் கண்டதே யில்லை.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீமுருகனுர் அளித்தது:— "ஆரா வியற்கை யவா" என்ருர் திருவள்ளுவ நாயனுரும். செல்வ மென்பது உண்மையில் சிந்தையின் நிறைவே யாதலால், அம் மன நிறைவு இல்லாத வழி எத்துணைப் பொருளீட்டத்தாலும் எவனும் வறுமையின் நீங்கி வளவனுக முடியா தென்பதாம்.

372. நிறைவாகிய பூரணத் தன்மையை அடைய விரும்பும் சத்துவ குண மனத்தை யுடைய சாதகர்களே ! (வாழ்வில் வரும்) மனக் குறையாகிய வறுமையை, தேடிப் பெருக்கும் பொருட் குவியலால் மாற்றிக் கொள்ள நினைக்காமல், சித்தோப சாந்தி யாகிய மனே நாசத்தை அடைவதே சிறப்புடையதாம்.

373. பக்தியின் மிகுதியால் இறைவனது பாதத்திற் பதிந்து நிற்கும் ஒருவனது மனம், கணவன்-மனைவி என்னும் உடலுறவு வாழ்க்கையில் மயக்கம் நிறைந்த குதூகலம் உடைய தாய், (பக்தி மார்க்கத்திற்கு வராத) பண்டை நாட்களில் நடந்து கொண்டது போல் சிற்றின்பத் தாண்டவமாடத் தலைப்படுமோ? (தலைப்படாது என்க).

374. மகான்களாகிய ஞானிகள் சித்த விருத்திகள் முழு வதும் நாசமான நிலையையே மிகச்சிறந்த பேரின்பம் என்று கூறுவர். மனத்திலுள்ள விருப்பு வெறுப்பு இரண்டும் அழிந்த நிராசை நிலையே (உதாசீன பாவமே) கடைப்பிடிக்கத் தக்க நல்ல நெறியாகும்.

375. ஆசை யுடையவர்களுக்கு மட்டுமே அவ் வாசை தடைப்படும் போது இகழத் தக்க கோபம் உண்டாகும். இந் நிச்சயத்தால், கொடிய கோபமுள்ள சமயங்களில் அக் கோபத் தின் மூல காரணமான ஆசையும் அதனுள்ளேயே இருந்து வருகின்றது என்பது விளங்குகின்ற தல்லவா? அவ்வாறே, அக் காமத்தினின்றும் ஜனிக்கும் குரோதம் முதலியனவாய்க் கூறப் படும் ஆறு தீமைகளும் அழியும் வரிசையில் கடைசியாக அழிவது (காமமே) ஆசையே என்றறிக.

376. உரை கடந்த மோனமாம் பிரம்ம நிலையை அடைய வேண்டும் என்னும் ஆசைகூட சதாசார மாண்பிற்குப் (ஞானு சாரச் சிறப்பிற்குப்) புறம்பானதுதான் என்று (ஞானிகள்) கூறுவர் என்றால், புனிதமற்ற இழிந்த இவ் வுடல் மேலும், உடற் சம்பந்த முற்ற பிற பொருள்கள் மேலும் ஆசை யுடையவர் களாய் இருப்போரை எவ்வாறு ஆசார முடையவர்கள் என்று கூறுவது? (கூற முடியாது என்பதாம்).

விளக்கக் குறிப்பு:— இப்பாடலில் 'ஆசார மாட்சி' என்று குறிப்பிடப்பட்டது சதாசார நிலையையே யாம். 'சத்' எனப்படும் கேவல இருப்பு மாத்திர உணர்வில் நிலைபெறுவதே சதாசாரம். துவிதமாக ஒன்றிலிருந்து மற்றொன்றின் மேற் செல்லும் அன்பே ஆசை எனப்படுவதால், இரண்டற்ற ஆன்ம நிலையை ஓர்வித ஆசையால் அடையப்படும் நிலையாகக் கொள்ளக் கூடாது. அந்நிலையில் ஆசை - விருப்பு-எனப்படும் விருத்தி வியாபாரமே யில்லை. ஆகையால் மாட்சிமையான சதாசாரப் பிரம்ம நிலையை ஆசையின் ஓர் லக்ஷியமாகக் கூறுவதுகூடத் தவறு என்கிறார் ஸ்ரீபகவான். உண்மையான ஆசார மாட்சி இவ்வாறிருக்க, உடலையே தான் என்று அபிமானித்துத் திரியும் மக்கள் உடலையே சம்பந்தித்துள்ள வர்ணாசிரம ஆசாரங்களிற் பெரு விருப்புக் காட்டுவதும், தேகாத்ம புத்தியுடன் ஏனைய உலகப் பொருள்களின் மேல் உள்ளத்தில் ஆசை நிரம்பியிருக்கும்போது வெளியில் மட்டும் தேகாசார நெறிகளிற் பெரிதும் விருப்புக் காட்டுவதும் உயர்ந்த உண்மையான ஆசார மாகுமா? ஆகாதென்க. உடலுலகப் பொருள்களின்மேல் ஆசையிருக்கும் வரையிலும் எவரும் ஆசார சீலர்க ளல்லர் என்பதும், நிராசையே 'ஆசார மாட்சி' என்பதும் தாற்பரியம். நிராசையின் எல்லையோ 'ஈசனோ டாயினும் ஆசையறுமின்' என்ற ஆன்றோர் வாக்குப்படி அவ்வளவு விரிவுடையதாகும் என்பது இப்பாடலாற் பெறப்படுகின்றது.

377. "இந்தப் பொருள் எனக்கு வேண்டும்; இன்ன தொரு பொருள் என்னிட மில்லை" என்று நினைக்கும் சிந்தையே யில்லாத ஞானவானான ஒருவன் தன் ஊழ்வினைப்படி வந்த மையும் (பொருள்களா லாகிய) போகங்களை அனுபவித்திருப் பானே தவிர, தனது ஞான நிலையிலிருந்து இறங்கி மேற்கூறிய படி விருப்பம் ஏக்கம் போன்ற அறியாமைக் காளாகி ஏன் துன்புறப் போகிறான்? (போகான் என்க).

குறிப்பு:— ஞானி ஊழின்படி வருவனவற்றைப் புஜித்திருப்பதன்றி ஏக்கமுற்று எதையுந் தேடி யுழலான். 'இது வேண்டும் அது வேண்டும்' என்று ஆசைப்படுவது பித்தர்கள் செயலே என்றார். இதனால் ஞானநிலையை விரும்பும் சாதகர்களும் பிராரப்த வாறாக வந்தமைவதில்

திருப்தி யுற்றவர்களாய், எதையும் வேண்டாமை என்னும் விழுச்செல்வமாகிய மனநிறைவோ டிருக்க வேண்டும் என்பது வலியுறுத்தப்படுகிறது.

378. ஆசைத் தளேயை யடியோ டறுத்தோர்க் கன்றி மற்றவர்க்கு அஞ்ஞான பந்த திருஷ்டி யகலாது. சிறந்ததான உபசாந்தப் பேரின்ப ஆசையைக் கூடத் தயங்காமல் அறுத் தெறிவதே (எவ்வித ஆசை விருத்தியும் இல்லா திருப்பதே) நம் குறிக்கோளாக வேண்டும் என்பதாம்.

விளக்கக் குறிப்பு:— 376வது பாடலின் கருத்து இங்கு மீண்டும் கவனிக்கத் தக்கது.

379. இம்மை மறுமைகளில் அடையப்படும் சிற்றின் பானுபவங்களின் மேல் ஆவல் கொண்டு துன்புற்ற மடநெஞ்சே! நீ எந்த நினேப்பு மற்று (உன் மெய்ந்நிலேயில்) நிற்பா யாகில், (இம்மை மறுமைகளாகிய) இவ்விரண்டையுங் கடந்த பேரின்ப முத்தியை நிச்சயமாய் அடைவாய்.

### கூஅ. பந்த முக்தித் திறன்

380. 'தேகம் நான்' என்னும் ஜீவ சுதந்திரம் ஒடுங்கியழிவதே துன்பமற்ற, மெய்யான, ஆன்ம சுதந்திரமாகும். பல கிளேகளாகப் பிரிந்த சர்வ சமயங்களுள்ளும் சமரசமாக ஒத்து அமையும் நிலேயாகிய இவ்வகங்கார நாசமே ஞானமாகும்.

விளக்கக் குறிப்பு:— அகங்கார நாசமே அனேத்தறனும் ஆதலாலும், அறமே சர்வ சமய வேர் ஆதலாலும், சர்வ சமய சாரமும் அகந்தை நாசமே என்பது கூறப்பட்டது.

381. ஆன்மாவை யறியாத குற்றத்தால் வந்த ஜனன மரணம் (தன்னே விசாரித் தறிவதைத் தவிர) வேறு எந்த வகையாலும் நீங்காது. 'இவ் வைங்கோசவுடலே நான்' என்னும் மயக்கத்தையே தன் உருவாய்க் கொண்ட அகந்தை கெட்டழிவ தால் விளக்க முறும் மெய்ஞ்ஞானம் ஒன்றே (ஜனன மரணக்) கட்டினின்றும் விடுதலேயை உண்டாக்கும்.

விளக்கக் குறிப்பு:— ஆன்மாவை யறியாத பிழையால்தான் ஜனன மரண சம்சார ரூப பந்தம் உண்டாகித் தோன்றுவதால், ஆன்ம ஞானத்தால்தான் அது ஒழிய முடியும்; வேறு எந்த உபாயத்தாலும் அது ஒழியாது என்னும் தீர்மானமான இவ் வுபதேசத்தை விவேக சூடாமணியில் "சாஸ்திரங்கள் படித்தாலும், தேவபூஜை பண்ணி னுலும், கர்மங்கள் அனுஷ்டித்தாலும், தேவதைகளே யுபாசித்

தாலும், இன்னு மென்ன செய்தாலும் பிரம்மாத்மைக்ய ஞானத் தாலன்றி எத்தனை கோடி கற்பங்களாயினும் முத்தி சித்திக்காது" என்ற ஸ்ரீசங்கரரது அருள்வாக்கும் ஊர்ஜிதப்படுத்துவது காண்க.

382. அளவற்று மேன்மேலும் எழும் சித்த விருத்தியை யன்றிப் 'பந்தம்' என்று வேறொன்று இருப்பதாகவே அறியா தவர்களான ஞானிகள், சகல விருத்திகளும் மீதமின்றி யழிந்த சித்தத்தை யன்றி 'முக்தி' என்று வேறொன்றையும் காண்ப தில்லை. இதுவே உண்மையான முடிவு.

விளக்கக் குறிப்பு:— 'செத்த விருத்தியுடைச் சித்தம்'—சித்தத் தினின்றே சகல விருத்திகளும் உண்டாவதால், விருத்திகள் அனைத்தும் அழிந்த நிலை என்பது சித்தம் இறந்த நிலையே யாகும். சித்தமிறந்த நிலை என்பது சித் சொரூபமே யாவதால், 'செத்த விருத்தியுடைச் சித்தம்' என்று ஏதோ ஒருவிதச் சித்தம் இருப்பதாகக் கொள்ளக்கூடாது; அது சின்மாத்திர ஆன்ம நிலையே.

383. மதுவுண்டு மயங்குற்றாற் போல அறிவு கலங்கித் தடுமாறும் இம் **மலின மனமே** கர்மத்தாற் பந்த முற்றதாகக் கருதப்படும் ஜீவான்மாவாகும். அம் மனம் சுட்டறிவால் விஷயங் களைக் கண்டு விரும்பி மகிழாமல் இருப்பு மாத்திரமாய்த் தன்னிலைக்கண் நிற்குமாயின், அப்போது அவ் **விசுத்த மனமே** பரமாத்மா எனப்படும்.

விளக்கக் குறிப்பு:— அலைந்தால் அஃது அலை; அமைந்தால் அஃது ஆழி யாவது போல, எண்ணங்களாக அலைந்தால் அது மனம்; அவ்வாறின்றி அமைதியாய் நின்றால் அதுவே ஆன்மா எனப்படும். 'மட்டு' என்ற சொல்லுக்கு அளவு, எல்லை என்று பொருள் கொண்டு 'தானோர் உடல் அளவு எல்லைக்கு உட்பட்டவனாக' எனினும் பொருந்தும்.

### சூகூ. ஆன்ம விசாரத் திறன்

384. 'நீ யார்? அவன் யார்? என்று முன்னிலை-படர்க்கைகளை வெளியே நீள விசாரித்துக் கொண்டே போகும் பகிர்முகப் பழக்கத்தை மாற்றி, இடைவிடாது, ஆவலோடு தன்னகத்துத் திரும்பி, தன்னைக் குறித்துத் தன்னிடத்திலேயே (தன்னுள்ளேயே) 'நான் யார்?' என்று விசாரிப்பதே மனிதர்க்கு உறுதி பயப்பதாம்.

385. கூர்மதியால் தன் இதயத்தே தன்னை ஊடுருவி இடை விடாது கவனிக்கும் தன்னோட்டத்தால் தேகாத்ம புத்தி அறவே நசித்து, மெய்ப்பொருளாகிய ஆன்ம அறிவு **'நான் நானே'**

என்று விளக்கமுறும்போது, உண்மையற்றதா யிருந்தும் ஆகாயத்தில் நீலநிறம் ஒன்று இருப்பது போலக் காணப்படும் காட்சிக்குச் சமானமாய் இதுவரையிலும் காணப்பட்டுவந்த பிரபஞ்சம் என்னும் வேறுபாடுக ளடங்கிய அன்னிய வஸ்துக்கள் யாவும் அற்றுப் போம் (நிர்விகற்பக் கைவல்யமே அனுபவமாம்).

386. '(சந்தேகங்களைக்) கேட்கும் தான் யார்?' என்று தன்னையே விசாரிக்கும் கேள்வியால், கேட்கப்படுகின்ற ஏனைய துவிதக் கேள்விகள், சந்தேகங்கள் அனைத்தும் ஒன்றுகூட எழாமல் அழிந்துபோம். தன்னையே நோக்கி 'இந்தச் சந்தேகியாகிய நான் யார்?' என்று கேட்கும் இவ் வான்ம விசாரக் கேள்வியே **பிரம்மாஸ்திரமாக** எழுந்து, அஞ்ஞான இருளில் விளங்கும் அன்னியத் தோற்றங்களை (தனக்கு வேறாகத் தோன்றும் திருசியங்களை) முற்றும் அழித்துவிடும்.

387. 'வஞ்சகமான ஐம்புலன்களின் வழியே, வெளியிற் பிரபஞ்சம் இருப்பதாய் உணர்கின்ற (ஜீவனாகிய) நான் யார்?' என்று விசாரித்து, கிளம்பி யெழும் அகந்தையின் விருத்தி களெல்லாம் அவ் விசாரத்தால் அழியவே, பிறகு இதயத்தில் தான் இடையறாத மெய்ஞ்ஞான நிஷ்டை பெறுவதொன்றே உயிர்களுக்கு முக்தியடையும் நெறி (சாதனம்) ஆகும்.

388. 'நான் யார்?' என்று தன் உண்மையை நாடி விசாரிக்கும் ஜீவன் தன் அகங்கார எழுச்சி யறவே யழிந்து 'சத்திய ஆன்ம சொரூபமே தான்' என ஆவான்.

விளக்கக் குறிப்பு:— 'உயிர் ஆன்மாவா அறும்' என்றது 'ஜீவன் ஆன்மாவாய் அழிவான்' என்று பொருள்தரும். ஜீவனும் அகந்தை ஆன்மாவா யழிதல் என்பது அகந்தை யழிந்து ஆன்மாவாய் மிஞ்சிநிற்பதே. சமுத்திரத்திற் கலந்த நதி யொன்று தன் தனித்தன்மை யழிந்து போதலை 'நதி சமுத்திரமா யழிந்தது' என்று வருணிப்பது போன்றதே இச் செய்யுளின் அழகு.

389. மனத்தைப் புறவிஷயங்களிற் போகாது தடுத்து, 'நான் இவ் வுடல்' என்னும் பாழ் விருத்தி — தன்மை எழுச்சி — எழும்ப வொட்டாமல் தன் இருப்பின் மூல மாகிய இதயம் என்னும் ஆன்மாவிலேயே எப்போதும் இருக்கும்படிப் பதிய வைத்தலே சரியான ஆன்ம விசார முறை யாகும்.

விளக்கக் குறிப்பு:— "சதா காலமும் மனத்தை ஆன்மாவில் வைத்திருப்பதற்குத்தான் ஆன்மவிசாரம் என்று பெயர்" என்று ஸ்ரீபகவான் 'நான் யார்?' என்னும் நூலிற் கூறியது காண்க.

390. 'இருக்கிறேன்' என்ற உணர்வு வடிவில் உள்ளத்திற் சதா விளங்கிக் கொண்டிருக்கும் பரம்பொருளை அடைய, தனிமையி லிருந்து கொஞ்சங் கொஞ்சமாக உள்ளே நாடி அடைய வேண்டுமே தவிர, வெளியில் உணர்ச்சி வசப்பட்டு, ஆரவாரித்து, ஆடிப்பாடிக் கடவுளைத் தேடிப் பற்பல இடங்களுக்கு அலைவதானது, நீருக்குள் மூழ்கியவனை தான் ஓர் தீப்பந்தத்தை ஏற்றிக்கொண்டு தேடிக் கண்டு பிடிக்க முயல்வது போல், வியர்த்தமே யாகும். (அதாவது நீருள் தீப்பந்தம் பயன் படாதது போல் உள்ளேயுள்ள பரம் பொருளை அறிய அடையப் புறமுக மனம் பயன்படாது என்பதாம்).

391. பஞ்ச கோசங்களுக்குள் இருக்கும் தம் ஆன்ம சொரூபத்தை இதயத்தில் மூழ்கி நேராகச் சாக்ஷாத்கரிக்காமல், மக்கள் சாஸ்திரக் கல்வி கேள்விகளாம் வித்தைச் சிறப்பாற் செய்யும் ஆராய்ச்சியானது வெறும் சாஸ்திர விசாரமே தவிர ஆன்ம விசாரமாகுமா? ஆகா தென்க.

விளக்கக் குறிப்பு:— "'தான்' பஞ்ச கோசங்களுக்குள் இருப்பது; நூல்களோ அவற்றிற்கு வெளியிலிருப்பவை. ஆகையால் பஞ்ச கோசங்களையும் நீக்கி விசாரிக்க வேண்டிய தன்னை (ஆன்மாவை) நூல்களில் விசாரிப்பது வீணே" என்று ஸ்ரீபகவான் 'நான் யார்?' என்னும் நூலிற் கூறியிருப்பது இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

392. பிராணனை உள்ளே நிறுத்தி, ஐம்புலன்களின் வழியேயும் வெளியில் தொழிற் படத் தொடங்கும் மனஅறிவு ஐந்து வெவ்வேறு கூறுகாமல் ஒருமுகப் படவே, அதனால் மனம் ஒடுங்கிச் சஞ்சல விருத்திகள் ஓய்ந்திருக்கும் அமைதி நிலையில் 'நான் யார்?' என இதயத்திற் கூர்ந்து ஆராய்ந்து, பின்னமற்ற சத்சித் சொரூப ஆன்மாவை அறிக.

விளக்கக் குறிப்பு:— "ஒடுக்க வளியை ஒடுங்கு முளத்தை விடுக்கவே யோர் வழி —" என்று வரும் உபதேச வுந்தியாரில் 'ஓர் வழி' என்றதின் இரகசியப் பொருள் இப்பாடலால் விளக்கப்படுதல் காண்க. பிராண ஒடுக்கத்தால் மனவொடுக்கம் பெற்றுப் பின் அவ்வொடுங்கிய மனத்தைத் தன்னைஒரும் விசார நெறி யொன்றிலேயே செலுத்தினால் மனோ நாசம் சித்திக்கும் என்பது உபதேசம். மனோலயத்தோடு நின்று விடாமல் மனோ நாசம் பெற விசாரமே வழி என்பது உணர்த்தப்பட்டது.

393. சிறந்த ஞான மார்க்கமான ஆன்மவிசார சாதனை யில் ஈடுபட்டவர்கள் ஒருகாலும் வழி தவறிப் போவதே யில்லை. நேர்மார்க்கமான அவ் வான்மவிசாரமே தன்னை மேற்கொண்ட சாதகர்களுக்கு, (விசாரத்தைச்) சரியாக அனுஷ்டிக்கும் விதத்தைச் சூரியனைப் போல தானே முன்னின்று வழிதுலக்கிக் காட்டிவிடும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறிய மற்றொரு பொருள்:— 'அர்க்கனென நேரிதாம் அந்த நெறி' என்ற தொடருக்கு பாரபக்ஷ மின்றிப் பார்ப்பனர் வீதியிலும் பஞ்சமர் சேரியிலும் சூரியன் தன் பூரணப் பிரகாசத்தையும் ஒப்ப வழங்கி வெயில் எரித்தல் போல, எல்லா வுயிரிடத்தும் பார பக்ஷமின்றி ஆன்மா சமமாய் 'நான் நான்' என விளங்குதலால் அதனை ஆசிரயித்து நாடும் விசார நெறியை 'அர்க்கனென நேரிதாம்' என்றார்.

கன்மம் பக்தி யோகம் முதலிய ஏனை நெறிகளில் இயல்வனவாங் கொள்கைகள் ஒன்றுக்கொன்று உறழுங்கால் அவற்றுள் ஒன்று பிறிதொன்றுக்கு இடங்கொடுத்துத் தான் சற்றுக் கோடுதலாகவும், ஆன்ம வத்துவின் அத்துவித மாட்சியால், அதன் விசாரம் மட்டும் அவ்வாறின்றி, அவ்வொரே பொருளைக் குறிக்கொண் டொழுகும் செம்மை யுடைமையால் அதனைச் 'செந்நெறி' எனவும், அவ்வேனை நெறிகள் யாவும், தம்முள் ஒருவன் எத்துணைதான் முன்னேற்ற மடையினும், முடிவில் கொஞ்சமாக வேனும் விசாரத்தை விளைத்தே அதன் வாயிலாகத்தான் அவனைத் தன் குறியை அடைவித்தலால் அந்த ஏனைய நெறிகளினும் அவ்விசாரத்துக்குள்ள விசேடந் தோன்ற அதனை "மிக்க நெறி" எனவுங் கூறினார். செம்மை — நேர்மை, நடுவு நிலைமை. செந்நெறி — கோடாத நேர்வழி; மயக்கத்திற் கேதுவாய்க் கிளை பிரியாத ஒரே வழி. ஆன்மாவை அர்க்கனாகவும் ஆன்ம விசாரத்தை அர்க்கனொளி யாகவும் கொள்க.

394. உண்மையில் பிரமாதமே — சொரூப நிஷ்டையில் தவறுவதே — ஒருவர்க்கு மரணம் ஆகும். மரணத்தின் தன்மை இத்தகையதே யாகையால், யாரும் அஞ்சத்தக்க மரணத்தை மாற்றி, அமுதத்துவத்தை யடைய முயற்சிப்பார்க்குப் பிரமாதத் திற் கொருகணமேனும் அவகாசம் கொடாமல் அதை அழிக்க இடைவிடா முயற்சி இன்றியமையாத தாகின்றது. ஆகவே (பிரமாதத்தை மாற்றும் சாதனையாகிய) ஆன்ம விசாரணையைச் செய்ய (இன்னின்ன காலத்திற்றான் இயற்ற வேண்டும் என்னும்) விதி கிடையாது. (ஆத்ம விசாரம் எப்போதும் ஆற்றப்பட வேண்டியதே; கால தேச விதி நிஷேதம் கிடையாது என்பது கருத்து.)

395. காலம் தேசம் முதலியனவாய்க் காணப்படும் யாவும் குறைவற்ற அந்தப் பரப்பிரம்மத்திற்கு அன்னியமானதோர் சத்தா யிருக்க வியலா தாகையால், எந்தக் கால தேசமும் ஆன்ம விசாரத்திற்கு விலக்கு (நிஷேதம்) ஆகாது.

'விலக்கு' என்ற பதத்தை 'இலக்கு' என்று பொருள் கொண்டால் கிடைக்கும் மற்ெறாரு வித உரையாவது:—

கால தேசங்கடந்த ஆன்ம சொருபத்தைத் தவிர, கால தேசத்துள் ளடங்கிக் காணப்படும் நாம ரூபாதிகள் எதையும் விசாரத்தில் லக்ஷியமாகக் (இலக்காகக்) கொள்ளக் கூடாது.

குறிப்பு:— உடலில் இதய ஸ்தானமாக ஓர் இடத்தையோ, இது போன்ற காலதேசத்துட்பட்ட இலக்குகளேயோ ஆன்ம விசாரிகள் தியான லக்ஷியமாகக் கொள்ளக் கூடாது என்பதும், 'நான் நான்' என்னும் ஆன்ம உணர்வையே நேரே நமது லக்ஷியமாகக் கொள்ளவேண்டும் என்பதும் இவ்விரண்டாவது பொருளாற் பெறப் படுவனவாம். இப் பொருள் கொள்ளு மிடத்துப் 'புலப்படுவ' என்ற சொல்லுக்கு 'உடல் உட்பட்ட நாம ரூபப் பிரபஞ்சப் பொருள் எதுவும்' என்று அர்த்தம் செய்து கொள்ள வேண்டும்.

396. பல பிறவிகளில் மேற்கொண்ட பழக்க வசத்தினுல் புறமுகப்படும் (தன்னை) மனத்தை, 'நான் யார்?' என்று, அயராமல் விசாரிக்கும் முயற்சியாகிய ஆன்ம விசாரத்தால் அகமுக மாக்கும் செயலே, தான் புரியும் தேவாசுர யுத்த மாகும்.

விளக்கக் குறிப்பு:— புராண இதிகாசங்களின் வாயிலாகப் புறத்தே நிகழ்ந்தனவாக நாம் அறியக் கிடக்கும் தேவாசுர யுத்தங்கள் யாவும் ஆன்மீக நெறியிற் செல்லும் சாதக னொருவனின் அகமுக நாட்ட முயற்சிக்கும் புறமுகக் கவர்ச்சிக்கும் நடக்கும் போராட்டத்தையே விவரிப்பன வாம்.

397. இச்செய்யுள் ஸ்ரீ பகவானருளிய கீழ்க்கண்ட வசன மாகும்: "பிற வெண்ணங்க ளெழுந்தால் அவற்றைப் பூர்த்தி பண்ணுவதற்கு யத்தனியாமல், அவை யாருக்கு உண்டாயின என்று தன்னை விசாரிப்பதே தக்கதாம்".

—['நான் யார்?'—ஸ்ரீ பகவான்]

398. இச்செய்யுளும் ஸ்ரீ பகவானருளிய வசனமே:— "அவ்வெண்ணங்கள் எனக்கல்லவோ தோன்றுகின்றன! நான்

யார்?" என்று விசாரித்தால் மனம் தன் பிறப்பிடத்திற்குத் திரும்பி விடும். எழுந்த வெண்ணமும் அடங்கி விடும்.

—['நான் யார்?'—ஸ்ரீ பகவான்]

399. இப்படித் தினமும் பழகப் பழகச் சித்தத்தின் அழுக்கு நீங்குவதால் தூய்மை யடைந்து, விசாரணை ஆரம் பிக்கும் போதே மனம் உடனே இதயத்தில் வந்து ஆழ்ந்து விடும்படி அவ்வளவு அதி சுலபமாகி விடும்.

குறிப்பு:— ஸ்ரீ பகவா னருளிய வசனமாவது:— 'இப்படிப் பழகப் பழக மனத்திற்குத் தன் பிறப்பிடத்திற் றங்கி நிற்கும் சக்தி யதிகரிக்கின்றது'.

(இச்சக்தியின் தன்மையையே பாடலில் 'அவ்வளவு மெத்த எளிதாகி விடும்' என்று கூறப்பட்டது).

400. காடு பற்றி எரியும் போது அவ்வெப்பம் பொறுது, உயிர்பிழைக்கத் தப்பிச் செல்லக் கிளம்பும் பிராணிகள் அழிவது போல, வளர்ந்தோங்கி வீசும் ஆன்மவிசார சக்தி யாகிய கனலுக்கு ஆற்றுமல், உள்ளத்தில் இதுவரை ஒளிந் திருந்த பண்டை வாசனைகள் எண்ண வடிவாய் மேற்கிளம்ப, அவை உடனுக்குடன் விசாரத் தீக்கு இரையாக, முடிவில் வாசனைகள் யாவும் கெட்டு அழியும்.

குறிப்பு:— இச் செய்யுளின் கருத்தும் இதையடுத்து வரும் மேலும் இரு செய்யுட்களின் கருத்தும் 'நான் யார்?' என்ற நூலில் வசன வடிவில் அருளப் பெற்றது காண்க.

401. ஸ்ரீ பகவான் அருளிய வசன வடிவம்:—நான் யார் என்னும் நினைவு மற்ற நினைவுகளை யெல்லா மழித்து முடிவில், பிணஞ்சுடு தடிபோல, தானும் அழிந்து முழுமோனம் ஆகி விடும்.

—["நான் யார்?"]

402. அளவற்ற பேரின்ப அறிவொளி யாகிய நம்மை மறைத்து (எல்லைக்குட்பட்ட, துன்புறும், ஜீவ மடமையிருளாக) ஏமாற்றி வந்த அகந்தை மயக்க மானது' 'நான் யார்?' என்று தெளிவாகச் செய்யப்படும் விசார ஆராய்ச்சியா லழியும். அப் போது நம் சொரூப மாட்சி ஆன்மாகாசமாகவே விளங்கும்.

403. அக்கினியிற் காய்ந்த இரும்புக் கோளம் (இரும்புக் குண்டு) அவ்வக்கினியின் தன்மையால் அக்கினிக் கோள

மாகவே விளங்குவது போல, மும்மலமுடைய ஜீவனும் பரிசுத்த ஆன்ம விசார ஞானக்கினியால் வெந்து போனபின் அவ்வான்ம சொரூப மாகவே பிரகாசிப்பான்.

404. 'துன்புறும் மோகியாகிய (ஜீவனுகிய) நான் யார்?' என்று தன்னுள்ளே யாராய்ந்து, தன் நிஜ சொரூபமாகிய ஆன்மாவை நன்ருக அறிந்து கொள்வதால் அஞ்ஞானக் கலக்க மெல்லாம் நீங்கி ஞானம் உதிக்கும். அதனுல் பரமோனம் பெருகப்பெறுவதே உபசாந்தியான பரசுகம் ஆகும்.

405. ஜீவர்கள் துன்புறும் காரணம் தம் ஆன்ம சொரூப வுண்மையை அறியாத மயக்க மாகிய பிரமையே யாகும். ஆகையால், 'துன்புறும் தான் யார்?' என்று விசாரிக்கும் மெய்ஞ்ஞான விசார சாதனையையே உள்ளத்தில் எப்போதும் பழகி வருவாயாக.

406. மறவாது, தளர்வின்றி (பிரமாத மின்றி) நாடோறும் முறையாகச் செய்யும் ஆன்ம விசாரம் என்னும் ஸ்பரிசவேதியின் கூட்டுறவால், பேய் போன்ற அகந்தை வடிவாம் ஜீவன் தனது பேய்த் தன்மையான சித்தமலம் என்னும் களிம்பு நீங்கிச் சுத்த சிவமாகவே சுடர்வான்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் கூறியது:— வேதி —ஸ்பரிச வேதி. வேதித்தலால் வேதி எனப்பட்டது; வேதித்தல் - பேதித்தல்; மாற்றுதல்; தாழ்ந்த உலோகத்தைத் தங்கமாக மாற்றும் பொருள் வேதி எனப்படும். விசாரத்தை வேதியாகவும், சித்த மலத்தைக் களிம்பாகவும் சொல்லியுள்ளதால், ஜீவனைச் செம்பாகவும் சிவத்தைப் பொன்னுகவும் கொள்ளவேண்டும். இக் காரணத்தால் இது ஏகதேச உருவக அணி. பசாசம் அகந்தைக்கு ஆகுபெயர். அகந்தையைப் பேய் என்று விவரிக்கும் உள்ளது நாற்பது 25-வது பாடலை இங்கு கவனிக்க.

ஈண்டு 'சித்த மலம்' என்றது ஆணவ மலத்தை; முற் கூறியவாறு பசாசியல்போடு கூடியது அதுவே யாதலால் சிவமாம் பொன்னுக மாறுங்கால் ஆணவ மலங் கழலுவதோடு கன்மம், மாயையாகிய ஏனைய மலங்களும் கழன்றே யாக வேண்டியதால் தனித்தனி மும்மலங்களின் கழற்சியும் கூற வேண்டாத தாயிற்று. இந்நூலின் 733-வது ப்பாடலால் ஆணவ நீக்கமே மற்றிரண்டின் நீக்கமுமாம் என்பது பெறப் படும்.

407. தேவ குமாரனுன ஜீவன் 'அப்பரமான்மாவே தன் நிஜ சொரூபம்' என்ற வுண்மையை மறந்த காரணத்தால், (தான் துன்புறும் ஓர் ஜீவனுகி) "ஐயோ" என்று ஏங்கி வருந்து

கின்றான். "இவ்வாறு துன்புறும் நான் யார்?" என்று ஊக்கமும் ஆவலுங் கொண்டு ஆராய்ந்து தன்னுள் மூழ்குவா ஞயின், "தான் அப்பரமான்மாவே" என்றுணர்ந்து, அப் பரமபிதாவோடு ஒன்றாகி விளங்கும் தன் நிஜ மகிமையைப் பெறுவான்.'

விளக்கக் குறிப்பு:— இச் செய்யுள் கிறிஸ்துவச் சம்பிரதாயப்படி பரமாத்ம தத்துவத்தை விளக்கக் கூறப்பட்டதாம்.

## எ0. மெய்த் தவத் திறன்

408. எல்லா வுயிர்களி னுள்ளும் தெய்வீக மெய்ஞ்ஞான மாகிய திருவருள் இயல்பாகவே எப்பொழுதுமே விளங்கிக் கொண்டிருப்பதை யுணர்ந்து அவ் வருள்ஞானத்தைப் பூரணமாக அனுபவித் திருப்பதுதான் தவம் செய்வதின் நோக்கமே தவிர, திருவருளாம் ஆன்ம ஞானத்தைப் புதிதாக உண்டாக்குவதற்காக வல்ல (என்றறிக).

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது :— தவத்தினால் ஞானம், புதிதாகத் தோற்றுவிக்கப்படுவ தன்று என்றார். அன்றி, அவ்வா றெனின் அது அநாதியின்றி சிருஷ்டியுட் படுதலால் அது அந்த முறும். அது அநாதியும் உயிர்க்குயிரின் இயல்பும் ஆகும். ஆகவே பிரதிபந்தங்களை நீக்கி அதை அனுபவிக்க இயல்வதே தவச் செயலாம்.

409. மதங்கொண்ட அகங்கார மனத்தை ஐம்பொறிகளோடு சேர்ந்து தொழிற்படாதபடி இதயத்தில் ஒடுக்கி, அங்கு (இருக்கிறேன் என்ற வடிவில் மட்டும்) விளங்கும் சிவமாம் ஆன்ம சொரூபத்தில் ஒன்றாகப் பதிய வைத்தல்தான் சிறந்த மெய்த்தவம் என்று உத்தமத் தவசிகளான ஞானிகள் கூறுவர்.

410. மாயையின் சேர்க்கையால் வெவ்வேறாகத் தோன்றும் இப் பிரபஞ்சக் காட்சி முழுவதையும் தனக்கு அன்னியமற்ற ஏகமாய்க் காணும் ஞான வெற்றிகொண்டு விளங்கும் ஆன்மா கார விருத்தியின் தாரை என்றும் அறாது பெருகுவதே, ஆராயு மிடத்து, யாவற்றினுஞ் சிறந்த தவச் சின்னமாகும் என்க.

411. பேரின்பக் கடல் இயல்பாகவே எங்கும் நிறைந்து பொங்கிக் கொண்டிருக்க, பஞ்ச தாபாக்கினி போன்ற கொடிய துன்பத்தீயால் தன்னை வாட்டி வருத்திக் கொள்வதையே தவம்

என்று பொதுவாக மக்கள் கருதுகின்றன ரன்ருே? இது எக் காரணத்தால் என்ருல், ஒவ்வொருவரின் கடமையும் உரிமையு மாகின்ற ஆன்ம சொரூப நிஷ்டையாகிய மெய்த் தவத்தை மிகப் பிரியத்தோடு இயல்பாகவே செய்யாத ம டைமையினுலேயே என்க.

விளக்கக் குறிப்பு:— 'தவம்' என்ற சொல்லுக்குத் தவித்தல், தபித்தல், துன்பம் மேற்கொள்ளல் என்று பொருள். அதாவது சுடச்சுட நோற்றல், ஆனுல் மெய்த்தவமாகிய ஆன்ம நிஷ்டையோ பேரின்ப சமுத்திரமாகும். "யானற் றியல்வது தேரின் எது அதுதான் நற்றவம்..." என்பது ஸ்ரீ ரமணோபதேச சாரம். அகந்தை யழிந்த இந் நிலேயே தவநிலே என்ற இவ் வுண்மை விளங்காதவர்களாய் உடலே (பஞ்ச தாபாக்கினி போன்ற நோன்புகளால்) வருத்திக் கடுந்தவம் புரியும் தவசிகள் பலர் உளரன்ருே? அவ்வாறு கடும் தபித்தல்களா லாகிய நோன்புகளே அவர்கள் மேற்கொள்வது காமியங்கள் சிலவோ, பலவோ, இவ்வுலகிலோ பிற உலகங்களிலோ, சுயநலமாகவோ அல்லது பரநல (லோகரக்ஷுணார்த)ப் பெயரிலோ நிறைவேற வேண்டும் என்ற நோக்கத்தாலேயே யாகும். இத்தகையக் காமிய லாப நோக்கமானது அகந்தை உயிர்த்திருக்கும் (அன்னியம் தோன்றும்) நிலேயில் மட்டுமே சாத்தியமாகும். இத்தகையார் இயற்றும் வேள்வியாதி சகலமும் பாடுறும் பரிசேயன்றி வீடுறும் பரிசல்ல. ஆதலால் இச்செயல்களே தபித்தல் என்ற பொருளில் தவமாக ஏற்கத் தக்கனவாம். ஆனுல் உண்மையான உத்தமப் புருஷார்த்தமோ பேரின்ப வீடே யாகையால் அந்நிலேயைப் பெறுவதற்கே அறியுடையோர் தவம் ஆற்ற வேண்டும். அதற்கு ஆற்ற வேண்டிய நோன்போ மிகுந்த காதலோடு தன்னே நாடுவதாகிய விசாரம். 'நானே வழியும் முடிபும்' என்ற பேருண்மைப்படி விசாரத்தின் வழியும் (செய்முறையும்) முடிபும் பரமானந்த சொரூபமான ஆன்மாவே யாதலாலும், விசார முடிவாகிய அகந்தை யழிவு நிலேயின் சுவையை அகந்தை ஒய்ந்த தூக்கத்தில் யாரும் 'ஆனந்தம்' என்று அனுபவிப்பதாலும், தன்னுட்ட மாகிய விசாரநோன்பு சிறிதும் துன்பங் கலவாத தன்மையுடையது என்பது விளங்கும். இவ்வாறு ஆனந்தமான தன்னிருப்பை யாற்றுவதே ஒவ்வொருவர் கடமையுமாக அமைந்துள்ளதை அறிந்து, அத்தியந்தப் பிரியமுடன் இயல்பாகவே ஈடுபட்டு இன்புறவேண்டிய தன்னுட்டச் செயலே 'தவம் - தபித்தல்' என்று ஏன் அழைக்க வேண்டும் ? ஆகவே, உள்ளக்காதலோடு ஆற்றத் தக்க ஆன்மநிஷ்டையாகிய இன்பவெள்ள நிலேயைத் 'தவம்' (துயருழத்தல்) என்று கருதுவது வெறும் அறியாமை மயக்கமே என்று தவத்தைப் பற்றிய புரட்சிகரமானதோர் கருத்தை ஸ்ரீ பகவான் இங்கு உபதேசிக்கின்ருர்.

பிறிதொரு பொருள்: துன்பமென்பது என்றுமே யில்லாதது. இன்பமே என்றும் எங்கும் கடலாய் விரிந்து விளங்குகின்றது. உண்மை யிவ்வாருக, மக்கள் ஜனன மரணத்துன்பங்களேத் துய்த்து வருந்துவது

ஏனென்றால், ஆன்ம நிஷ்டையாகிய விசாரத்தவத்தை விருப்போடு கடமையாகச் செய்யாத அறியாமையாலேயே என் றறிக.

412. உயர்வற உயர்ந்த சிவஞானனுபவமான மோனமே பரப்பிரம்மமாம் மெய்த்தவ மாகும்.

413. பரந்த ஆகாயத்தில் பறவைகள் பறந்து சென்ற வழியும், நீர்வாழ்வன (மீன் முதலியன) நீரில் நீந்திச் சென்ற வழியும் பிறகு கண்டறிய முடியாது போவது போல, ('நான் யார்?' என) உண்முகமாய் நாடி ஆன்மாவையடைந்த ஞானிகள் சென்ற வழியும் அடிச்சுவடு படாமையால் மனத்திற்கு (மனிதர்க்கு)ப் புலப்படாது.

குறிப்பு:— ஸ்ரீ முருகனர் கூறியது:— "யாதும் சுவடு படாமல் ஐயா றடைகின்ற போது.........." எனவரும் அப்பர் தேவாரத்திற்கு, ஐயாறு அடைதலாவது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலத் தாறுகளும் உட்சென்று ஒருங்கும் உள்ளத் தலம் என்பதும், அவ்வாறு உண்முகப்படும் வழியோ யாதும் சுவடு படாதது என்பதும் தத்துவார்த்தமாகக் கொள்க.

414. ஜீவ போதச் சேஷ்டை அழிவதற்கு ஏதுவாக ஆண்டவன் திருவடியைப் பற்றி நிகழும் பக்தி வடிவான கலப்பே சித்தாந்த மார்க்க மாகும். அந்த ஜீவபோதம் நாஞ ரென்னும் ஆத்ம விசாரத்தால் முற்றும் நஷ்டமாகின்ற பரமாத்ம ஞான சொரூபப் பேரின்ப நிஷ்டையிற் பயில்வதே வேதாந்த மார்க்க மாகும்.

குறிப்பு:— அகந்தை நாசத்தையே தம் முடிவாகக் கொள்வதால் சித்தாந்த மார்க்கமும் வேதாந்த மார்க்கமும் ஒன்றே என்பது தீர்ப்பு.

415. பரமான ஆன்மாவையும் அபரமான அஞன்மாவையும் விசாரத்தாற் பகுத்துப் பரத்தை (பிரம்மத்தை — தன்னை) யறிந்து, அதனுல் உடல் உலகாதி (அஞன்ம) அபர விஷயங்களில் அகத்துறவு பெற்று, அதனுல், 'நான்' என்னும் அகந்தையுடன் 'எனது' என்னும் மமதையும் அழிந்து விளங்கலே மெய்ஞ்ஞானிகளின் வாழ்வு நெறியாகும்.

குறிப்பு:— 'மெய்ஞ்ஞான வானுலகில் வாழ விரும்புவோர் மேற் கொள்ள வேண்டிய வாழ்க்கை முறை' எனவும் பொருள் கொள்ளலாம். "யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க் குயர்ந்த வுலகம் புகும்" என்ற குறட்பா ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

416. துன்பத்தில் வருந்தும் ஜீவன் இறைவனோடு சேர்ந்து இன்புற்றிருக்கத் தக்க வழியைக் கேள். (சுக துக்கங்களாம் இரட்டையுணர்விற்கு மூலமான) ஜீவேசுவர ஜகத் தோற்றம், சிப்பியிற் கற்பிதமாய், வெள்ளி தோன்றுவது போலப் பரப்பிரம்ம மாம் தன் நிஜ சொரூபத்தில் தோன்றும் கற்பனைகளே என்றுணர்ந்து (அத்தோற்றத்தில் சத்திய புத்தியை) விட்டொழிக. (இதுவே இன்புறும் வழியாம்).

**எக. அறிவாராய்ச்சித் திறன்**

417. அறிவேயாம் இதயப் பொற்கோயிலில் சிவன் பரிசுத்த ஞானமயமாகவே விளங்குகின்றான். அவனை அறிவுக் கண்ணால் அறிவோரே மெய்யான சிவாராதனை புரிவோர் ஆவர். ஏனெனில், அறிவே பரம்பொருள் (பரமார்த்தம்) ஆகும்.

418. பரிபூரண மெய்ப்பொருளை யறிந்த உயர் ஞானம் எனப்படுவது அறிவை அறிவால் அறிவதே. இவ்வாறு நிலையறிவாகிய ஆன்மாவால் தன்னை யறியும் வரை அலையறிவாகிய மனத்திற்கு (மனிதனுக்கு) அணுவளவுகூட அமைதி ஏற்படாது என்றறிக.

419. பொன்னா லாகிய நகைகள் பெயராலும் வடிவாலும் பற்பலவாக அறிபடுவது போல, புலன்களால் (மனத்தால்) அறியப்படும் பிரபஞ்சமும் நாம ரூபத்தால் பற்பல வாகின்றன. எனினும் (நகைகளின் நாமரூப வேறுபாட்டால் மாறுபடாமல்) பொன்னின் அறிவோ ஏகமாகவே யுள்ள தல்லவா? (அவ்வாறே) விசேஷ மனச் சுட்டறிவு நீங்கிச் சித்த மிறந்து விளங்கும் ('இருக்கிறேன்' என்னும்) வெற்றறிவே பொன் என்று கொள்க.

420. ("இருக்கிறேன் என்னும் இருப்பறிவு -சத் சித்- ஆகிய) திருக்கு ரூப அறிவாகிய தன்னையறிந்து அமர்வதை விடுத்து (அதாவது, தானாயிருத்தலை விடுத்து)க் காணப்படும் ஐம்புல விஷயங்களையே மெய்போலக் கருதும் அகந்தையே பொய்யும் மாயமுமாகிய அஞ்ஞானமாகும். விரும்பிய கலைகளையெல்லாம் ஒருவன் கற்று முடித்தாலும் (அவற்றைக் கற்கின்ற) அகந்தைச் சுட்டறிவாகிய கற்பனை தன் ஆன்ம சொரூப தரிசனத்தில் அடியோடு அழிவதே மெஞ்ஞானமாகும்.

விளக்கக் குறிப்பு:— காண் அறிவு - ஆன்ம அறிவு; மெய்போலப் பேண் அறிவு - ஜீவ போதம் அல்லது அகந்தை; கற்பனைச் சுட்டு - சுட்டறிவாகிய அகந்தைக் கற்பனை. வேணதெலாம் கற்றிடினும் அது

உண்மை யறிவல்ல என்றும், அது அஞ்ஞானமே என்றும், அவற்றைக் கற்கும் மனமே சொரூப தரிசனத்தால் நாசமாவதுதான் மெய்ஞ்ஞானம் என்றும் கூறினர். "அறியுமது உண்மை யறிவாகாது....." என்னும் உள்ளது நாற்பதின் 12 வது பாடற் கருத்தும் இங்கு நோக்கத் தக்கது.

421. யதார்த்தமா யுள்ளது ('இருக்கிறேன்' என்னும்) சுத்த சத்சித்தின் விளக்கம் ஒன்றுதான். அதனிடத்தில் உண்மைபோலக் காணப்படுகின்ற மற்ற எல்லா அறிவுகளும் ஒரு போலியாகிய 'நான்' என்னும் முதற் கற்பனையறிவின் (அகந்தையின்) இருளறிவுகளே (அஞ்ஞானமே). ஆதலால் அவ்வறிவுகளை எல்லாம் நம்புவது பெரும் பிழையாகும்.

விளக்கக் குறிப்பு:— 'இருக்கிறேன்' என்று மட்டும் தூக்கத்தில் யாவரும் அனுபவிக்கும் வெற்றறிவே முற்றறிவாகிய மெய்ஞ்ஞானம் என்பதும், விழிப்பு நிலையில் 'அறிகிறேன்' என்ற வடிவில் ஏற்படும் சகலவித ஞானமும் அஞ்ஞானமே என்பதும், கருத்து. "தூக்கத்தில் முற்றறிவு இருக்கிறது; விழிப்பில் பூரண அறியாமை யுள்ளது" என்று 'மஹரிஷி வாய் மொழி' என்னும் நூலில் வரும் ஸ்ரீ பகவானது உபதேச ரகசியத்தின் சிறப்பையும் இங்கு ஒத்து நோக்குக.

422. மற்ற அறிவுக ளெல்லாம் இழிவான சிற்றறிவே யாகும். மன மழிந்த பரமோன அனுபவமே மெய்யான முற் றறிவு ஆகும். அறிவே சொரூபமான ஆன்மாவில் எதிரிட் டறியப்படும் பல்வேறு பேதங்களும் வெறுங் கற்பனையே யன்றி உண்மை யல்ல என் றறிக.

423. மெய்ஞ்ஞான திருஷ்டியுடைய பெரியோர்கள் (ஞானி கள்) இக் கேடான உடலகந்தையின் சுட்டறிவை ஓர் அறிவாகக் கொள்வார்களோ? (கொள்ள மாட்டார்). சுத்த (கேவல—ஏக) அறிவை அறியும் அறிவே மெய்யறிவு ஆகும். தவிர, மற்ற வற்றை அறியும் அறிவெல்லாம் பேதைமையே—அஞ்ஞானமே— யாகும்.

குறிப்பு:— சுத்த அறிவை அறியும் அறிவு - 'இருக்கிறேன்' என்று விளங்கும் தன்னுணர்வு.

424. ஒருவன் அறிதற் கரிய பல அற்புதமான நுட்பங்களை யெல்லாம் அறிந்தவனாயினும், அவற்றை யறியுந் தன்னை அறியா னயின் அதுவரை அவன் உண்மை ஞானி யாகான் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— 'தன்னை யறிதலின்றிப் பின்னை எது அறிகிலென்?' என வரும் ஆன்ம வித்தைக் கீர்த்தனத்தின் மூன்ருவது சரணம் இங்கு நோக்கத் தக்கது.

425. வெறி பிடித்தாற் போல் புறப் பொருள்களை நாடி யோடும் மனமே (மனிதா) ! மற்றென்றினின்றும் பிறவாமல் தான் சுயமே இருந்து விளங்கும் (இருக்கிறேன் என்ற வடிவில் விளங்கும்) ஏக சுத்த அறிவைத் தவிர, பலவாகிய இந்தச் சரா சரங்கள் எல்லாம் தோன்றுவதற் குரிய மூலப்பொருள் (மூலஸ் தானம்) வேறென்று இருக்கமுடியுமா? (இல்லை என்பதாம்).

426. எல்லாவற்றிற்கும் அறிவையே ஆதாரமாகச் சொல் வதற்கு நியாயம் யாது என ஆராய்வோமாயின், உதித்துக் காணப்படும் சிருட்டியனைத்திற்கும் சிறந்த அதிஷ்டானமான ஆன்மாவுக்கும் (தன்னைத் தவிர வேறொரு பொருள் என்றும் எங்கு மின்மையால்) அவ் வான்மாவேதான் ஆதாரமாயிருக் கின்றது என்ற சிறப்பே காரணமாகும் என்பது விளங்கும்.

குறிப்பு:— 428-வது பாடலையும் இங்கு உடன்வாசித் துணர்க.

427. அசத்தான ஜடத்துக்குத்தான் பற்றுக் கோடாக ஒரு சிரேஷ்டமான சத்சித்து வேண்டப்படும். சத்சித்தாகிய நமக்கு மற்றொரு சித்தை (அல்லது சத்தைப்) பற்றுக் கோடாக நாடி நிற்கும் தீனத் தன்மை ஏன் ஏற்படுகின்றதெனின், தன்னைச் சித்தமாக (மனமாக)க் கருதும் அசுத்த மயக்கத்தினுலே யாம்.

428. ஒருகால் இருந்து பிறகு ஒருகால் மறையும் அன் னியப் பொருள்களைப்போல் அசத்தாகாமல் 'தான் என்னும் நம் இயல்பு எப்பொழுதுமே இருந்து விளங்கும் தன்மையுடைய தாயிருக்குங் காரணத்தாற்ருன், இதராபேக்ஷயின்றித் தானு கவே விளங்கும் ஆன்மாவாகிய நாமே நம் இருப்பறிவுக்கும் நிலைக்கள ஞகின்றேம் என்று (426 ஆவது பாடலில்) முன்பு கூறப்பட்டது என்றறிந்து கொள்க.

குறிப்பு:— 'என்றல்' என்றது 426 ஆவது பாடலில் 'தனக்கு நிலைக் களனுந் தான்' என்று உபதேசிக்கப்பட்டதைக் குறித்ததாம்.

429. அந்த அறிவான மெய்ப்பொருளே நீயா யிருக்க, அவ் வறிவால் நீயே அவ்வறிவாதலை யறிந்து நிலை பெறுவதை

விட்டு, அவ்வறிவான உன்னிடமிருந்து தோன்றும் உலகியலே யறிந்தவண்ணமே அழிகின்றுயே! இதை என்ன வென்று சொல்வேன்!!

430. தமது இருப்பியல்பான ஆன்ம சொரூபவுண்மை இப்படிப்பட்ட தென்று விசாரத்தால் ஆராய்ந்து அறியாதோர் அன்னியமான உடலேத் தாமாகவும், உலகைத் தமக்கு அன்னிய மாகவும் கருதி, மயங்கி, அழிவடைவர். எது ஏக சத்சித் சொரூபமாக விளங்கும் நாமோ, அதைத் தவிர மற்றவை யாவும் மகா மாயையின் ஜாலப் பாசாங்குத் தன்மையே யாகும்.

431. யார் ஒருவர்க்கு ஐம்புலன்களால் அறியப்படும் பொருள்களிடத்திற் கவனம் பாய்வதைத் தவிர தன் ஆன்ம சொரூபத்திற் கவனம் (உணர்வு) ஏற்படுவதில்லேயோ அத்தகைய மனித உருவுள்ள மண்ணுங்கட்டிகளுக்கு (மூடர்களுக்கு) எந்த சாஸ்திரங்கள்தான் ஞானத்தைப் புகட்டிவிட முடியும்? (முடியாதென்க).

432. அறிவே உன் சொரூபமாக இருப்பதால்தான் இவ் வுலகை நீ அறிகின்றுய்; அல்லவா? (உன் நாட்டத்திற்கு உலகைக் குறியாக்காமல்) நீ அறிவாகிய உன்னேயே குறியாகக் கொண்டு நிற்பாயாகில், அத் தன்னுட்டமே (சிற்குறியே - சின் முத்திரையே) உனக்கு ஞான குருவாக அமைந்து பரமார்த்த உண்மையை உணர்த்தும் என்றறிக.

*விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனர் கூறியது: அறிவாங்குறி நிற்றல் = அயலேயறியாமலும் தன்னே மறவாமலும் சைதன்னியத்தில் ஊன்றி நிற்றல். அந்நிலேயில் நிற்கும் அறிவு, இது வரை நனவு கனவுகளிற் கற்பனேயா முலகைச் சுட்டி எதிரிட்டுக் கண்டுவந்த பழக்கத்தால், உண்மையில் கற்பனே கடந்தவராகிய கடவுளேயும் அறிபடும் ஓர் விடயமாய், ஓர் அன்னியப் பொருளாய்க் காண்பது என்று அடைந்திருந்த மயக்கத்தை மாற்றி, 'உண்மைக் கடவுளேயொழிந்து தான் இலன்' என்ற உண்மையை உள்ளத்து உரம்பட உணர்த்தலால், 'ஞான குருவதுவேயாக அறிவுக்கு முண்மை' எனப்பட்டது. இருந்தொளிர்தல் மாத்திரமாம் தன்னியல்பை மறந்து, கர்த்ருத்துவங் கொண்டு காண்பானுய்த் தன்னேக் கருதிய மோகமே ஒருவன் ஜடப் பொருள் போல கடவுளேயும் எதிரிட்டுக் காண்டல் வேண்டும் எனக் கலங்கிக் கருத்தழிவதன் காரணமாம். சுட்டல் ஒழிந்து அறிவு மாத்திரமாய் நிற்கின் ஆன்ம சொரூபமே உண்மையிற் கடவுளாதல் விளங்கப் பெற்று நிரந்தர சித்தசாந்தி யுண்டாகும் என்றறிக.*

433. ஆய்ந்து அறியத் தக்கது நம் ஆன்ம சொரூப உண்மை யொன்றுதான். அதையே லக்ஷியமாகக் கொண்டு இதயத்தில் நுட்பமாய் நாடி அதை அறிந்து கொள்ளவேண்டும். உழன்று திணறும் மனக் கலக்கம் நீங்கி, முற்றுந் தெளிவான மோன நிலையுறும் நிச்சல புத்திக்கே அத் தன்னுண்மை விளங்கும்.

434. பரிசுத்த ஞானமான தன் மோன சொரூபத்தில் மற்ற எல்லாவிதமான அறிவுகளும் (கலை ஞானங்களும்) அடியோடு ஒழிந்து விடுவனவாம். (அவ்வாறே) மற்ற எல்லாவித நிலைகளும் இயல்பான தன் பேரின்பப் பரநிலையில் அடங்கியுள்ள சிற்சக்தியின் விலாசமாகக் காணப்படுவனவே.

435. தனக்கு அன்னியமானவற்றை அறியக் கிளம்பாது 'இருக்கிறேன்' என்ற இயல்பு வடிவ மாத்திரமாய் நிற்கும் அறிவே **இதயம்** எனப்படும். பிறவற்றை அறிகின்ற தொழில் அற்று நிற்கும் இவ் வியலறிவிற்குத்தான் உண்மை (ஆன்ம சத்தியம்) தாமாகவே விளங்கு மாகையால், அவ் வறிவாம் இதயத்தை (தன்னை) நாடி நிற்கும் ஆன்ம நிஷ்டையே உண்மை விளக்கமாம்.

விளக்கக் குறிப்பு:— 'இதயம்' என்றது ஆன்ம சொரூபத்தை,
"விதம்படு முளந்தொறு மவிசேட வுணர்வாகி
இதம்படுத லாலிதய மென்பரிறை தன்னை......" என ஆன்றோருங் கூறினர். ஆன்ம நிட்டையே ஆன்ம ஞானம் என்பதாம். "உள்ளதல துள்ள வுணர்வு......" என வரும் உள்ளது நாற்பதின் முதன் மங்கல வெண்பாவை இங்கு நோக்குக. அறிவுக்கு (சித்திற்கு)த் தன் மெய் (சத்) விளங்குதல் அவை தாம் ஒன்றி னென்று அயலாகாமையா லென்க.

436. அறியப்படும் யாவும் அவ்வறிவின் வடிவாகவேயாகி, அறிவாகிய தன்னிடத்திலேயே அடங்கி விடும்படி ஆன்மாவில் திண்மையாக ஊன்றிநிற்கும் நிஷ்டையால் பேதங்க ளெல்லாம் அறவேயழிந்து போய், ஏகமாய் விளங்கும் தன் உண்மை நிலையே ஈடில்லா முத்தி நிலையாகும் என் றறிக.

437. உண்மைப் பொருள் (மெய்ப் பொருள்) என்பது ஒரே பொருளே தவிர, இரண்டல்லாத காரணத்தால், மெய்ஞ்ஞானம் என்பதும் (தன்னைத் தவிர) மற்றொன்றை அறியும் அறிவாக

இராது. அறிவின் மயக்கவடிவான சித்தம் சலன மற்று உப சாந்தமாய் நிற்கும் நிஷ்டையே மெஞ்ஞான நிலையாகும்.

விளக்கக் குறிப்பு:— மெய்ப்பொருள் (சத்திய வஸ்து) ஒன்றேயன்றிப் பல வாகாமையின் மெய்ஞ்ஞானமும் அவ் வொருபொரு ளாகிய தன் இருப்பறிவு மாத்திரமே யன்றிப் பலவற்றை யறியும் அறிவாக இருக்க முடியாது. எனவே, பலவற்றை யறியும் மன அறிவாக இப்போது ஒவ்வொருவருக்கும் உள்ள சித்தக் கலக்க நிலை (சிதாபாச நிலை) நீங்கி, பிறவற்றை யறியும் சலனத் தன்மையைக் கைவிட்டு, 'இருக்கிறேன்' என்னும் தன்மை, ஒருமை, யுணர்வாக மட்டும் நிலைபெறும் ஆன்ம நிஷ்டையே மெய்ஞ்ஞான மாகும் என்றார்.

438. அறிவே பற்றின்மை. அறிவே பரிசுத்தம். அறிவே கடவுளடைவு. அறிவே பயமின்மை. அறிவே மரணமின்மை. இவை யனைத்தும் (ஆன்ம) அறிவே என் றறிக.

439. அறிவின் (ஞானத்தின்) அகலம், நீளம், அடியாகிய ஆழம், முடியாகிய உயரம் ஆகியவைகளை அறிதல் என்பது, (அறியக் கிளம்பும்) மனம் நசித்துப் பரம சாந்தமடைவதே யாகும். தவிர, ஞானத்தின் (பூரணத்தின்) நிலையை உள்ளபடி அளவிட பிரம்மாதி கடவுளர்க்கும் இயலாது.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது: அகலம், நிகளம், ஆழம், உயரம் — இவ் வளவுச் சொற்களை யெல்லாம் தாண்டி நிற்பது அறிவாதலின், அஃதை அளவிட வியலாது. அறிவை யறிதல் என்பது கேவல அறிவில் மன அறிவு நாச (மனோநாச) முறலே.

440. பிரபஞ்சம் முழுவதும் அறிவைத் தவிர வேறில்லை. உயிர்க ளனைத்தும் அறிவைத் தவிர வேறில்லை. அருட்பரமான கடவுளும் இவ்வான்ம அறிவைத் தவிர அன்னிய மல்ல. ஆகவே, அறிவை யறிவதே பரமார்த்தமான புருஷார்த்தம்.

## எஉ. நிருவாணத் திறன்

441. சிறிதும் வருத்த மின்றித் தோல் (சட்டை) உரிக்கும் புற்று நாகத்தைப் போல, 'நான் இது' என்னும் அபிமானச் சேர்க்கையால் துன்பத்தை யுண்டாக்கும் மோக வடிவான பஞ்ச கோசச் சட்டைகளைக் கழற்றி எறிவதே நாம் செய்யத் தக்க உயர் கடனாகும்.

442. சிதாகாச வடிவான ஆத்ம நாதனின் அருட்செல்வ மாகிய மோனுனந்தத்தை முழுவதும் எய்துவதற்கு ஐங்கோச வடிவாய் தான் போர்த்தியுள்ள தேகாபி மானத்தை நீக்குவதே ஜீவ நிருவாண நிலே (ஜீவத்தன்மை முற்றுங் கழன்ற நிலே) யாகும்.

விளக்கக் குறிப்பு:— ஜீவனுகிய பெண் ஆன்ம நாதனின் இன்பத்தை முழுவதும் பெற மானமாம் ஐங்கோசங்களேயும் நீக்கி, நிருவாணம் எய்துவது - என்றவாறு அகப் பொருளும் கொள்வதுண்டு.

## எஙு. ஆன்ம வடைவுத் திறன்

443. (நனவு கனவுகளிற்) காணப்படும் இப் பிரபஞ்சத் தோற்றம் ஒய்ந்து, சரீர மில்லாமல், தனித்திருக்கும் (தூக்க மாகிய) சூனிய நிலேயிலும் நாம் சகஜமாக இருந்து விளங்குவது நம் யாவருக்கும் அனுபவம். ஆதலால் பஞ்சகோச வடிவ அகங்காரம் நாசமுற்று ஓய்ந்திருப்பதே ஆன்ம சொரூப அடைவு (ஆன்ம சாக்ஷாத்காரம்) என் றறிக.

விளக்கக் குறிப்பு:— அகங்காரத்தை நிரந்தரமாக இழப்பதே நம் ஆன்ம சொரூபத்தை அடைதல் என்பது கருத்து.

444. (பொய்யாகிய கனவு நீங்கி ஒருவன் விழிப்படைவது போல) இப் பொய்க் கனுவாகிய நனவு நீங்கி, அகந்தை யற்றுத் துரீய விழிப்பான மெய்ந்நனு வடைந்தால், அப்போது ஆன்ம சொரூபம் (நம் உண்மை நிலே) சூரியனேப் போல் சுயம் பிரகாசமாய் விளங்குவதால், தகுந்த ஆத்ம ஞான விசாரத்தால் அகந்தை யழியப்பெறுவதே ஆன்மாவை அடைவதும் (ஆன்ம சாக்ஷாத்காரமும்) ஆகும் என் றறிக.

445. பொய்யான இவ்வுடலில் (உலகில்) வாழ்ந்திருந்தாலும் சந்தேக விபரீத மற்று முற்றுந் தெளிந்த மெய்ஞ்ஞானத்தால் 'நான்-எனது' என்ற அகங்கார மமகாரம் இரண்டும் அழியப் பெற்றிருப்பதே, தான் பிரம்மமாய் இருக்கும் தன்மையாகும்.

விளக்கக் குறிப்பு:— 'ஐ உணர்வு' என்ற சொற்ரெடருக்கு ஐம்புல அறிவாகிய அகந்தையுணர்வு என்றும் பொருள் கொள்ளலாம்.

446. மெய்ப்பொருள், 'நான்' என்னும் அகந்தையுணர் வுக்கும் மூலமாய் (உற்பத்திஸ்தானமாய்) மிக மிக நுட்பமான

புத்தியால் மட்டும் உய்த்துணரத் தக்கதாய் விளங்கிக் கொண் டிருப்பதால், உலக்கையின் நுனி தடித்துள்ளதைப்போலத் தூல நாமரூபங்களையறிவதிலேயே ஈடுபட்டிருக்கும் தடித்த புத்தி யுடையவர்களுக்கு அந்த லக்ஷியத்தை (ஆன்மாவை) அறிந்து அடைவது அரியதே யாம்.

குறிப்பு:— ஸ்ரீ பகவானருளிய விசாரசங்கிரகத்தின் எட்டாவது அத்தியாயத்தில், "அதிக ஸ்தூலமான கட்டபாரையால் மெல்லிய பட்டு வஸ்திரத்தை இழையிடக் கூடாதது போலவும், காற்றினால் அதிக சலன முள்ள தீபத்தால் அதிக சூட்சுமமான வஸ்துக்களின் இலக்ஷணங்களை நிர்ணயிக்கக் கூடாதது போலவும், தூலமாயும் சஞ்சலமாயுமுள்ள, தமோகுண ரஜோகுண வசத்தான மனதால் வஸ்துவின் (ஆன்மாவின்) அனுபவம் கூடாது; வஸ்து அதி சூட்சுமமும் நிச்சலமு மானதால்......" என்று உபதேசிக்கப் பட்டிருப்பது இங்கு காணத் தக்கது.

## எச. திட வறிவுத் திறன்.

447. மோனமே தன் சொரூபமாயுள்ள முழு முதற் பொரு ளான ஆன்மவுணர்வில் எண்ணங்களே எழுவதில்லை யாதலா லும், (தன்மை, முன்னிலை, படர்க்கையெனப்படும்) இடம் என்பது வெறும் எண்ணமாத்திரமே யாவதாலும், முன்னிலை, படர்க்கையாகிய மற்ற இடங்கள் இரண்டும் தன்மை இடம் எழுந்த பிறகே எழுவதாலும், தன்மையே ('நான் இவ்வுடல்' என்னும் அகந்தையுணர்வே) முதல் இடமாகும்.

விளக்கக் குறிப்பு:— ஆன்மா எழுச்சி யொன்று மற்ற இருப் புணர்வே யாகையால் தன்மையும் அங்கில்லை என்பது கருத்து. 'தன்மையின் உண்மையைத் தானுய்ந்து தன்மை யறின்...' என்ற உள்ளது நாற்பதின் 14-ஆவது பாடலையும் இங்குக் காண்க. தமிழ் இலக்கணத்தோர் 'நான்' என்னும் (அகந்தை) உணர்வைத் 'தன்மை இடம்' என்றும், மற்றவற்றை முன்னிலை இடம், படர்க்கை இடம் என்றும் குறிப்பிடுவர். ஏனைய சில மொழிகளிற்போலல்லாமல், தன்மையை ஓர் இடமாகக் குறிக்கும் தமிழ் மரபால் ஆன்ம ஞானத் துறையில் ஓர் பெரும் சகாயம் ஏற்பட்டிருப்பதை நாம் காணமுடியும். மாயையால் எழுப்பப் படும் கற்பனை பலவற்றுள்ளும் காலதேசமே ஆதிக் கற்பனை யாகும். காலம் இடம் இரண்டுள் இடம் என்பது பற்றி மட்டும் இச் செய்யுளில் உபதேசிக்கப் படுகின்றது. காலம் என்பது பற்றி இந்நூலின் **747, 748** ஆவது பாடல்களிலும், உள்ளது நாற்பதின் 15, 16 ஆவது பாடல்களிலும் உபதேசிக்கப்படுகின்றது. அவற்றைப் பிறகு காண்போம்.

காலதேசத்திற் குட்பட்டதோர் உடலையே 'நான்' என்று உணரும் ஓர் எண்ணமே 'அகந்தை' எனப்படுவது. அதனால் முதல் எண்ணமாகிய இவ் வகந்தையினின்றும் எழும் ஒவ்வொரு எண்ணத்திலும் காலதேச அளவை கலந்தே விளங்கும். காலதேசக் கலப்பில்லாமல் யாராலும் யாதோர் எண்ணமும் உண்டாக்கவே முடியாது என்பது ஓர் நூதனம்போற் றோன்றினும் சிறிது ஆராய்வோமாயின் யாவர்க்கும் வியப்பின்றி விளங்கக் கூடியதோர் உண்மையே. இவ் விளக்கத்தோடு இப் பாடலை நோக்க வேண்டும்.

தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடங்களுள் தன்மை எழுந்த பிறகே முன்னிலை படர்க்கைகள் எழுவதால் இடக்கற்பனையுள் தன்மையே முதலிடமாகும் என்று ஸ்ரீ பகவான் குறிப்பிடுகின்றார். பிறகு, இடம் என்பது வெறும் எண்ணமாத்திரமே யாவதால், தன்மை என்ற முதலிடமும் ஓர் வெறும் எண்ணமே என்று உணர்த்தப் படுகின்றது. பிறகு, முழுமுதற் பொருளாகிய ஆன்மநிலையோ மோனமே வடிவாவதால் அங்கு எந்த எண்ணமும் எழ முடியாது என்ற நியாயத்தைக் காட்டி, தன்மை யுணர்வாகிய அகந்தை எழுச்சியும் ஆன்மாவில் அற்பமு மில்லை என்று முடிவு கூறப்படுகின்றது.

தன்மை, முன்னிலை, படர்க்கை யாகிய மூவிடங்களுள் தன்மையே முதலிட மாவது போல, இறந்த காலம், நிகழ்காலம், எதிர்கால மாகிய காலக் கற்பனை மூன்றனுள் நிகழ் காலமே முதற் காலமுமாகும். இதுவும் ஓர் எண்ணமே யாகையால், தன்மையைப் போலவே நிகழ் காலமும் ஆன்மாவில் எழுச்சியோ இருப்போ பெற முடியாது. அதாவது, ஆன்மா கால தேசாதீத மாகையால் அஜாதமே சத்தியம் என்ற திட அறிவு (த்ருட ஞானம்) அனுபவப்பட வேண்டும் என்பதே இப் பாடலின் முக்கியக் கருத்து.

448. இவ்வுடலில் 'நான்' என்று எழுவது எதுவோ அதுவே மனம் ஆகும். 'நான்' என்னும் அவ் வெண்ணம் இவ்வுடலில் முதலில் எவ்விடத்தினின்று எழுகின்றது என்று ஆராய்ந்தால் (ஆராயும் இம் மன அறிவு) இதயத்திற் போய்ச் சேர்ந்துவிடும். ஆகையால் மனம் அங்கிருந்துதான் உற்பத்தி யாகின்றது என்க.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ பகவானருளிய 'நான் யார்?' என்னும் நூலில், "இந்த தேகத்தில் நான் என்று கிளம்புவ தெதுவோ அதுவே மனமாம். நான் என்கிற நினைவு தேகத்தில் முதலில் எந்த விடத்திற்றோன்று கின்றது என்று விசாரித்தால் 'ஹ்ருதயத்தில்' என்று தெரிய வரும். அதுவே மனத்தின் பிறப்பிடம்" என்று ஸ்ரீபகவானருளிய வசன ரூபத்தைக் கொண்டதே இச் செய்யுள்.

449. நினைவுகளைத் தவிர்த்து ஜீவேசுவர ஜகங்கள் என்று ஒன்று மில்லை. சகல நினைவுகளிலும் 'நான்' என்னும் நினைவே (பூக்களில் நார் போல்) விரவி யிருக்கின்றது. எல்லா நினைவு களுக்கும் முதல் நினைவாகிய 'நான்' என்னும் நினைவு எழு மிடமே 'உள்ளம்' (இதயம்) எனப்படும்.

450. இதயத்தில் ஸ்திர நிலை (நிஷ்டை) பெற்ற ஞானிகள் அனைத்திற்கும் இடமாக (அதிஷ்டானமான)த் தம்மையே அறி வரே யன்றி வேறெதையும் காண்பதில்லை. (படக்காட்சியில் படங்களாற் பாதிக்கப்படாமலுள்ள) திரையைப்போல சத்திய வஸ்துவாய் இருந்து (ஸத்) விளங்கும் (சித்) தம்மிடத்திலேயே சகல ஜீவேசுவர ஜகங்களும் இருந்து விளங்குவனபோல் தோன்ற இடந்தந்து அருள்வர்.

## எடு. சுக நுகர்ச்சித் திறன்

451. (புல விடயங்களிற்) பல்வேறு விதமாகக் காணப் பட்டு அனுபவிக்கப் படுவதும், (ஆனால் உண்மையில்) பிளவற்ற அகண்ட வடிவானதும், நம் (ஆன்ம) சொரூபமாகவே இருப்பது மான சுகத்தை, ஒருவன் எவ்வளவிற்குப் புறமுக நாட்டம் நீங்கி இதயத்தில் மூழ்குகின்றானோ அவ்வளவிற்கு நன்றாக அனுபவிப் பன்.

452. உன்னை இதயத்தில் நன்றாக நிலைபெறச் செய்து விட்டால் மெய்ஞ்ஞானம் உதிக்கும். பிறகு நீ சதாசிவ சாந் தானுபவ முற்று, என்றும் தடையின்றிப் பிரகாசிக்கும் மெய்ஞ் ஞான சூரியனாய் வாழ்வாய்.

453. தாம் எண்ணியபடி தமதெண்ணம் நிறைவேறப் பெறும் மனம் அப்போது தன் பிறப்பிடமாகிய இதயத்தை அடைந்து ஆன்ம சுகத்தையே அனுபவிக்கின்றது. இவ்வுலகில் வெறுத்த பொருளுக்குக் கேடுண்டாகும் பொழுதும், இச்சித்த பொருள் கிடைக்கப் பெறும் பொழுதும் நடைபெறும் இவ் வுண்மையே (சுகானுபவமே) சமாதி நிலை, மூர்ச்சை, சுகமான தூக்கம் இவைகளிலும் நடைபெறுகின்றது.

விளக்கக் குறிப்பு :— 'நான் யார்?' என்ற நூலில், ஸ்ரீபகவானது வாக்காகிய வசன வடிவம்:— "உண்மையில் நம் எண்ணங்கள் பூர்த்தியாகும்

போதெல்லாம் மனம் தன்னுடைய யதாஸ் தானத்திற்குத் திரும்பி ஆத்ம சுகத்தையே அனுபவிக்கின்றது. அப்படியே தூக்கம், சமாதி, மூர்ச்சை காலங்களிலும், இச்சித்த பொருள் கிடைக்கும் பொழுதும், வெறுத்த பொருளுக்குக் கேடுண்டாகும் பொழுதும் மனம் அந்தர்முகமாகி, ஆத்ம சுகத்தையே யனுபவிக்கின்றது".

454. சித்தம் என்ற வடிவிற் குறுக்கப்பட்ட இழிவான அற்ப மனத்தாற் கற்பிக்கப்பட்டுள்ள அஞ்ஞான அகங்கார மயக்கமாகிற இவ்வுலக வாழ்வில், மனம் யாதொன்றையும் நினைக்காம லுள்ளதும் கூர்ந்த தெளிவுடன் கூடியதுமானதோர் நிஜானந்த முடையவர் யாரேனும் உண்டோ சொல். (யாரு மில்லை என்பதாம்).

## எசு. உறக்கத் திறன்

455. அன்னியப் பொருள் யாதொன்று மில்லாத ஆழ்ந்த தூக்கத்தில் நல்ல முழுச்சுகத்தை யனுபவித் தறிந்துள்ள மக்கள் அவ்வுறக்கத்தின் உண்மையே உறுதிப் பொருள் என்று அறிந்து போற்றுவதை விட்டு (தூக்கத்திலுள்ள தமது மெய்யான சொரூப நிலையை விழிப்பிலும் இடைவிடாது பெறும் வழிகண்டு, அதில் முயல்வதை விட்டு) தமக்கு வரும் துக்கங்களின் நிவர்த்திக்குச் சகாயமாய் அன்னியப் பொருள் எதையும் தேடுதல் பேதைமையே.

456. அறியாமை என்பது, தூக்கம், மூர்ச்சை இவை தவிர்த்த ஏனைய நனவு கனவுகளில், அடங்காமல் அலையும் அகந்தை மதியாற் காணப்படும் அன்னியப் பொருள்களைப்பற்றி மட்டுமே உண்டாகின்றது. தவிர, எப்போதும் விளங்கும் ஆன்மாவாகிய தன்னிருப்பைப் பற்றி ஒருக்காலும் அறியாமை உண்டாவதே யில்லை என் றறிக.

457. விழிப்பு நிலையை (இந்நனவை) ஓர் விளக்கமுள்ள நிலையாக எண்ணுவது தன் ஆன்ம சொரூபத்தை மறந்த (தன் மறதி என்னும்) அறியாமையாலேயேயாம். இந்த விழிப்பு நிலையை (ஜாக்கிரத்தை) ஓர் சிறந்த உண்மையான பிரஞ்ஞை நிலையாகக் கருதும் பிரமை நீங்கினால் அப்போது உறக்கமே

கேவல அத்துவித மெய்ந்நிலையாக விளங்கும். (அது வரையில் தான் சாஸ்திரங்கள் உறக்கத்தை ஒரு கோசமாக—ஆனந்தமய கோசமாக—க் கூறும்).

விளக்கக் குறிப்பு:— நனவு கனவுகளிலுள்ள உடலகந்தையுணர்வை ஒருவன் தன் இருப்பின் உண்மையுணர்வாகக் கருதுவதால் தான் அகந்தை ஓய்ந்த தூக்க நிலையை தன் இருப்புணர் வற்ற—சுயப் பிரஞ்ஞையற்ற மூட நிலையாக (அஞ்ஞான நிலையாக)க் கருதுகின்றான். ஆனால், தன் உண்மை யுணர்வை உடலபிமானச் சேர்க்கையற்ற சுத்த இருப்புணர்வாக விசார சகாயத்தால் அவன் அறிவானாயின், நனவு கனவுகளிற் கொண்ட தன்னுணர்வாகிய அகந்தையுணர்வு ஓர் வெறும் பிரமையாகக் கண்டறியப்பட்டு, தூக்கம் என்று இதுகாறும் குறிப்பிடப்பட்டு வந்த நிலை தனது பூரண நிஜ, சுயப்பிரஞ்ஞை நிலையே என்ற அறிவு உதிக்கும். "உறக்கத்திற் பூரண அறிவுள்ளது; விழிப்பிற் பூரண அறியாமை யுள்ளது" என்று ஸ்ரீபகவான் 'மஹர்ஷி வாய் மொழி' என்ற நூலிற் கூறியிருப்பது இதுபற்றியே யாம்.

458. (விழித்தபின்) 'தூக்கத்தில் ஒன்றும் தோன்றவில்லை' என்று எண்ணித் தன் உண்மைச் சிறப்பை மறந்து உளங் கலங்குபவன் யார் என்றால், முன் இரண்டு அவத்தைகளான நனவு கனவுகளில் 'காண்பவன் நானே' என்ற கர்த்ருத்துவ முதிர்ச்சியாற் சீர்கேடுற்ற அகங்கார வடிவ ஜீவனேயாகும் (ஆன்மாவாகிய நீயல்ல).

விளக்கக் குறிப்பு:— உறக்கக் காலத்தில் விளங்கி யிருந்த ஆன்மாவிற்கு இவ்வித அறிவு—அறியாமைக் கலக்கம் யாதொன்று மில்லை. இவை யாவும் அகந்தைக்கே என்பது கருத்து. விழித்தெழுந்த அகந்தையாகிய ஜீவனே தான் தூக்கத்தில் தன்னையோ பிறவற்றையோ காணவில்லை என்று கூறுபவன்.

459. மூலமாகிய அகந்தையின் அழிவால் (காண்பான் - காட்சி-காணப்படுபொருள், அறிவான்-அறிவு-அறிபடுபொருள் முதலிய) முப்புடியும் அழியவே, அதன் விளைவாக சகளநிலை (அன்னிய வஸ்துக்கள் விளங்கும் நனவு கனவு நிலைகள்) அற்றுப் போகவே, தானாகிய ஆன்ம சூரியன் எப்போதும் மறைவின்றிப் பிரகாசிக்கும் பட்டப் பகலான சுத்த ஞான நிலையே (சிவ நிலையே) சிவ ராத்திரி யாகும்.

விளக்கக் குறிப்பு:— பிற ஏதும் தோற்றத்திற்கு வராததால் 'ராத்திரி' என்றும், ஆயினும் ஆன்மாவாம் தன் விளக்கத்தின் பூரண சிறப்பு அங்கு மிளிர்வதால் 'சதோதயமாம் சுத்தப் பகல்' என்றுங் கூறப்பட்டது.

460. நனவு கனவுகள் உண்டாவதற்குக் காரணமா யிருந்த அஞ்ஞதிமல வாசனைகள் அழிந்து விட்டால், பிறகு (இது வரை) கொடிய தாமத வழியிற் சேர்ப்பிப்பதாகக் கருதப்பட்டும், 'சூனியம், மூடம்' என்று இகழப்பட்டும் வந்ததான அந்த உறக்கம் ஒன்றே துரீயாதீத நிலையாக விளங்குவது தெரியும்.

461. ஆனந்த மயமானது ஓர் கோச மாகக் கருதப்படுவது ஏனெனில் (பிரவிருத்தி நிறைந்த) விழிப்பு நிலையில் 'விழிப்புற்ற இவனே நான்' என்று விஞ்ஞானமய கோசனாகிய அகந்தையின் மேல் தனக்கு ஏற்பட்டுள்ள பற்றாகிய மோகத்தால் தான். இவ்வித வலிய பற்றையுடைய இவ் விஞ்ஞானமய கோசன் (அகங்காரம்) வாசனுக்ஷயமுற்று அழிந்தால், பிறகு இதுகாறும் அஞ்ஞான இருளாகக் கருதப்பட்டு வந்தது எதுவோ அந்த ஆனந்த மயமே 'கோசம்' என்ற தன்மை நீங்கி, நம் சொரூப ஆனந்த நிலையேயாக மிஞ்சி நிற்கும்.

விளக்கக் குறிப்பு:— நித்திரையாகிய ஆனந்த நிலையை ஓர் கோசமாக மனிதன் நம்புமாறு சாஸ்திரங்களாற் கூறப்பட்டு வருவதற்குக் காரணம் யாதெனின் அதை அடிக்கடி விட்டுவிட்டுப் பிரவிருத்தி வடிவான விஞ்ஞானமயத்தின்மேல் நமக்கு அபிமானம் வந்துவிடுவதால் தான். விஞ்ஞானமய மான பிரவிருத்தியின் மேலுள்ள ஆசையே (பற்றே) இவ்வாறு ஒருவனை ஆனந்த மயத்தினின்று இழுத்து வருகின்றது. இப் பற்றற்றால் ஆனந்த மயத்தை விட்டு நீங்குதல் ஏற்படாது. அப்போது நீங்கா நிலையாகிய ஆனந்த நிலை ஓர் வெறுங் கோச நிலையாகாமல் நமது யதார்த்த அனந்தானந்த நிஜ நிலையாகவே விளங்கும் என்பதாம்.

462. தூக்கம் வந்து கவ்வும் வரையில் 'இருக்கிறேன்' என்ற தன்னுணர்வின் விளக்கம், பிற எண்ணங்களின் எழுச்சியாற் கேடுண்டாகாதபடி, திரமாய் இருக்கப் பெறுவோ மானால், 'மறதியாகிய தூக்கவிருள் வந்து என்னை மயக்கி விட்டதே (தூங்கி விட்டேனே)' என்று உள்ளம் சோர்ந்து வருந்த வேண்டி வராது (அதாவது துயிலே வராது என்றவாறு).

குறிப்பு:— 'இருக்கிறேன்' என்னும் பிரஜ்ஞை அங்கும் தொடரு மாகையால் அது தூக்கமாகாமல் நம் சொரூப விளக்க நிலையே யாக அனுபவப்படும் என்பதாம்.

## எ. மெய்ப்பொருட் டிறன்

463. விசாரிக்காத வரையில் உள்ளது போல் விளங்குவதும், விசாரித்ததும் இல்லாமற் போவதுமான இந்த ஆச்சரிய

மான மனமயக்கம் (அஞ்ஞான ஜீவத்தன்மை) என்னும் பாம்பு, விசாரத்தின் பயனுய்க் காணுமல் மறையும்போது, அது எந்த மூலவஸ்துவிற் போய்ப் புதைபடுகின்றதோ அந்த நிஜ போத மான ஆன்மா வென்னுங் கயிறு ஒன்றுதான் உண்மைப் பொரு ளாக விளங்கும்.

464. எவ்வித விருப்பு வெறுப்பு மற்று, 'இருக்கிறேன்' என்ற இயல்பு வடிவில் மட்டும் திகழும் ஆன்ம நிஷ்டையில் அறிவு தெளிந்து விளங்குவதால், அங்கு யாதொரு வேறுபாட் டுணர்ச்சியு மில்லாமல் விளங்கும் பேரானந்த வுணர்வே மெய்ப் பொரு ளாகும்.

465. எல்லாக் காலங்களிலும் எல்லா விடங்களிலும் அனுதி யாக ஒரே பொருளே இடைவிடாமல் இருந்து விளங்குவதால், தவிர்க்க முடியாத (மறுக்க முடியாத) தன் சொரூபமான ஆன்மா ஒன்றைத் தவிர 'என்றும்' எனப்பட்டதும் 'எங்கும்' எனப் பட்டதுமான காலதேசங்கள் வெறுங் கற்பனையாக நீங்குவனவே யாகும்.

## எஅ. கர்த்தவ்வியக் கழற்சித் திறன்

466. (கர்மங்களைச் செய்பவன் யான்) என்னும் கர்த்ருத் துவ புத்தி நீங்கியவர்க்கு மட்டுமே பரிசுத்த உபசாந்த சுகம் தன் உள்ளத்தில் உணர்வாகும். செருக்குணர்வான (கர்த்தவிய புத்தியான) இவ் வகங்காரம் ஓர் தீய நச்சு விதை யாகையால் இதுவே எல்லாத் துன்பங்களையும் மேன்மேலும் விளைவிப்ப தாகும்.

467. ஓயாத கவலைகளையே பயனுகத் தருகின்ற (இது செய்வேனுக; இது தவிர்வேனுக என்ற) சங்கற்பங்களால் தூண்டப்பட்டு, அதற்கேற்பக் கர்மங்களைச் செய்துகொண்டே போவதை விட்டு, ஜீவனுக்குத் தலைவனுன இறைவனது திரு வருள் எவ்வாறு நம்மை இயக்குமோ அவ்வாறே நடக்க முழு மனத் துடன் விட்டுக் கொடுத் திருத்தலே கடவுட் பூஜையின் சரியான முறை யாகும்.

468. பத்தினியாகிய திரௌபதி தன் ஆடையைப் பற்றிக் கொண்டிருந்த தனது கைப்பிடியையும் கடைசியில் நழுவ விட்டு விட்டு (இரு கரங்களையும் சிரமேற் கூப்பிக் கொண்டு) 'சரணுகதி'

என்று கூவித் தொழுதாள். அதனுல் அவளது ஆடையை யுரிந்துகொண்டிருந்த துச்சாதனனும் அதமன் மூர்ச்சித்து விழும்படி, கண்ணபிரானது திருவருளால் ஆடை வளர்ந்து இவ் வுலகில் அவள் மானங் காக்கப் பெற்று ளல்லவா?

விளக்கக் குறிப்பு:— திரௌபதி தன் ஆடையைத் தன் கை வலிமையாற் பிடித்துக் கொண்டு கண்ணனைக் கூப்பிட்ட வரையிலும் அவனருள் தோன்றுமல் இருந்ததும், கண்ணனது காக்குங் கருணையில் நம்பிக்கை வைத்துத் தன் ஆடையின் மேல் தான் கொண்டிருந்த கைப்பிடியையும் பிறகு நழுவ விட்டுக் கடைசியாக அழைத்த போதே அவனது திருவருள் சுரக்கப்பட்டு ஆடை வளர்ந்ததையும் இங்குச் சுட்டிக் காட்டி நாமும் நம் கர்த்தவ்வியம் முழுவதையும் கடவுளிடம் விட்டு வாழ்ந்திருப்பதே சிறந்தது என்று உபதேசிக்கப் படுகின்றது.

469. தனக்கு இன்னதுதான் நன்மை என்றறியாத ஓர் சிசு தன் பெற்றோரையே சார்ந்து கவலையற்றிருப்பது போல, பக்த ஞெருவன் தனக்கு உறுதி பயப்பது எதுவெனத் தானே தீர்மானித்து ஆற்ற முயலாதவனாய் இறைவனது திருவருட் கருணையில் முழுநம்பிக்கை வைத்துக் கவலையற்று, அச்சிற் சக்தியையே துணைகொண்டு, இறைவனது பாதங்களைச் சேர்ந்து (ஆன்ம நிஷ்டையாகிய மெய்யான) இறைபணியில் மாயைக் குற்றமுடைய தேகோகம் புத்தியாற் கர்த்ருத்வத்தோடு செய்யப்படும் கர்மங்களற்று நிலை பெறுகின்றான்.

குறிப்பு:— உண்மையில் பக்தர்கள் தமது கர்த்ருத்வமாகிய முயற்சியைவிட இறைவனது கருணையாகிய ஞானசக்தியையே (காரணமற்ற அபார கருணையால் ஒவ்வொருவருள்ளும் 'நான் - நான்' என்று விளங்கிக் கொண்டிருக்கும் உள்ளவுணர்வாகிய சிற்சக்தியையே) நம்பி நாடி நிற்பதால் அகங்கார மற்ற ஆன்மசாட்சாற்காரம் எய்துகின்றனர் என்ற உண்மை இப்பாடலால் உபதேசிக்கப் படுகின்றது.

470. இன்றைக்கு உனக்கு ஆகாராதி வாழ்வின் இன்றி யமையாப் பொருள்களை யருளியுள்ள கடவுள் அவ்வாறே என்றைக்கும் அவ்வக் கால இடங்களுக்கேற்ப நிச்சயமாக அருள்வான். ஆதலால் பிற் காலத்திற் கென்றும், நாளைக் கென்றும் உடல் வாழ்வுக்குற்ற பொருள்களைச் சேர்க்கும் சிந்தனை யற்று, உன் வாழ்வின் சகல பாரங்களையும் இறைவன் திருவடிகட்கே யாக்கியவனாய் வாழ்ந்து வருக.

471. 'நான் இறைவன் கையில் ஓர் கருவி (ஆள்) ஆகட்டும்' என்ற நோக்கத்தோடு யோக நிஷ்டையில் முயன்று

தவம் புரிவது கூட உயர்வற உயர்ந்த இறைபணியான ஆன்ம சமர்ப்பணத்திற்கு ஊனமான காரியமே என்று உணர்க.

குறிப்பு:— 'நான் ஈசன் கையில் ஓர் ஆள்' என்ற பாவனைகூட தனக்கோர் தனி இருப்பு வைத்துக் கொள்ளும் அகங்கார வடிவ மாகவே அமைவதால், நானற்ற நிலையான, பராபத்தியான, ஆன்ம சமர்ப்பணத்திற்குத் தக்கதல்ல; அது குறை பாடே என்பது கருத்து.

ஸ்ரீ முருகனர் அளித்த விளக்கம்:—'உலகை உய்வித்தலில் நான் ஈசனது கருவியாக நிற்பேனாக' என்று சிந்தித்து அதற் கான ஏதோ ஓர் வித யோகம் புகும் சாதகனது நிஷ்டைகூட, அதை ஆற்றுவானது காமியக் கருத்தால் தன் செம்மை கெடு கிறது என்று காட்டி அதனால் ஆன்ம சமர்ப்பணத்திற்கு அது ஊறுபாடு விளைவிப்பதாம் என்றார்.

மூல நூலின் முன்னுரையில் இச் செய்யுள் விசேடித்துக் குறிப்பிடப்பட்டதும் காண்க.

472. இறைவனுக்கு ஆளாகிய தான் (ஓர் பக்தன்) 'இறைவனது கருவியாக வாவது மிஞ்சி நிற்கிறேன்' என்ற (ஓர் தனியிருப்பு) எண்ணமும் உண்டாகாமல் அகந்தையற்று மோனமாய் நிச்சலமாய் சும்மா விருக்கவே, அதுவே சொரூப நிஷ்டையாக விளக்க முறும். இச் சொரூப விளக்கமாகிய பேரறிவே பிரம்ம ஞானம் ஆகும்.

விளக்கக் குறிப்பு:— ஆன்ம சமர்ப்பண மாகிய பக்தி மார்க்கத்தில் (பிரபத்தி மார்க்கத்தில்) ஒருவன் தன்னை இறைவனது அடிமை என்று எண்ணுவது கூட அகந்தை யுயிர்த்திருக்கும் நிலையே யாவதால் சமர்ப்பணம் சம்பூரண மாகாமற் போகிறது. "நான் இறைவனது அடிமை" என்ற அகம்பாவமும் எழாது சும்மா விருப்பதே சொரூப நிஷ்டையாகி விடுவதால், இந் நிலையில் விளங்கும் தன் இருப்பறிவே (சத்சித்தே) பிரம்ம ஞானமும் ஆகி யமைகின்றது. அத்வைத பிரம்ம ஞானம் பிரபத்தி மார்க்கத்திற் சித்திக்கும் உபாயம் இதுவே என்றறிக.

473. இறைவன் ஒவ்வொருவர் உள்ளத்திலும் அவ் வுள்ள மாகவே இருந்துகொண்டு அவரவர்க்கு அமைந்த பிராப்தப் பிரகாரம் யாவற்றையும் (தம் சந்நிதி மாத்திரத்தால் மோனமாய்) செய்விப்பான். ஆகையால் நாமும் நாம் உதித்த விடத்தில் (அவ்விதயத்திலேயே) நழுவாமல் அவனது சொரூபமான உள்ள மாகவே ஒன்றி நிச்சிந்தையாக நின்றால் அவ்வாறே (நமக்கு ஆக வேண்டுவன) யாவும் முட்டுப் பாடின்றி முடிவனவாம்.

474. 'மரம் வைத்தவன் தண்ணீர் விட்டுக் காப்பாற்றுவான்' என்ற முதுமொழியின்படி, தம்மைப் படைத்த இறைவனிடம் திடமான நம்பிக்கை உள்ளோர் மனக் கவலைப்படவே மாட்டார். மரம் வைத்தவன் அது நீரில்லாமல் வாடுவதைப் பார்த்துக்கொண்டு வாளா விருப்பானுயின், அந்தப் பரிதாபக் காட்சியுங்கூட அந்த நிலையைக் காணும் அவனுக்கே பாரமாகட்டுமே. (நாம் ஏன் கவலைப்படவேண்டும் என்றவாறு).

475. உலகங்கள், உயிர்கள் யாவும் ஓர் ஆல மரத்தின் கிளை, இலையாதிகள் போன்றனவாம். அவை யாவற்றிற்கும் இறைவனே வேராக இருப்பதால், ஈசனுக்கு அர்ப்பிக்கப்படுவன யாவுமே, ஈசனுகிய வேரிலிருந்து முளைத்துள்ள உலகங்கள் உயிர்களாகிய மரம் முழுவதற்கும் போய்ச் சேர்வனவாம்.

விளக்கக் குறிப்பு:— ஒருவன் தன்னை ஈசனுக்களிப்பது என்னும் ஆன்ம சமர்ப்பணமானது ஆல மரத்தின் வேரில் நீர் வார்த்ததற்குச் சமானமாகின்றது. மெய்ஞ் ஞான நிலையாகிய இவ் வான்ம சமர்ப்பணத்தைப் புறக்கணித்துவிட்டு, ஒருவன் தன்னை உலக உயிர்கட்குச் சேவை செய்பவனுகக் கருதி ஈடுபடுவானுயின் அது இலை கிளைகளுக்கு நீரிறைத்தலுக்குச் சமானம் என்று உபதேசிக்கப் படுகின்றது. அவன் தன்னை ஈசனுக் களிப்பதால் உலகம், உயிர் யாவற்றிற்குமே உண்மையான சேவை செய்தவ ஞகின்ருன்.

இங்கு சிலர் ஸ்ரீ பகவானது உபதேசவுந்தியார் 5-வது பாடலாகிய "எண்ணுரு யாவு மிறையுரு வாமென எண்ணி வழிபட லுந்தீபற, ஈசனற் பூசனை யுந்தீபற" என்ற உபதேசம் இதற்கு முரணுகின்றதே என ஐயுறுவதுண்டு. ஆனுல் உண்மையில் இவற்றுள் முரணென்று மில்லை. எவ்வாறெனின், என்னுருவான இப் பிரபஞ்சத்தை இறையுருவாக எண்ணி வழிபடுவது தனது சித்த சுத்திக்கான நல்லதோர் நிட்காமிய பூசையே என்று தான் உபதேசவுந்தியார் 5வது பாடல் கூறுகின்றது. சித்த சுத்தி பெற வேண்டிய நிலையிலுள்ள ஓர் சாதகனுக்கு அதற்கு ஏதுவாக விதிக்கப்படும் இவ்வுலக சேவையாகிய வழிபாட்டில் அவன் உலகவுயிர்களைக் கடவுளாகக் கருதுவது தன் மனக்கற்பனையினுலேயே தவிர மெய்க்காட்சி பெற்றதனுலல்ல. மேலும் இவனது இவ்வெண்ணத்தாலும் வழிபாட்டாலும் ஏற்படுவது 'சித்த சுத்தி' யாகிய இவனது நன்மையே தவிர உண்மையான உலக நன்மையல்ல. ஆனுல் ஆன்மசமர்ப்பணமாகிய அகந்தைத் தியாகத்தால் 'ஜீவேசுவர ஜகத்' தென்னும் ஆல மரத்தின் அடிவேரில் நீரூற்றியவனுக அவன் ஆகும் போதுதான் உலகம் - உயிர்கள் ஆகிய இரு பொருள்களுக்கும் மெய்யான நன்மை செய்தவனுகின்ருன். எண்ணுரு யாவுமே இறையுருவாக மனக்கற்பனை செய்து சேவையாம் வழிபாடு

செய்வதால் **தனக்கே நன்மை விளைவதும்,** ஆன்மசமர்ப்பண நிலையாகிய மெய்ஞ்ஞானத்தால் மட்டுமே **உலகம் - உயிர் இவை களுக்கு உண்மையான நன்மை விளைவதும்** இங்கு இவ்வாறு விவேகித்துக் காண்போமாயின், இரு உபதேசங்களும் தம்முள் முரண்படுவன வல்ல என்பது விளங்கும்.

ஆன்ம சமர்ப்பணத்தால் உலகுயிர்கட்கு உண்மையான நன்மை விளைவ தெவ்வாறெனின் ஓர் புலியால் தன் நண்பர்கள் பலர் படுகாய முற்றுக் கிடப்பதாகத் தன் கனவிற் காணும் ஒருவன் தான் விழித்துக் கொள்வதால் மட்டுமே அவர்களுக்கு உண்மையான உபகாரம் செய்தவனுவதும் வேறு எவ்வித முயற்சியாலும் துன்ப நிவாரணம் உண்மையாக நடவாததும் போலவே, அகந்தைத் தியாக ரூப ஆன்ம சமர்ப்பணத்தால் ஏற்படும் மெய்ஞ்ஞான விழிப்பால்தான் ஜீவேசுவர லோகோபகாரம் (ஈசன் நற்பூசனை) சம்பூரணமாகும். 'சித்த சுத்தி' எனப்படும் மெய்யான கர்மயோகப் பலனைப் பெறுவதற்கு மாறாக 'உலக சேவை' என்ற பெயரால் கர்த்துருத்துவ புத்தி முற்றி, அகங்காரம் ஓங்கப் பெறும் சாதகர்களின் சீர்கேட்டைத் தவிர்க்கும் நோக்கத்துடனேயே இங்கு ஸ்ரீ பகவானுல் பக்தி - ஞான மார்க்கங்கள் வலியுறுத்தப் படுகின்றன என்று வாசகர்கள் கண்டு கொள்க.

## எகூ. நைஷ்கர்மிய சித்தித் திறன்

476. ஒருவன் கர்மங்களைச் செய்தாலும் செய்யாவிட்டா லும் 'கர்மம் செய்யுங் கர்த்தா நான்' என்னும் அஞ்ஞான பந்த வடிவான ஜீவத்துவ அகந்தை அடியோ டழிந்து ஒழிந்து நிற்றலே நைஷ்கர்மிய சித்தியை அடைந்த நிலையாகும் என்றறிக.

குறிப்பு:— 'நைஷ்கர்மிய சித்தி' என்பதற்குச் சகல கர்மங்களையும் விட்டொழித்து ஒன்றும் செய்யாதிருக்கும் நிலையை யடைதல் என்று மக்கள் பொருள் கொள்வ துண்டு. ஆனுல் உண்மை அது வல்லவென்றும், கர்த்துருத்துவ நாசமே சரியான கன்மநாசம் என்றும், நிஷ்காமிய கர்மம் எனப்படுவதும் நைஷ் கர்மிய சித்தி எனப்படுவதும் இதுவே யாகும் என்றும் ஸ்ரீ பகவான் இவ் வுபதேசத்தால் விளக்குகின்றூர்.

## அ0. ஆன்ம சமர்ப்பணத் திறன்

477. யாரொருவர் 'நான்' என்னும் அகந்தையை (அதன் விளைவான 'எனது' என்னும் மமதையுடன் — உடல் பொரு ளுடன்) பூரணமாகக் கடவுளுக்குச் சமர்ப்பித்து விடுவரோ அவர்க்கு இங்கேயே இப்போதே இறைவன் தன்னையே அளித்

தருள்கின்றான். மேற்கூறியவாறு அகந்தையை இறைவனிடம் முற்றும் இழந்து அப் பரம்பொருளாகவே விளங்கும் அறிவைப் பெற்ற ஞானிகளே மிக வுயர்ந்ததும் பரிசுத்த மானதுமான சிவானுபவ ஆனந்த வெள்ளத்தில் மூழ்கி யிருப்பவராகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:—'நான்' என்னும் அகந்தையாகிய தன்னை இறைவனிடம் இழத்தலே 'எனது' என்னும் உடல் பொருளாவி மூன்றையும் பூரணமாக ஈசனுக்குச் சமர்ப்பிப்பதாகும். "எல்லா மறவென் னையிழந்த நலம்" என்று ஞான முதிர்ச்சியைக் குறிப்பிடுகின்றார் அருணகிரியார். எனவே தன்னை யிழப்பதே எல்லாம் (உடைமை யெல்லாம்) அற்றுப் போதலாம் என்பது இதனின்றும் தெரிகின்றது. ஆன்ம சமர்ப்பணமாகிய அக்கணமே ததாகார போதமாம் சிவானுபவம் சித்திக்கின்றது என்று இங்கு உபதேசிக்கப்படுவதால் **பரபக்தியும் ஞானமும் ஒருங்கே நிகழப்பெறும் அரிய உண்மை** வலியுறுத்தப் பட்டதாம்.

478. ஆராயு மிடத்து, இறைவனை (ஆன்மாவை) இடை விடாது தியானிக்கும் புத்திவன்மையால், "உடலுருவே நான்" என்று இதுகாறும் இருந்துவந்த அகந்தை யுணர்ச்சி ஓய, அதனால் ஆண்டவன் திருவடியில் (ஆன்ம சொரூபத்தில்) ஜீவ சமர்ப்பண மாகிய தன்னிழப்பு சித்திப்பதே பல பிறவிகளாகப் பாடுபட்டுச் செய்து வந்த பக்தியின் பயனாக முடிகின்றது.

479. யாவும் தான் ஒருவனேயாக (ஏக வஸ்துவாக) விளங்கும் கடவுளுக்கு அன்னியமாக ஜீவனொருவன் தான் தனியிருப்புள்ளவனாக இருப்பது அசம்பாவிதம். ஆகையால் அவ்விதம் தான் ஒருவன் இருப்பதா யுணரும் தனியிருப்புத் தன்மையை விட்டொழிப்பாயாக. கொடியதும், சதா சலன முள்ளதுமான அகங்கார வடிவ ஜீவனின் பரிபூரண சமர்ப் பணமே பரமசாந்தி விளங்கும் பரா பத்தியின் லக்ஷணமாகும்.

480. "பரமான்ம சொரூபியான இறைவனுக்கு அகந்தை வடிவான ஜீவான்மாவை (ஜீவனை) அர்ப்பணம் செய்" என்று இதுகாறும் சாத்திரங்களாற் கூறப்பட்டு வருகின்ற தன்றோ? (அதன் உண்மை என்னவென்றால்) அந்த ஜீவன் முன்பே ஆண்டவனது சொத்து ஆவனே தவிர வேறு யாருடைய உடைமை ஆவன்? ஆகையால், ஆண்டவனிடமிருந்து அவனது உடைமையைக் கள்ளத் தனமாக "நான், எனது" என்ற கருத்தாற் கவர்ந்துகொண்ட பிழையை யுணர்ந்து,

கழிவிரக்கங்கொண்டு (வெட்கமுற்று) கடவுளது திருவடியிலேயே அவனது சொத்தைத் திருப்பி ஒப்படைத்து விடுவதே நம் கடமை.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனர் கூறியது:— 'ஆண்டவனுக்கு ஆன்மாவைச் சமர்ப்பித்தல் வேண்டும்' என்போர் பிரபத்தியின் நுட்பத்தை யறிந்தா ரில்லை! அன்னிய சுதந்திரம் இருந்தா லல்லவோ ஆன்ம சமர்ப்பணம் ஓர் நோன்பாகும்? என்றும் ஜீவன் ஈசனுடைமையே யாகையால் தான் சுதந்திர போதமாக இதுகாறும் இயங்கிய களவுக் கிரங்கி, இனி மீண்டும் 'நான்' என்றெழாமல் ஒடுங்கி விடுதலே தலையாய கடன் என்றார்.

481. "இறைவா, என் இஷ்டப்படி எதுவும் நடைபெற வேண்டியதே யில்லை; யாவும் உனது திருவுளப்படியே நடப்பதாகுக" என்று ஆண்டவனது அருளிச்சைப்படியே விடப்பட்ட வாழ்வில் இன்புற் றிருக்கக்கூடிய பக்தன் ஒருவனது உள்ளம் அச்சம் அடையக் காரணமே இராது. (எதனுலும் அவன் அச்சமுறுன் என்பது கருத்து)

482. இறைவடிவான ஆன்ம சொரூபத்தை அன்போடு அனுசந்தானம் செய்யும் தன் உள்ளத்தில் பூர்வ வாசனைகளால் உந்தப்பெற்று எழும் பிற வெண்ணங்களுக்கு இடம்கொடாமலிருப்பதே தன்னை ஈசனுக்கு அர்ப்பித்தல் என்பதாம்.

குறிப்பு:— "நான் யார்?" என்னும் நூலில் ஸ்ரீ பகவானது அருள் வாக்காவது:— "ஆன்ம சிந்தனையைத் தவிர வேறு சிந்தனை கிளம்புவதற்குச் சற்றும் இடங்கொடாமல் ஆன்ம நிஷ்டா பரனுய் இருப்பதே தன்னை ஈசனுக் களிப்பதாம்".

483. "இறைவா, உன் இஷ்டம் எதுவோ அதுவே என் இஷ்டமும் ஆகும்" என்னும் மனப்பான்மையுடன் தன்னிஷ்டம் முழுவதையும் விட்டுவிடுவதே, முனைப்புடன் எழுகின்ற முதல் அஞ்ஞான வடிவான கெட்ட அகந்தையானது நாசமாக்கப் பெற்ற, சரியான ஆன்ம சமர்ப்பண மாகும் என்று அறிந்து (நடந்து) கொள்க.

484. தனக்கோர் எல்லையற்ற பரிபூரணனுன சர்வேசுவரனுடைய பொருளை (இவ் வுயிர் உடல் உலகமாதிகளை) 'நான்' என்றும் 'எனது' என்றும் கருதிக் கவர்ந்து அவ் வபிமான மோகத்தால் அவைகளிற் பற்றடைந்து நிற்கும் அகங்காரி யாகிய

ஜீவன் (கள்வன்), 'நான் யார் அல்லது எங்கிருந்து வந்துள்ளேன்?' என்று உண் முகப்பட்டு விசாரிப்பானுயின், அப்போது அவன் எங்கே இருக்க முடியும்? (முடியாது; இருப்பற்று மறைந்தே தீருவன் என்றவாறு).

விளக்கக் குறிப்பு:— மனம் உடல் உலகாதிகள் ஆன்மாவினின்றே கற்பனைத் தோற்றங்களாகக் கிளம்பிக் காணப்படுவதால் அவை ஆன்மாவாம் ஈசனுக்கே யுரிய சொத்துக்கள் எனப்பட்டன.

விசாரித்தால் இறைவனுக்கு அயலாக 'நான்' என்று ஒருவன் இல்லவே யில்லை எனக் காண்பானுதலின், 'உள் நினையின் எங்கே உளான்?' என்றுர்.

485. எப்போது அகந்தை ஆன்ம நிட்டையில் அழுந்தி மனே வாக்குக் காயம் மூன்றும் கட்டை போற் செயலற்றுச் சிவசக்திக்குப் பலியாகி அழியுமோ (மனே நாசம் எய்தப் பெறுமோ) துன்பமற்ற ஆத்ம சாந்தானந்தம் விளங்கும் அப்போதுதான் ஆன்ம சமர்ப்பணமும் நிஜமாக (சம்பூரண மாக)ச் செய்யப்பட்ட தாகும்.

486. பரிசுத்த ஆன்மவடிவாக இருக்கும் கடவுளுக்கு நாம் பக்தியோடு ஆன்மாவைச் சமர்ப்பணம் செய்வது என்பது, ஒருவன் இனிய வெல்லத்தாற் செய்யப்பட்ட பிள்ளையாருக்கு அந்தப் பிள்ளையாரின் கட்டைவிரற் பகுதியையே பிட்டெடுத்து நிவேதனம் செய்யும் தன்மையைப் போன்றதே யாகும்.

விளக்கக் குறிப்பு:— பக்தி மார்க்கத்தில் மிகச் சிறந்ததும் முடிவான உபாசனையாகக் கருதப்படுவதுமான 'ஆன்ம சமர்ப்பணம்' என்பது கூட, மேற்கூறப்பட்ட உபதேசத்தால் அர்த்தமற்ற செயலாகும் போது ஏனைய பூஜைகளும் உபாசனைகளும் என்ன பொருளுடையன என்பதைக் கூறவும் வேண்டுமோ? ஆகவே, 'நான்' என்ற எழுச்சி வடிவான ஆன்மாபகார தோஷத்திற்குச் சிறிதும் இடந்தராது ஆன்மாவில் நிலைபெறுதலே (ஆன்ம நிஷ்டையே) உண்மையான உபாசனை என்பது கருத்து.

487. (மக்களே, உமது பக்திக்குப் பயனுக இன்னது தர வேண்டும் என்றவாறு) எந்த ஒரு நிபந்தனையும் இறைவன்பாற் போடாமல், இடப்பாகத்தில் அம்பிகையைக் கொண்ட இறைவன் திருவடியில் (அதாவது ஆன்மாவில்) உமது மனத்தை நிலை

பெறச் செய்யுங்கள். அப்போது வஞ்சக அறிவான 'நான், எனது' என்னும் அகந்தை-மமதைகள் அழியவே பேரானந்தப் பிரம்ம சொரூபம் தானே நன்றாய்ச் செழித்தோங்கி விளங்கும்.

## அக. பகைவர்மாட் டொழுகற் றிறன்

488. பிறர் (பகைவர்) எவ்வளவுதான் கெட்டவர்களாகத் தோன்றினும், நல்லோர் (சாதகர்கள்) தம் மனம் நொந்து அவர்களைக் கொஞ்சங்கூட வெறுக்கலாகாது. விருப்பம் என்பது எப்படி சாதகர்களால் விலக்கப்படத் தக்கதோ அவ்வாறே வெறுப்பும் விலக்கப் படுவதற்கே உரியதாம்.

குறிப்பு:— 'நான் யார்?' என்ற நூலின் கீழ்க்கண்ட ஸ்ரீ ரமண வாக்கே இச் செய்யுள்:—

"பிறர் எவ்வளவு கெட்டவர்களாகத் தோன்றினும் அவர்களை வெறுத்த லாகாது. விருப்பு வெறுப்புகள் இரண்டும் வெறுக்கத் தக்கன".

489. சாதகன் ஒருவன் எதை (இத் தேகத்தையும் தேகாத்ம புத்தி வடிவான அகந்தையையும்) 'நானல்ல' என்று வெறுத்து ஒதுக்குகின்றானோ அதைத்தான் (சாதகன் எனப்படும் அந்த ஜீவ ரூபத்தைத் தான்) அவனைப் பகைக்கும் மக்களும் இகழ்ந்து வெறுக்கின்றார்கள் அல்லவா? ஆகையால் அச் சாதகனைப் பலவாறு தூற்றும் பகைவர்கள், நல்லதோர் பொன்னை அடித்து அணிகலனின் உருவமாக்கும் தட்டானுக்கு அவனது பட்டடையை போன்ற சகாயிகளே ஆவர்.

விளக்கக் குறிப்பு:— ஓர் சாதகன் என்று குறிப்பிடுவது அந்த ஜீவ போதத்தையே. தன்மறுப்புச் சாதனையால் இது வெறுத்து அழிக்கப்பட வேண்டிய தொன்றாகும். அப்படிப்பட்ட உண்மையான சாதகன் ஒருவனை வெறுக்கும் பகைவர்களும் அவனால் எப்போதும் வெறுக்கப்படும் அகந்தையாகிய ஜீவனையே இகழ்வதால், அவர்கள் இவனாற் செய்யப்படும் 'அகந்தை யொழிப்பு'ச் சாதனத்திற் சகாயம் செய்தவர்களே யாகின்றனர். தட்டான் ஒருவன் தன் கையிலிருக்கும் சுத்தியலைக் கொண்டு பொன்னைத் தட்டும் போது அதன் அடியிலிருக்கும் பட்டடை, பொன்னின் கீழ்ப்பாகத்தைக் கெட்டியாகத் தடுப்பதால், தட்டானின் ஒவ்வொரு அடியையும் பயனுள்ளதாக ஆக்குகின்றது. பொன்னை எதிர்ப்புறம் தாக்குவதற்கு அது சமமாகித் தட்டானுக்குச் சகாயம் பண்ணுவதுபோல் சாதகனின் ஜீவபோதத்தை மறுபுறம் தாக்கும் சகாயிகளாகவே அவனைப் பகைப்பவர்களும் ஆகின்றனர் என்பதாம்.

490. பகைமை கொண்டவர்களேயும் அன்பால் வெல்லும் ஆண்மையும் வலிமையும் பொருந்திய சக்திமானே மெய்யான முனிவனும்.

குறிப்பு:— ஸ்ரீ முருகஞர் கூறியது:— ஒருக்காலும் துவேஷம் துவேஷத்தால் அழியப் பெறுது என்பது புத்தரின் போதனே. ஆன்மீக வாழ்வை மேவினோர் சிலரும் அடாதன கண்டபோது அதனே ஒறுத்தல் தம் கடன் எனக் கருதி வெகுளி பூண்டு ஒழுகுபவ ராதலின் இதை வற்புறுத்தினு ரென்க.

## அஉ. மித வாழ்க்கைத் திறன்

491. சில பெரிய செல்வந்தர்கள் தாம் ஆடம்பரமான பொருள்களோடு வாழ ஆசைப்படாமல் அவைகளே அகற்றினல், வறுமையில் வாடிப் பரிதவித்துச் சோர்வடையும் பல கோடி மக்கள் சிறப்போடு வாழ முடியும்.

492. அருளால் எல்லா உயிர்களேயும் ஆளும் கருணே வள்ளலான கடவுள் எல்லா வுயிர்களுக்கும் வேண்டிய உணவை வேண்டிய அளவினதாகவே விளேவித் துள்ளார். ஆகையால், இவ் வுலகில் ஒருவன் தன் பசி தீருவதற்கு வேண்டிய அளவிற்கு மேல் (ருசியை முன்னிட்டு) ஒரு கவளமாவது அதிகமாகப் புசிப் பாஞயின், அது மற்ற உயிர்களின் உணவை வன்முறையால் திருடி யுண்ட பாவமே யாகும் என்றறிக.

விளக்கக் குறிப்பு:— 'விளேத்தல், புசித்தல்' என்னும் வினேச் சொற்கள் உணவுச் சேமிப்பை மட்டுமே குறிப்பன வாயினும், எல்லாப் பொருள்களுள்ளும் உணவுப் பொருளே விசேஷ மாவதால், அதைக் குறிக்கும் முறையில், வாழ்வின் நுகர்ச்சிக்காக எவ்வெப் பொருள்களே ஒருவன் அளவுக்கு மேல் சேமித்தாலும் சேமித்த அளவிற்கு அது பாபச் சேமிப்பே என்று கூறியதாகக் கொள்க. இக் கருத்து அடுத்த பாடலால் ஊர்ஜிதமாவதும் காண்க.

## அங. அமித தோடத் திறன்

493. அளவை மீறுங் குற்றத்தால் அமுதமும் நஞ்சாகி விடும். அளவை மீறுங் குற்றத்தால் விளேயுந் துன்பங்கள் பற் பலவாம். ஆகையால் அளவை மீறுதல் என்பதின் தோஷத்தை யுணர்ந்து சாதகராம் நல்லோர் அக்குற்றம் தம்பால் நேராமல் விலக்கிக் கொள்வாராக.

குறிப்பு:— ஸ்ரீ முருகனர் கூறியது:— துயிலாதிருத்தலும் உபவாசமும் ஆத்மீக வாழ்வின் சகாயங்களாயினும் அமித தோடத்தால் பிரதிபந்தங்களே யாகும் என்ற கருத்து பகவத் கீதையில், "அமிதமாகத் துயில்வோனும் அமிதமாகத் துயிலொழிவோனும், அமிதமாக உண்பவனும் அமிதமாக உபவாசமிருப்பவனும் யோக மடையான்" என்று கூறப்பட்டது. ஸ்ரீ பகவானும் உபவாசத்தினும் மித சாத்வீக உணவையே சாதனையின் சகாயமாகச் சிறப்பிப்பது வழக்கம்.

## அச. பணி வுடைமைத் திறன்

494. எவ்வளவுக் கெவ்வளவு தாழ்ந்து நடக்கின்றார்களோ அவ்வளவுக் கவ்வளவு மக்களின் நிலைமை நிறைவை யடையும். கடவுளுக்கு இவ் வுலக உயிர்கள் அனைத்தும் வணக்கம் செலுத் தும்படியான உயர்நிலை எவ்வாறு உண்டாயிற் றென்றால், அவர் மறந்துங்கூட மயக்க வடிவான அகங்காரம் தனக்குச் சிறிதும் எழாதபடி இருக்கும் சிறப்பினால்தான் என்க.

495. உயர்வை நாடும் விவேகி ஒருவனுக்குத் தன் அகங் கார நாசம் முழுமையாய் ஏற்படும் வரையிலும் பிறருக்கு அவன் வணக்கம் செய்வதுதான் நல்லதாகுமே தவிர பிறரிடமிருந்து நமஸ்காரத்தைத் தான் ஏற்றுக் கொள்ளுதல், அம்மம்ம, மிகக் கொடிய தாகும்.

விளக்கக் குறிப்பு:— 'உன்னதந்தான் நாடறிஞனுக்கு' என்றது, ஆன்மசாட்சாற்காரத்தையே தன் குறிக்கோளாகக் கொண்ட சாதகன் ஒருவனுக்கு எனப் பொருள்படும். பிறரை நமஸ்கரிப்பதால் சாதகனுக்கு அகந்தை யடங்குவதனால் அதை 'இனிது' என்றும், பிறரால் நமஸ்கரிக்கப்படுவதால் அகந்தை விருத்தி யடையுமாகையால் அதனைக் 'கொடியது' என்றுங் கூறினர்.

496. எப்போதும் எவ் வுயிர்க்கும் தான் பணியாளனைப் போல் அன்புடன் தாழ்ந்து நடக்கும் முறையினால் அல்லவா கடவுள், எல்லா வுலகும் தினமும் தன்னைச் சிறப்பித்துச் செய்யும் பூஜையாதிகளுக்கு உரியவரானார்?

497. (அ) உயிர்கள் யாவுள்ளும் தன்னையே காண்பதால் எல்லா வுயிர்க்கும் பணிவுடன் தாழ்ந்து நடக்கும், தனது அடியவர் களுக்குங்கூடத் தான் தாழ்ந்தவ னாகவும், தன்னை விடத் தாழ்மை யுடையவர் வேறு யாரும் இல்லாதபடி இயல்பாகவே

தான் தாழ்மையின் சிகரமாய் விளங்குந் தன்மையால் அல்லவா கடவுளுக்கு (எல்லா வுலகிற்கும்) இறைமை வாய்ந் துள்ளது!

(ஆ) உயிர்கள் யாவுள்ளும் தன்னைத் தரிசித்து, எல்லா வுயிர்க்கும் பணிவுடன் தாழ்ந்து நடக்கும் தனது அடியவர்களுக்குங்கூடத் தான் தாழ்ந்தவ னுகவும், தன்னை விடத் தாழ்மை யுடையவர் வேறு யாரும் இல்லாதபடி இயல்பாகவே தான் தாழ்மையின் சிகரமாய் விளங்குந் தன்மையால் அல்லவா கடவுளுக்கு (எல்லா வுலகிற்கும்) இறைமை வாய்ந் துள்ளது!

விளக்கக் குறிப்பு:— சென்ற **494, 496, 497** ஆகிய மூன்று பாடல்களாலும் ஓர் புத்தம் புதிய, அரிய, பேருண்மையைப் புலப் படுத்துகின்றுர் ஸ்ரீ பகவான். அதாவது: கடவுள், அனைத்துலகும் தன்னைப் போற்றி வணங்கும் மகிமை பெற்றிருப்பதற்கு யாது காரணம் என்பது விளக்கப்படுகின்றது. அது யாதெனின், அவர் தம் படைப்பனைத்திற்கும் தான் இயல்பாகவே தாழ்மையுடன் அன்பு பூண்டு ஒழுகுவதால்தான் என்று ஸ்ரீ பகவான் எடுத்துக் காட்டுகின்றுர். பகவான் ஸ்ரீ ரமணர் அவ் விறை சொரூபமே என்பதை இக் காரணத்தால் விளக்கிக் காட்டும் நிகழ்ச்சியும் ஒன்றுண்டு. அதாவது,

அன்ப ரொருவர் ஸ்ரீ பகவானை 'ஆயிரக் கணக்கான பக்தர்கள் தங்களைத் தினமும் வந்து நமஸ்கரிக்கும் போது தங்களுக்கு உண்டாகும் உணர்வு எத்தகையது,' என்று வினவியபோது ஸ்ரீ பகவான், "அவர்கள் ஒவ்வொருவரும் இவ்வறைக்குள் நுழையும்போதே நான் முதலில் நமஸ்கரித்து விடுகிறேன்! பிறகுதான் அவர்கள் நமஸ்கரிக்கின்றனர்! அகந்தையை மெய்யாகவே அடக்கி நிற்கும் நிலேயே சரியாக நமஸ்கரிக்கும் முறையாகும். அவ்வித நமஸ்காரங்கள் ஆற்றும் சந்தர்ப்பம் பலர் இங்கு வருவதால், ஏனையோர் ஒவ்வொரு வரையும் விட எனக்கே தினந்தோறும் அதிகம் கிடைக்கின்றன வன்றே?" என்றருளினர். இது மிகவும் ஆராய்ந்து சிந்தித் தறிதற் குரியது! அகந்தையற்று அடங்கி நிற்பதே இறைமைப் பதம் எய்துவதற் கேற்ற வழி என்பது உபதேசம்!

498. தான் ஒன்றே அணுவாகவும் மகத்தாகவும் இருக்கும் மனத்திற்கும் அப்பாலாய் இருப்பதால், ஆன்மாவாம் அந்த மெய்ப் பொருள் அதீதம் எனப்படும். ஆகவே, அது (ஆன்மா) அறியப்படும் மகத்து அனைத்தையும் விடப் பெரிய மகத்தும், அறியப்படும் அணு அனைத்தையும் விட மிகச்சிறிய அணுவு மாகும்.

குறிப்பு:— ஸ்ரீ பகவா னருளிய **ஆன்ம வித்தைக் கீர்த்தன** த்தின் ஐந்தாவது அடியாகிய, "விண்ணுதிய விளக்கும் கண்ணுதிய

பொறிக்கும், கண்ணும் மனக்கண்ணுக்கும் கண்ணாய் மன விண்ணுக்கும் விண்ணாய் ஒரு பொருள்....." என்ற உபதேசமும் இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

499. வைர மில்லாத (உள்ளே உறுதியில்லாத) துரும்பு கடலின் மேற்பரப்பில் மிதக்கவும், கனமுள்ள முத்து கடலின் அடியில் தாழ்ந்து படிந்து கிடக்கவும் செய்கின்றன வன்றோ? அதுபோலவே, இப் பூவுலகில் மேன்மைக்குத் தகுதி யற்றவர்கள் மேலேயிருப்பதனால் மட்டும் மேலானவர்கள் ஆகார். அவ்வாறே, கீழ்மை யில்லாத நல்லோர் சமூகத்திற் கீழே யிருந்தாலும் அவர்கள் கீழானவர்கள் ஆகார்.

விளக்கக் குறிப்பு:— இச் செய்யுளின் பின்னிரண்டடிகள் திருக்குறளிற் 'பெருமை' என்னும் அதிகாரத்தின் மூன்றாவது செய்யுளே யாகும்.

ஒரு சமயம் ஸ்ரீ ரமண பகவான் அமர்ந்திருந்த இருக்கையை விட உயரமானதோர் இடத்தைத் தம் இருக்கையாய்க் கொள்ள விரும்பிய ஒருவரை அன்பர்கள் சிலர் அவ்விடம் விட்டு அகற்றினர். இதைக் குறிப்பா லுணர்ந்த ஸ்ரீ பகவான், "அவரை அகற்றி விட்டதற்காக மகிழ்கிறீர்களே, இவரை என்ன செய்வீர்கள்?" என்று கூறி தன் தலைக்கு நேர்மேலே வாலைத் தொங்க விட்டுக் கொண்டு மரக்கிளையில் உட்கார்ந்திருந்த குரங்கு ஒன்றைச் சுட்டிக் காட்டினார்! அன்பர்கள் தம் பிழை யுணர்ந்து அடங்கினர். இந் நிகழ்ச்சி இச் செய்யுளின் கருத்தை நேர்முகமாக விளக்குவதை வாசகர்கள் கண்டறிக.

## அரு. தக்க செயற் றிறன்

500. **இயற்றத் தகுந்தது ஞானத்தைத் தரும் ஆத்ம விசாரமே.** அடையத் தகுந்தது தன் நிஜ சொரூப மேன்மையே. விடத்தகுந்தது அகந்தைமதியே. துன்பங்கள் யாவும் ஒழியுமாறு தான் புகுந்து நிலைபெறத் தக்கப் புகலிடமாவது தன் மூலஸ் தானமான ஆன்மாவே (இதயமே).

501. அடைய வேண்டியது மெய்ஞ்ஞானமே யாகும். மனத்தால் தியானிக்க வேண்டியது இறைவனது திருவடிகளே யாகும். நிச்சயமாய்ச் சேர்ந்து ஒழுக வேண்டியது சற்சங்கமே யாகும். உள்ளத்திற் பொங்கி யெழ வேண்டியது பரம சாந்தமே யாகும்.

## இரண்டாவது

# தத்துவ அநுசந்தான வியல்

### க. உபதேச மாட்சித் திறன்

502. *மலேப்புற்றுக் கலங்கும் அடியவர்களின் மனம் அற்பப் புலன்களின் வழியே சென்று திரிவதை விட்டு உள்ளத்தே நிலே பெறுவதற்கு, ஆன்மாவில் நிலேபெற்ற உள்ளத்தையே உடைய வஞன சற்குருவின் உத்தம உபதேச மொழிகளே மிகச் சிறந்த வழிகாட்டி என்றறிந்து போற்றுக.*

503. ஆன்ம சொரூபனும், சிவ வடிவாக வந்துள்ள வனுமான சற்குரு தன் அடியார்களின் மேல் அருட்பார்வை யாகிய மொழியால் அவர்களது உள்ளத்தில் இடைவிடாது கூருது கூறும் '**அது நீயே**' என்னும் உபதேசப் பொருளே உள்ளத்தில் விசாரித் தறியாமல் மெய்யறிவு தோன்ருது.

504. (*எந் நிலேயிலும்*) இடைவிடாது உள்ளத்தினுள்ளே உயிர்க்குயிராய் உறைந்திருந்து, இயற்கை யுணர்வாய் 'நான் நான்' என்று இருப்பறிவாக விளங்கிக்கொண்டிருப்பது தான், ஈசன் பக்குவ உயிர்களாம் சீடர்க்கு (அறிவுக்கறிவாய், ஆன்ம சொரூபமே தாஞய் நின்று) ஏகாந்தத்தில் இடை விடாது ஞானேபதேசம் செய்வதாகக் கூறப்படுவதின் உட் பொருளாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீபகவா னருளிய 'உபதேச மஞ்சரி' என்னும் நூலில், உபதேசப் பிரகரணத்தில் "குருவின்றியே சில பெரியோர்கள் அறிவறிந் தமைதற்குக் காரணம் யாது?" என வரும் எட்டாவது விஞவின் விடையாகிய, "சில பக்குவிகட்கு அவ் வீசன் அறிவுக் கறிவாய் நின்று தத்துவத்தை யுணர்த்துவது முண்டு" என்ற உபதேசத்தின் கருத்தை மேலும் தொடர்ந்து விளக்குவதாக அமைந்தது இச் செய்யுள். மானிட வடிவிற் குருவாகி வந்து உபதேசிக்க வேண்டிய அவசிய மற்றவாறு அவ்வளவு உயர்ந்த பக்குவத்தைப் பெற்றிருக்கும் மிகச் சீரிய சாதகர் ஒரு சிலருக்கு ஆன்மாவே சற்குருவாய் உள்ளத்தினுள்ளிருந்தே, பரதத்துவத்தை உபதேசிக்கின்றது என்பது எவ்வாறு நிகழ்கின்றது என்றறிய விரும்பும் சாதகர்கட்கு இச் செய்யுள் விடையாக அமைகின்றது. "**இருக்கிறேன்**" என்ற சித்துணர்விற்குப் பொருளாகிய 'நான் நான்' என்ற விளக்கமே ஆன்மாவாம் சற்குரு செய்யும் மௌனேபதேசம். 'நான் இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வைத் தவிர

அத்துவிதப் பரவுண்மை வேறெதுவு மல்ல வாதலால், 'இத் தன்னுணர்வை அநுசந்தித்து நிற்றலே பேரின்ப நிலை' என்று சொல்லாது சொல்லிச் சொல்லறச் சும்மா நிற்க வைக்கும் இவ் வஹ விளக்கமே சற்குருவின் அனுக்கிரக வியல் என்று விளக்கப்படுகிறது.

## உ. மகா வாக்கியத் திறன்

505. அஞ்ஞானம் நீங்கும்படியாக அநேக பாசுரங்கள் நிறைந்து கோஷிக்கும் நான்கு வேதங்களின் உட்கிடக்கையாகக் கடைந்தெடுக்கப்பட்ட பரமார்த்த பாவம் யாதெனில், 'பர-ஜீவ-ஐக்கியம்' (தத்-த்வம்-அசி) எனப்படும் மோன நிலையே என்றறிக.

506. பிறவித் தீயின் கொடுமையினின்று விடுபட விரும்பி, சச்சிதானந்தப் பரம்பொருளை நாடும் அதி தீவிர பக்குவிகளுக்கு (தத்-த்வம்-அசி என்ற மூன்றினுள்) 'த்வம் (நீ)' என்ற பதத் தாற் குறிக்கப்படும் ஜீவ சொரூபத்தை ('நான்' என்னும் உணர்வை) விசாரிப்பது ஒன்றினால் தான் மேன்மையான மோக்ஷம் கைகூடுவதாகும்.

விளக்கக் குறிப்பு:— 'தத்வமசி' என்ற மகாவாக்கியோபதேசத்தைச் சற்குரு மூலம் கேட்டவுடனே ஓர் உத்தம சீடன் என்ன செய்யவேண்டும் என்பதை ஸ்ரீ பகவான் "அது நீ என் றம் மறைகள்......தேர்ந்து:......" என்ற 'உள்ளது நாற்ப' தின் 32-வது பாடலில் உபதேசிப்பதை இங்கு ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். 'அது நீ' என்று கேள்விப்பட்டவுடன் 'எது நான்?—அதாவது—நான் யார்?' என்ற வடிவில்தான் அதிதீவிர சீடனின் விருத்தி திரும்ப வேண்டும். இதுவே மகா வாக்கியோபதேச நோக்கம். இவ்வாறு சற் சீடனைத் தன்னாட்டத்தில் ஈடுபடுத்துவதற்கு இம் மகாவாக்கியத் தொடரில் முக்கிய பதமாக நிற்பது 'த்வம்-நீ' என்ற சொல்லே. எனவே தீவிர சீட னொருவன் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ள வேண்டியது 'த்வம்' பதம் ஒன்றே என்பது இப்பாடலாற் கூறப்பட்டது. பின்வரும் இரு பாடல்களும் இக் கருத்தையே வலியுறுத்த உபதேசிக்கப்படுகின்றன என்றறிக.

507. மனத் தளர்ச்சியை யுடைய மத்திம, மந்த அதிகாரி களான மற்ற இரு வகையினரது மனத்தை மேற்கூறிய ஆத்ம விசாரத்திற்குச் சகாயமாக உண்முகப்படுத்துவதற்காகவே 'தத் (அது)' என்ற பதமும் 'அசி (இருக்கிறாய்)' என்ற பதமும்

சேர்த்து 'தத்-த்வம்-அசி (அது நீயா யிருக்கிறுய்)' என்று வேதங்கள் மகா வாக்கியத்தைக் கூறின என்றறிக.

508. 'த்வம்' என்ற பதத்தின் பொருளை உள்ளபடியே 'அது எது?' (நான் யார்?)' என்று தன்னுள் ஆராயும் விசாரம் தான் மற்ற 'தத், அசி' என்ற இரு பதங்களிற் பொதிந்துள்ள நல்ல அர்த்தத்தை உண்மையாகவே தெரிந்துகொள்ளத் தக்க வழியு மாகும்.

## ௩. உபநிட மாட்சித் திறன்

509. இறைவன், அஞ்ஞானம் என்று ஒன்று இருப்ப தாகவே உணராத அருள் வடிவன். பிரம்ம ஞானமே அவனது இரு பாதமலர்களும் அமர்ந்துள்ள பீடம். அத் திருவடிகளின் பொற்பாதுகைகள் உபநிடதங்களே! விசேஷமான உலகாயத அறிவிற் (விஞ்ஞான அறிவிற்) பெருகும் வெறிகொண்டு மயங்கித் திரியும் வீணன அகங்காரிக்கு (மனிதனுக்கு) மேற்கூறிய உப நிடதமாம் பாதுகைகளைத் தலைமேல் ஏற்றுப்போற்றுவ தொன்றே செய்யத் தக்க செயலாகும்.

விளக்கக் குறிப்பு:—விஞ்ஞானம் நிறைந்த மனித அறிவு அற்பமான தன் இச் சிற்றறிவால் அகங்கரித்துத் திரியாமல் அதை விட்டு, உபநிடதங்கள் கூறும் மெய்ஞ்ஞான வழியைப் பின்பற்றுவதே உத்தமமான பணியாகும் என்பது கருத்து. விஞ்ஞான ஆராய்ச்சியும் அறிவும் மேலும் மேலும் விரிந்து முடிவற்றதாய்ப் போவது கண் கூடு. ஆகையால் அவ்வாராய்ச்சியைச் செய்யும் மனித புத்தி தனக்கோர் முடிவான அறிவை எய்த விரும்புமாயின் மெய்ஞ்ஞான வழியைப் போதிக்கும் உபநிடதங்களைத்தான் தஞ்ச மடைந்து பின்பற்றி யுய்ய வேண்டுமே தவிர வேறு வழியே யில்லை என்றும், இதுவே விஞ்ஞான அகந்தைப்பேய்க்கு உடனடியான பணி என்றும் உணர்த்தப்பட்டது.

## ச. உபாசனைத் திறன்

510. இதயத்தில் பரிசுத்தமாக விளங்கும் ஈசனது பாத தாமரைகளைத் தரிசித்த பாக்கியசாலிகள் தீய அசுப வாசனைகள் ஒழிந்து ஞான ஒளியோடு மிகவும் பிரகாசிப்பர்.

511. நிறைந்த தெய்வீக சம்பத்தை உள்ளத்தில் விளை விக்கும் ஆத்ம விசாரமாம் உபாசனையே உயிருக்கு (மோக்ஷ)

நன்மையைக் கொடுக்கக் கூடியதாகும். அசுர சம்பத்தால் உயிருக்கு விளையக்கூடியது பெருந் தீமையே. நீ இதை யறிந்து (மேற்கூறிய உபாசனையால்) தெய்வீக சம்பத்தையே விருத்தி செய்து கொள்க.

*விளக்கக் குறிப்பு:—வெளியில் சம்பாதிக்கும் சம்பத்துக்கள் யாவும் அசுரத் தன்மை யுடையனவே. அதனால் அவை அனர்த்தங்களையே விளைவிப்பவாம். விசார மொன்றே உயிரை உய்விக்கும் தெய்வ சம்பத்தை ஒளிர்விப்பதாம் என்பது கருத்து.*

512. அத்துவித ஞானம் அடைவது அரிதே என்றாலும் இறைவன் திருவடியில் உண்மையான பக்தி உண்டாகிவிட்டால், அறியாமையை அழித்து விளக்கம் உண்டாக்குகின்ற திருவருளுதவி வந்து சேர்ந்துவிடுவதால் அவ் வத்துவித ஞானம் சுலப சாத்தியம் ஆகிவிடும்.

513. இறைவனது திருவடிகளைப் பக்தியோடு இதயத்தில் ஸ்திரமாய் நிறுத்துவதால் மயக்கமாகிய பந்தத்தை அறுத்தெறிய முடியும். அவ்வாறு பந்தம் அறுவதால் இதயம் மலர்ந்து மெய்யறிவான பிரம்ம ஞானத்தையும் பெற்று விளங்கலாம்.

*குறிப்பு:—இறைவன் திருவடி, திருவருள் எனப்படுவன ஆன்ம சொரூபமே என்று முன்பு உபதேசிக்கப்பட்டதை இங்குக் கருத்திற் கொள்க.*

514. ஜீவன் தனது சிரத்தைச் சிவனது திருவடிகளிற் பொருத்தி, ஒன்றி நிற்பானாகில், அப்போது அவன் சிவ சொரூபத்துடன் சேர்ந்து சிவமயமாகவே விளங்குவான். (இதன் உண்மை எவ்வாறெனின்) அலையே வடிவான அற்ப அகந்தை (ஜீவன்) தன் நிச்சல உண்மை நிலையை விரும்பி அலைவு அடங்கி அழியுமேல், அது ஆன்ம சொரூபமாகவே நிலை பெறுகின்றது.

*விளக்கக் குறிப்பு:—அலையின் சுபாவம் அலைதல்; ஆழியின் சுபாவம் சலனமற்ற அமைதி. எழுந்து சலிக்கும் கடல் அலை நிற்க விரும்புமேல் தன் எழுச்சியாம் அலையுரு அழிந்து, நிச்சலத் தன்மையால் சமமாகி சமுத்திர வடிவே யாகின்றது. அவ்வாறே, மனமாம் ஜீவனும் ஆன்ம விருப்பாகிய சிவபக்தியால் தன் ஜீவ சுபாவ மழிந்து, சிவமய மாகின்றான் என்பது உபதேசிக்கப்பட்டது.*

515. தொன்றுதொட்டு தான் ஏற்றுக் கொண்டுள்ளதும், வலியதும், பொய்யானதுமான பந்தத் தளையைச் சட்டென்று

அறுத் தெறிந்து வீடு பெற, இறைவனது பொற்பாத தாமரையிற் கிளர்ந் தெழும் பக்தி தீவிரமாகுமாறு மனம் ஈடுபட்டு நீ சிறிது பொழுதுகூட வீண் போகாமல் எப்பொழுதும் தியானம் செய்க.

குறிப்பு: "ஆன்மத் தியான மனவரதஞ் செய்துநீ
மேன்மையாம் வீட்டின்பம் மேவு"
என்று ஸ்ரீ ரமண நூற்றிரட்டில், விசாரசங்கிரகத்தின் இறுதியில் முடிவுரையாகக் கூறப்பட்ட செய்யுட் கருத்தே இது.

516. அசைவற்ற நிட்டையில் ஊன்றி நிற்கும் மனத்தில் அல்லாமல் வேறு எவ்விதத்திலும் இறைவனது நிஜ சொரூபம் (ஆன்மா) விளங்காது. ஆகையால் மனம் ஒருமுகப்பட்டு அடங்கி நிற்காமல், பல எண்ணங்களாய் விரிந்து அலேவதையும் (ஜாக்கிர-சொப்பனுவஸ்தைகளேயும்), பிறகு களேத்து லயித்துக் கிடப்பதையும் (நித்திராவஸ்தையையும்) தவிர்த்து, இறைவனுன ஆன்ம சொரூப லக்ஷியம் ஒன்றையே பற்றி நிற்குமாறு பழக்குக.

குறிப்பு:— மனத்திற்குச் சகல கேவல அவஸ்தா பேதங்கள் நேராது நிற்க வைப்பதே நிஷ்டை என்று சுட்டிக் காட்டப்பட்டது.

517. 'ஊன்மயமான இத் தேகமே நான்' என்று மயங்கிய அறிவால் அற்பப் புலன்களுக்கு உணர்வாகும் எல்லா அன்னியப் பொருள்களின் மேல் உள்ள பற்றையும் விட்டொழிக. (இவ்வாறு வெளிவிடயங்களே முற்றும் நீத்து) மோனமுற்ற மனந்தான் பரிசுத்த மணிலிங்க மாகும். அந்த மனுேமௌனத்தையே லக்ஷியமாகப் போற்றினுல் அதுவே அழிவற்ற பேரின்பத்தைத் தரும்.

518. நாள், கோள், யோகம், ஓரை என்று கூறப்படும் எந்தக் கால விசேடமும் உண்மை விளக்கமாம் தெய்வ வழி பாட்டுக்கு ஆக்க மளிக்கும் நன்னுளும், நற்கோளும், சுப யோகமும், சுப ஓரையுமே யாகும்.

விளக்கக் குறிப்பு:—ஸ்ரீ முருகனுர் கூறியது:- நாள், கிரகம் முதலிய காலபேதங்கள் எதுவும் மனத்தின் ஆட்சிக் குட்பட்ட உலகியற் செயல்களுக்கு ஊறு செய்ய இயலுமே தவிர, மனத்தின் கற்பனே கடந்த கடவுள் வழிபாட்டுக்கு (ஆன்மத் தியானத்திற்கு)ச் சற்றும் தடை செய்ய

வல்ல தன்று என்பதாம். சம்பந்தரது கோளறு பதிகமும், "நாளென் செயும், வினை தானென் செயும்...." என்ருற் போன்ற பிற சான்ருேர் பாடல்களும் இங்கு ஆராய்வோமாயின், இறைவனது திருவருள் வழிப்பட்ட அடியார்கள் ஆற்றும் அச் செயல்களுக்குங்கூட அவை தடை செய்ய மாட்டாதேல் அவற்றின் நீங்கிய (நைஷ்கர்மியமாகிய) இறை வழிபாட்டுக்கு இடையூறு இழைத்தல் அவற்றிற்குச் சற்றும் இயலா தென்பது தெளிவாகும்.

519. கடவுள் குரு ஆகிய யாதொருவரிடமாவது ஒருவர்க்குப் பூரண நம்பிக்கை உண்டாவது மிகவும் அரிய பாக்கியமாகும். (பூர்வ புண்ணிய வசத்தால்) அவ்வாறு குருவினிடத்தோ கடவுளினிடத்தோ நம்பிக்கை யுண்டாகுமே யானுல், பிறந்துள்ள தோர் சின்னஞ் சிறு சிசுவைப் போலத் தோன்றியுள்ள அந்த விசுவாசத்தை, காமதேனு கிடைத்தால் ஒருவன் எப்படிப் போற்றிக் காப்பாற்றுவானே அவ்வளவு விருப்போடு (சந்தேக விபரீதங்களுக்கு இடமளிக்காத உறுதியுடன்) காப்பாற்றி வளர்த்துக் கொள்க.

## ரு. மௌனேபாசனைத் திறன்

520. இதயாசனத்தில் இறைவனை எழுந்தருளச் செய்து, ஆன்ம சொரூபமாம் அவனேடு ஒத்த ஒரே பொருளாய் மனம் மூழ்கிக் கரையுமாறு, இடைவிடாது தன் உண்மை யியல்பு நிலையான அவ் வான்ம நிஷ்டை நடைபெறச் செய்வதுதான் மிக நல்ல மோனநிலை (மௌனேபாசனை) யாகும்.

521. தனக்கு அன்னியமான எப் பொருளினிடத்தும் சிறிதும் பற்றில்லாமல், எப்பொருளிடத்தும் பற்றற்றதான அருள் எனப்படும் ஆன்ம சொரூபத்தி னிடத்துப் பெரும்பற்றுற்று நிற்கும் தனது சுத்த நிலையே அத்வைத மௌன நிலையாகும். இம் மோனுனுபவத்தை அபரோக்ஷமாய்ப் பெறக் கற்றுக் கொண்டு, அப் பரமோனமே த்ானுகி நிற்பதே (நிஷ்டையே) மெய்யான மானசிக பூஜை என்றறிக.

விளக்கக் குறிப்பு:—சகல விதமான பூசனைத் திரவியங்களையும் மனத்தால் சேகரித்து, அர்ச்சனையாதி ஷோடசோபசாரங்களையும் மனத்தாலேயே ஆண்டவனுக்குப் புரிவதாகிய விகற்பத்தோடு கூடியதோர் மனேவிருத்தியையே இது காறும் நம்மில் பலர் 'மானசிக பூஜை' என்று கருதி வருவ துண்டல்லவா? ஆனுல், உண்மையான 'மானசிக

பூஜை, மௌனே பாசனே' என்பது இது வல்ல என்றும் ஆன்ம நிஷ்டையே உத்தமமான மானசிக பூஜை என்றும் அதுவே உண்மையான மௌனே பாசனே என்றும் இங்கு உபதேசிக்கப் படுகின்றது.

## கூ. வாத மயற் றிறன்

522. "பிராரப்தம் (விதி), தன் முயற்சி (மதி) இவற்றுள் விதியாகிய ஒன்று மதியாகிய மற்றொன்றை விட வலியது" என்றும், "இல்லை; விதியே கீழானது; மதியே மிகவும் ஏற்ற மானது" என்றும், இவ்வாறு ஒன்றை யொன்று மறுத்து வலுத்த வாதப்போர் நடத்தும் மக்கள் (அந்த விதியும் மதியும் யாருக்கு நேருகின்றனவோ அந்த மூலமான) தன் (அகந்தை யின்) தோற்ற ஒடுக்க நிலைகளைப் பற்றிக் கொஞ்சங் கூட ஒன்று மறியாத பாமரரே யாகும்.

குறிப்பு:— "விதிமதி மூல விவேக மிலார்க்கே....." என்ற உள்ளது நாற்பதின் 19ஆவது பாடலின் முற்பகுதியில் கூறப்பட்ட கருத்தே இவ் வெண்பா முழுவதுமாம்.

523. (என்றும் 'நான் நான்' என்று ஒவ்வொருவர் உள்ளத்திலும்) ஸ்புரித்துக்கொண்டிருக்கும் பரம வஸ்துவை, உள்ளத்தில் 'நான் யார்?' என்று விசாரித்து, ஆய்ந்து அறிந்து தெளிவான மோன நிலையை அடைவதைத் தவிர்த்து சிலர் அகங்காரத்தால் துள்ளி, மதப் பூசலும் மதவெறியுங் கொண்டு வாயளவிற் கண்டன மண்டனங்களான வாதம் புரிந்து வீணுக ஆரவாரம் செய்வர்!

524. தருக்கத்தின் இயல்பே உண்மையை மறைப்ப தாகும். தருக்கமே கற்பனை யாவதால் புத்தியை அது கலக்கி விடும். அத்தகைய தருக்கபுத்தி யாகிய படு குழியில் தம்மை வீழ்த்திக் கொண்டவர்கள் ஆன்ம ஞான சூரிய விளக்கத்தை ஒருக்காலும் அறியவே முடியாது.

525. சொற்கள் மெய்ப்பொருளை விளக்குவதற்கு நேர் மாருக, அது விளங்காதபடி மறைப்பனவே யாம். ஆகையால் சொற்களாற் புதைக்கப்படும் ஆன்மா தானுக விளக்கம் பெறு மாறு சொல்லும் சிந்தையும் ஒருசேர அடக்கிக் காப்பாற்றுவா யாக.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— ஆன்மாவாம் தானே சத்திய மாதலின் தனக்கு அன்னியமான சொல்லும் நினைவின் தூல வடிவான மித்தையே. எனவே சொல் லடங்கி உள் நாடும் நெறியே மேன்மையானது என்றார்.

526. சப்த ஜாலங்களுக்கும் தருக்க சாமர்த்தியங் களுக்கும் உன் புத்தியை அடிமை யாக்காதே. சுத்த சத்துவ மனத்தால் உண்முகப்பட்டு (அன்னியங்க ளாகிய) கற்பனை யறிவு நீங்கி, உனது நிஜ சொரூபத்தை யுணர்ந்து உண்மை விளக்கம் அடைவா யாக.

## எ. அளவை யவலத் திறன்

527. அளப்பவன் அளவு, அளவிடப்படுவன, அளவிடுதல் ஆகிய இவை யெல்லாம், உள்ளத்தில் எந்த நித்திய வஸ்துவின் இருப்பால் விளங்குகின்றனவோ அந்த ஆன்மாவை அளந்து மதிப்பிடக் கூடிய அளவை யாது இருக்கின்றது? (ஆன்மாவை எதைக் கொண்டு அளப்பது என்றவாறு).

விளக்கக் குறிப்பு:— கற்பனையான அளவுகளைக் கொண்டு கால தேசங்கள் மனத்தால் அளக்கப்படுகின்றன. அளக்கும் இம்மனமும், அளவைக் குட்படும் கால தேசப் பொருள்களும், அளத்தலாகிய காரியமும் ஆன்ம சந்நிதியால் இருப்புள்ளன போல் தோன்றுகின்றனவே தவிர, தாமாகவே சுய இருப்பற்றவை. ஆகையால் இம் மனம், காலம், தேசம் முதலியவற்றுள் எவ்வொன்றைக் கொண்டு ஆன்மாவை அளக்க முடியும்? முடியாதென்க.

528. அளக்கின்றவனான மனம் (அகந்தை) இருக்கின்ற வரையில் தான் அளவையும், அளக்கப்படுவனவும் ஓர் மெய் யிருப்பு உள்ளவை போல் உணரப்படும். அளப்பவனான இவ் வகந்தை தன் உதிப்பிடமான மூல ஆன்மாவைத் தரிசித்து, நித்தியப் பொருளாகிய அதில் தான் (அகந்தை யுணர்வு) மூழ்கி அழியப் பெறுவானாயின், அழிந்த அளப்பானாகிய அகந்தை யுடன் அளவை, அளக்கப்படுவன, அளத்தல் ஆகிய யாவும் ஒருங்கே அழிவனவாம்.

விளக்கக் குறிப்பு:— உண்மை வஸ்துவாகிய ஆன்மாவை யுணருங்கால் அளப்பானாகிய மனமே பொய்யாய் முடிவதால், அவனால் அளக்கப் படுவனவும், அவனது அளவு கோலும் அளத்தலாகிய காரியமும் ஆங்கே பொய்யாய் முடியும் என்பது கருத்து.

## அ. பரோக்க ஞானத் திறன்

529. அறியாமை நிறைந்த மனத்தின் வாசனைகளெல்லாம் அழியப் பெற்றதால் விளையும் பிரத்தியக்ஷ சுத்த அனுபவ ஞானத்தால்தான் ஜீவர்களின் தவிப்பு (மோக்ஷ வேட்கை) தீருமே தவிர ஆன்மாவைப் பற்றிய படிப்பறிவால் ஒருக்காலும் தீராது. தேகத்தின் வெப்பம் கானல் நீரால் நீங்குமே யானல் உயிர்களின் மோக்ஷ தாபமும் பரோக்ஷ (புத்தக) ஞானத்தால் தீரும் எனலாம்.

530. சுத்த பரமாத்ம சொரூபத்தின் அனுபவமே அத்து வித அபரோக்ஷ ஞானமாக இருக்க, அனுபவ மற்றதும் ஆனல் படிப்பறிவின் திறத்தால் அறிந்துள்ளதுமான பரோக்ஷத்தை 'ஞானம்' என்ற ஓர் பெயர் வைத்து (பரோக்ஷ ஞானம் என்று) அழைப்பது, பாபியாகிய இராட்சசனைப் 'புண்யஜனன்' என்று பெயரிட்டுக் கூறுவதற்குச் சமானமே என்க. (ஆதலால் பரோக்ஷ ஞானம் என்பது அஞ்ஞானமே எனப்பட்டது).

531. வஞ்சகமான அறிவுமயக்கத்தை யழிக்கும் உத்தம ஆன்மஞானமானது, இதயத்திலுள்ள தம் இருப்புணர்வை நாடிச் செய்யும் உண்மையான விசாரத்தால்தான் உதயமாகும். தெளிவான சாஸ்திரங்களில் மட்டும் படித்துள்ளதும் ஆனல் அனுஷ்டிக்கப் படாததுமான ஆத்ம விசாரமோ, சுவை பொருந்திய உணவின் சமையலுக்கு உதவாத ஏட்டுச் சுரைக் காயைப் போன்றதே என்றறிக.

532. வரையப்பட் டுள்ளதோர் ஓங்கி எரியும் நெருப்பின் சித்திரத்தைக் கொண்டு உணவு சமைத்து உண்ப தென்றால் ஒருவனது பசி நீங்குமோ? (நீங்காது). அவ்வாறே, அகங்காரம் (வாசனைகள்) ஒழிந்து இதயத்துள் மூழ்குவதால் ஏற்படும் அபரோக்ஷ ஆன்ம ஞானத்தால் உண்டாகு லன்றி, ஜனன மரண துக்கம் நீங்கி, ஆன்ம சாந்தியாகிய சுகம் வாசாஞானத்தால் (படிப்பறிவால்) மட்டும் கிடைத்து விடாது என்றறிக.

533. புத்தியை விளங்க (இயங்க) வைத்துக்கொண்டு, அப் புத்திக்குள் (இதயத்தில்) மூலமாய் விளங்கிக் கொண்டிருக்கும் இறைசொரூபமான ஞானம் வந்தா லன்றி, படிப்புத் திறனுற் செய்யப்படும் வாதப்பிரதி வாதங்களால் (மதியால்) ஆன்ம ஸ்புரண ரூபமான பரம சுகம் ஒரு போதும் உண்டாகாது.

## கூ. ஏக சீவத் திறன்

534. கூர்மதி படைத்த தீவிர பக்குவிகள் 'ஜீவன் ஒருவனே' என்று தீர்ப்புக் கொண்டு (அந்த ஜீவனுகிய 'நான் யார்?' என்னும் விசாரத்தால்) இதயத்துள் ஊன்றி நிலை பெறட்டும். அத்தகைய விவேக முதிர்ச்சியற்ற மந்தாதிகாரிகளின் மனம் ஏற்றுக் கொள்வதற்காகவே 'உயிர்கள் பலர்—ஜீவாத்மா எண்ணிறந்தன (நான ஜீவர்)'— என்ற மித்தையைச் சத்தியம் போல ஏற்றுக்கொண்டு(சாத்திரங்களிற் நான ஜீவர் களைப் பற்றி) வியவகரிக்கப்படுகின்றது.

விளக்கக் குறிப்பு:— "அகந்தை யுண்டாயின் அனைத்து முண்டாகும்; அகந்தை யின்றேல் இன்று அனைத்தும், அகந்தையே யாவு மாம்.." (உள்ளது நாற்பது 26) என்றும், "தானெழுந்தால் சகலமும் எழும்" என்றும் "இன்றகம் எனும் நினைவெனிற் பிற வொன்றும் இன்று—அஷ்டகம்-7" என்றும் ஸ்ரீ பகவா னருளிய உபதேசங்களினின்றும் 'நான் இன்னர்' என்னும் அகந்தையுணர்வின் (ஜீவன் ஒருவனது) எழுச்சியே, இதர உலக உயிர்த் தொகுதிக ளனைத்தும் எழுந்து தோன்றக் காரணமாகின்றது என்று அறியக் கிடப்பதால், நான ஜீவர்களாகத் தோன்றும் சருவமும் தானுகிய (ஜீவன்) ஒருவனது அஞ்ஞான திருஷ்டிக்கே தோன்றுகின்றது என்று கொண்டு, அதனுல் 'ஜீவன்' எனப்படுவது ஏகனுகிய தானெருவனே எனத் தீவிர முமுக்ஷுக்கள் நிச்சயித்துக் கொள்ளட்டும் என்பது உபதேசம். இந்த ஒரு ஜீவனுகிய தன்னை விசாரித்து உண்டாகும் இவனெருவனது அழிவினுலேயே நான ஜீவத் தோற்றங்களும் நசிக்கும் (மறையும்) என்பது தேற்றம்.

535. எந்த ஜீவர்கள் பிறந்திருக்கிருர்கள்? எந்த ஜீவர்கள் பிறப்பு வலையைக் கிழித்துக் கொண்டு முக்தி யடைந்திருக்கிருர் கள்? தேகத்திற் பந்தப்பட்ட அஞ்ஞான ஜீவர்களாகவோ, அப் பந்தம் ஒழிந்த ஜீவன் முக்தர்களாகவோ யாராவது இருப்பதாக, 'நான் இன்னர்' என்னும் அகந்தைமதியொன்று உங்களுக்குக் கிளம்பாத (தூக்கக்) காலத்தில் உங்களால் உணரப்படுகின்றதா? சற்று நன்ருக ஆராய்ந்து விடை கூறுங்கள்!

விளக்கக் குறிப்பு:— ஏக ஜீவனுகிய நான் (அகந்தை) அற்ற விடத்து இதர ஜீவர்களாக (பக்தர்கள் முத்தர்கள்-என்ற எந்த வடிவிலும்) எந்த ஜீவர்களுமே இல்லை என்பது இப்பாடலால் உபதேசிக்கப்படுகிறது.

## க0. அறிவறியாமைத் திறன்

536. ஒரு பொருளை ஆராய்வதும், பிறகு அதைவிட உறுதி பயக்கும் மேலான பொருளாகக் கருதி மற்ருென்றை நாடுவது

(ஆராய்வது)மாக, உலகப் பொருள்களில் ஒவ்வொன்ருய் நாடி யோடி, ஆராய்ந்து கொண்டிருக்கும் உலக மக்களே! ஸ்திர மானதும் ஒரே பொருளுமான எந்த ஒன்றை ஆராய்ந்தால் அதன் பயனுக இனி ஆராய — அடைய — எந்தப் பொருளுமே இல்லாமற் போகுமோ அந்தப் பொருளே (தன்னே - ஆன்மாவை) ஆராய்வதே அறிவுடைமை யாகும்.

குறிப்பு:—'நாடும்' என்ற பதத்திற்கு 'விரும்பும்' என்றும் 'ஆராயும்' என்றும் இருவிதமாகவும் பொருள் கொள்க.

537. அதிசூக்ஷ்மமான ஆன்மாவைக் கூர்ந்து விசாரித் துணரக் கூடிய சக்தியுள்ள முமுக்ஷுக்களுக்கு உலகின் தூலப் பொருள்களேப் பற்றிய அறிவால்—ஆராய்ச்சியால்—என்ன பிரயோசனம்? இவ் வூனக் கண்ணுற் புறப் பொருள்களே ஆராய்ந்து அறியும் அறிவை விட அழிவற்ற உண்முக நோக்கால் (அகக்கண்ணுல்) விசாரித்தடையும் ஆன்ம ஞானமே தலே சிறந்த தாகும்.

குறிப்பு:— வெளிப் பொருள்களே ஆராயும் விஞ்ஞான ஆராய்ச்சியை விட, தன்னே ஆராயும் ஆத்ம விசாரமே தலேயாயது என்று உபதேசிக்கப்பட்டது.

538. ஆன்ம சொரூபத்தை நன்ரு யறிந்து, அதற்கு அன்னியம்போற் காணப்படும் பிரபஞ்சம் முழுவதையும் மித்தையாக - இருப்பற்றதாக - விலக்கித் தள்ளும் ஞானமே கால தேசங் கடந்த சிறந்த பிரம்ம ஞானமாகுமே தவிர வேறு எவ்வித அறிவும் திறமையான சிறந்த ஞானமாகாது.

மற்ருேர் பொருள் — முக்காலதேச திருஷ்டியும், பிறர் கருத்தறிதலும், சிறந்த ஞானமாகாது.

539. சிற்சக்தியின் விலாசமாகக் காணப்படும் இப் பிரபஞ் சத்திலுள்ள மாட்சி எது வாயினும் அது அச் சக்திக்கு உடையோனுன சக்தனே (ஆன்ம சொரூபத்தை) விட வேருகாது. இதுவே உண்மையா யிருக்க, ஆன்மசித்ரூபமான இவ் உலகைத் தனக்கு அன்னிய மானதோர் பொருளாகக் கருதி (அதனிடம் விருப்பு வெறுப்புக்களால்) கலங்கும் மனப்பான் மையே நமக்கு இடையூறு செய்யும் பகையாகிய பொய்ம் மாயை யாகும்.

540. "இவ் வுடம்பே நான்" என்று உணர்கின்ற (ஜீவ) போதமே ஒருவனுக்குப் பகையான அவித்தை மயக்க மாகும்; "இந்த அவித்தையுங்கூட, நம்மால் விட்டு விலக முடியாத நம்

ஆன்ம சொரூபத்தை விட்டுத் தனியான ஓர் இருப்பற்றது'' என்றறியும் ஞானம்தான் அடையத் தக்க, சிறந்த, ஸஹஜாத்ம ஞான ஸ்திதி யாகும்.

விளக்கக் குறிப்பு:— கயிற்றில் தோன்றும் பாம்பு பொய்யே யாயினும் அப்பாம்பு கயிறின்றி இருப்பற்றது போலவே, பொய்யாகிய அவித்தையும் மெய்யான ஆன்மாவை விட்டு இருந்து, இயங்குவதில்லை என்றுணர்தலே சிறந்த ஞானமாம்; "ஞானம் ஆம் தானே மெய்; நானுவாம் ஞானம் அஞ்ஞானமாம்; பொய்யாம் அஞ்ஞானமுமே தன்னை யன்றி இன்று..." என்னும் உள்ளது நாற்பது 13ஆவது உபதேசமே இச்செய்யுள்.

541. பிளவற்ற (ஒன்றே யான) ஆகாயத்தை வெறும் மனே கற்பனையினுலேயே (கடாகாசம், மடாகாசம், மஹாகாசம் என்று) பலவித ஆகாசங்களாகக் கண்டு பெயரிட்டழைப்பது போலவே, கண்ட மற்ற ஏக வஸ்துவான ஆன்மாவையும் மந்த மதியினர் பற்பல ஜீவாத்மாக்களாகக் கருதுவது அற்புதமான மாயையின் காரியமே யாகும்.

குறிப்பு:— இப்பாடல் "ஏக சீவத் திற"னில் இடம் பெறத்தக்கதே யெனினும், இந் நூலின் முதற்பதிப்பில் இத்திறனிலேயே இடம் பெற்றிருந்ததாலும், இவ் வறிவறியாமைத் திறனும் ஏகசீவத் திறனுக்கு அடுத்ததாகவே அமைவதாலும், பலவாய்க் காண்டல் என்பது அறிவின் இயல்பு பற்றியே வருவதாலும், இவ் வறிவறியாமைத் திறனிலேயே நிறுத்தப் பெற்றது.

542. கற்பனை கடந்த சத்திய ஆன்ம சொரூபத்தை (ஏகமாய்க் காணுமல்) பலவாகப் பார்ப்பதே அஞ்ஞான மாகும். ஆகையால் காணப்படும் எப்பொருளும் அது எத்தகைய நாம ரூபத் தன்மையதாயினும் அப்பொருளின் அதிஷ்டானமான மெய்ப்பொருளாக (ஆன்மாவாக) அதைக் காண்பதே ஞானம்.

குறிப்பு:— இப் பாடலின் பின்னிரண்டடிகளும் திருக்குறளின் 355 ஆவது பாடலாக, துறவற வியலில், மெய்யுணர்தல் என்னும் தலைப்பில் வருவனவாம். எக்குறட் கெப்பொரு ளாயினு மக்குறளை மெய்ப்பொருட்கே கையாள்வது என்னும் ஸ்ரீ முருகனரது செம்மை இப்பாடலிலும் இனிது விளங்குவது காண்க.

543. வெளியுலகம் பலவித நாம ரூபங்களாகக் காணப் பட்டாலும் அவற்றின் அதிஷ்டானமாகிய மெய்ப்பொருளோ (ஆன்மாவோ) ஒன்றே யாகும். எவ்வா றெனின், ஆடும்

செக்கின் அகன்ற குடத்தினுள் இடப்படும் எள் அளவற்ற பல வாயினும் அவைகளினுள் ளிருக்கும் நல்லெண்ணெயோ ஒரே தன்மையாய் இருப்பது போலவே என்க.

544. இரண்டற்ற தன் மெய் (சத்) இயல்போடு, திரண்ட உபசாந்தமும் (ஆனந்தமும்) சேர்ந்து, 'உள்ளேன்' (உள்+மை) என்ற வெற்றறிவுங் (சித்துங்) கூடிய தெளிவால்—அதாவது தன் ஏக சச்சிதாதனந்த இருப்பறிவின் தெளிவால்—ஒன்றை அறிதல்-அறியாதிருத்தல் என்றபடி இருவேறு நிலைகளை யடைதல் என்பது உண்மையில் தனக்கு இல்லவே யில்லை என்று உணர்வதே உண்மையான உணர்வு (மெய்ஞ்ஞானம்) ஆகும்.

குறிப்பு:— தெளிவு - சித்; தன்மெய்-தனது மெய்ந்நிலையான இருப்பு; உண்மை - உள்+மை, உள்ள தன்மை.

545. நாம் தெரிந்துள்ள அறிவு-அறியாமை என்ற இரட்டையானது புற விஷயப் பொருள்களைச் சுட்டி யறியும் நிலையில் மட்டுமே இருக்கக் கூடியதாம். தன்னிருப்பின் விளக்கமே சுபாவமாயுள்ள மெய்ப் பொருள் நிலையில் அவ் வறிவறி யாமை இரண்டும் இல்லாததால், அவ்விரண்டும் அற்ற அறிவே மெய்யறி வாகும்.

குறிப்பு:—"அறிவறி யாமையு மற்றதறி வாமே..." என வரும் உள்ளது நாற்பதின் 12 ஆவது பாடலும் உபதேசவுந்தியாரின் 27வது பாடலும் இங்கு ஒத்து நோக்கத் தக்கன.

546. 'தன்னை அறி' என்று சிலர் கூறுகிறார்கள். தன்னை யறியாதவர் யாரேனும் இருக்கிறார்களா என்ன? 'என்னை அறியேன்' என்று கூறுவது எவ்வாறு ஓர் அறியாமையோ அவ்வாறே 'என்னை அறிந்து விட்டேன்' என்று கூறுவதும் அறியாமையே யல்லவா? சொல்க.

குறிப்பு:—"என்னை யறியேனன்...." என்னும் உள்ளது நாற்பதின் 33ஆவது பாடல் இங்கு உய்த்துணரத் தக்கது. ஆன்ம வுணர்வு பெற்ற மெய்ஞ்ஞானிகள் "தன்னை யறிந்தோம்" என்றோ "அறியோம்" என்றோ கூறுவதில்லை. "கண்டன னென்றிடக் கருத்தெழ வில்லை; கண்டில னென்றிடக் கருத்தெழு மாறென்?..." என்று ஸ்ரீ அருணாசல அஷ்டகத்தின் இரண்டாவது செய்யுளின் இரண்டாவது அடியில் ஸ்ரீ பகவான் விளக்குவதுங் காண்க. அகந்தைக் கருத்து எழாத அந்நிலை அறிவறியாமை என்னும் இருமை யற்றது.

547. ('இருக்கிறேன்' என்ற சன்மாத்திர) ஞான வடிவாய் மட்டும் நிலைபெறும் ஆன்ம நிஷ்டையில் அறிவறியாமை என்னும் இரட்டை (த்வந்தம்) இராது. அஞ்ஞானம் என்பதே இருப்பற்றதோர் பொய். தன்னிருப்பாம் அறிவே சத்தியம். மெய்யுணர்வு பெற்றால் "அஞ்ஞானம் என்பதே ஓர் அறியாமை, 'இருக்கிறேன்' என்ற சுத்த அறிவே நம் ஆன்ம சொரூபம்" என்பது தெரிய வரும். இவ்வா றறிக.

## கக. மருட் டிறன்

548. நான் என்னை யறியவில்லை, என்ற மயக்கமானது, தான் புற விஷயங்களை அறிவதாக நினைக்கும் வரையில்தான் இருக்கும். (அதற்கு மாறாக, புற விஷயங்களை அறியும் மனம் தன்னை நோக்கித் திரும்புவதால்) 'தான் (ஆன்மா) எப்போதும் அறியப் பட்டவன்' என்ற இயல்பான உண்மையறிவு உண்டாகுமானால் அப்போது வெளி விஷய நினைப்பு நீங்கும் காரணத்தால் 'என்னை யறியேன்' என்ற மயக்கமும் மீண்டும் வராது ஒழியும்.

விளக்கக்குறிப்பு:— 'பிறவற்றை அறிகிறேன் என்ற விருத்திரூபமடைவதால்தான் 'என்னை அறியவில்லை' என்றதோர் பொய் மயக்கம் இருந்து வருகின்றது. எவ்வொரு பிறப்பொருளை அறியும் போதும் தான் இருந்தே அவை அறியப்படுவதால், **பிறவற்றின் அறிவு ஒவ்வொன்றும் தன் இருப்பறிவையே ஊர்ஜிதப்படுத்துகின்றது என்ற விவேகம்** விசாரத்தால் தலைப்படும் போது தன்னையறியாததோர் காலமே யில்லை என்ற அறிவு மலரும். இதுவே நித்தியாபரோக்ஷ ஞானம் எனப்பட்டது.

549. அன்னியப் பொருள் என்று ஒன்றுமேயில்லாதவாறு யாவும் தானேயாகும் பரிபூரண ஐக்கியமே (ஏகத்துவமே) நம் இயல்புநிலை யாகையால், 'அத்தகைய என் இயல்பு யாது?—நான் யார்?' என்று விசாரித்துத் தன் உள்ளத்தில் ஏகமாய் நிஷ்டை யுறுவதை விட்டுவிட்டு, தனக்கு அன்னியமாய் எதையும் அறியும் அறிவெல்லாம் பிழையானதே (அஞ்ஞானமே) யாகும்.

550. மனத்தின் கற்பனையால் மனாகாசத்தில் கனவுக் காட்சி யுண்டாவது போன்றே (மனக் கற்பனையால் மனாகாசத்தில்) நனவு எனப்படும் இவ் வாழ்வுக் காட்சியும் ஒன்று வந்து

நம் சுட்டறிவுக்குத் தோன்றுகின்றது. இக் கருத்தில் திடங் கொண்டு, இந் நனவுலக வாழ்வுக் காட்சியான எல்லாவித முன்னிலே படர்க்கை யறிவையும் விட்டொழித்து, அக் காட்சிகளின் மேல் உண்டாகும் விஷய ஆசைகளாகிய மடமையையும் ஒழித்து (தன்னில்) நிற்பதே சிறப்புடையதாம்.

551. உள்ளம் எனப்படும் ஆன்மப் பரம்பொருளே ஆய்ந்து அறியாத அறிவிலிகள் மட்டுமே வஞ்சகமான மாயையில் அகப் பட்டுப் பயந்து கலங்குவர். எங்கும் வியாபித் தோங்கும் பேரின்ப வெள்ளமான சிறந்த ஆன்மாவை உணர்ந்து தெளிந்துள்ள ஞானிகள் அந்த மாயைக்குச் சிறிதும் அஞ்சார்.

552. இரண்டற்ற ஏகமா யிருந்து விளங்கும் சத்வஸ்துவின் (ஆன்மாவின்) அத்துவிதத் தன்மையை யுணராது திரியும் பித்தர்களும், வாசனைகளாகிய காமாலைக் கண்ணுல் (ஏகமான ஆன்மாவைப்) பல்வேறு பொருள்களாகப் பார்த்து மயங்குபவர் களும்மான மக்கள், பாலைவனத்திற் பற்பல கானல் நீரோட்டத்தைக் காண்போரைப் போன்றவர்களே யாகும்.

குறிப்பு:— துவித நோக்குடையோர் திரிபுடிகளால் மிகுந்த துன்ப மடைவது திண்ணம் என்றுர்.

### கஉ. நனவுக் கனவுத் திறன்

553. நனவு கனவு இரண்டும் குறைபாடு உடைமையில் சமமானவையே — ஒரேவித மானவையே — என்று ஞான நாட்ட முடைய பெரியோர்கள் கூறுவர். ஏனெனில், கன வுலகைப் போலவே தேகாபிமானமுள்ள நன வுலகும் மறைந்து நீங்கிப் போவதே யல்லவா?

554. ஒருவன் தான் கனவிற் புரிந்ததாகக் கண்ட கர்மங்களின் பலன்கள் முழுவதும், விழிப்புற்று எழுந்தபின் நனவில் அனுபவிப்பதற்கு இல்லாமற் பொய்யாகிக் கழன்று போகும். அதுபோலவே நனவு என்று இப்போது உணரப்படும் அற்ப ஜீவபோத வாழ்வில் அகந்தை மதியின் கலக்கத்தால் இயற்றப்படும் மூவினைப் பலன்களும் ஆன்ம சொரூபானுபவ விழிப்புற்ற பிறகு அங்கே சிறிதும் மிஞ்சாது அழிந்து போகும்.

குறிப்பு:— ஞானிக்குத் திரிவித கர்ம பலனு மில்லை என்பது உபதேசம்.

555. கனு நனு என்னும் இரு நிலைகளும், எண்ணங்களும் நாமரூபங்களும் பொருந்தியவையா யிருப்பதில் சமமான வையே (ஒரே மாதிரியானவையே) என்பதால், அறிவறிந்த ஞானிகள், கனு நனு என்று கூறப்படும் இவ்விரு நிலைகளும் கலங்கிய சித்தத்தினுல் உண்டாக்கப் பெற்றுக் காணப் படுபவையே என்பர்.

556. நாம் அடையும் கனுத் தோற்றம் அகந்தை அரை குறையாக விரிந்து வியவகரிக்கும் போது உண்டாகித் தோன்று கின்றது. அது முழுவதும் விரிந்து வியவகரிக்கும் போது அஞ்ஞானத்தின் பூரண விரிவான நனவுலகத் தோற்றம் உண்டாகி விளங்குகின்றது.

557. நனவுக்குக் காரணமா யிருந்த கர்மானுபவங்கள் முடிந்து, கனவுக்கு அனுகுணமான கர்மங்கள் ஆரம்பிக்கும் போது மனம், நனவில் ஓர் உடலை 'நான்' என்று அபிமானித் துப் பற்றிக் கொண்டது போலவே, கனவிலும் மற்ருேர் உடலை (கனவுடலை) 'நான்' என்று அபிமானித்துப் பற்றிக் கொள்ளும்.

558. "(மேற்கூறியவாறு கனவுடலும் நனவுடலும் வெவ் வேரு யிருக்க) கனவில் ஒரு மாதைக் கனவுடலாற் கலவி செய் வதாகக் காணும் ஒருவனது நனவுடலிலும் விந்து நழுவுவது ஏன்?" என்று கேட்கப்படின், மனம் கனவுடலி லிருந்து மற்ற நனவுடலிற் பாயும் அபிமான வேகமே அதன் காரணமாகும்.

559. நாம் காணும் கனவு கலக்கமுற்ற மனத்தின் வெறும் எண்ண அலேயே (கற்பனை வடிவே) என்ருல், நாம் காணும் இந் நனவும் அத்தன்மை உடையது என்றே யாகும். காணப்படும் நனவில் நடப்பன எவ்வளவு உண்மையோ, கனவில் நடை பெறுவனவும் கனவுக் காலத்தில், அவ்வளவு உண்மையான வையே யாம்.

560. "சொப்பனம் க்ஷணிகமாக (குறுகியதாக)த் தோன்றி மறையும்; ஜாக்ரம் தீர்க்கமா (நீண்டதா) யிருக்கும்" என்று சொல்லப்படும் விடைகூட* கேள்வி கேட்பாருக்கு உபசாரமாகக் கூறப்பட்ட சமாதானமே. (தவிர உண்மை யல்ல. உண்மையில் இரண்டும் ஒரே மாதிரியானவையே. காலமே மனக் கற்பனை

* "நான்யார்?" என்ற நூலில் ஸ்ரீ பகவானுல் இவ்வாறு சொப்பனத்திற்கும் ஜாக்கிரத்திற்கும் ஓர் சிறு பேதம் இருப்பதாகக் கூறப்பட்டதை ஸ்ரீ பகவான் இங்கு குறிப்பிடுகின்றனர்.

யாகையால், நீண்ட காலம், குறுகிய காலம் என்ற) காலபேதக் கற்பனை யெல்லாம் மனமாயையின் சேர்க்கையால் நடைபெறும் விசித்திரச் சூதே யாகும்.

561. கற்ப காலத்தைக் கண நேர மாகவும், ஓர் கண நேரத்தைக் கற்ப காலமாகவும் காட்டிக் கலக்க மடையச் செய்வதே, பொய்யான இருண்ட சூனியத்தில் எல்லாவற்றையுங் கற்பித்து மயக்கும் மாயா மனத்தின் மகிமை யாகும்.

விளக்கக் குறிப்பு:— இருள் சூழ்ந்ததோர் அறைக்குள்தான் விளக்கொன்றின் சிற்றொளியால் திரைப் படங்களை உண்டாக்கிக் காண முடியுமே தவிர, சூரியப் பேரொளி யுள்ளவிடத்தில் அது இயலாதது போலவே, தன்னை (ஆன்மாவின் உண்மை நிலையை) மறந்த மறதி என்னும் அஞ்ஞானச் சூனிய இருளில் தான் மனவொளியாகிய, பிரதிபலன, மங்கிய, சிற்றறிவால் உலகத் தோற்றங்களாகிய கனு நனு என்னும் இரு நிலைகளும் உண்டாகித் தெரிய முடியும். எனவே மனமாயையால் கால தேச பேதக் கற்பனைகள் நிகழ்கின்றன என்பது கருத்து.

562. ஆதாரமான சத் பொருளாய், சத்திய ஞானவொளிக் கண்ணுக (பரம திருக்கு ஆக) இருக்கும் பூரணமான தன் (ஆன்ம) சொரூபத்திலேயே சதா காலமும் நாட்டமுற்றிருக்கும் தற்கவன புத்தியால் (அகமுக நாட்டத்தால்) தன்மறதி யிருளில் தோன்றும் கற்பனு பேதங்களை (இரட்டை முப்புடிகளை) உண் டாக்கி வைக்கும் அகங்காரத்தின் வியவகாரிக நிலைகளான (நனவு கனவு இரண்டு மாகிய) சொப்பனு வஸ்தைகளை ஒழித்து விடுக.

563. நனவு கனவு என்னும் இருவிதக் கனவுகளையும் காண்பதும், தன் (ஆன்ம) உண்மை நிலையை அறியாததும், அஞ்ஞானம் என்னும் மயக்கம் நிறைந்ததுமான மனம், தன்னை யார் என்று விசாரித்து, அதனுல் மனோ தர்மங்க ளாகிய பின்ன அறிவுக ளெல்லாம் அழியப் பெற்றுல், ஆன்மாவாகிய இறை வனது திருவடியில் ஞானகன சூரியனுய் நின்று விளங்கும்.

564. படுத் துறங்கிய ஒருவன் அங்கு மாயமாய்த் தோன்றும் கனவுலகில் தான் பலவாறு சுழன்று உழன்று அலைந்து வருந்திய தாகக் கண்டு, பிறகு விழிப்புறுங்கால் அக் கனவுத் தோற்றம் முழுவதும் வெறும் பொய்யாய்க் கழியவே, தூங்குவதற்கு முன் மென்மையான தன் படுக்கையில், உண்மையில் யாதொரு துன்பமுமின்றி அசங்கனுகப் படுத்துக் கொண்டிருக்கும் தான் ஒருவனே உண்மை என்று உணர்வதே ஞானம்!

விளக்கக் குறிப்பு:—இச் செய்யுளில் உபமானம் மட்டுமே சித்தரிக்கப்பட்டு, ஆன்மாவின் அசங்கத்துவம் (எதனுலும் பாதிக்கப்படாத தன்மை) உபமேயமாக உய்த்துணரும்படி விடப்பட்டுள்ளது.

படுக்கையில் துயிலுற்ற ஒருவன் என்பது தன் மெய்ந்நிலையை மறந்த ஜீவன். "சொப்பன மாயத்துள் சுழன்று சுழன்று எய்த்து" என்றது, கனவு தோன்றுவது போல மாயமாய்த் தோன்றும் பற்பல ஜன்மங்களில் விருப்பு வெறுப்புக்களால் வரும் கர்மச்சக்கரத்தின் பலன்களால் மேலுங் கீழுமாகச் சுழன்று அலைந்து வருந்துதல். "பின் அவ் வெல்லாம் பொய்ப்படப் புலம்பல் உற மெய்ப்பட" என்றது, பிறகு அப்பல கோடி ஜனன மரணங்களாகத் தோன்றிய ஜீவ போத வாழ்வுத் தோற்றம் முழுவதும் மெய்யான ஞான விழிப்பால் பொய்யாக்கப் பெற்று நீங்குதல். "மென் பாயலிடை முன்னுள் படுத்த மகனும் அசங்கனுய் உணர்வு" என்றது, துயிலுக்கு முன் படுக்கையிற் படுத்துக் கொண்ட ஒருவன் அங்கு காணும் சொப்பன காலத்தில் அலைந்து சுழன்று துன்புறுவதாகக் கண்டாலும் தான் சுகமான படுக்கையில் துன்ப மற்றுப் படுத்திருப்பதே உண்மை யாவதுபோல, ஏகனுகிய ஆன்மா ஜீவனுகி ஜனன மரணத் துன்ப முறுவதாகக் கண்டாலும் உண்மையில் அவற்ருல் பாதிக்கப்படாத அசங்க ஆன்மாவாக இருப்பதே மெய் என்று அறிவதே ஞானம். ஸ்ரீ முருகனுர் கூறியது:— தான் இன்றித் திரிபுடிகள் இல்லை என அறிந்தால் அவை யாவும் தனக்கு அன்னியமாய், கேவலம் மித்தையாய்க் கழன்று ஆதாரமின்றிப் புலம்புவனவாம். அத் திரிபுடிகளின் சங்கமின்றி மெய்ஞ்ஞானத்திற் சயனிக்கும் சுக ரூபமான அறிவே ஞானத்தின் உண்மையாகும்.

565. ஒருவன் (தன் தூக்கத்தில் வந்த) கனவில் புத்தி அடியோடு மயங்கி, தான் மிகக் கொடியதோர் பாலை வனத்தில் வழிதவறி அலைந்ததாகவும், பிறகு தன் ஊரைத் தேடி யடைந்த தாகவும் கண்டு அப்பொழுது விழித்துக் கொண்டதற்குச் சமானமே, ஜனன மரண சம்சாரத்தின் வழியே தான் பல ஜன்மங்களாய் உழன்றதாகவும் பிறகு (ஆன்ம விசாரணையால்) முத்தி யடைந்ததாகவும் கருதுவது!

குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் கூறியது:— முத்தியும் கற்பனையே; ஆன்ம சொரூப மொன்றே என்று முள்ளது என்பது சூசனை.

**பகவான் (9)**

தான் ஆத்ம சொரூபமே என்பதை மறந்துபோய், இவ் வுடம்பே தன் உண்மை சொரூபமாக நினைத்து மயங்கி, எண்

ணிக்கை யற்ற உடற்பிறப்புக்களை யடைந்து, கடைசியில் தன் (பிறப்பிறப்பற்ற பிரம்ம சொரூப) இயல்பை அறிந்து, எப்போதும் போல் பிரம்மாகவே விளங்குவதாகிய ஸஹஜஸ்திதியை அடைவதானது, ஒருவன் தன் தூக்கத்தில் உலகம் முழுவதும் அலைந்து திரிவதாகக் கண்ட கனவிலிருந்து விழித்துக் கொள்வதற்குச் சமானமே என் றறிக.

## கரு. அவத்தா பேதத் திறன்

566. இடமகன்ற பெரிய ஆகாயத்தை விட்டு மற்ற நான்கு (மண், நீர், நெருப்பு, காற்று) பூதங்களும் உண்மையாய் இருப்புக் கொள்ள முடியுமா? (முடியாது). முடியுமாகில், குற்ற மற்ற துரீய நிலைக்கு வேருக மற்ற நனவு கனு துயில் ஆகிய மூன்று நிலைகளும் அவ்வாறே உண்மை யானவையாக இருக்க முடியும். (நனவு கனவு துயில் உண்மை யல்ல என்பது கருத்து).

567. தூக்க மாகிய இருளிலும் அதைக் கிழித்துக்கொண்டு பளிச்சென விளங்கும் துரீயமாகிய தன்னியல்பான ஏக நிலையுற்று அதிலேயே திடமாக நிற்க முடியாத மந்தாதிகாரிகளின் புத்தி சமாதானமடையும் பொருட்டே, மிகவும் உண்மைபோலத் தடித்துக் காணப்படும் நனவு கனவு துயில் என்ற மூன்று அவஸ்தைகளின் சம்பந்தத்தோடு துரீயம், துரியாதீதம் எனப்படும் நான்காவது ஐந்தாவது அவஸ்தைகள் (நிலைகள்) கூட அவஸ்தா பேதங்களாக நூல்களிற் கூறப்பட்டுள்ளன என் றறிக.

குறிப்பு:— உத்தமாதிகாரிகள் நூல்களில் துரீயமாகக் கூறப்பட்ட தன் நிஜ சொரூப ஞான நிலை ஒன்றைத் தவிர வேருகக் கூறப்பட்ட நனவு கனவு துயில் துரீயாதீதம் ஆகியவை ஒன்றுமே உண்மையல்ல என்று அறியட்டும் என்பது கருத்து. 566, 567 ஆவதாகிய இரண்டு செய்யுட்களையும் மேலும் விளக்க "நனவு கனவு துயில் ..............துணி" எனவரும் உள்ளது நாற்பது-அநுபந்தம் 32ஆவது செய்யுளைக் கூர்ந் துணர்க.

568. நனவு கனவு ஆகிய அவஸ்தைகளைத் தான் இருக்கும் நிலைகளாக (தனதாக) அபிமானிக்கும் அகங்காரரூப ஜீவன் உள்ளவரையில்தான் மேற்கூறிய அவஸ்தைகளும் அவைகளின் பேதங்களும் உணரப்படும் என்று அறிக. எழுச்சியுறும் இவ் வவஸ்தை யபிமானி (ஜீவன்) தான் யாரென்று தன்னை ஆராய்

வதனுல் அழிவா ஞகில், அவனேடு அவஸ்தா பேதங்கள் அனைத்தும் அழிந்துபோம்.

குறிப்பு:-'அறிவாய்' என்ற சொல்லை 'அறிக' என்றும் அல்லது 'அறிவாய் பவித்த' என்று கூட்டி 'போலி அறிவான ஜீவனுய் எழுந்து தோன்றுகிற' என்றும் இரு விதமாகவும் பொருள் கொள்வது இயலும்.

569. உத்தம ஸ்வாத்ம பக்தியால் அகந்தையின் சமர்ப் பணம் சம்பூரணமாகித் தன் ஆன்ம சொரூபமடைந்து உண்மை விழிப்பு நிலையாகிய பராவஸ்தையில் ஆதிக்கம் பெற்ற ஞானி தனது விகற்பமற்ற இயல்பான அந்த மேலாம் கைவல்ய நிலைக்கு வேருக யாதோர் அவஸ்தையும் இருப்பதாகக் காண்பதில்லை.

விளக்கக் குறிப்பு:—ஓர் வெற்ற வெளியில் இரு சுவர்கள் எழுப்பப் பெற்றுல் ஒன்றேயான அவ் வெளி மூன்று கூருவது போலவே நம் அகண்ட ஏக ஆன்ம உணர்வில் அவித்தையாற் பொய்யாக எழுப்பப்படும் நனவு கனவு என்னும் இருவித தேகாத்மபுத்திக் கற்பனையால் நம் ஏக மெய்ந்நிலையே மூவவஸ்தைக ளுற்றதாகக் காணப்படுகின்றது. நம் மெய்ந்நிலையில் நனவுடலைச் சார்ந்து நிற்கும் தேகாத்ம புத்தி நிலையை ஜாக்கிரா வஸ்தை என்றும் கனவுடலைச் சார்ந்து நிற்கும் தேகாத்ம புத்தி நிலையைச் சொப்பன வஸ்தை என்றும் கருதும் நாம் மூன்ருவது பகுதியாக்கப் பெற்றதும் இவ் விருவுட லுபாதிகளு மற்றதுமான நம் யதார்த்த நிலையை நித்திரா வஸ்தை என்றும் பெயரிட்டு அனுபவித்து வருகிறேம்! தேகாத்ம புத்தி வடிவ நனவு கனவு என்னும் இரு சுவர்களும் ஆன்ம விசாரத்தால் நசிக்குங்கால் என்று மிருந்த, ஏக வெற்ற வெளி போன்ற, நம் யதார்த்த அகண்டான்ம நிலையானது இதுகாறும் எல்லைக்குட்பட்டு அனுபவிக்கப்பட்டுவந்த நனவு கனவு துயில் போன்ற தல்லாமல், எல்லையற்ற ஏக உணர்வாய் இருப்பதை யறியும் தருணத்தில் இதை அம் மூன்றிற்கும் வேருனதோர் புதிய நான்காம் நிலையாகக் கருதி அதற்குத் 'துரீயம் - நான்காவது' என்று பெயரிடப்பட்டது. ஆனுல், பிறகு (அதாவது, 'இது என்றென்று முள்ள நம் இயல்பு நிலையே' என்ற உணர்வு திடப்படும் ஸஹஜஸ்திதியில் இத் துரீயத்தின் புதுமை பொய்யாகி, 'மற்ற நனவு கனவு துயில் மூன்றும் உண்மையாகு லன்றே இதை நான்காம வஸ்தை அல்லது துரீயம் என்று கொள்ளலாம் ; ஆனுல் அவை மூன்றும் பொய் என்னும் அறிவு அனுபவப்படும் இப்போது இதைத் துரீயம் என்று அழைப்பானேன்?' என்றறிந்து கொள்வதால்) இது துரீயமல்ல ; நம் அதீத சுபாவ நிலையே என்று விளங்கும். ஆனுல் சாஸ்திரங்கள் இந்நிலையை மீண்டும் "துரியாதீதம்" என்றும் ஓர் பெயரிட்டு விட்டன!! இவை எல்லாம் ஜீவனுக்கு அஞ்ஞான திசையில் ஆன்ம ஞானத்தைப் பற்றிக் கூறப்பட்ட சமாதானங்களான 'சொல் -

அவஸ்தைகளே' தவிர, தன் இருப்புணர்வு ஒன்றையன்றி வேறு அவஸ்தைகளே இல்லை என்றறிந்த ஞானியின் அனுபவம் அவஸ்தாதீதமே!

## கச. இருவினைத் திறன்

570. (பரிபூரணப் பொருளான இறைவனுக்கு வேருக) தான் ஓர் தனிப்பட்ட ஜீவனுய் இருப்பதாக ஒருவன் நினைக்கும் வரையிலும், அப்படிப்பட்ட ஜீவன் தேகாபிமானமாகிய அகங் காரக் கர்த்துருத்துவம் கொண்டு நல்-தீ வினைகளைச் செய்து அவற்றின் பயனுகச் சுக துக்கங்களை அடைந்து அனுபவித்தே தீருகிருன் என்று கொள்வது தான் முறையாகும்.

குறிப்பு:— அகந்தையாகிய கர்த்துருத்துவம் உள்ள வரையில் இரு வினைகளையும் இருவினைப் பயன்களையும் யாரும் மறுக்க முடியாது என்பது உபதேசம்.

"வினைமுத ஞமாயின் ....." என வரும் உ.நா 38 ஐயும் இங்கு வாசித்துணர்க.

571. உயிரின் தலைவஞன இறைவன் (ஈசுவர நியதியா னது) அவ்வுயிர் தன் பிராரப்தப் பகுதியாக அடைந்துள்ள கர் மங்கள் தரும் பயன் முழுவதும் மீதமின்றி அனுபவித்துத் தீரும் வரை இவ்வுடலின் வாணுள் முடிந்துவிடாதபடி உடல் நீடித் திருப்பதற்கு அகந்தை என்னும் பேயை 'உடலைக் காக்கும் ஓர் நல்ல காவலாக இருக்கட்டும்' என்று முடிவு செய்து வைத் துள்ளான்!

572. ஒருவன் எடுத்துள்ள பிறப்பாகிய இவ்வுலக வாழ்க் கையில் அவன்பால் நிறைந்து வந்து சேரும் பலவித சுகங் களாகவும், பலவித துக்கங்களாகவும், அச் சுகங்களைத் தர நிமித்த காரணமான நண்பர்களாகவும் அத் துக்கங்களை தர நிமித்த காரணமான வலிமை மிக்க பகைவர்களாகவும், அவன் முன் செய்த நல்-தீ வினைகளே உருவெடுத்து வந்து நிற்பனவாம்.

573. ஒருவன் தான் செய்யும் கர்மங்களால் வரும் பயன் மட்டும் நல்லதாக இருந்தாற் போதும் எனக் கருதி எத்தகைய (தீய) வழியாலும் அந்த நல்ல காரியத்தைச் செய்யாம லிருப்பா ஞக. நல்ல கர்மங்களைச் செய்வதற்கு மேற்கொள்ளும் வழி தீய தோர் வழியாயின் அந்த சுப கர்மமும் தீவினையே யாகி விடும் ஆகையால், மேற்கொள்ளும் வழியுங் கூட மிகவும் பரிசுத்தமான தாகவே இருக்க வேண்டுமென் றுணர்க.

574. அமைதியும் நல்ல தூய்மையுமான மனத்தோடு சந்தோஷமுடன் செய்யப்படும் கர்மங்களே நல் வினைகளாகும். கொந்தளிக்கும் பரபரப்புடனும் ஆசையாகிய அழுக்குடனும் கூடிய மனத்தாற் செய்யப்படுவன யாவும் தீவினைகளின் வரிசை யில் தான் சேரும்.

## கடு. இரட்டை முப்புடித் திறன்

575. தோற்ற மாத்திரமான அநாத்மாவின் இலக்கணம் என்ன வென்றால், ஸ்திரமான சொரூப நிலையினின்றும் நழுவிய மனமானது புலன்களின் வழியே கற்பனை செய்கின்ற பலவித மயக்கந் தரும் இரட்டை முப்புடிகளுக்கு இடமாக விருப்பதே. ஆன்மாவினிடமோ இரட்டை என்பதே இல்லை.

குறிப்பு:— ஆன்ம விலக்கணம் ஏகம்; அனுன்ம விலக்கணம் இரட்டை முப்புடிகள் என்பதாம்.

576. 'இது தான் ஒரு பொருள்' என்று (ஓர் எல்லை) வரையறுக்கப் படுவதே அப் பொருள் அறியப்பட்டதன் குறியா கும். அந்தக் குறியினால் தான் அப் பொருளுக்கு ஓர் இலக்கணம் கூற முடிகிறது. இலக்கணமாகிய அந்தக் குறியோ அளவுக்கு உட்படும் தன்மையே யாம். ஆனால் அதீதமான ஆன்மாவோ அளவுக்கு உட்படாதது.

குறிப்பு:— ஆன்மா இரட்டை முப்படிகள் போல ஓர் அறிபடு பொருளல்ல வாகையால் அதற்கு ஓர் குறியோ, இலக்கணமோ வகுத்து அளவுக்குட்படுத்தி விட முடியாது என்பதாம்.

577. ஆன்மா தன்னைத் தவிர இரண்டாவது பொருள் ஒன்று மின்றி ஏகமாய் விளங்கும் தன்மையுடைய தாகையால் அன்னியத்தைப் பார்த்தல் (பேதக் காட்சி) எனப்படும் சுட் டறிவு அதற்குப் பொருந்தாத தாகும். ஆகவே, அன்னியத்தைப் பார்ப்பவனான அகங்கார ரூப ஜீவன் 'தான் யா'ரென்று நாட்டத் தைத் தன்பால் திருப்புவானாகில் இதயக் கிரந்தி அறுபட்டு (மனப் பூட்டு உடைந்து), சுட்டி அறியப்படுவனவான முப்புடித் தோற் றங்களும் தூரத்தே யகன்று ஒழிவனவாம்.

578. எப்போதும் இருந்து விளங்கும் தன் ஆன்ம சொரூப ஞானம் ஒன்றுதான் நாம் உள்ளத்தில் ஏற்றுக் கொள்ள வேண்டிய (நாட வேண்டிய) தலை சிறந்த உண்மையாகும். காணப்படும் முப்படிகள் யாவற்றையும் வஞ்சக மனமாயையின் கற்பனையாலான சொப்பனத் தோற்றங்களே என்று துணிந்து இகழ்ந்து விலக்கி விடுக.

579. அழிவற்ற ஆன்ம சொரூபம் இரண்டற்றது என்ற சிறப்பாலும், அதை யடையும் வழியும் தன்னை நாடுவதைத் தவிர (ஆன்மாவை விட) வேறில்லை என்பதாலும் சாதனமும் சாத்திய நிலையுமான இரண்டையும் வேறுபாடற்று ஆன்மா வாகவே காண்பாயாக.

580. பேதங்களைக் கற்பிக்கின்ற மோக வடிவ மனமானது இரண்டற்ற சத்சித் சொரூபமான பிரம்ம நிலையில் மூழ்கி மீளாதழியுமானால், மனமயக்கத்தால் தோன்றிய பல்வேறு விதமான (ஜீவேசுவரஜகத்) தோற்றங்கள் முழுவதுமே சன்மாத்திர பிரம்ம சொரூப ஞானமயமாகவே ஆகிவிடும்.

581. அன்னியமான ஐம்புல அறிவை அறியும் அறிவினர் (அஞ்ஞானிகள்) அறிவு பலவகை என்பர். அத் தகையோர் பல விதப்படும் பேத மயக்கத்தினின்றும் விடுபடத் தெரியாதவர்களேயாகும்! ஆசை, அச்சம் முதலிய உத்வேகங்களை யுண்டாக்கி வைக்கும் பஞ்சேந் திரியங்களின் வழிச் செல்லும் அறிவுச் சக்தியை அவ் வழிச் செல்லாமல் மீட்கக் கற்கும் திறத்தால் பரிபூரண மெய்ஞ்ஞானம் அவர்களுக்கு உண்டாகுமானால், அப்போது அன்னியமாக ஒன்றுமே யில்லாமற் போய்விடும்.

## கரு. விடய போகத் திறன்

582. "காம மயக்க முற்ற நாய் தன் பெண்ணினத்துடன் கலவியில் இயல்பாக அடையும் சுகம் எதுவோ அதுவேதான் இந்திரன் அயிராணியுடன் போகத்தா லடையும் சுகமுமாம் (சிறிதும் அதிகமல்ல)" என்று முற்காலத்தில் பரமான்ம சுகானு

பவம் பெற்றவரான தத்தியங்காதர்வணன் என்னும் முனிவர் தன் மெய்ஞ்ஞானத்தாற் கண்டு கூறினுர்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் கூறியது :— தத்தியங்காதர்வணர் என்ற மகாத்மா ஒருவர் ஒரு முறை இந்திரனை வைராக்கியம் அடைவிக்க எண்ணி, அவனை முன்னிலைப் படுத்தி இவ்வாறு கூறினர். அவர் அனைத்தினுஞ் சிறந்த ஆன்ம சுகத்தை தான் முன்பே அனுபவித்து வருவதனுல், 'இந்திரன் இந்திராணியுடன் அனுபவிப்பது மற்றெந்த ஜீவர்க்குங் கிட்டாததோர் பெருஞ்சுகம்—பேரின்பம்—என்று கருதி வந்த அவனது அறியாமையைப் போக்க, "சுணங்கன் ஓர் பெண் நாயிடம் சாதாரணமாக எய்தும் சிற்றின்பத்தின் அளவினதே நினது பேரின்பமும் ஆகும்" என்று உள்ளதை உள்ளபடி கூறினுர்.

583. வயிற்றைக் கிள்ளும் கடும் பசியுள்ள சமயத்தில் (சாதாரண உணவான) கஞ்சியோ புல்லரிசியா லாக்கப்பட்ட கூழோ ஆயினும் அது அருமையான விருந்தாகச் சுவையின்பந் தரும். ஆகவே பழமையான இவ் வுலகில், அடையப்படும் போகங்களால் விளையும் சுகமானது நாம் விரும்பிப் பெறும் விஷயப் பொருள்களின் சிறப்பைப் பொறுத்து உண்டாவதில்லை ; அப் பொருள்களிடத்தில் நமக்கு உண்டாகி யிருக்கும் ஆசையைப் பொறுத்தே அவை சுகந் தருவனவாய்த் தோன்றுகின்றன.

584. சத்தே சித்து; அந்தச் சித்தே ஆனந்தம் (எனவே சச்சிதானந்தமாகிய நம் ஆன்ம சொரூபமே ஆனந்தம்). அன் னியப் பொருள்களால் நாம் சுகம் அடைவதாக நினைப்பது பொய் மயக்கமே. தெளிந்த உண்மையாகிய (சத்து சித்து ஆகிய) ஆன்மாவைத் தவிர கற்பனையால் இருப்புள்ளவை போலக் காணப்படும் விஷயப் பொருள்களிலிருந்து மெய்யான இன்பம் கிடைக்குமா? சொல்க. (கிடைக்காது என்பதாம்.)

585. அற்ப அறிவு படைத்த நாய் (சதைப் பற்றில்லாது வெந்து) வறண்டு போன சுடுகாட்டு எலும்பு ஒன்றைக் கவ்வி வந்து தன் வாயில் (அக் கூர்மையான எலும்பால்) மிகவும் புண்ணுண்டாகும்வரை பறட்டுப் பறட்டெனத் தன் பற்களாற் கடித்து, அப் புண்ணிலிருந்து வரும் தன் இரத்தத்தையே சுவைப் பதால், "இவ் வெலும்பைப் போன்ற இனிய சுவை தரும்

பொருள் உலகில் வேறு இல்லவே யில்லை" என்று அதைப் புகழ்ந்து கொண்டாடும்! அல்லவா?

விளக்கக் குறிப்பு :— தன் வாயினின்று வரும் இரத்தமே சுவைக்கப் படுவதை அறியாத நாய் போல, ஆன்மாவினின்றே (தன்னிடமிருந்தே) சுகம் உதயமாவதை அறியாத பாமர மக்கள் விஷயப் பொருள்களிலிருந்தே சுகம் வருவதாய் நினைத்து அவற்றைப் போற்றிப் பேணுவர் என்பது கருத்து.

586. ஆன்ம ஞானத்தின் இன்பத்தை அனுபவித் தறியா தவர்களும், படிப்பறிவால் தர்க்கம் புரிபவர்களுமான மக்கள் பெண்ணின்பம் முதலாகச் சொல்லப்படும் மற்ற (அன்னிய) சுகங்களை உண்மையானவை என்று கருதிப் போற்றிப் புத்தி தடுமாறி நிற்பதோடு, அந்தோ, சாகுங் கடைசி நேரத்திலுங் கூட அந்த விஷயப் பொருள்களை அடையும் ஏக்கத்தோடு தான் இறந்து போவர்.

587. அறிவிலிகளின் நெஞ்சு, அறிந்து அனுபவித்து ஆனந்திக்கத் தக்கதாய் உள்ளத்தில் நிறைந்து பெருகும் ஆன் மானந்தப் பெருவாழ்வு இருப்பதை மறந்துபோய், ஒரு சிறு தினையரிசியின் உடைந்த பகுதிக்குங்கூடச் சமமாகாத மிகச் சிறியதோர் தேன் சொட்டாகிய விஷய சுகங்களையே நினைத்து, உருகி, ஏங்கி, வருந்தும்.

குறிப்பு:— 'விண்ட தினை' என்றும், 'விண்ட சிறு விடயம்' என்றும் இருவிதமும் பொருள் கொள்ளலாம்.

588. கீழான நெஞ்சமுடைய வீணர்கள் சிற்றின்பமாகிய கொழுப்பு நீர் ஊறுஞ் சிறு குழியாங் குட்டையின் சேற்றில் வீழ்ந்து, நல்லோர் நகைப்புக் காளாகி, உழன்று கிடப்பார் களே தவிர, அதை விட்டு நீங்கி, மேலான சிவபோகமான ஆன் மானந்த சமுத்திரத்தை விரும்பி, அடைந்து, அதில் மூழ்கிச் சுகிக்க மாட்டார்.

589. அறிவற்றவர்களும், அழிவினின்றும் தம்மைக் காப் பாற்றிக் கொள்ளத் தெரியாதவர்களுமான (மனத்தை யடக்கிக் கொள்ளாதவர்களுமான) ஜீவர்கள் மட்டுமே விரும்பி யடைந் தனுபவிக்கும் சிற்றின்பமானது, எண்ணத்தாலளவிட முடியாப்

பேரின்பத் தீங்கனியை உண்ண விரும்பி மேலான ஞானநாட்ட முற்று நிற்கும் முமுக்ஷுக்களால் மிகவுங் கடைப்பட்டதாக ஒதுக்கித் தள்ளப்படும் ஒன்ருகும்.

590. (புசிப்பனவால் ஏற்படும்) திருப்தியே நம் சொரூபமாயிருக்க, அதையறியாமல் திருப்திக்காக ஒருவன் தான் அன்னத்தைப் புசிப்பதாக நினைத்து அதில் விருப்பங் கொள்வானுயின் அந்த அன்னமே (போகச் சுவையே) அவனை விழுங்கி, பிறகு என்றுமே தணிக்க முடியாத பெரும் அதிருப்திக்கு ஆளாக்கி விடும்.

விளக்கக் குறிப்பு:— அன்னம் = உணவு மட்டுமின்றிப் புசிக்கப் பெறும் ஐம்புல வுணவுகளுமாகிய போகங்களையுங் குறித்து நின்றது. அன்னமே நமக்குச் சத்தைத் தருவதாக கருதுகிறோம். ஆனுல் நாமே சத்து. சத்தே நம் இயற்கை என்று அறியாமல் இருக்கிறோம் என்றுர். மேலும் நாமாகிய சத்தே உணவாகையால் புறத்தே போகம் விழைவது பேதைமை என்பது வலியுறுத்தப் பட்டது. சத்தாகிய நாம் நமக்கு அன்னியமாகிய விஷய போகங்களை (உணவை) விரும்பினுல், அவ்வுணவை நம் நிறைவு நிலையைக் குறைவாக்கி, நம்மை உண்டு (அழித்து) தீராத வேட்கையையும் விளைக்கும் எனப் பட்டது.

591. சாப்பிடும் போதெல்லாம் அந்த உணவே தம் முயிரைச் சாப்பிட்டு விடுகின்றது என்ற உண்மையை அறியாத அஞ்ஞானிகள்தான் உலகில் தாம் போகங்களைப் புசிப்பதாகக் கருதி (அப் போகங்களால் தாமே புசிக்கப்படுவதை யறியாமல்) அவைகளை அனுபவிக்க ஆசை மிகுந்து, அவற்றைத் தேடி யலைகின்றனர்.

விளக்கக் குறிப்பு:— உணவும் அது போன்ற போகப் பொருள்களும் புசிக்கப்படும் அளவிற்கு ஜீவனைத் தம்பால் மேன்மேலும் ஆசைப் படுத்தி வைப்பதால் ஆன்ம சொரூப ஆவலினின்றும் மேன்மேலும் விலக்கி வைக்கின்றன. ஆன்ம சொரூபமே உயிருக்கும் உயிராவதால் அதனின்றும் பிரிக்கப்படுவதே நமக்குப் பெரும் மரண மாகையால், அதற்குக் காரணமாகும் உணவாதி போகங்கள் நம்மை உண்டு அழிப்பதாகக் கூறப்பட்டது.

592. எரியும் நெருப்பில் நெய்யை வார்ப்பதால் அது மேலும் உயர்ந்தெழுந்து எரியுமே தவிர அடங்கி அணைந்து விடாதது போலவே, திட்டமிட்டுத் தேடிய நம் விருப்பங்கள்

கிட்டும் போதெல்லாம் உண்டாகுங் களிப்பால் ஆசை என்னும் நெருப்பானது திருப்தியுற்றுத் தணிந்து விடுவதில்லே. (மேலும் ஆசைத் தீ வளர்ந்தே ஓங்கும்)

593. ஐம்புல ஆசை என்னும் பாம்பானது தீண்டினுல் (அனுபவித்தால்) மட்டுந் தானு உயிரைக் கொல்கின்றது ? அல்ல ; நன்கு ஆராயு மிடத்து, ஒருவன் (அவ் விஷயங்களே) ஒரு முறை பார்த்தாலுங் கூட, நினேத்தாலுங் கூட அவனேக் கொன்றுவிடக் கூடியதாய் இருக்கின்றது ! ஆகையால், இவ் விஷயாசைப் பாம் பைப் போல அவ்வளவு கொடிய விஷப்பையை வாயிலுடையதாய் எப் பாம்பையும் நாம் எங்கும் கண்டதே யில்லே !

## கஎ. மன மாயைத் திறன்

594. உண்மையில் தனக்கோர் இருப்பே யில்லாத மாயை யானது 'நான்' என்ற ஒரு ஜீவவியக்தி உண்மையாகவே இருப் பது போலக் காட்டி, நிறைந்த கூர்மதியுடைய மக்களேக் கூடத் தனது மாயவலிவால் முழுதும் மயங்கச் செய்து, தனது அந்த வெற்றியைக் கண்டு தானே தன்னுள் வியந்து சிரித்துக் கொள்கின்றது !

விளக்கக் குறிப்பு:— உண்மையில் 'நான்' என்னும் அகந்தை-ஜீவன் இருப்பற்றவனே யாயினும் அவ்வாறே தான் ஒருவன் இருப்பதாகக் கருதுவதே மாயையின் காரியமாகும். கல்விச் சிறப்பும் அதி தீக்ஷண்ய புத்தியுமுடைய மக்கள் கூட, தான் ஓர் தேகமே என்றதோர் ஜீவ வடிவாகத் தம்மை நினேத்துக் கொண்டு, அந்தத் தனக்குச் சக்தியும், சித்தியும் பெறவிரும்பி நிற்பதால் அத்தகையோரையுங் கூட மாயை தன் வலிமையால் மயக்கி வைத்திருக்கின்றது என்று சுட்டிக் காட்டுகின்ருர்.

595. "**இருக்கின்றேன்**" என்ற சத் ரூப ஆன்ம அறி வொளியை உள்ளத்தில் அனுபவித் தறியும் போது, அறியாமை யிருள்தோற்ற மாகிய புறப்பொருள்கள் எவ்வளவுதான் இருந்தா லும் என்ன நஷ்டம்? (ஒன்றுமில்லே). ஏனெனில், அவ் வனுத் மாவைப் பற்றிய அஞ்ஞான இருள் சுயம் பிரகாசச் சத்திய வஸ்துவாய் இதயத்திற் பிரகாசிக்கும் ஆத்ம ஜோதியைச் சிறிதும் மறைக்க முடியாது.

விளக்கக் குறிப்பு:— ஒருவனது நிழல் எவ்வளவு தான் நீண்டு, அகன்று, கருத்திருந்தாலும் சூரியனே மறைக்க முடியாதது போலவே,

தன்னொளியால் (ஆன்ம இருப்புணர்வால்) தோன்றி, இருப்புள்ளது போலக் காணப்படும் அனாத்மத் திருசியங்கள் அண்ட கோடிகளாக எவ்வளவு விரிந்து காணப்பட்டாலும் ஆன்மப் பிரகாசத்தை மறைக்க வியலா. அதற்கு மாறாக, நிழலின் இருப்பானது சூரியனின் உதயத்தையும் பிரகாசத்தையுமே ஊர்ஜிதப்படுத்துவது போல, **இப் பிரபஞ்சத் தோற்றமானது ஆன்ம விளக்கத்தையே நிதர்சனப் படுத்துகிறது** என்பது கருத்து.

596. அழியக் கூடியதும், இருப்பற்றதும், ஜடமானதுமான மாயை * அறிவொளியான ஆன்மாவை (பிரம்மத்தை)த் தம் வசப் படுத்திக் கட்டி வைத்திருந்து பிறகு விடுதலை (முக்தியடையச்) செய்கின்றது என்று கூறுவதானது, 'ஒரு கொசு வாயைத் திறந்து இப் பரந்த ஆகாயம் முழுவதையும் விழுங்கிப் பிறகு வாந்தி செய்து உமிழ்ந்து விட்டது !' என்று கூறுவதைவிட மிக வும் பேதைமையான கூற்றாகும்.

597. பரிபூரண ஞான வடிவான உள்ளமே சத்தியமா யுள்ள பொருள் என்று தீரும் போது இப் பெரும் 'மாயை' என் பது வெறும் பொய்யே யல்லவா? பொய்யாகிய அம் மன மாயை என்னும் பாம்பால் தீண்டப்பட்டு ஆன்மா (பிரம்மம்) மயங்கு கின்றது என்பது எவ்வளவு விந்தையான பொய்!

விளக்கக் குறிப்பு:— மேற் கூறியவற்றி லிருந்து 'மாயை' என்பது இருப்பற்ற வொன்று என்று தீர்வதால், மாயா காரியமாக வர்ணிக்கப்படும் சிருஷ்டியாதி பொய்யாகி, **அஜாதமே** சத்திய சித்தாந்தமாய் உபதேசிக்கப் படுவது காண்க.

## கஅ. பேதைமைத் திறன்

598. 'தேகமே நான்' என்ற அகந்தை மதியினரான அறிவிலிகள் பிரம்மமே தாமாக விளங்கும் திட ஞானியைப் பார்த்து, 'இவர் வேலை செய்கிறாரே; சாப்பிடுகிறாரே ! அத்துவித ஞானி என்றால் இவை எப்படிப் பொருந்தும் ?' என்று கேட்டுச் சிறந்த ஞானியின் உணர்வுக்கு இலக்கணங் கூறுவார் போலத் தம் ஜட மடமையுணர்வைத் தாமே வெளி (விளம்பர)ப் படுத்திக் கொள்பவ ராகின்றனர் !

* 'மா யா' என்ற வடமொழிச்சொல் ''இல்லாதது'' என்ற பொருளையுடையது.

விளக்கக் குறிப்பு:— அஞ்ஞானிகள் 'தேகமே தான்' என்று கருதி யிருப்பதால், அதற்கு மாருக அசரீர 'ஆன்மாவே தான்' என்றுணர்ந்துள்ள ஞானியையும் ஓர் தேகமாகவேதான் காண்பர். இது 'கண் எப்படி, காட்சி யப்படி'! என்ற நியாயப்படியே யமைகின்றது ! அதனுல் அனுத்மத் தேகாதிகளின் காரியத்தை ஆன்மாவாம் ஞானியின் காரியமாகவே கூறும் இவர்களது கூற்று, இவர்கள் ஜடதேக பாவ முடைய அறிவிலிகள் என்பதையே காட்டித் தருகின்ற தன்றே என்று கூறி எள்ளுகின்றார்.

599. தன் திருமண வைபவங்களை மட்டுமே கண்ட பருவ முருத சிறுமி ஒருத்தி 'இதுவே கலவி இன்பானுபவம்' என்று நினைத்து மகிழ்ச்சி யடைவாள். அது போலவே, உண்முக நாட் டத்தால் ஆராய்ந்து ஆன்மாவை யறியாத வெறும் சாத்திரப் பண்டிதர்கள் தாம் உளறுகின்ற வாய் வேதாந்தமான புத்தக ஞானத்தையே 'அத்வைத ஞானம்' என்று கருதிப் பெருமிதங் கொள்வர் !

600. பரமாத்ம தத்துவத்தை நூல்களின் வாயிலாக மட்டும் கற்றுங் கேட்டும் அறிந்துள்ள பலர், அவ்வாறு அறிந்த ஜீவனுகிய 'தான் யார்' என்று தம்மை விசாரித்து, அகந்தை யழிந்து பேரின்பத்தில் மூழ்கி நிலைபெற முயலாமல், அச் சாத்திரங்களைக் கற்ற தமது மதி வன்மையால் மட்டுமே (கர்வமடைந்து) தம்மைத் தத்துவ ஞானியாய் நினைத்துக் கொண்டு, அகந்தை யழிந்த மெய்ஞ்ஞானிகளாய் மோன முற்றிருக்கும் பெரியோர்களிடம் போய் (தாம் கற்ற சாத்திர அளவு கோலால்) சோதனை செய்து பார்ப்பர் ! என்னே இவர்களது அறியாமை !

601. இப்போது பிறந்திருப்பதாக உணரப்படும் தன்னை 'இப்போதுள்ள இந்த நான் யார் ,' என்று அறியக்கூட சாமர்த் திய மில்லாத மக்கள், தாம் மறு பிறப்பிலும் முற்பிறப்புக்களி லும் எப்படி யிருப்போம்—இருந்தோம் என்பதை, மிகப் பாடு பட்டுத் தியானித்துக் கண்டறிய முயல்வது, சிறு குழந்தை யொன்று தன் நிழலைப் பிடிப்பதற்குத் தாவித் தாவி முயற்சிப் பதற்கே சமான மாகும்!

602. 'நிகழ்கால மாகிய இப்போது தாம் எந்நிலையில் இருக் கிறேம்?' என்று தமது நிலையை விசாரித்துக் கண்டறிய முடி யாமல் மிகவும் தடுமாறும் புத்தியுடையவர்களான பாமரர், தம்

நிலைமை இறந்த காலத்தில் எப்படி யிருந்த தென்றும், எதிர் காலத்தில் எப்படி யிருக்கு மென்றும் மிக நெடிதாகச் சிந்தித்து (தியானித்து) நிர்ணயிக்கத் தவம் செய்வர் !

603. நாம் இப் பிறப்பில் இப்போது எப்படி யிருக்கிறோம் என்பதைக் கூடச் சரியாகத் தெரிந்துகொள்ளச் சற்றும் விரும் பாதவராய், தாம் இறந்த பிறகும், பிறப்பதற்கு முன்னும் உள்ள நிலைமை எத்தகைய தென்று எண்ணிப் பாடுபட்டு ஆராயும் இம் மக்களின் அறிவுதான் என்னே !

604. இறைவன் சித்தத்தில் எழுந்தருள்வதால் சித்தம் தெளிவதா அல்லது சித்தம் தெளிவதால் இறைவன் அங்கு எழுந் தருள்வதா என்று கேட்போர் இருவேறு காரியங்களாகாத இக் கிரியையை வெவ்வேருகக் கருதி மயங்குவோர் ஆவர். ஆகையால் இவர்களுக்குச் சொல்ல நம்மிடம் மறுமொழி யில்லை !

விளக்கக் குறிப்பு:— இக் கேள்வி கேட்போர் சித்தந் தெளிதல் என்ற காரியமும், சிவன் எழுந்தருளல் என்ற காரியமும் இரு தனித்தனிச் செயல்களாகக் கருதுகின்றனர் என்று தெரிகின்ற தன்ருே ? ஆனல் இவை இரு வேறு காரியங்களல்ல. இரு வேறு ஆனலன்றி ஒன்றை மற்ருென்றுக்குக் காரணமும் காரியமுமாகக் கூற முடியாது. சித்தத் தெளிவே சிவ விளக்கம் ; சிவ விளக்கமே சித்தத் தெளிவு ! ஆகவே ஒன்ருகிய அதை இரண்டாகக் கொண்டு எழும் இவ் வினவின் அசத்தியத்தால் விடையின்மை நிர்ணய மாகின்றது. குருவாசகக் கோவைப் பாடல்கள் 70, 244 இரண்டின் பொருளும் இங்கு மீண்டும் காணத் தக்கன.

## கக. அபக்குவத் திறன்

605. அற்ப ஐம்புல இன்பங்களைச் சுலபமாக அடைய ஆவல் கொண்டு, அழுது, ஏங்கி, உருகுகின்ற, பக்குவமற்ற மனத்தையுடைய (காமியார்த்திகளான) மக்கள், ஐம்புலப் பிர விருத்திகளை முற்றும் அழித்து வாழும் தபோதனர்களுடன் வந்து எதற்காக ஒன்ருய்க் கூடுகின்றனர் ? (இக் கூட்டுறவு அவர்களது இஷ்டத்தை நிறைவேற்ருு தாகையால் அவ்வாறு வந்து இணங்க வேண்டாம் என்றவாறு).

விளக்கக் குறிப்பு:— பட்டப் படிப்பும் பதவிச் சிறப்பும் உடையோராயினும் பக்குவத்திற் பாமரராய் உலக மக்கள் தத்தம் காமியங்கள் நிறைவேற நினைத்துக் கையுறை எடுத்துச் சென்று, தவத்தினராய் வாழும் சாதுக்களிடம் சமர்ப்பித்து அவர்களது உதவி

வேண்டி நிற்கின்றன ரன்றோ ? இது அறிவீனமே. ஏனெனில், இம் மக்களோ ஐம்புல நுகர்ச்சிக்கு ஏங்கி அலேவோராகும். ஆனால் சாதுக்களோ ஐம்புலன்களே அடக்கி யழிப்பதையே தமது அருட்சக்தியாக உடையவர்களாகும்!

## உ0. பிரமாதத் திறன்

606. தத்தமது நல்வினை தீவினைகளால் பாதிக்கப் பட்டு உழல்கின்ற இந்த வியவகாரிக ஜீவனானவன் அற்புதமான சிதா காச யதார்த்த நிலேயிற் கற்பனையாக உண்டாகி, இருந்து, மறை கின்ற சொப்பனக் கற்பிதனேதான் !

விளக்கக் குறிப்பு:— கூடஸ்தன், வியவகாரிகன், ஸ்வப்ன கல்பிதன் என்று சாஸ்திரங்களிற் கூறப்படும் மூவித ஜீவ பேதங்களில் ஸ்வப்ன

கல்பிதனைப் போன்றே வியவகாரிகனும் பொய்யே என்பது உபதேசம். (இச் செய்யுள் 'ஏக சீவத்திற'னில் இடம் பெறலா மாயினும், நூலின் முதற் பதிப்பிலுள்ள வாறே இங்குக் கொடுக்கப்பட்டது).

607. *(தலைமே லிருக்கு மளவும் பெருமையோடு பேணப் பெற்ற) தலைமயிர் தலையினின்று நீங்குமாயின் அக்கணமே ஓர் இழிந்த பொருளாய் ஒதுக்கித் தள்ளப் படுவது போன்றே, மாந்தர் உயர் நிலையினின்றும் நழுவினுற் சிறுமை யடைவர் என்பது ஆன்றோர் மொழியாகும். அந்த உயர்நிலையானது அச்சமற்ற ஆன்ம நிலையே. அதனின்றும் (பிரமாதத்தால்) நீங்கி, அற்ப அகந்தையாய் (ஜீவனாய்)த் தம்மை யுணர்வதாலன்றோ ஜனன மரணத் துன்பத்தை மாந்தர் அடைகின்றனர் ?*

விளக்கக் குறிப்பு:— திருக்குறளில், பொருட்பாலில், ஒழிவியலில் 'மானம்' என்ற தலைப்பில் வரும் 964 ஆவது குறளே இப்பாடலின் பின்னிரண்டடிக ளாகும். தமது குடிச் சிறப்பின், பெருங் குணத்தினின்றும் ஒருவன் நழுவினால் இழிவுறுவான் என்ற கருத்திற் கூறப்பட்ட இக் குறளை ஸ்ரீ முருகனார், குடிச் சிறப்பினும் சுவ சொரூபமாம் ஆன்ம நிலையே மெய்யான சிறப்பின் சிகரம் என்று காட்ட இதே குறளைக் கையாண்டு, அந் நிலையில் திரியாது அடங்கியான் ஒருவனே மலையினும் மாணப் பெரிய சிறப்புடையோன் என்று தீர்ப்பளிக்கின்றார்.

608. *வெள்ளிடை மலையென (நித்தியப் பிரத்தியட் சமாய்) விளங்கிக் கொண்டிருக்கும் ஆன்மாவை அறிந்து, ஆன்மாவிலேயே நிஷ்டை யுறுவதற்கு மாறாக, அந் நிலையை மறந்து மன வடிவுற்று அலைவது தன்னை விட்டுவிட்டு மற்ற ஒன்பது பேரையே கணக்கிட்டுத் தடுமாறிய தசமனைப் போன்ற தன்மறதிக் குற்றமே யாகும்.*

609. *எண்ணங்கள் உதிக்கும் மூல நிலையமான இதயத்தில் (எண்ணமற்று) 'நான் நானே' என்ற வடிவில் எப்போதும் பிர காசித்துக் கொண்டிருக்கும் பரம் பொருளாகிய சிவத்தை (ஆன் மாவை) 'நான் யார்?' என்று நுட்பமாக உள்ளே நாடி யறிந்து, மன விருத்திகள் அற்று, தான் அப் பிரம்மமாகவே (சிவமாகவே) ஒன்றாகி நிற்பதை விட்டு (ஓர் ஜீவனாக)ப் பிரிந்து கெடுவது புத்தியின் தவறே யாகும்.*

610. தலை சிறந்ததா யுள்ள முழு முதற் பூரணப் பொரு ளாகவே நாம் நிலைத்து நின்றால், பிறரால் எவ்வாறு இழிவடைய நேரும்? (பூரண நிலையில் அன்னியர் இல்லாததால் இழிவு நேராது என்றவாறு) அவ்வாறின்றி அப் பூரண நிலையினின்றும் நழுவிய பொழுதே, தலையினின்றும் உதிர்ந்த மயிரைப் போன்றே, ஜீவன் சிறுமை யுறுகின்றான்.

611. மயக்க முற்ற காரணத்தால் எதிர்ப்படும் மனோமயக் கற்பனைகளை யதார்த்த உண்மைப் பொருள்களாக நம்பி, உரு வற்றதும் முதற் பொருளுமான சுத்த ஞானாத்ம சொரூப நிலை யிற் சோர்வுற்று நழுவியவன் பைத்தியக்காரனே யாகின்றான் என்று கருதுக.

612. முப்புடிகளான அன்னியங்கள் எவை தோன்றினு லும் மறைந்தாலும் அவற்றில் மயங்கித் தன்னிருப் புணர்வை விட்டு விடாமல் தன்னையே (ஆன்மாவையே) எப்போதும் உணர்ந்து நிற்பாயாக. ஞான சொரூபமான தன்னை நீங்கும் தன்மறதி சிறிதளவே யானாலும் அதனால் விளையுங் கேடுகளோ மிகப் பெரியவை யாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது: தோன்றும் முப்புடிகளைப் பற்றிக் கொண்டு கலக்க முறாமல், எப்பொழுதும் தன்னிலையில் விழித் துணர்தலே ஞான சமாதியாம். அதுவே முத்தி. அன்றி, அறிவான தன்னை மறந்து அறிபடு பொருள் உள்ளதென எள்ளளவேனும் அயர்ந்தால் அந்த நழுவுதலே, துளி விஷம் சேரினும் பெருங் கேடுறுதல் போலப், பெரும் பீடையாகி விடும்.

## உக. சம்சாரத் திறன்

613. அற்ப மனம் நினைப்பாகவும் மறப்பாகவும் திரிபு அடைவதுதான் ஜனனம் மரணம் எனப்பட்டுச் சம்சாரம் ஆகும். நினைத்தல் மறத்தல் என்னும் சேஷ்டை அழிந்தால் அவ் வுள்ளமே ஜனன மரணமாகிய பிரமாத மில்லாத சுத்தமுத்தி யெனப்படுகின்ற ஆன்ம சொரூப மாகும்.

விளக்கக் குறிப்பு:— நினைப்பே பிறப்பு ; மறப்பே மரணம். மனத்தின் நினைப்பு மறப்புத் தொழிலே சம்சார பந்தம் எனப்படுவது. நினைப்பு மறப்பு வடிவாகிய அதன் அசுத்த நிலை நீங்கிச் சொரூபத்தையே பிரதிபலித்து நிற்பதுதான் "மனம் இறத்தல்" அல்லது "மனோநாசம்" எனப்படும் முத்தி என்பது தெளிவாகிறது.

614. சத் மாத்திரமாய் விளங்கும் தன் ஆன்ம சொரூப உண்மையை விட்டுவிட்டு, தான் மாமிச சரீரமே என்று கொண்டு ஆகாய நீலம் போல் இருப்பற்ற பொய் விஷயப் பொருள்களைத் தோஷ திருஷ்டியாற் பார்த்து மயங்கும் அவித்தை யிருள் பொருந்திய மனமே பெரும் மயக்கமாகிய சம்சாரமாகும்.

615. உண்மையில் ஆன்மாவாகிய தன்னைத் தவிர வேறு யாதொன்றுமே யில்லை. ஆயினும், "உடலே நான்" என்று உள் மயக்கத்தாற் கருதும் சிச்சடக் கிரந்தி வடிவமே, தனது ஸ்திரமான, அத்துவிதானந்த, மரணமற்ற தன்மையை விட்டு விட்டு ஜனன மரண மடைவ தாகும்.

குறிப்பு:— 'தேகமே நான்' என்னும் சிச்சடக்கிரந்தியான அகந்தையே ஜனன மரணத்தை யடைகின்றது. ஆன்மாவோ என்றும் அமுதத்துவ நிலையினதே யாகும் என்பது கருத்திற் கொள்ள வேண்டியது.

616. நம் சித்தம்தான் (வாசனைகள் தான்) சம்சாரம் எனப் படுவது. அந்த வாசனை வடிவான சித்தம் அழியப் பெற்று வாழ் வோர் (ஜீவன் முத்தர்கள்) தேகத்தின் பிராரப்த வினைக்கு ஏற்ப உலக விவகாரத்தில் இருப்பதுபோற் காணப்படினும் உண்மை யில் அவர்கள் மெய்ஞ் ஞானகாசத்திலேயே உலவுகின்றவராவர்.

## உஉ. பிரதிபந்தத் திறன்

617. மிகச் சிறந்த அடியார்களது வாழ்வில் பற்பல கொடிய துன்பங்கள் அடிக்கடிவந்து அவர்களை மிகவும் துன் புறுத்துதல் ஏனெனில், அது அப் பரிசுத்தர்களின் உள்ளத்தை வருத்தி வாட்டுவதற் கல்ல ; (அப் பெருந் துன்பங்களினிடையி லும்) அவர்களது மனத்தைத் தளர்வுறுமல் தவத்தில் நிலைத்து நிற்க வைப்பதற்காகவே என்றறிக.

618. பிராரப்தத்தால் வந்து சேரும் துன்பங்கள் முழுவ தும் பக்குவ ஜீவனுகிய தனக்கு மோட்சம் அடைவதற்கான மனோ பலத்தை உண்டாக்கி வைப்பதற்காக அனுப்பி வைக்கப்பட்ட தெய்வத் திருவருளே என்றறிந்து, மேன்மை நிறைந்த தன் மனம் பரபரப்படையாமல் சாதகனொருவன் பொறுமையோடு தவமாகச் சகித்துக் கொள்வானுக.

619. சுரங்கத்திலிருந்து வெட்டி யெடுக்கப் பட்ட வைரம் நன்ருகக் கடைந்து பட்டை தீர்க்கப் பட்டாலன்றிப் பிரகாசம் அடையாதது போல, சாதகன் ஒருவன் செய்து வரும் உண்மையான தவமானது அதற்குத் தடையாக வரும் சோதனைகள் இல்லாவிட்டால் நன்ருகப் பிரகாசிக்காது.

620. உருளும் சக்கரங்களை யுடைய பெரிய தேர் ஒன்று வீதி வழியே ஓடிச் சென்று நிலையிடம் வந்து சேர்வதற்கு அரிய அவசியமான அச்சாணி மட்டு மன்றி, அத் தேர் வீதியின் இரு மருங்கிலும் நகர்ந்து மோதிக் கொள்ளாதபடித் தடை செய்யும் முட்டுக் கட்டைகளும் இன்றி யமையாதனவே யாகின்றன வன்ருே?

விளக்கக் குறிப்பு:— இச் செய்யுள் உபமானத்தை மட்டும் கூறும் பிறிது மொழிதலாகும். பொருளை விரிப்பதாவது அது போலவே தவம் தக்கவாறு சென்று சித்தி யுறுவதற்கு ஒருவன் அனுஷ்டிக்கும் நன்னெறிகள் மட்டுமன்றி அவனது வாழ்வில் ஊழால் வந்து நேரும் இடையூறுகளுங் கூடத் திருவருளே யாகையால் இன்றியமை யாதனவே யாகும்.

"இப்படி யெல்லா மிருப்பவனுக்கு இங்கென்ன வேலை?" என்று இளவல் வேங்கடராமனின் முன்ஞேன் தந்த தடையுந் தரவே பின்ஞேனைப் பிற்காலத்தில் உலக மகா குருவாகிய 'பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிக' ளாக்கிய தன்ருே? நன்ஞேக்கு மட்டுமன்றித் தீ நோக்குடன் தவத்திற் கிடையூறு விளைப்போராலுங்கூட முடிவிற் பெரு நன்மையே விளையுமாதலால், அத் தடைகளும் இறையருட் சகாயங்களே யாம்.

## உரு. மாயா விசித்திரத் திறன்

621. உண்மையில் உள்ள பொருள் ஒன்றேயாக இருந்தும், உண்டாதல் என்பதே இல்லாத அது, புதிதாகத் தோன்றிய பல ஜீவர்களாக ஆகி, தான் நன்மை தீமைகளைச் செய்வதாக

வும், தொன்று தொட்டு இன்று வரை எப்போதும் நாலேழ் பிறவிகளையும் அடைந்து வருந்துவதாகவும் பிறகு பிறப்பிறப்பை வென்று முக்தி யடைவதாகவும் காணப்படுவது எவ்வளவு விந்தையாக இருக்கின்றது ?

குறிப்பு:— நாலேழ் பிறப்பு :

"முளைவிடற் கருப்பம் முட்டைப் புழுக்கம்
வெளிவரு முயிரின் விதநான் காமே.
தேவரு மக்களும் விலங்குதா வரம்பிறப்
பூர்வன பறப்பன நீருள வேழே."

வித்து (உற்பிஜம்), வியர்வை (ஸ்வேதஜம்), கருப்பம் (ஜராயுஜம்), முட்டை (அண்டஜம்) ஆகிய நால் வகையில் உற்பத்தியாகின்ற தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என ஏழாக வகுக்கப்படும் எண்ணிறந்த பிறவிகள்.

622. தான் ஆன்ம சொரூபமாகவே ஏகனாய் எப்போதும் இருந்துங்கூட ஆன்மாவை ஓர் அன்னியப் பொருளாகக் கருதி, அதை அடைவதற்கான சாதனைகளை மேற் கொண்டு, பலவாறு ஒருவன் தவம் புரிந்து படும் வருத்தத்தைப் போல, ஓர் பேராச்சரியம், பார்க்குமிடத்து, வேறொன்றுமே இல்லை எனலாம்!

## உச. புகழ்ச்சி நவைத் திறன்

623. மேலாம் பிரம்மமாகிய தன்னை மிகப் பாழான உடலாகக் கருதும்படிப் பிரமாதம் என்னும் பெருங் கேட்டுக்கு உள்ளாக்குவதால், 'புகழ்' எனப்படுவது மிகுந்த திடத்தோடு அறிஞர்களால் வெறுத்து ஒதுக்கத் தக்கதே யன்றிப் போற்றி யடையத்தக்க தல்ல.

விளக்கக் குறிப்பு:— 'நான் இன்னார்' என்ற வடிவில் உள்ள ஓர் நாமரூப ஜீவனே (அகந்தையே) புகழை அடைபவனாகின்றானல்லவா? 'ஆகவே, புகழானது அடையத் தக்கதோர் பொருள் எனக் கொண்டால், அது (பிரம்ம நிலையினின்றும் நழுவுதலாகிய) பிரமாதத்திற்குட்பட்ட அகந்தை வாழ்வை மேற்கொண்டதோர் பெருங் கீழ்மை நிலையில் மட்டுமே சாத்தியமான்தாகும் என்று ஆகின்றது. எனவே முமுக்ஷுக்களாகிய அறிஞர்கள் புகழை வெறுக்கவே வேண்டும் என்பது இங்கு உபதேசிக்கப் படுகின்றது. ''தோன்றிற் புகழொடு தோன்றுக....'' என்ற குறளைக் காட்டிப் புகழாசை பிடித்தலைதல் முமுக்ஷுக்களாகிய சாதகர்களுக்குப் பெருந் தவறான செயலாகும். ஏனெனில், வள்ளுவர் கூறும்போதே 'தோன்றில்' எனக்

குறிப்பிடுவதால் "அகந்தை யுயிராக எழுச்சி யுற்று உலகிற் பிறந்து தோன்ற விரும்புவோருக்கே"அவ்வாறு கூறப்பட்டதே யன்றிப் பிறப்பொழிக்க விரும்பும் முமுக்ஷுக்களாகிய அறிஞர்கட் கல்ல என்பதை நுனித்துணர வேண்டும்.

624. எவன் தன்னைப் பிறர் புகழ்ந் துரைப்பதில் ஆசை யுள்ளவனாய், அதற்குத் தன்னை இலக்காக்கிக் கொள்கின்றானோ அவன் தான் மேற்கொண்ட ஆன்ம சாதனைக்குப் பாதுகாப் பில்லாது அதன் மூலமாகவே ஓர் தடையைத் தானே வீணாக ஏற்படுத்திக் கொண்டவ னாகின்றான்.

விளக்கக் குறிப்பு:— அகந்தை யழிய விரும்புவதே ஆன்ம சாதன மாகும். புகழ் வந்து சேர வேண்டியதோ இவ் வகந்தைக்கே யாகும். ஆகையால் புகழ் விருப்ப முள்ளவன் அகந்தையை யழியாமல் நீட்டிக்கவே விரும்புகின்றான் என்பது பெறப்படுகின்ற தல்லவா? எனவே புகழ் விருப்பம் ஆன்ம சாதனைக்குத் தடையாகத் தானாகவே ஏற்படுத்திக் கொள்ளப் படுகின்றது என்றார். ஆகையால் ஆன்ம சாதனை தடையின்றி நடைபெற வேண்டுமாயின் சாதகர்கட்கு அநாமதேய (ஓர் பேரற்ற) வாழ்வே வேண்டப்படுவது என்பது புலன்.

## உரு. ஆணவ நவைத் திறன்

625. ஆணவமாகிய ('நான் இன்னார்' என்னும் அகங் கார ஜீவ வாழ்வாகிய) மிகக் கொடிய நரகவாசம் நாம் அடையக் கூடாததோர் பெருங் கேடாகும். நல்லோர் யாரும் பார்க்கத் தகாத அவ் வகங்காரம் என்னும் கலி புருஷனின் முகத்தை, அறிவில்லாத அற்பர்களைத் தவிர, வேறு யார்தான் வெறுக்க மாட்டார்கள்?

626. ஞான நிஷ்டர்களான மகான்களின் சந்நிதியில் இவ் வுலகியலார் வந்து (யோகிகள் போல் ஆசனமிட்டுக் கொண்டு) நிமிர்ந்து அமர்ந்து, ஆனால் ஆன்ம நிஷ்டை தெரியாததால், கொட்டாவி விட்டுக் கொண்டும் குறட்டை விட்டுக் கொண்டும் தூங்கிவிழுங் கெட்ட பழக்கமானது அவர்களது அகங்கார தோஷமே யாகும்.

விளக்கக் குறிப்பு:— இச் செய்யுளிற் கூறப்பட்டவாறு சில சம்பவங்கள் ஸ்ரீ ரமண சந்நிதியில் நிகழ்ந்த துண்டு. ஜீவன் முத்தர்களின் சந்நிதியில் வந்து சேரும் உலகியல் மக்களின் தோஷத்தைக் குறித்தது இச் செய்யுள். முத்தர் சாந்நித்தியம் அரிதரிது ; ஆதலால், அஞ்ஞானத் துயிலை நீக்கிக் கொள்ள வேண்டிய அச் சந்நிதியிற் கொட்டாவியும்

குறட்டைத் துயிலும் கூடாத செயல்களாகும் என்று அறிவுறுத்தப்பட்டது.

## உகூ. துக்கோற்பத்தித் திறன்

627. நம் ஆன்ம சுபாவமோ நிறைந்த பேரின்ப வடிவாக விருக்க, அதற்கு மாறுக நாம் பிறவித் துன்பம் என்னும் கொடிய வெய்யிலில் துடிப்பதாக உணர்வ தெல்லாம் (ஏனென்றுல்) குறும் பான அகந்தை யறிவு எழுந்து மயக்க வெறி பிடித்துத் தொழிற் படுவதன் விளைவே யாகும்.

628. தேகத்தை 'நான்' என்று அபிமானித்துள்ள தீய சம்பந்தமே அசுரசம்பத்துக்கள் (தீய குணங்கள்) அனைத்துக்கும் அடிப்படையாகும். பந்தப்படுத்தும் 'நான்' என்னும் மாய அகங்கார விருத்தியோடு கூடிக் கொடிய 'எனது' என்னும் மமதைச் செருக்கும் நன்கு விரிவடையப்பெற்ற மக்கள் அமைதி (சாந்தி) பெறுவது, அம்மம்ம, அரிது.

## உஎ. ஜீவபோதத் திறன்

629. ஒருவன் வெய்யிலில் அலைந்து சென்று வெப்பத்தால் வருந்துவதும், பிறகு திரும்பிக் குளிர்ந்த நிழலுக்கு மீண்டும் வந்து சுகமடைவதும் போன்றதே, ஜீவர்கள் (ஐம்புலன்களின் வழியே நாட்டமுற்று) இவ்வுலகத் (தோற்றத்)தை விரும்பி உழன்று துயரடைவதும், பின் அதற்காற்ருது உண்முகமாய்த் திரும்பி வந்து இதயத்திற் சற்று இளைப்பாறுவது மாகும்.

630. விவேகியானவன் வெய்யிலின் கொடுமையை யுணர்ந்து மீண்டும் நிழலை விட்டு வெய்யிலுக்குச் செல்ல மாட்டான். அது போலவே, உலகை வாட்டி வதைக்கும் (காமினி, காஞ்சனம், புகழ் என்னும்) மூவாசைகளாகிய வெய்யிலின் கொடுமையை உணர்ந்த விவேகிகள் (அக முகப்பட்டு) இதயத்தில் ஸ்திரமாய் இருப்பதை (நிஷ்டையை) விட்டு, உலக நோக்கம் (புறமுகம்) அடையக் கூடாது.

குறிப்பு:— இவ்விரு பாடல்களின் உபதேசமும் 'நான் யார்' என்ற நூலிற் தரப்பட்டவையே.

631. (பூமியினின்று மெழுந்து) அகன்ற ஆகாயத்திற் பறக்கும் பறவை யொன்றுக்கு மீண்டும் தரையினிடத்தில் வந்து சேர்ந்தாலன்றி எங்கும் நிலைகொள்ள முடியாது. அது போலவே, மெய்ப் பொருளாகிய ஆன்மாவினின்றும் (தோற்றமாத்திரமாய்) உதித்துள்ள உடலுயிர்கள் மீண்டும் தாம் உதித்த அம் மெய்ப் பொருளில் வந்து ஒடுங்கும் வரை (சுகதுக்க வடிவான) எத்தகைய தடைகள் (எத்தனை ஜன்மங்களில்) எவ்வளவு நேர்ந்தாலும், அவை அங்கு (பகிர்முகப் பிரவிருத்தியிலேயே திருப்தியுற்று) நின்றுவிட முடியாது. இதுவே திண்ணம்.

632. உயிர்கள் தாம் ஆன்மாவிலிருந்து எந்த வழியிற் கிளம்பி வந்தனவோ அந்த வழியிலேயே (அகமுகப்பட்டு, 'நான் யார்?' என்று) மீண்டும் தம் மூலத்தை நாடினால், தமது சொந்த ஆன்ம சொரூபத்தை அடைகின்றன. அப்போது அவ் வாத்ம சொரூபானந்தம் அங்குப் புத்திக்கு நன்கு விளங்கி அனுபவிக்கப்படுவதால், அதிலேயே அவ் வுயிர்கள் அசைவற்று நிலைத்து விடுவனவாம்.

குறிப்பு:— ஸ்ரீ பகவான் அருளிய 'ஸ்ரீ அருணாசல அஷ்டகம்' எட்டாவது பாடலின் கருத்துக்களே மேற்கண்ட 631/ 632 ஆவது உபதேசங்களாகும்.

633. எண்ணமற எண்ணுவதால் ('இருக்கிறேன்' என்ற உணர்வு மாத்திரமாய்ச் சும்மா விருப்பதால்) கடவுளின் திருவருளுக்குப் பாத்திரமாகி வீடு பெற வேண்டுமே யன்றி, 'நான்' என்று ஓர் அகங்கார ஜீவ ரூபமாய் எழுந்து யார் எப்படி என்ன (சாதனை) செய்து விட முடியும்? எனவே 'நான் என்னும் அவ்வகங்காரப் பேய் நோக்கம் முற்றிலும் அழியும்படித் தன்னை நாடி (விசாரித்து), 'தான் அவ் வான்மாவே' என்று விளங்கும் ஆன்மானுபவத்தால் பரமௌனத்தில் நிலைபெறுவா யாக.

## உஅ. ஜீவ வசக்தத் திறன்

634. கடவுளின் பரிசுத்த அருள் ஒன்றினாலே தவிர, அஞ்ஞான இருளிற் றோன்றிக் காணப்படும் இவ்வுலக வாழ்வுற்றுள்ள எவ் வுயிரும், இருளிலுங்கூட அவ் விருளை விளக்கி வைக்கும் ஒளியாய் (அதாவது, அறியாமையையும் அறியும் ஞானமாய்)ப் பிரகாசிக்கும் மெய்ஞ் ஞானப் பரம்பொருளின் பேரின்

பத்தைத் தாமே முயன்று அடைந்து அனுபவிப்ப தென்பது சற்றும் இயலாத காரியமாகும்.

பாடல் 648ஐயும் இங்கு உடன் வாசித்துணர்க.

குறிப்பு:—'நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே' என்ற திருவாசக வுண்மை இங்கு ஒத்துணரத் தக்கது.

## உகூ. திருசிய வுண்மைத் திறன்

635. இவ்வுலகைக் காண்பதற்கு இன்றியமையாத (காண் பானாகிய) தனது இருப்பின் இயல்பை யறியாத ஒருவன் "உலகம் மெய்யாகவே இருக்கிறது" என் றெண்ணித் தன்னை (உலகை)க் காணும் போது, அவனாற் பார்க்கப்படும் இவ் வுலக மானது, தன்னைப் (மெய்யென்று) பார்க்கும் அம் மனிதனைக் கண்டு அவன் வெட்கும்படிச் சிரித்துப் பரிகசிக்கின்றது!

விளக்கக் குறிப்பு:— உலகைக் கண்டு, 'இது மெய்' எனக் கூறும் ஒருவனைப் பார்த்து உலகம் எள்ளி நகையாடுகின்றது என்று கூறும் இச் செய்யுள் ஓர் தனி யழகுடையது. 'உலகம் என்ற ஒரு பொருள் சிரிக்குமா ?' என்று வியப்போ மல்லவா? இந் நூலின் 74வது உபதேசத்தை மனத்திற் கொண்டு பார்ப்போம். கற்பற்ற இழிகுண வேசி ஒருவள் தன் மேற் காமங்கொண்ட காமுகப் புதிய னொருவன் அவனது நண்பனிடம், அவளது முன்னிலையில், "இவள் மகா பதிவிரதை ; கற்புக் கரசி" என்று தன்னைப் புகழ்வதைக் கேட்பா ளாயின், தன்னுள் தானே சிரித்துக் கொள்வா ளல்லவா ? அவ்வாறே, பொய்யான தன்னை மெய்யென்று பேசுவோரைக் கண்டு இவ் வுலகம் சிரித்துக் கொள்கிறது என்று மிகவும் நயம்பட உருவகிக்கின்றது இச் செய்யுள். 'திருசிய வுலகம் பொய் என்று பிறர் அத்தாட்சித் தரவேண்டிய தில்லை ; அவ் வுலகுக்கே தன் அசத்தியம் தெரியும்' என்று கூறும் முகத்தால் திருசியத்தின் உண்மையற்ற தன்மையை ஸ்ரீ பகவான் வலியுறுத்தி யுபதேசிக்கின்றார் என்க.

மஹர்ஷி வாய்மொழி, இரண்டாம் பாகம் 3-ஆம் அத்தியாயம் இங்கு வாசித்துணர்க. அவ்வுபதேசமே இங்கு பாடலாக தரப்படுகின்றது.

636. வெளிச்சம் படும் இடத்தில் மட்டுமே பொருள்கள் இருப்பதாக விளங்குமே தவிர, வெளிச்சத்தின் எல்லைக்கு அப்பால் எப்பொருளும் புலனாகாது. அவ்வாறே உள்ளத்தில்

ஆன்மப் பிரதிபலனமாக உதித்து நினைப்பு-மறப்பு வடிவில் அலைவுறும் மன அறிவின் எல்லைக் குட்பட்டுத் தெரிவனவே இந்தத் திருசியப் பிரபஞ்சப் பொருள்களாகிய தோற்றங்கள்.

குறிப்பு:— மன வறிவு அற்ற விடத்துப் பிரபஞ்சத் தோற்ற மிராது; ஆன்ம அறிவில் சிருஷ்டியாதி அன்னியத் திருசியப் பிரபஞ்சம் இல்லை என்பது கருத்து.

637. எதிர்ப்படுவதால், 'ஏதோ ஒன்று இருக்கின்றது' என்னும் (சந்மாத்திர) உண்மைதான் மெய்ப்படுகிறதே தவிர, அப் பொருளின் மேல் புலன்களின் சேர்க்கையால் அறியப்படும் தோற்றமே (அறிவே) அங்குள்ள வஸ்துவின் யதார்த்த (நிஜ) வடிவமாக முடிவு செய்துவிட முடியாது. (தோற்றமே அவ் வஸ்து வின் உண்மை சொரூபமாக அமைந்து விடாது என்பது கருத்து.)

638. பார்க்கும் (மன) அறிவால் நீ எதையும் எதிரிட்டுப் பாராமல், **பார்ப்பவனையே அப் பார்வையால் நீ கவனித்தால்,** அப்போது பார்க்கும் தன் சொரூபமாகவே சகலமும் விளங்கு மாகையால், அதுகாறும் சுட்டி யறியப்பட்ட விஷய ஞான மெல்லாம் அதன்பிறகு வெறும் பைத்தியமாய் முடியும்.

639. காண்பவனாகிய தானும் காணப்படுபொருளாகிய திருசியமும் (உலகமும்) வெவ்வேறு இருப்புள்ள இரண்டு (சத்) பொருள்களாக இருப்பன வாயின், காட்சி என்ற நிகழ்ச்சியே (தனக்கு) உண்டாக முடியாது. அவ்வாறின்றிக் காட்சியென்பது நிகழ்வதால், காண்பானும் காணப்படு பொருளும் ஒரே சத்துத் தான் என் றறிந்து கொள்க.

விளக்கக் குறிப்பு:— 636 ஆவது பாடலில் "ஒளியினுக் குள்ளே யுறு பொருள்க ளன்றி, வெளியிலுள சற்றும் விளங்கா...." என்ற உபதேசத்தை இப் பாடலிற் கண்ட கருத்தைக் கொண்டு நோக்குவோ மாயின், காண்பானின் சத்தையே காணப்படு பொருளும் உடையதாகா விடிற் காட்சியே நிகழ முடியாது என்ற நியாயம் நன்கு விளங்கும்.

இங்கு உணர்த்தப்படும் புதுமையாவது : "அறிபடும் பொருள் நமக்கு அன்னியமான இருப்புள்ளவையாவதால்தான் அவற்றை யறிவது நமக்குச் சுலபமாக விருக்கின்றது ; நம் இருப்பையே அறிவது (தன்னை யறிவது) கஷ்டமா யிருக்கின்றது" என்று பொதுவாக யாவரும் கூறுகின்றன ரன்றோ ? ஆனால் இப் பாடலின்படிப் பார்த்தால் நியதியின் உண்மை அவ்வாறில்லை என்பது விளங்கும். காண்பானின்

சத்தையே காணப்படு பொருளும் பெற்றிருப்பதால்தான் ஏகசத்தாகிய தான் அதே சத்தாகிய தன்னை யறிதல் ஐயே அதி சுலபம் என்று இங்குக் குறிப்பா லுணர்த்தப் படுகின்றது.

கனவில் காண்பானின் சத்தையே கனவுலகப் பொருள்களும் உடையதா யிருப்பதால்தான், கனவுக் காட்சி நடைபெறுகிற உதாரணத்தையும் இங்கு ஒத்துணர்ந்து தெளிக.

## ௩0. சுட்டுணர்வுத் திறன்

640. ஒருவன் *(தன் இருப்பு மாத்திரமாகச்)* சும்மா விருப்பானுயின் அப்போது பேரின்பம் தாமாகவே விளங்கக் கூடியதாயிருக்க, பெருமிதமுடையதும் போக்குவர வற்றதுமான பரம்பொருளாகத் தன்னை ஊக்கமுடன் விசாரித் தறிந்து அப் பேரின்பத்தைப் பெறுவதை விட்டுவிட்டு *(முன்னிலை-படர்க்கை நாட்டமாகிற பூஜை ஜபத்தியானுதி புறமுகச் சாதனைகளிற் சுட்டறிவால்)* அலைந்து மிக வருந்திப் பாடுபடுவ தெல்லாம் அம்மம்ம, ஏனோ!

குறிப்பு:— சும்மா விருந்தால் துலங்கும் பேரின்பத்திற்கு அலைந்து பாடுபடுதல் நகைப்புக் கிடமான செயல் என்று எள்ளிக் கூறினர்.

641. தானே தானுக (ஆன்மாவாக) என்றும் இருந்தும் அவ்வான்மாவைத் தனக்கு அன்னியம் போலெண்ணித் தேடும் சாதனைக ளெல்லாம், எவ்வெப்பொருளில் 'நான்' என்று விளங்கும் உயிர்களும் தனக்கு அன்னியப் பொருள்போல (அஞ்ஞான திருஷ்டிக்கு)த் தற்போது தோன்றினுலுங்கூட முடிவில் அந்த 'நான்' தனக்கு வேறில்லை' என்று (மெய்ஞ்ஞான திருஷ்டியால்) அறிந்து அவ் வன்னிய உணர்வினின்றும் அடியோடு ஓய்ந்து விடுவதற்கே யாம்.

642. தன்னை யல்லாமல் வேருகாத ஆன்மாவைத் தனக்கு அன்னியமாக எண்ணிக் கொண்டு, அதை யடைவதற்காகப் பலவிதமாக (சாதனை)த் தவம் புரிவது, ஒருவன் தன் நிழலைப் பிடிப்பதற்காக ஓடுவதைப் போன்றதே!

643. உள்ள பொருளாகிய ஆன்மாவே 'இருக்கிறேன்' என்னும் பிரஜ்ஞை வடிவில் இதயத்துள் தெளிவாய் 'நான் நான்' என்று யார்க்கும் தெரிவதால், பொய்யாகாத ஞான சொரூபமான அப் பரம்பொருள்தான் பிரத்தியக்ஷமானதே (மிக மெய்யானதே) தவிர, கண் முதலிய ஐம்புலன்களுக்குப் புல னுகும் விஷயப் பொருள்கள் பிரத்தியக்ஷ மல்லாதவையே என் றறிக.

644. இதயத்தே என்றும் மறையாது இருந்து விளங்கும் சத்சித் சொரூபமான ஆன்மாவை நுட்பமாகக் கவனித்து (அதுவே தாமாக) அறிந்துகொள்ளாத மக்கள் மேன்மேலுங் கிளம்பித் தாக்கும் பெரும் மோகவகந்தை எழுச்சியின் வடிவான சுட்டறிவினால் மாயையில் மயங்கி வீழ்கின்றனர்.

## ௩௧. சுட்டறுத்தற் றிறன்

645. 'தன் உண்மையை அறிக' என்று சாஸ்திரங்கள் கூறுவதன் நோக்கம் என்ன வென்றால், 'அன்னியத்தை யறியும் சுட்டறிவை விடுக' என்பதே யாம். ஏனெனில், எவர்க்கும் 'நான் இருக்கிறேன்' என்ற தன்னுண்மை யறிவு சூரியனைப் போல் தெளிவாக விளங்குகின்ற தல்லவா? அதனால்தான் என்க.

646. முன்னிலை-படர்க்கைப் பொருள்களைச் சுட்டி யறியும் மன அறிவால் தேடும் பொழுது விளங்காத ஆன்மவிளக்கம் அச் சுட்டறிவு (தொழிற்படாது) ஒழியும் போது தாமாகவே பிரகாசிக்கும். எவ்வாறெனின், தலைவி (பெண்ணொருத்தி) தலைவனாகிய நான் அவளைப் பார்க்கும்பொழுது அவள் நிலத்தை நோக்கிக் குனிந்து கொள்கிறாள். நான் அவளைப் பார்க்காத போது அப் பெண் தானாகவே என்னைப் பார்த்துப் புன் முறுவல் செய்து மகிழ்கின்றாள்.

விளக்கக் குறிப்பு:— இச் செய்யுள் பின்னிரண்டடிகள் 1094ஆவது திருக்குறளாகக் 'களவிய' லில் அமைந்துள்ள ஒன்றாகும். இங்கு ஆன்மாவைத் தலைவிக்கும், சுட்டறிவை (அகந்தையை)த் தலைவனுக்கும் உவமைகாட்டிக் கூறும் புதுமை வியக்கத் தக்கதாகும்.

புறமுகப் பார்வையால் ஆன்மாவைத் தேடும்போது அது நமக்கு முகங்கொடுப்பதில்லை. புறமுகப்பார்வை ஒழிவதே அகமுக நாட்டம் ஆவதால் ஆன்ம விளக்கம் சுயமே பிரகாச மாகின்றது என்பதாம்.

647. நீ 'இது அது' என்று முன்னிலை-படர்க்கைகளாகிய எந்தப் பொருளையும் சுட்டி நினையாமலிருந்தால் (அப்போது நிகழும்) வலிய தற்கவனமான (இருக்கிறேன் என்று விளங்கும்) இருப்புணர்வால் எல்லையற்ற பரமான்ம வெளியாக உன் திருஷ்டி விரிந்து அப் பரம்பொருளே நீ யாவாய்.

## ௬௨. அன்புண்மைத் திறன்

648. பேரன்பான பரபக்தியால் தன்னை ஆண்டவன் திருவடிகட்கு அர்ப்பணம் செய்வதால் வெளிப்படும் இறை யருளால் மட்டுமே சத்திய வஸ்துவான ஆன்மா அனுபவ மாகுமே தவிர, எந்த ஜீவனும் தன் புத்திக் கூர்மையால் கண்டு பிடித்துவிட முடியாத அவ்வளவு அதி சூக்ஷ்மமானது ஆன்மா என்றறிக.

குறிப்பு:— **634**வது பாடலையும் இங்கு வாசித்துணர்க.

649. மக்களே, கல்வி கேள்விகளாகிய (சுட்டு) அறிவை யெல்லாங் கற்றுங் கேட்டும் மனம் நிலை பெறும் நிஷ்டை எதுவுங் கிடைக்கப் பெறுமல் வீணே தேடி அலைய வேண்டாம். அன்பே வடிவாய் விளங்கும் இறைவனிடம் அன்பு மயமாகவே சரணடைந்து நிற்பதுதான் உயர்ந்த நிலை (பிரம்ம நிலை) யாகும்.

650. மற்ற அறு சுவைகளில் எவ் வொன்றுக்கும் அதிகமே யன்றிக் குறையாததான அன்பின் சுவையை யுணராத வர்கள்தான் அன்பை ஏழாவது சுவையாக வருணித்துக் கூறுவர். தொன்று தொட்டுப் பேசப்பட்டு வந்துள்ள பின்ன ருசிகளான அவ்வறு சுவைகட்கும் 'சுவை' என்ற தன்மையைக் கொடுத்துவரும் உயிர் நாடியாவது ஆதிச் சுவையான இவ் வன்பு ஒன்றே யாகும்.

651. சொல்லற் கரிய அன்பின் சுவையை அனுபவித்து அறியாத பேதையர்கள்தான் (அறுசுவைகளோடு அன்பையும்

ஒரு சுவையாகக் கணக்கிட்டுச்) 'சுவை ஏழு' என்று கூறுவர். உயர்ந்த சுவையான அன்பின் உண்மையான ருசியை யாம் நன்கு அறிந்தோம். ஆகையால், 'அன்பு ஒன்றேதான் இன்ப மான சுவை (மற்றவை ஆறினுள் எது வொன்றும் சுவையே யல்ல)' என்று திண்ணமாகக் கூறுவோம்.

652. அன்பின் உண்மையை அறிந்தால்தான் வாழ்வில் வரும் அநேக வலிய சிக்கல்களாகிய பிரச்சினைகள் தீரும். மேலான அன்பு (பராபக்தி) கிட்டினுல்தான் மோக்ஷமும் அடையப்பட்ட தாகும். உயிர்க்கு உறுதி கூறும் உலக மதங்கள் யாவற்றின் உட்கிடக்கையும் இதுவே (அன்பே) யாம்.

விளக்கக் குறிப்பு:—அன்பின் உண்மை யியல்பை அறியும்போது அது 'ஆசை' என்னும் விருத்திரூப மடையாமல் நின்றுவிடும். ஆசை இவ்வாறு நீங்குங்கால் அதன் விளைவுகளான குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் இவைகள் அற்றுப்போம். இந்த ஆறுமே வாழ்வின் பிரச்சினைகளுக்கு ஆணிவே ராகையால் வாழ்வின் எல்லாச் சிக்கல்களும் தீரும் எனப்பட்டது. இப்பாடலுக்கு 'அன்புண்மையாகிய தன்னை யறிந்தாலே' என்று பொருள் கொள்வதே பொருந்தும்.

653. "தெளிந்த மெய்ஞ்ஞானிகளைத் தரிசிக்கச் செல் வோர் கையுறை ஏதேனும் எடுத்துச் செல்ல வேண்டும்; வெறுங்கையோடு செல்லக் கூடாது" என்று மெய்யறிவுடைய பெரியோர்கள் விதித்துக் கூறுவதின் உண்மை என்னவெனில், உள்ளத்தில் மெய்யன்போடு அவர்களிடம் செல்ல வேண்டும் (அதாவது, பரீட்சிக்கும் நோக்கத்தோடோ, பயனற்ற வேடிக்கை பார்க்கும் நோக்கத்தோடோ போவது கூடாது) என்பதேயாம்.

விளக்கக் குறிப்பு:—ஸ்ரீ முருகனுர் கூறியது: ஏனைய காணிக்கைகள் என்றும் எவர்க்கும் இயையா வாகலானும், இயைந்த விடத்தும் மெய்யன்பில்லா வழி அவைதாம் பயனில்லை யாகலானும், ஏனையவை யாவும் இல வாயினும் அன்பு மட்டும் உளதாயின் அன்பின் பெருக்கமே மற்றவை யின்மையின் குறை முழுதும் நிரப்பிவிடு மாகலானும், பிறவற்றிலும் அன்பின் சிறப்பு உணர்த்தப்பட்டதாயிற்று.

654. அன்பைத் தடுப்பது ஒன்றினுல் மட்டுமன்றி அதை

மாறுபாடான முறையிற் செலுத்தக் கட்டாயப்படுத்துவதாலும் (ஆக இரு வகையில்) உயிர்கள், அந்தோ! எல்லாவிதத் துன்பங்களாலும் வளைக்கப்பட்டு அரித்துத் தின்னப்படுகின்றனர்!

விளக்கக் குறிப்பு:—'அன்பை யடக்கல்' என்றது விரும்பிய பொருளுக்குக் கேடுண்டாக்குதல்; 'விபரீத வம்பினுல் அஃதை வழங்கல்' என்றது வெறுத்த பொருள்களைக் கூட்டுவித்தல். இவ்வாறு ஆசை என்னும் விருத்திரூபத்தில் அன்பைத் தொழிற்படுத்தும் நிலையில் உயிர்களுக்கு எண்ணிறந்த துன்பங்கள் நேருகின்றன. எனவே 'விருப்பு வெறுப்பு' என்னும் விருத்திரூப மெய்தாமலிருப்பதே, 'அன்பை அடக்கா திருத்தலும், விபரீத வம்பால் வழங்காதிருத்தலும்' ஆகும் என் றறிக. இது குறித்தே ஸ்ரீ பகவான் 'விருப்பு வெறுப்பிரண்டும் வெறுக்கத் தக்கன' என்று 'நான் யார்?' நூலிற் கூறினர்.

655. அன்பே வடிவான ஆன்மானுபவம் எத்தகைய தென் ருல் (என்றும் எங்கும்) இன்பமயமான அன்பையே காண்பதும் கேட்பதும், தொட்டுணர்வதும், உண்பதும், முகர்வது மாகும்.

விளக்கக் குறிப்பு:—ஆன்மானுபவமான ஏக ரச இயல்பு இப்படிப் பட்டதென்று அன்பின்மேல் வைத்துக் கூறப்பட்டது இவ்வெண்பா. அதாவது, ஐம்புல உணர்வான இப் பிரபஞ்சம் முழுவதும் ஆன்மாவாய் உணரப்படும் போது ஐம்புலன்களும் ஆன்மாவையே அனுபவிக்கின்றன என்ற உண்மையை இவ்வெண்பா வெளிப்படுத்துகின்றது. இந்நூலின் 62 ஆவது உபதேசம் இங்கு மீண்டும் வாசித் துணரப்பட வேண்டியதாம். ஸ்ரீ முருகனுர் கூறியது: சொரூபமா யெல்லாந் துலங்கக் காண்டலால் எவற்றின்பாலும் இயல்பா வெழும் அதி பாவன ஆன்ம நேயமாம் அன்பு, புலவிடயம் பற்றிப் புந்தியிற் ருேன்றும் மாய நேயமாம் மதக் களிப்பினின்றும் முற்றிலும் வேறுபட்டது. பக்தி எனவும் பிரேமை எனவும் படும் இவ்வன்பின்பாற்பட்ட பரவச நிலையையே மணிவாசகர் தம் மாண்புடை யனுபவமாய் திருவண்டப் பகுதியாற் குறிக்கின்ருர்.

## ௩௩. சகளத் திறன்

656. சத்திய வஸ்துவை அறியாதவர்தான் அம் மெய்ப் பொருளுக்கு ஓர் உருவமில்லை என்று கூறுவர். ஆகாயத்தின் (அதிநுட்பத் தன்மையால் பற்றற்று வியாபகமா யுள்ள) தன்மை யைப் போன்ற ஆன்மாவின் உண்மைத் தன்மையை உள்ளபடி யறிந்து அனுபவிக்கும் ஆன்ம நிஷ்டனுன ஞானியின் உருவமே அம் மெய்ப் பொருளின் உருவமாகும் என் றறிக.

விளக்கக் குறிப்பு:—ஸ்ரீ முருகனுர் கூறியது: உண்மைக்கு உருவில்லை என்பதை இச் செய்யுளால் மறுக்கின்ருர். என்னை? உண்மையை உள்ளபடி அறிந்தமர்ந்த சகஜ நிஷ்டன் அவ் வுண்மையினின்றும் வேருகா ஞதலின் அவனே அவ் வுண்மையின் உருவம். "ஞானியே ஆன்மா" என்ற வாக்கின் பொருள் இது.

657. தன் தேகமாகிய உருவமே தான் என்ற புத்தி அழியப் பெற்றவர்கட்குத்தான் அருவ வழிபாடு என்பது சாத்தியமாகும். அவ்வாறின்றி, தனக்கு ஏற்பட்டுள்ள தேக வுருவத்தின்மேல் 'நான்' என்ற அபிமானமுள்ள மனத்தினர் (மனிதர்) செய்யும் வழிபாடெல்லாம் (அருவத் தியானம் செய்வதாகக் கூறிக் கொண்டு செய்யும் முயற்சிகள் எல்லாம்) உருவ வழிபாடாகவே முடியும் என் றறிக.

விளக்கக் குறிப்பு:—இந் நூலின் 208-ஆவது உபதேசத்தை இங்கு மீண்டும் உய்த் துணர்க.

658. எண்ண மற்றதும், 'இருக்கிறேன்' என்னும் பிரஜ்ஞையுடன் கூடியதுமான ஆன்ம நிஷ்டையால் உருவற்ற உள்ள பொருளை (பிரம்மத்தை) உபாசித்தலே சிறப்பானதாம். இறைவனை இவ்வாறு அருவ ஆராதனை செய்யத் தகுதி யற்றவர்கள் அவனை உருவ வழிபாடு செய்வதே பொருந்தும்.

659. சுபாவ ஆன்மப் பிரஜ்ஞையான 'இருக்கிறேன் என்ற இருப்புணர்வு மாத்திரமாக நிற்க முடியாமல் மனமயக்கத் தாற் கன்ம வசப்பட் டுழலும் மக்கள் தாம் இறைவனை அன்போடு செய்யும் உருவ வழிபட்டால் (கிரமமாகச் சித்த சுத்தி யேற்பட்டு அதனுல்) உருவ மோகம் ஒழியப் பெற்றுப் பிறகு பரமார்த்த ஆன்மநிலை யடைவர் என்றறிக.

விளக்கக் குறிப்பு:—ஸ்ரீ முருகனுர் கூறியது :ஆன்ம நிஷ்டை யாகிற சொரூபத் தியானமே பாடலிற் கூறப்பட்ட 'இயற்கை ஒளி' முறையாம். அவிச்சை வசப்பட்டுக் கன்மத் துழல் வோராய் அதை மேற்கொள்ள வியலா தலமரும் மக்கள் மூர்த்தி யுபாசனை யாகிற செயற்கை முறையையாவது கைக் கொள்க; அது முடிவில் கதி தரும் என்ருர்.

660. உள்ளும் புறமும் சிவ பிரானின் உருவ வழிபாடு செய்யும் சிவ பக்தி கொண்ட நெஞ்சமே! எல்லாவிடத்திலும் இறைவன் அறிவு வடிவாய் நிறைந்திருப்பதை மறவாத உணர் வுடன் சிவ வழிபாட்டைச் செய்க.

குறிப்பு:—'சிவன்', 'அரன்' என்ற விடத்தெல்லாம் இறைவன் என்று பொருள் கொள்க. 1101 வது பாடலும் இங்கு ஒத்து நோக்கத்தக்கது.

661. சிவயோக சித்திபெற்ற ஞானிகளை சதா வழிபடுவ தால் மனம் ஒருமுகப் பட்டு, இதயத்தில் ஆன்ம விசாரம் உதித்து, சுட்டறிவு நீங்கி, 'இருக்கிறேன்' என்ற தன்மை யுணர்வு மாத்திரமாய் ஆன்மாவில் நிஷ்டை கூடி, அதனால் பிறவிப் பிணியாகிய மயக்கம் அழியும்.

662. வேதங்களிற் கூறப்பட்டுள்ள விதிகள் தவறாது செய்யப்படும் அனுஷ்டானங்கள் கடவுளின் பாதங்களில் உண்மையானதும் ஒரு முகப்பட்டதுமான பக்தியை உனக்கு நிறைய உண்டாக்கித் தரவில்லை என்றால், அவ் வனுஷ்டானங் களிற் பட்ட பாடு முழுவதும் வீணே என் றுணர்க.

குறிப்பு:—அஃது — அனுஷ்டானம்.

663. எப்பொழுதும் அல்லாவின் (கடவுளின்) திருவடிகளை வணங்குவோர், கொடிய பழியைத் தரும் பாப கர்மங்களால், நெருப்பிலிட்டாற் போன்ற, பெரிய துன்பங்களை யடையும் மனோமய வாழ்வின் கொந்தளிப் படங்கி, இன்பந் தரும் எல்லா நன்மைகளும் ஒருசேர அடைவர்.

குறிப்பு:—முகம்மதிய அன்பர்கள் சிலரை நோக்கிக் கூறப்பட்ட உபதேச மாகையால் 'கடவுள்' என்ற பதத்திற்கு "அல்லா" என்ற சொல் உபயோகப் படுத்தப் பட்டது.

664. இவ்வுலக வாழ்விலும் மறு உலக வாழ்விலும் அடைய வேண்டியவற்றைப் பற்றி கவலைப்படாமல், பிராரப்தப்படி வரும் தடைகளை (கஷ்டங்களை) யெல்லாம் மிகவும் பொறுமையுடன் சகித்துக் கொண்டு, எத்தகைய வறுமை வந்தாலும் கொஞ்சமும் மனந் தளராமல் இறைவனது அருள் வழியே நடந்து வருவா யாக.

665. சிவபிரானது திருவடிகளை அடைவதையே தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு வாழும் சிறந்த சாதுக்கள், உலக மக்கள் தம்மைப் பார்த்துப் பொறாமை கொள்ளும்படியான (ஆடம்பர) வாழ்க்கைக்கு இடம் தராமல், அவர்கள் தம்மைப் பார்த்துப் பரிதாபப் படத்தக்க (எளிய) வாழ்க்கை யுடையவர்களாய் வாழ்தல் மிகவும் நல்லதாகும்.

## ௬௪. பஞ்ச கிருத்தியத் திறன்

666. ஈசனது திருவரு ளிச்சைப்படி நடக்கும் ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந் தொழில் களும் அவனது அருள் திட்டத்தின் படியே அவனது ஆஜ்ஞை யாக, உலகெங்கும் ஒவ்வொரு கணமும், ஒவ்வொரு நாளும், தவருது சரிவரவே நடந்து வருகின்றன என்றறிந்து (எதிலும் அதிருப்தி யின்றிச்) சாந்தியாய் இரு.

667. (இறைவனுல்) அணுக்கள் ஒவ்வொன்றும் அழி வதும், அப்போதே உடனுக்குடன் புதிதாக உண்டாவதுமாக இருக்கின்றன. இவ்வாறு இடைவிடாது சதா காலமுமே நடந்து வருவதால் (அண்ட சரா சரங்களான யாவின்) சிருஷ்டி யாதி பஞ்சகிருத்தியங்கள் அதே பொருள்களே தொடர்ந்து இருந்து வருவன போலக் காணப்படுகின்றன என் றறிக.

விளக்கக் குறிப்பு:—அசைபடக் காட்சியில் திரையிடப்படும் ஒவ்வொரு ஒளித் தகடும் (Film) அசையாத ஒரே வொரு சித்திரத்தைக் கொண்டதே யாயினும், அவை கணந்தோறும் பற்பல வந்து போகும் வேக மிகுதியானது, அவற்றைக் கிரகிக்கும் நம் கண்ணின் சக்தியைவிடத் துரிதமாக இருப்பதால், தொடர்ந்து அசையும் சித்திரங்களாக நம் கண்ணுக்குக் காணப்படுவது போலவே, பஞ்ச கிருத்தியங்கட் குட்பட்ட அண்ட சராசரங்களாகக் காணப்படுவன யாவும், நம் மனத்தின் கிரகிக்கும் ஆற்றலே விட அதி வேகத்தில் (மனோவேகத்தினும் பலகோடி மடங்கு துரிதமாய் அதாவது, ஒரு கணத்தின் ஒரு சிறு பகுதிக்குள் எண்ணில்லாத முறை) இறைவனின் அநிர்வசனீய வன்மையால் ஒவ்வோரணுவும் அழிக்கப் பட்டும் புதிதாக ஆக்கப்பட்டும் வருவதால் இடையருது நிலேத்திருக்கும் ஒரு தொடர் நிகழ்ச்சியாகவே நம் அறிவுக்குக் காணப்படுகின்றன என்பதாம்.

## ௬௫. ஜீவேசுவர செயற் றிறன்

668. ஜீவனது செயல்க ளெல்லாம் கடவுளது செயல்களே என்று ஒத்துக் கொள்வதாஞல் கடவுளுக்கு அன்னியமாக ஜீவன் தனக் கோர் இருப்பற்று, சுதந்திரமு மற்று, ஆண்டவ னிடம் ஆன்ம சமர்ப்பணமாகி, அவரினும் தான் வேருகாதவஞ யிருக்க வேண்டும். அவ்வாறு ஆன்ம சமர்ப்பணம் ஆகாவிடில், ஜீவன் செய்யும் பாப புண்ணியச் செயல்கள் யாவும் கர்த்தாவாகக்

கருதிக் கொள்ளும் அவனுடையதே தவிர கடவுளுடைய தாகா. இவனும் (ஜீவனும்) கடவுளுக்கு வேருகத் தனிப்பட்டுச் சுதந்திர மாகக் கர்த்ருத்துவ முடையவனுகவே கருதப்பட்டு பாப புண்ணியப் பலன்களை அனுபவிக்க வேண்டியவனே யாவன் என்று தெளிக.

விளக்கக் குறிப்பு:—'எல்லாம் இறைவன் செயல்' 'அவனன்றி யோரணுவு மசையாது' என்ற ஆன்றோர் வாக்கியங்களின் உண்மைப் பொருளை அறியாமல் மக்கள் பலர், துன்பம் வந்த போது, 'இதெல்லாம் கடவுள் செயல்' என்று கூறிக் கடவுளைத் தூற்றுவதற்கும், இன்பம் வந்தபோது மட்டும் தாம் கடவுள் அருளைப் பெற்றுள்ளதாகக் கூறித் தற்புகழ்ச்சி கொள்வதற்கும் அவ் வாப்த வாக்கியங்களை உபயோகிக்கின்றன ரன்றோ? இப்பிழையை நிவர்த்திப்பதற்காகவே இந்த உபதேசம். ஸ்ரீ முருகனுர் கூறியது:— இஃது மிக நுட்பமாம். ஜீவனது செயல்களெல்லாம் சிவன் செயலென்று ஒப்புக் கொண்ட விடத்து ஜீவன் வேறு சிவன் வேறல்ல. அம்மட்டில் ஜீவன் தன் செயல் அற்றுச் சிவனொருவனே சுதந்திரனுகின்முன். ஆயின் இவ்வாறு ஒப்புவிப்பது ஆணவத்தோடு உடன்படுவ தல்ல; அகந்தை முற்றும் அழிதலே. 'எல்லாம் சிவன் செயல்' எனத் தம் அகங்கார இயல்பினராக ஒழுகுபவர் இறைவனிடம் தம்மை ஒப்புவித்தவ ரல்லர்!

## ௩௬. ஜீவேசுவரச் சிட்டித் திறன்

669. இறைவனது சிருஷ்டி பந்தப்படுத்துவ தல்ல. ஜீவனது மனே பாவனையான சிருஷ்டியே சுகதுக்கமாகிய பந்தங்களை ஏற்படுத்தி வைப்பதாம். அந்தோ, உண்மையாகவே இறந்து போன ஒருவனுடைய தந்தை மகிழ்ச்சியோ டிருக்கவும், உண்மையில் உயிரோடிருக்கும் ஒருவனுடைய தந்தை அழுது துயரடையவும் நேர்ந்த ஓர் கதையே இதற்குத் தக்க உதாரண மாகும்.

விளக்கக் குறிப்பு:—இச் செய்யுளில் வரும் கதையாவது: தென்னுட்டின் ஓர் சிற்றூரிலிருந்து காசிக்கு யாத்திரை சென்ற இராமன், கிருஷ்ணன், என்ற இருவருள், இராமன் வழியில் நோயுற் றிறந்து போகவே, கிருஷ்ணன் மட்டும் யாத்திரையைத் தொடர்ந்தான். இச்செய்தியை அவ்விருவரின் பெற்ருேர்க்குங் கொண்டுவந்த புதியவ னொருவன் 'கிருஷ்ணன் நோயுற் றிறந்து போனுன்; இராமன் யாத்திரையைத் தொடர்ந்து மேற்கொண்டுள்ளான்" என்று ஞாபக மறதியால் மாற்றிக் கூறிவிட்டான். இறந்த இராமனின் தந்தை இத் தவருன செய்தியால், மகிழவும், உயிருட னிருக்குங் கிருஷ்ணனின் தந்தை புலம்பி யழவும்

நேர்ந்தது. இப்போது இவ் விருவரின் துயருக்கும் மகிழ்வுக்குங் காரணம் தத்தம் மைந்தர்களைப் பற்றிய பிழையறிவே யன்றி உண்மையான ஆதாரம் ஒன்றுமே யில்லை யல்லவா? இவ்வாறே, ஜீவன் அனுபவிக்கும் ஜனனமரணங்களாகிற துன்ப வுணர்ச்சிக்கும் தன்னைப் பற்றி (தான் ஓர் உடல் என்னும்) ஓர் வெறும் பிழையறிவே காரண மாவதைத் தவிர, உண்மையான ஆதாரம் ஒன்றுமே யில்லை யாதலால், "ஜீவ மனோ பாவனையாஞ் சிட்டியே பந்தமாம்" என்று கூறப்பட்டது.

ஜீவனது நல்-தீ வினைப் பயன்களைப் பகுத்துந் தொகுத்தும் பிராரப்த வடிவில் அருள் செய்பவர் இறைவ னன்றோ? அதன் படி நம் வாழ்வாகவும் அதற்கேற்ப நமக்குத் தோன்றுமோர் உலகமாகவும் காணப்படுவதும் நம் பிராரப்தானுசாரமே நடைபெறுகின்றன. இவ்விதம் நமக்குத் தோற்றமாகும் இவ் வுலகை இறைவனது சிருஷ்டி என்கிறோம். இவ் வுலகம் ஓர் சிறந்த அறிவுப் பள்ளியாகும். இவ்வுலகத் தோற்றத்தின் (சிருஷ்டியின்) நோக்கமே இங்குள்ள இன்ப துன்பங்களின் மூலம் நமக்கு வைராக்கியத்தை யூட்டி, மனத்தை ஆன்மாபிமுக மாக்குவதுதான். அதுவே வீடு அல்லது மோக்ஷம் எனப்படுவது. எனவே ஈசனின் சிருஷ்டியாகத் தோன்றும் இப் பிரபஞ்சத் தோற்றம் நம்மை அறிவூட்டி வீடுபேற்றிற் குய்ப்பதே தவிர, பந்தப்படுத்துவ தன்று. இதையே இப் பாடலில், "தேவனது சிட்டி பந்திப்ப தன்று..." என்றுங் கூறப்பட்டது.

670. இறைவனது பரந்த சிருஷ்டிக் காரியமுறையானது ஞான குருவைக் (மனித வடிவில்) காட்டிக் கொடுத்து, வாசனை களான குற்றங்களைப் போக்குகின்ற ஞானநிஷ்டையை யடைய உதவுங் காரணத்தால், அது முக்தியை யடையக் கூட்டிவைக் கும் சகாயமே யாம் என்று கொள்க.

விளக்கக் குறிப்பு:—ஜீவர்கள் முக்தி பெற வேண்டும் என்ற பெருங்கருணை நோக்கே இறைவனது சிருஷ்டியாதிகளுக்குக் காரணமாம். ஆகாமிய வினைவழியே மேன்மேலும் உழலும் ஜீவனுக்குப் பிராரப்த நியதிப் பிரகாரம் பெருந்துணை புரிந்து முக்தி யடைய வைப்பதே ஈசனின் அருட்பெருங் கருணை.

## ௩எ. நேதி செயற்றிறன்

671. இந்த மாமிச தேகமும், பிராணனும், இந்திரியங் களும், மனமும், புத்தியும், அகங்காரமும் நானல்ல. இவற்றின் சகல தொழில்களும் விஷயங்களும் ஒழிந்த போது நிறைந்த வாசனைகளோடு மாத்திரம் (தூக்கத்தில்) பொருந்தி யுள்ள அஞ்ஞானமுங் கூட (இருளுங்கூட) நானல்ல.

குறிப்பு:—ஸ்ரீ பகவா னருளிய 'நான் யார்?' என்னும் நூலில் இப் பாடலின் கருத்து வசன வடிவில் வருவது காண்க.

672. சத்திய வஸ்துவாகிய எனது (ஆன்மாவினது) சந்நிதி சம்பந்தத்தை யுடையாவிடில் (முன் பாடலிற் கூறப் பட்ட) இவை யாவும் இருப்பற்று நசிப்பதாலும், 'சத்திய வஸ்து வுக்கு அன்னியமாக யாதொரு பொருளும், இருப்போ அறிவோ உடையதா யிருக்க வியலாது' என்ற நியாயத்தாலும் அசத்தும் அசித்துமாய் இகழப்படும் இவை யாவும் நானல்ல.

673. மேற்கூறிய அனுத்ம தேககாதிகளை 'நான்' என்று அபிமானித்த முதற் குற்றத்தைப் பகுத்தறிவால் விலக்கி, வஞ்சகத் தோற்றமாகிய உடலுலகாதிகளைக் கானல்நீர்த் தோற்றமே போற் பொய்யானவை யாக்கிய பிறகு, அசங்கனாய் ஏகனாய்ப் பிரகாசிக்கும் சத்திய ஞான சொரூபமே நான்.

674. மேற்கூறிய அனுத்மப் பொருள்கள் எவையெவை எப்படியெப்படித் தொழிற்பட்டாலும் (அவைகளை 'நான்' என்று அபிமானிப்பதால், 'நானே தொழிற் படுகிறேன்' என்ற கர்த்ருத்வ பாவத்தினின்றும்) விடுபட்டவனாய் நீ அவைகளை அறியும் சாக்ஷிமாத்திரமாய் இருந்து கொள்க.

## ௩அ. நிருவாதனைத் திறன்

675. குறித்த சில வேளைகளில் மட்டும் சாதனை பயில்வது என்ற நியமத்தையுங் கடந்து எப்போதும் இடைவிடாமல் நிகழும் ஸஹஜாத்ம நிஷ்டையால் வாசனைகளாகிற உரோமங் கள் மூளையின் கண் (எண்ணங்களாகப்) புறப்பட்டு வர (முளைக்கச்) சிறிதும் இடமே தராமல் அழிப்பது தான் (துறவி கள் கொள்ளும் முண்டனம் எல்லாவற்றிலும்) தலைசிறந்த முண்டன மாகும்.

விளக்கக் குறிப்பு:—துறவிகள் மாத மொருமுறை தம் தலைமயிரை மழித்தலை முண்டனம் என்கிறோம். இதன் தத்துவார்த்தம் யாதெனின், அவ்வப்போது எண்ணங்களாக முளைத் தெழும் பூருவ வாசனைகளை அழிப்பதே. இது சாதகர்கள் காலை மாலைகளில் ஓர் குறிப்பிட்ட நேரத்தில் மட்டும் சாதனையில் ஈடுபட்டு அச்சமயம் எழும் வாசனைகளை மட்டும் நீக்கிக் கொண்டிருக்கும் செயலுக்கு ஒப்பிடப்படுகிறது.

ஆயினும், நிரந்தரமாய் இடைவிடாது இயல்பாக நிகழும் ஸஹஜாத்ம நிஷ்டையுடைய ஞானி ஒருவனின் நிலையே சம்பூரண வாசனு க்ஷயம் (மீண்டும் யாண்டும் வாசனை எழாத நிலை) ஆகையால், அதுவே மாண்புமிகு முண்டனம் என்ற வுண்மை இச் செய்யுளாற் போதிக்கப்படுகின்றது.

676. உள்ளங்காலில் ஆழப் பதிந்து தைத்து வலியைத் தரும் முள்ளைக் களைவதற்கு மற்றோர் முள்ளை (உபயோகித்துப் பிறகு உதவிசெய்த அந்த முள்ளையும் எறிந்து விடுவது) போல, சித்தத்தின் ஆழத்திற் பதிந்துள்ள அசுப வாசனைகளைச் சுப வாசனைகளைத் தரும் பயிற்சிகளால் நீக்கிய பின், அந்தச் சுப வாசனைகளும் பிறகு வேண்டாதனவாய் ஒழிக்கப்படல் வேண்டும்.

விளக்கக் குறிப்பு:—இங்கு தள்ளப்பட வேண்டியனவாய்க் குறிப்பிட்டது சுப அசுப வாசனைகள் இரண்டையுமே தவிர, ஸத்வாசனையை யல்ல. ஸத்வாசனையாவது பிரம்ம நிஷ்டையில் உரமாக நிற்கும் பழக்கம். ஸ்ரீ பகவா னருளிய அருணசல அக்ஷரமண மாலையின் 69 ஆவது பாடல் இச் செய்யுட் கருத்தைத் தெற்றென விளக்குவதாம்.

677. அசுத்தமான தீய வாசனைகள் அழியும் வரையில் தான் விரும்பத் தக்க நல் வாசனைகளால் அனுகூலம் உண்டாகும். பெருகியுள்ள சுபம் அசுபம் என்னும் இருவித வாசனைகளும் அழிந்த பரிசுத்த வாசனுக்ஷயமே (நிர்வாசனையே) நம் குறிக்கோளான மோக்ஷ நிலையாகும்.

விளக்கக் குறிப்பு:—சுப அசுப (நல் தீ) வாசனைகள் இரண்டும் அகற்றப்பட வேண்டியவையே. "ஸத்வாசனை" எனப்படுவது வேறு. அதுவே நிஷ்டைக் கவசியமானது. அதுவே பேணப் படத் தக்கதாம். "பூரண மணங்கொள...." என்று ஸ்ரீ பகவான் அருணசல அக்ஷரமண மாலை 69ஆவது பாடலிற் குறிப்பிட்டது இந்த வாசனையையே.

## ௩௬. உபவாச வுண்மைத் திறன்

678. ஒருவன் தன் மனத்தாற் போகப் பற்றுக்கள் எதையும் விரும்பாமலிருப்பதே உண்ணு விரதத் தத்துவம் என்றும், ஆன்ம நிஷ்டையை விடாதிருப்பதே உபவாசத் தத்துவம்

என்றும் தெளிந்த விவேகிகள் கண்டறிந்து, அவற்றைக் கண் போல் போற்றி ஒழுகுவர் என்றறிக.

விளக்கக் குறிப்பு:— உண்ணு விரதம் என்பது வயிற்றைப் பட்டினி போடுவ தல்ல ; புலன்கள் ஐந்தையும் (விஷய உணவுகளை ஈயாமற்) பட்டினி போடுவதே உயர்ந்த உண்ணுவிரதம். 'உப+வாசம்' என்ற சொல் 'அருகில் வசித்தல்' என்ற பொருளைத் தருவதால், மனம் ஆன்ம சமீபத்தை விடாமல் ஆன்மாவிலேயே ஒன்றி நிற்கும் ஆன்ம நிஷ்டையே மெய்யான உபவாசம் ஆகும்.

## சo. ஆகார நியமத் திறன்

679. ஆன்மவிசார சாதனைக்கு உதவியான சத்துவ குணம் மிதசாத்வீக ஆகார நியமத்தால் வளர்வதால் அதுவே சாதனையில் வெகுதூரம் துணைபுரியும். ஆகையால் மித சாத்வீக ஆகார நியமம் ஒன்று மட்டுமே சாதகர்களுக்குப் போதிய தாகும். எனவே, மற்ற அநேக வித நியமங்களையும் கடைப் பிடிக்க முயன்று வருந்துவது எதற்காக? (வேண்டிய தில்லை என்பதாம்.)

விளக்கக் குறிப்பு:— உணு நியமம்-உணவில் நியமம்-அதாவது மித சாத்வீக ஆகாரம்.

ஸ்ரீ முருகனார் கூறியது: ஆன்ம விசாரம் புரிவோர் அம் மெய்த்தவத்திற் குற்ற பல் வகை நியமங்களுள் எவற்றைக் கொள்வதெனத் தெரியாது கலங்கித் தவிப்ப தெதற்கு? ஏனைய நியமங்கள் எல்லா வற்றினும் தலை சிறந்து விளங்குவது ஆகார நியமமாகும். அஃதொன்றே போதும்.

## சக. தூயதன்மைத் திறன்

680. மலமயமான மானிட மாமிச சரீரத்தைத் தூய்மை யாக வைத்திருப்பதற்கு மேன்மேலும் முயற்சிகள் செய்யச் செய்ய அது (நவத்துவாரங்களின் வழியே) மீண்டும் மீண்டும் அசுத்த மலம் பெருக்கித் துர்நாற்றமே மிகுவதை உணர்ந்து, வெறுப்படைந்து, உடலின் மேல் (நான் எனது என்றெழுந் துள்ள) தேகாபிமான வடிவில் உள்ள ஆசையை அடியோடு விடுவதற்காகவே சாஸ்திரங்கள் சரீரத்திற்குத் தூய்மை தரும் ஆசாரவிதிகளை வற்புறுத்துகின்றன.

681. வேதமானது, 'ஓர் பெண்ணை மணந்துகொள் என்று கிருஹஸ்தாசிரம வாழ்வை விதிப்பது, அற்பமான அப் பெண் போகத்தின் மீதுள்ள விருப்பத்தை ஒருவன் விட் டொழிக்க வேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டேயல்லவா? மேலும் வேதம் பலவாறு யாகங்களைச் செய்யும்படித் தூண்டி அவைகட்குத் தக்க விதிகளையும் சிறப்பித்துக் கூறுவதெல்லாம் அவற்றின் பலன்களான சுவர்க்கம் முதலிய போகங்களின் மேல் வெறுப்பு (வைராக்கியம்) ஏற்படுவதற்காகவே யன்றோ? சொல்க.

ஸ்ரீ முருகனார் கூறியது:— (ஆசார போதனை) உடற்றூய்மை, இல்லற வொழுக்கம், வேள்வி செய்தல் முதலிய வேத விதிகள் 'குட ஜிஹ்வா' ஞாயம் பற்றிக் கூறியனவாகக் கொள்ளத் தக்கன என்பதாம்.

விளக்கக் குறிப்பு:— ஒரு தாய் தன் நோயுற்ற குழந்தைக்கு ஊட்டுவதற்காக ஒளித்து வைத்திருப்பதோ மருந்து; ஆனால் காட்டுவதோ கற்கண்டு, என்பதைப் போல் வேதங்கள கர்ம காண்டத்திற் காட்டும் போக ஹேதுக்க ளெல்லாம் ஞான காண்டத்தின் வைராக்கியத்திற்கு மனிதனைத் தயாரிப்பதற்கே என விவேகிகள் கண்டு கொள்ள வேண்டும். கைவல்ய நவநீதத்தின் சந்தேகந் தெளிதற் படலத்தில் 75, 76 ஆவது பாடல் களும், ஸ்ரீ சிவப் பிரகாசம் பிள்ளை இயற்றிய ஸ்ரீ ரமண பாதமாலை வாழ்த்தின் 31-ஆவது பாடலும் இங்கு உடன் வாசித் தறியத் தக்கனவாம்.

682. சுத்தமான உணவுப் பொருள்களை யெல்லாம் தம்மிடம் (வயிற்றில்) வந்து சேர்ந்த சிறிது நேரத்தில் துர்நாற்ற முள்ள மலமாக மாற்றி விடுகின்ற (மானிட) தேகமாகிய பாழான அழுக்கு மலக் குவியலையே 'நான்' என்று விரும்பி அபிமானிப்போர் (தேகமே நான் என்னும் புத்தியை உடை யோர்) மலத்தை யுண்ணுங் கீழான மிருகத்தை (பன்றியை) விடக் கீழானவர்களாம்.

**பகவான் - (10)**

பரிசுத்தமான உணவை யுண்டு மலமாக மாற்றும் சரீரத்தை 'நான்' என்று கருதும் மனிதர், மலத்தை யுண்டு மலமாக்கும் பன்றியை விடக் கேடானவர் என்று கூறலாம்.

விளக்கக் குறிப்பு:— பன்றியும் தன் தேகத்தைத் 'தான்' என்று அபிமானிக்கின்றது. மனிதனும் தன் தேகத்தைத் 'தான்' என்றே அபிமானிக்கின்றான். அபிமானிப்பதில் இருவரும் சமமே யாயினும்,

மனித தேகத்தைவிடப் பன்றியின் தேகத்திற்கு ஓர் சிறப்பு கூறுகின்றார் ஸ்ரீ பகவான்! அதாவது, பன்றித் தேகமானது மலத்தைத் தின்று மலமாக்குகின்றது. ஆனால் மனித தேகமோ தூய உணவை யுண்டுங்கூட தீய மலமாக்குகின்றது! ஆதலால், பன்றித் தேகத்தினும் இழிந்த செயலைப் புரியும் மனித தேகத்தை 'நான்' என்று அபிமானிப்பவர் பன்றியினுங் கேடானவரே என்பது தீர்ப்பு!

## சஉ. நிட்காமியத் திறன்

683. ஒரு கோரிக்கை நிறைவேற வேண்டும் என்று அதை முன்னிட்டு இறைவனைக் கும்பிடுவதானது **அந்தக் கோரிக்கையைத்தான் கும்பிடுவதாகும் (இறைவனைக் கும்பிடுவ தாகாது).** ஆகையால் சிவ சாயுஜ்ய மாகின்ற மோக்ஷமடைய விரும்பும் முமுக்ஷுக்களது உள்ளத்திற் காமியக் கோரிக்கை களாகிய எண்ணங்கள் அறவே யழிந்துவிட வேண்டியது மிக இன்றியமையாத தாகும்.

684. ஜீவனுக்கு நற்கதியாகிய உய்வை உண்டாக்கித் தரக்கூடிய சிறந்த தவ நெறியை மேற்கொள்ளும் நல்லோர் அத் தவத்தின் பயனாக மயக்கந் தரும் இம்மை மறுமைப் பொருள் களை அடைய விரும்பார். மன மயக்கமாகிய சுவர்க்க உலகச் சுக வாழ்வை வேண்டித் தவத்தில் ஈடுபடுவோரது செயலானது, சிறந்த இரத்தினத்தை அற்பக் கூழுக்குப் பண்ட மாற்று செய்து கொள்வதைப் போன்று அறிவீனச் செயலே என்றறிக.

விளக்கக் குறிப்பு:— தவத்தின் லக்ஷியம் ஆன்ம சாட்சாத்காரமாகவே அமைய வேண்டுமே தவிர வேறெதையுங் குறித்து நிற்கக் கூடாது என்பதாம். சுவர்க்க மாதி எல்லா வுலகங்களையும் வென்று ஆண்டு இன்பம் துய்க்கவே தவஞ் செய்த பண்டை அசுரர்களது தவ மெல்லாம் அவமே யானது போல, ஆன்ம சித்தியைத் தவிர மற்றக் குறிக்கோள்களுடன் இயற்று வோரது தவ மெல்லாம் அவமே யாகும். அன்னோர் 'தவம்' என்பதன் தாற்பரியம் அறியா அறிவீனரே என்பதாம்.

## சங. கரண தண்டத் திறன்

685. அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் நான்கும், புறக் கரணங்களாகிய மெய், வாய், கண்,

மூக்கு, செவி ஐந்தும் இரவும் பகலும் (எப்போதும்) அடங்கி விடுமானால், சொல்வதற் கரிய துரீய நிலையிற் பிரகாசிப்பதான பரம்பொருள் தாமே விளக்க முறும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது: எல்லாக் கரணங்களும் எல்லாச் சமயத்தும் இயல்பாகவே அடங்கியிருத்தல் என்பது அகந்தை யடங்கினால் மாத்திரமே அமையப் பெறுவதாதலால் அகந்தை யழிவே முற்பட வேண்டும். அகப்புறக் கரணங்களைப் பிரத்தியேகம் அடக்கி முயல்வது நேர் வழி யன்றாம்.

686. மனத்தின் ஓட்டத்தைத் தடுத்து, உள்ளே ஆன்மா விலேயே நிலைபெறச் செய்யாமல் (அம் மனத்திற்கு ஏற்படுத்தித் தரப்பட்டுள்ள விதி-நிஷேதங்களாகிய) காவல் நெறிகளை மீறி, ஐம்பொறிகளின் வழியே மனத்தை அலையும்படி விட்டு விடுவ தானது, ஓர் ஊரின் பாதுகாப்புக் கோட்டையை இடித்து விட்டும், பாசன, குடிநீருக்கான ஏரி குளக் கரைகளை வெட்டி விட்டும் அவ்வூரை அழிவுக்கு உட்படுத்தும் பெருங் குற்றமான காரியங்களுக்குச் சமமாகும்.

687. (ஏகமாய் சொரூபத்தில் நிலை பெறாமல்) தனி வியக்தி களாகப் பின்ன உணர்வுற்று விஷ்ணுவும் பிரம்மாவும் தம்முள் (யார் பெரியவர் என்று) பூசலிட்டு, வாதம் புரிந்து, வீணே புத்தி மயங்கி, ஜோதிஸ்தம்ப வடிவாய் இடையே எழுந்த அருணாசலத் தின் அடிமுடிகளை (அக் கலங்கிய புத்தியினால்) அளவிட்டுச் சோதித்துப் பார்த்து, ஒன்று மியலாது மயங்கிய பண்டைச் சரிதமானது, கரணங்களைப் பகிர்முக விருத்தியில் விடாது தடுக்காததால் ஏற்படும் கேட்டை நமக்கு அறிவுறுத்துவ தாகும்.

விளக்கக் குறிப்பு:— ஆன்ம சொரூப இருப்புணர்வு கரணங்களின் வழியே பகிர் முகப்படும் போதே தனக்கு ஓர் தனி ஜீவ இருப்பு உணரப்படுவதால், கரணங்கள் அடங்கி அந்த வியக்தித்துவம் ஆன்மாவில் ஏகமாய் ஒடுங்குவதே சிறப்பாம்.

### சச. கரண ஜயத் திறன்

688. பஞ்ச பூதங்களாலான (தூல) 'உடலே நான்' என்ற அபிமான வடிவான அகந்தை யழியவே, அதனால் அவ் வுடலையே ஆதாரமாகக் கொண்டு, பஞ்ச பூத குணகுணங்களின் சம்பந்த

மாகவே அகந்தையினிடம் பொருந்தி யிருந்த குற்றங்கள் எதை யும், சத்திய வஸ்துவாகிய தன்மேல் ஆரோபித்துக் கொள்ளா மல், உதாசீனமாய், அவற்றை இன்மையாய்த் தள்ளுவதே 'பூத ஜயம்' எனப்படுவதாம்.

விளக்கக் குறிப்பு:— சாதாரண மக்கள் மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களையும் அடக்கி அவற்றில் சஞ்சாரம் செய்யும் சித்திகளை யுடையவனே பூத ஜயங் கொண்டவன் என்று கருதுவது தவறு என்றும், பஞ்சபூத வுடலை 'நான்' என்று கொள்ளாமையே (அகந்தை நாசமே) அவற்றை மெய்யாக வெற்றி கொண்ட 'பூத ஜயம்' என்றும் எடுத்துக் காட்டுவது இவ் வுபதேசம்.

689. சிதாபாச வடிவான 'சித்தமே - மனமே - நான்' என்று அலையும் அகந்தை மதி நீங்கி, அவ் வகந்தையால் விளைந்த வேறுபாடு நிறைந்த புத்தி மாறுபட்டங்கள் எல்லாம் அறவே அழிந்து, பந்தம்-முத்தி என்ற இருவித உணர்வுகளுங் கடந்து, செறிந்த திடமான ஆன்மஞான சித்தியை யடைவதே மெய்யான 'சித்த ஜயம்' எனப்படுவதாம்.

விளக்கக் குறிப்பு:— தான் நினைத்ததைச் சாதிக்கும் சங்கற்ப சித்தியையும், பிறர் மனத்தை வசியப்படுத்துவதையும், தன் இஷ்டப்படியே பிறரை நினைக்க வைக்கும் ஆற்றலையும் பெறுவதே 'சித்த ஜயம்' என்று மக்கள் கருதி வருவது தவறு என்றும், சித்தத்தை யழித்து (அதாவது, சித்த மல மறுத்து)ச் சிவமாக நிற்கும் ஆத்ம சித்தியே சரியான 'சித்த ஜயம்' என்றும் வற்புறுத்துவது இவ் வுபதேசம்.

## சரு. ஆதனத் திறன்

690. சிறந்த இடமான சத்திய ஞானாகாசமாம் தன்னையே (ஆன்மாவையே) இப்பிரபஞ்சம் முழுவதும் ஆதாரமாகக் கொண்டு நிற்கின்றன என்ற பரபோதம் நழுவாமல் திடம் பெறுவதுதான் மிகவுயர்ந்த சமாதியோகமான சகஜசமாதிக்கு ஏற்ற, அசையாத, நிலைத்த, 'ஆசனம்' ஆகும்.

விளக்கக் குறிப்பு:— காலை மடக்கிக் காயத்தை நிமிர்த்தி கண்ணைக் குனித்துக் கட்டைபோல் இருப்பதே யோகாசனம் என்றவாறு யோகாசனத்திற்குத் தூல விளக்கம் மட்டுமே பெற்றுள்ள தற்கால மக்களுக்குச் சரியான ஞான யோகாசனம் எதுவென விளக்குவதே இவ் வுபதேசம்.

## சசு. யோக வலித் திறன்

691. அடங்காது எழுந்து குதிக்கும் அகங்கார மனச் சுட்டறிவின் பிரவிருத்தி முழுவதும் அழியும்படி, வஞ்சகமான ஐம்புலன்களின் வழியே அறியும் அறிவு அடங்கி, உள்ளத்திலே, தூலவெளிச்சம்போலல்லாத பிரஜ்ஞை வடிவான பிரகாசத்தையும், சப்த வடிவில்லாத 'இருக்கிறேன்' என்னும் ஆன்ம ஸ்புரிப்பையும் தெளிவாக வுணர்தலே மெய்யான யோக சக்தி எனப்படும்.

692. முற்பிறவிகளில் ஒருவன் செய்த தன்முயற்சியே பிறகு பக்குவப்பட்டு இப்போதுள்ள பிராரப்த வடிவமாக மாறுவதால், அப் பிராரப்தத்தை இயற்றிய கர்த்தாவாகிய தானே (யோகத்தால் அதற்கு எதிரிடையாக உண்முகமாக) மிக முயன்று அப் பிராரப்தத்தை மாற்றுவதும் கூடும் என்றறிக.

693. எந்தெந்த நல் வினைகளும் தீ வினைகளும் முறையே இன்பங்களும் துன்பங்களுமான தத்தம் பலன்களைத் தந்தாலும் சரி, நீ உன் சொந்த ஆன்ம சொரூபமான பரம் பொருளில் மூழ்கிய மனத்தால் அவ்விரு வினைகளின் ஆதிக்கத்தையும் வெற்றி கொள்வாயாக.

விளக்கக் குறிப்பு:— ஆன்மாவில் மூழ்குவதால் கர்த்ருத்துவ போக்த்ருத்துவங்கள் அழிவதால் பிராரப்தத்தை அனுபவிக்கும் போக்தா இல்லாமற் போவதே ஊழை வெல்வதாம்.

694. உலகியலைச் சேர்ந்த காரியங்களிற் கூட மிகுந்த சிரத்தை இல்லையேல் ஒருவனது உழைப்பு வெற்றியைத் தருவதில்லை யல்லவா? (அது போல) எல்லையற்ற பரம்பொருளை ஒருவன் அடையும் வரை சாதனை செய்வதில் உள்ள சிரத்தையை தான் ஒருக்காலும் குறைய விடவே கூடாது என்றறிக.

695. தான் முற் பிறவிகளிற் செய்துள்ள பாபங்கள் எவ்வளவு மிகுதியாயினும் சரி, 'நான் பாபியா யிருக்கிறேனே! எவ்வாறு கடைத்தேறப் போகிறேன்?' என்று சிறிதும் எண்ணி ஏங்காமல், (அப்படி ஏங்கும் தான் யார் என்ற விசாரத்தால்) மிகுந்த ஊக்கத்துடன் சொந்த சொரூபமான ஆன்மாவில் உண்முகப்பட்டு மூழ்கும் தீவிரர் (நிச்சயமாக) மிக விரைவில் பேரின்பக் கடலாடித் திளைப்பர்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ பகவானருளிய 'நான் யார்?' என்ற நூலில் வரும், ''ஒருவன் எவ்வளவு பாபியாயிருந்தாலும், 'நான் பாபியா யிருக்கிறேனே; எப்படிக் கடைத்தேறப்போகிறேன்?' என்றேங்கி யழுது கொண்டிராமல், 'நான் பாபி' என்ற எண்ணத்தையும் அறவேயொழித்து, சொரூபத் தியானத்தில் ஊக்கமுள்ளவனு யிருந்தால் அவன் நிச்சயமா யுருப்படுவான்'' என்ற உபதேச மொழிகளே இச்செய்யுள்.

696. குற்ற மற்ற மார்ச்சால நியாயப்படி (பூனைக் குட்டி தன் முயற்சி யின்றியே தாய்ப் பூனையாற் கௌவித் தூக்கிச் சென்று காப்பாற்றப் படுவதுபோல்) தன்பங்கில் யாதொரு சாதனை முயற்சியு மில்லாமலேயே கடவுளின் அருள் மகிமை யாற் பற்றற்று, இப் பிறப்பிலேயே ஞான சித்தி யடைந்த சில பெரியோர்கள், முற் பிறவிகளில் மர்க்கட நியாயப்படி (குரங்குக் குட்டி தாய்க் குரங்கைத் தானே பற்றிக் கொள்வதாற் காப்பாற்றப் படுவது போல்) இறைவனைத் தன் முயற்சியால் இடைவிடாது பக்தி செய்தவர்களே (இறைவனுக்கு அடிமை செய்தவர்களே) ஆவர்.

697. அகன்று, தடையற்று எங்கும் வியாபித் துள்ள பூதாகாசத்தாலும் கட்டுப் படாத சிதாகாச ஆன்ம சொரூபத்தையே இடைவிடாது தியானித்து நிற்கும் ஆன்ம நிஷ்டர்களுக்கு எள்ளளவு கூட பிராரப்தங் கிடையாது. "விண் உறுவார்க் கில்லை விதி" என்ற ஆன்றோர் வாக்கு மேற்கூறிய இக்கருத்தை யுட்கொண்டதே யாகும்.

விளக்கக் குறிப்பு:— "விண்ணுறுவார்க்கு" என்ற ஆன்றோர் மொழிக்கு "ஆன்மாகாச சொரூப ஞான மடைவோர்க்கு" என்றுதான் பொருள் கொள்ள வேண்டுமே தவிர, 'சுவர்க்கம் முதலிய அமர, தெய்வ உலகங்களை அடைவார்க்கு' என்று பொருள் கொள்ளக் கூடாது என்பதே உபதேசம்.

698. 'தேகமே நான்' என்று அபிமான வடிவ பலஹீன மனத்தை இடைவிடாமல் அலையும்படிச் சூறுவளியாய் சுழற்றி யடிக்கும் பிராரப்தமானது, பரிசுத்த ஆன்மாகாசமாகத் தெளிந்து விளங்கும் மனத்தை (ஞானயோகியை)க் கொஞ்சங்கூட அசைக்க முடியாது என்றறிக.

குறிப்பு:— ஞானிக்குப் பிராரப்தமில்லை என்பது கருத்து.

699. ஜீவனைக் கர்ம சமுத்திரத்தி னடியில் ஆழ்த்தி வைக்கும் கர்த்ருத்துவ (அகங்கார)மாகிற துர்புத்தியைச் சுட்டழிக்கத் தகுந்த தந்திரமானது, தன்மய மாகவே விளங்கும் அகண்டாகார ஆன்ம சொரூப நாட்டத்தைத் தவிர வேறென்ன இருக்கிற தென்று நீ கண்டாய்? (ஏ, மெய் கண்ட) நெஞ்சமே! நீயே சொல்க.

## சஎ. உயி ரொருக்கத் திறன்

700. சத்து, சித்து, ஆனந்தம், நாமம், ரூபம் ஆகிய இவ் வைந்து அம்சங்களாக நிறைந்து விளங்கும் பிரபஞ்சத்தில் (மித்தியாம்சங்களாகிய) நாமம் ரூபம் இரண்டையும் அறிவால் அறவே விலக்கி விடுவதே ரேசகம் ஆகும். (சத்தியாம்சங்க ளாகிய) சத்து, சித்து, ஆனந்தம் மூன்றையும் கிரகித்தலே பூரகம் ஆகும். அந்தச் சச்சிதானந்தமே தானாய் சதா நிலை பெற்றிருப்பதே கும்பகமாகும். இவ் வகையான ஞான யோகத் தின் ரேசக, பூரக, கும்பகங்களைப் பெறுக.

விளக்கக் குறிப்பு:— உயிர் ஒருக்கம் என்பது பிராணனை ஒடுக்குவதாம். இராஜயோகப் பயிற்சியில் பிராணனை வெளிவிடுதலை ரேசகம் (விடல்) என்பர் ; பிராணனை உள்ளே இழுத்தலைப் பூரகம்.(இழுத்தல்) என்பர். பிராணனை உள்ளேயே அடக்கி வைத்திருத்தலைக் கும்பகம் (நிறுத்தல்) என்பர். இவ்விதமான விடல், இழுத்தல், நிறுத்தலாகியவற்றின் தத்துவ ஞானார்த்தமும் செய்முறையும் என்ன என்பதை இப்பாடல் விளக்குகின்றது. ஸ்ரீ பகவானருளிய விசாரசங்கிரகம்-ஞானஷ்டாங்கம் என்ற அத்தியாயத்தின் முதற் பாராவில் இக் கருத்தை வசன ரூபத்திற் காண்க.

ஸ்ரீ முருகனார் கூறியது:— இருத்தல், இலகுதல், இன்பாதல், உரு, பெயர் என்னும் கூறுகள் ஐந்தினுள் (சச்சிதானந்த நாமரூப அம்சங்கள் ஐந்தில்) உலகின் சிறப்பியல்பு உருவ நாமம் இரண்டுமே யாதலால் அவற்றைத் தீர விடல் ரேசகமாம். பொய்யான நாம ரூபத்தை கானல்நீர்க் கற்பனையாய்க் கழிக்கவே, அதன் கண் எஞ்சி நின்ற இருத்தல், இலகல், இன்பாதல் என்னும் ஏனைய மெய்க் கூறுகள் (சத்தியாம்சங்கள்) மூன்றும் உலகின் உண்மையாம் ஆன்ம சொரூபத்தின் சிறப் பியல்புகளாதலின் அவற்றைத் தேர்தலே பூரகமாகும். தேர்ந்தாங்கு நிற்றலே கும்பகமாகும். அதாவது உலக வாசனையை ஒழித்து, உள்ளத்தில் ஆன்ம சொரூபத்தை யறிந்து, தரித்தலே, ஞானப் பிராணயாமத்தின் கருத் தென்பதாம். சத்து, சித்து, ஆனந்தம் என மூன்றும் வெவ்வேறுபோல் பெயரிடப் படினும், உய்த்துணர்ந்தால் அம் மூன்று மொன்றே யாம். இந்நூலில் 979-வது பாடல் இவ்விடத்தும் ஒத்துணரத் தக்கதாம்.

701. தேகம் நானல்ல என்று அவ்வபிமானத்தை அடியோடு விடுவதே ரேசகம். கூர்மதியால் 'நான் யார்?' என்று தன்னுள்ளே நாடுவதே பூரகம். 'நான் ஏகமாம் பிரம்மமே' என்றறிந்து ஸ்திரமாய் இருத்தலே கும்பகம். இவ்விதம் ஞானப் பிராணுயாமம் அமைகின்றது.

விளக்கக் குறிப்பு:— சென்ற பாடலில் நாமரூபப் பிரபஞ்சத்தை விடல் ரேசகம் எனப்பட்டது. ஆயினும் அனுபவத்தில், 'தேகமே நான்' என்ற தன்மை யுணர்வு எழுந்தபிறகே பிரபஞ்ச நாமரூப அறிவு ஏற்படுவதால் தேகாத்ம புத்தி மயக்கத்தை விடுவதே சரியான ரேசகம் என்பதும் 'நான்' என்ற உணர்வை விடாது நாடும் தன்னுட்டமே யாவதால் இதுவே சரியான பூரகச் செய்முறை என்பதும், தன்னைத் தவிர சச்சிதானந்தம் என்று தனியே வேறொன்று மில்லாததால் தாஞயிருத்தலே கும்பகானுபவம் என்பதும் இப் பாடலால் மேலும் தெற்றென விளக்கப் பெற்றன. ஸ்ரீ ரமண வழியில் இதுவே அனுபவத்திற் கொத்த ஞானப்பிராணுயாம மாகும்.

702. தன்னை மனமாகவே கருதி, மயங்கி (தோற்ற ஒடுக்க மான விகாரங்கள் தனக்கே என்று அடைந்து) அலையும் ஜீவன் கனவைப் போன்ற மயக்கமாகிய (இந் நனவில்) வெளிப் பிரபஞ்சக் காட்சியைக் காண்பதை விட்டு, தனது ஆன்ம ஸ்தானமாகிய இதயத்தில் மூழ்கி, தான் அவ்வான்மா வாகவே நிலை பெறுவதுதான் பிராணுயாமத்தின் உண்மைத் தத்துவ மாகும் என்றறிக.

## சஅ. கன்ம ரகசியத் திறன்

**பகவான் - (11)**

கர்மம் இயற்றுங் கர்த்ருத்துவமும், கடவுளை நேசிக்காத தாகிய அன்பின்மையும், கடவுளைப் பிரிந்த பிரிவும், கடவுளை யறியாத அஞ்ஞானமும் ஆகிய இந்நான்கு குற்றங்களும் (அதாவது, கர்மம் பக்தி யோகம் ஞானம் என்ற நான்கு நெறி களாலும் அகற்றப்பட வேண்டிய நால் வகைக் குற்றங்களாகிய இவை) யாரைச் சார்ந்தவை, அல்லது யாருக்கு உண்டாகி யுள்ளன, அல்லது இக்குற்றங்களை யுடையவன் யார் (நான் யார்?) என்று விசாரிப்பதுதான் சரியான கர்ம, பக்தி, யோக, ஞான நெறியாகும்! எவ்வாறெனின், 'இக் குற்றவாளியாகிய

நான் யார்?' என்று விசாரிக்கு மிடத்து 'நான்' என்ற அகந்தை யுணர்வே இருப்பற்றதோர் பொய்யாக அறியப் படுவதால், அது இவ்வாறு அழியப் பெற்ற விடத்து மேற்கூறிய நான்கு குற்றங்களும் என்றுமே இல்லாதனவாய் மறைகின்றன. எனவே, இக்குற்றங்களற்ற ஆன்மாவாகவே தான் என்றும் விளங்குவதே பரமார்த்த வுண்மை யாகும்.

விளக்கக் குறிப்பு:— அந்த நால்வகைக் குற்றங்களின் நிவர்த்திக்காக ஏற்படுத்தப்பட்ட நால் வகை யோகங்களின் நற்பயனும் 'நான் யார்?' என்ற விசார மார்க்கம் ஒன்றினுலேயே நிறைவேறி விடுவதால், அந் நால்வகை யோகங்களும் பிறகு அவசிய மற்றுப் போகின்றன என்பது அறியற் பாலதாம்.

703. 'கர்மங்களைச் செய்யக் கிளம்பும் கர்த்தாவான (கர்மங்களைச் செய்வோனுகிய) நான் யார்?' என்று தன் உண்மையை ஆராய்ந்து அறிவதே கர்ம யோகத்தின் தத்துவ மாகும். கர்மங்களின் மூலவனுகிய தன்னை (அகந்தையை) யார் என்று ஆராய்ந்து (அதன் பயனுக, அகந்தையாகிய நான் என்றும் இருப்பற்ற ஓர் பொய்யே என) அறிந்து, அகந்தை அழிந்தாலல்லாமல் கர்ம யோகத்தின் முடிவாகிய உபசாந்தியை அடைவது இயலாத தாகும்.

விளக்கக் குறிப்பு:— மிக வுயர்ந்ததும் முக்கிய மானதுமாய் ஓர் கர்ம யோகி செய்ய வேண்டிய கர்மம் தன்னை யார் என்று ஆராய்ந்து அகந்தை யழியப் பெறுவதே என்பதும், இதுவே சரியான கர்ம யோகம் என்பதும் பெறப் படுகின்றது.

704. கர்மங்களை இயற்றும் கர்த்தாவாகிய தனது (அகந்தையினது) உண்மை என்னவென்று (அகந்தை இருப் பற்றதோர் பொய் யென்று) கண்டவன்தான் சகல கர்ம விதி களையும் ஒன்றுகூட விடாமல் ஆற்றி முடித்த சரியான கர்மானுஷ்டானபரன் ஆவான். ஏனெனில் (ஆன்ம விசாரத்தில் அகந்தை அழிவதால் ஏற்படும்) பேரின்ப உபசாந்தத்தைத் தவிர, தினமும் செய்யும் கர்மானுஷ்டானமாகிய தவத்தால் ஒருவன் கண்டடையப் போகும் பயன் வேறென்ன விருக் கின்றது? (ஒன்றுமில்லை என்பதாம்).

விளக்கக் குறிப்பு:— பர நல சேவையாகிய கர்மயோகத்தை மட்டு மன்றி நித்திய கர்மானுஷ்டான நெறியையும் பரிபூரணமாகச் செய்து முடிப்ப தென்பது ஆன்ம விசாரத்தால் அகந்தை யழியப் பெறுவ தொன்றினுலேயே சித்திக்கின்றது என்ற இரகசியம் இங்கு உணர்த்தப் படுகின்றது.

705. எல்லா விதமான தர்மங்களின் கடைப்பிடிப்பிற்கும், மாற்றமில்லா அத்வைத மெய்ஞ்ஞானம் ஒன்றே ஆதாரஸ்தான மாய் அமைவதால், ஆன்ம ஞானி ஒருவனே கர்மம், பக்தி, யோகம், ஞானம் எனப்படும் அகில தர்மங்களையும் சரிவர அனுஷ்டித்தவ னாகின்றான்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீமத் பகவத் கீதையில் கர்மங்களையும் தர்மங் களையும் புகட்டும் போது 'ஸ்வதர்மானுஷ்டானம்' (ப.கீ 3-35) என்று கூறப்பட்டதின் சரியான விளக்கத்தை ஸ்ரீ பகவான் இங்கு கூறுகிறார். 'ஸ்வ' என்பது ஆன்மா: 'தர்மம்' என்பது அதில் நிலைபெறுதல். எனவே ஆன்ம நிஷ்டையே பாரபக்ஷ மற்று அனைவர்க்கும் பொருந்தக் கூடியதும் உண்மை யானதுமான 'ஸ்வதர்மம்' என்று எடுத்துக் காட்டித் தர்ம-கர்ம இரகசியங்கள் இப்பாடலால் உபதேசிக்கப் படுகின்றன.

## சகூ. ஜபத் திறன்

**பகவான் - (12)**

'நான்' என்பது எங்கு உதித்து ஒடுங்குகின்றதோ அந்த இடத்தை ஞான விசாரத்தால் எய்தி நிற்க இயலாதோர், ஜபத் தின் பராவாக்கு* ஆகிய மந்திரத்வனி எங்கிருந்து உண்டா கின்றதோ அந்த இடத்தை அறிந்து அடைதல் நன்று.

விளக்கக் குறிப்பு:— அடுத்து வரும் 706ஆவது வெண்பாவை முருகனார் இயற்றிய போது அதைக் கண்ட ஸ்ரீ பகவான் அக் கருத்தையே ஈரடிக் குறள் வெண்பா வாகச் சுருக்கி யாத்தருளி யதே இப் பாடல்.

706. தனது நுண்ணிய தற்கவனமான மனோமௌனத் தால் 'நான் என்று எழும் இடம் எது?' என்று நாடி இதய த்துள் ஆழ்ந்து மூழ்க இயலாதோர், மனத்தால் (ஒரு மந்திரத் தைச்) செபிக்கும் போது அம் மந்திரத்வனியாகிய பராவாக்கு எங்கிருந்து கிளம்புகின்றது என்று ஆராய்வது நல்ல தவமாகும்.

விளக்கக் குறிப்பு:— 1907 நவம்பர் 18ம் நாள் காவ்யகண்டருக்கு ஸ்ரீ பகவானருளிய உபதேசத்தின் பிற்பகுதியைப் பற்றியே இவ் வெண்பாவும் ஸ்ரீ பகவானது குறள் வெண்பாவும் அருளப் பெற்றனவாம். பூ, தலை, ஆகிய இருவித அச்சுக்களை இரு பக்கமும் பொறிக்கப்பட்ட ஒரு ரூபாய் நாணயத்தை ஓர் அறியாக் குழந்தையிடம் காட்டி, 'பூ போட்ட ரூபாய் வேண்டுமா? அல்லது தலை போட்ட

* பாடல் 1197ல் பராவாக்கு என்பது யாது என விளக்கப்பட்டிருப்பது காண்க.

ரூபாய் வேண்டுமா?' என்று கேட்டு, அக் குழந்தை எதைக் கேட்டாலும் அதற்கேற்ற பக்கத்தைத் திருப்பிக் காட்டி அதே ரூபாய் நாணயத்தைக் கொடுத்து மகிழ்விக்கும் பெற்ருேரின் செயலைப் போலவே, ஸ்ரீ பகவான் ரமணர் தன் யதார்த்த உபதேச நெறியாகிய **நானுதிக்கும் தானமதை நாடும்** 'நான் யார்' விசாரத்தை முதலில் காவிய கண்ட கணபதி சாஸ்திரிகள், என்ற சீடருக்கு உபதேசிக்கவே, அதன் புதுமையைக் கண்டு தயங்கிய சீடர், 'ஜபத்தாலும் அந்நிலையை அடையலாமா?' என்று வினவவே, சீடருக்கு ஜபத்திலிருக்கும் விருப்பத்தை யுணர்ந்து ஸ்ரீ பகவான், 'ஓர் மந்திரத்தை ஜபித்தால் அம் மந்திரத்வனி எங்கிருந்து கிளம்புகின்றது என்று கவனித்தால் மனம் அங்கு லீனமாகும்' என்று உபதேசித்தனர். மந்திர த்வனி (சப்தம்) ஜபிப் போனுகிய தன்னிடத்திலிருந்தன்றி வேறு எங்கிருந்து கிளம்பி வரும்? ஆகவே த்வனி மூலத்தை நாடுவது என்பது தன் மூலத்தை நாடும் தன்னுட்டமே யாக அமைவதால், தன் மாற்றுபதேசத்தின் உட்கிடக்கையை வினயமாய் மறைத்து, தன் யதார்த்த உபதேசமாம் 'நான் யார்?' விசார ரூபாய் நாணயத்தையே மறுபுறம் திருப்பிக் கொடுத்து மகிழ்வித்தனர் என்பதை இப் பாடலால் அறிக. இவ் விளக்கவுரையின் மெய்ம்மையையும், நியாயத்தையும் 715 ஆவது பாடலால் ஸ்ரீ பகவான் நிச்சயப் படுத்துவதை வாசகர்கள் நன்குணரலாம். ஏனெனில் "பரா வாக்கு" என்று இங்கே குறிப்பிடப் பட்டது 'நான் நான்' என்ற ஸ்புரணத்தையே என்பதை பாடல் 715 ஊர்ஜிதப் படுத்துகிறதன்ருே!

707. நீயே ஜெபத்தின் உண்மை வடிவா யிருக்கிருய். ஆகையால் நீ, 'நான் யார்?' என்று உன் இயல்பான நிலையை விசாரித்து உள்ளபடி யுணர்ந்தால், ஆ, என்ன விந்தை! நீ முன்பு மிக முயன்று செய்துவந்த ஜெபமானது பிறகு சிறிதும் முயற்சியில்லாமலும், நழுவாமலும், உள்ளத்திற் சதா காலமும் தானே நடைபெறுவதை அறிவாய்!

விளக்கக் குறிப்பு:— இறைவனது நாமங்கள் யாவற்றிலும் 'நான்' என்னும் தன்மை யொருமை யுணர்வே சப்த வடிவற்ற முதல் திருநாம மாகும். எல்லா உயிர்களிலும் ஒத்து ஏகனுய் விளங்குவோன் இறைவன் ஆகையாலும், எல்லா வுயிரும் தம்மை 'நான்' என்றே குறிக்கின்றன வாகையாலும் அந்தப் பெயரே இறைவனது உண்மைப் பெயர் ஆகின்றது. அதனுல்தான் "நீயே (நான் என்னும் ஆன்ம வுணர்வே) ஜெபத்தின் உண்மை வடிவம்" என்ருர். 'நான் யார்?' எனத் தன் இயல்பை விசாரித்தால் முயற்சிரூபக் கர்த்ருத்துவம் அழிவதால், அதன் பிறகு நடை பெறும் "**ஸஹஜ ஜெபம்**" (அதாவது 'நான்-நான்' என்று எப்போதும் விளங்கும் ஆன்மவுணர்வு) 'முயற்சியின்றி மேவும்' என்ருர்.

708. புலனுணர்வான விஷயங்கள் யாவும் அவற்றை யறியுங் கர்த்தாவாகிய தன்னில் தனக்கு அன்னியமின்றி ஒன்ருகி மறையும் வரையிலும், ஆன்மாவின் உண்மை இன்ன தென்று தான் திடமாக அறியும் வரையிலும் (அதாவது, சொரூப ஞானமுற்று, அன்னிய மற்றுப் போவதற்கு முன்பே, ஒருவன்) 'அந்தப் பிரம்மமே நான், பிரம்மமே நான்' (அஹம் பிரம் மாஸ்மி, ஸோஹம், சிவோஹம்) என்றெல்லாம் வீணே வாயால் மட்டும் சொல்லிக் கொண்டிருப்பதால் என்ன பயன் உண்டா கும்? (ஒன்று மில்லை என்பதாம்).

விளக்கக் குறிப்பு:— "விளியுங் காறும் தேருங் காறும்" என்று மூல நூலிற் குறித்தது முறையே "அழியாத வரையிலும் அறியாத வரையிலும்" என்றவாறு எல்லை காட்டிக் கூறப் பட்டனவாம். அதாவது, இரட்டை முப்புடிகளின் ஞானம் அழிவதற்கு முன்பும், ஆன்மஞான மென்பது இன்னதுதான் என்று திடமாய் அனுபவமாவதற்கு முன்பும் ஒருவன் மகா வாக்கியங்களைக் கைக் கொண்டு 'நான் பிரம்மம்' என்று கூறித்திரிவது தகாது என்பது உபதேசம்.

709. "நானே பிரம்மம் (அகம் பிரம்மாஸ்மி)" என்று வாயால் செபித்துக்கொண்டு திரியாமல், ஆன்ம நிஷ்டையால் தான் பிரம்மமாகவே அமர்க. தான் பிரம்மமாய் நிஷ்டை யுறுவதை விட்டுவிட்டு, வாயால் ஓயாது கோடிக் கணக்காக செபிப்பதால் மட்டும் (ஜனன மரணத்) துன்பம் நீங்குமா? (நீங்கா தென்க).

710. மருந்தைச் சாப்பிட்டா லன்றி மருந்தின் பெயரைச் சொல்லிக்கொண் டிருந்தால் மட்டும் கொடிய நோய் தீராது. அதுபோல, மகாவாக்கியங்களாக அமைந்துள்ள 'சிவோஹம்' முதலிய பல சொற்றொடர்களால் குறிப்பிடப்படும் பொருளாகிய பிரம்ம மாகவே தான் நிஷ்டையுற்ற லன்றி, அவைகளைச் செபிப்பதால் மட்டுமே பிறவித் தளை நீங்கி விடாது.

## ருO. மெய்க் கோயிற் றிறன்

711. ஜீவனுக்கும் ஜெகத்திற்கும் இருக்க இடம் தரும் கோயிலாக (ஆதார வஸ்துவாக) ஈசனே இருக்கிறுன் என்ற உண்மையை நுணுகி யறியாத பாமர மக்கள்தான் (கோபுரம், மதில், கர்ப்பக்கிரகம் முதலிய) மறைவுகளோடுங் கூடியதோர்

சிறு திருக்கோயிலை ஈசனுக்காகக் கட்டி வைத்து, எங்கும் வியாபித்த கடவுளை (ஒரு சிறு விக்கிரக வடிவமாக)க் குறுக்கி அக்கோயிலினுள் வடித்து வைத்து, அதற்கு மிகச் சிறப்பான திருவிழா முதலிய வழிபாடுகளைச் செய்வர்.

## ருக. திரு நாமத் திறன்

712. "**உள்ளம்**" என்றழைக்கப்படும் மெய்ப்பொருள் "**இருக்கிறேன்**" என்ற உணர்வு வடிவாய் இதயத்திலிருந்து (தோற்றமாத்திரமாக) மெள்ள வெளியே நானுவித நாம ரூபங் களாக விரிந்து காணப்படும்போது, அந்த சத்வஸ்துவுக்கு உண்டாகும் பல்லாயிரக்கணக்கான திருநாமங்களை யெல்லாம் ஆராய்ந்து பார்க்கும்போது "**நான்**" என்ற நாமமே அதன் முதல் திருநாமம் ஆகின்றது என்றறிக.

விளக்கக் குறிப்பு:— 'உள்ளேம்' என்ற சொல் 'இருக்கிறேன்' என்ற பொருளில் சத்தின் விளக்க வடிவாய்ப் பிரகாசிப்பதால் பரம் பொருளுக்கு "**உள்ளம்**" என்பதும் ஓர் இயற்பெயராகின்றது. "உள்ளமே @ யானும்" என்னும் அப்பர்சுவாமிகளின் அருள்வாக்கையும், "**நான்**" என்றிதயம் நடித்திடுவையாலுன்பேர் தான் **இதயம்** என்றிடுவர் என்னும் ஸ்ரீபகவானது அருள் வாக்கையுங் காண்க. அடுத்த பாடலின் விளக்கக் குறிப்பையும் இங்கு வாசித் துணர்க.

@ " உள்ளமாய் உள்ளத்தே நின்றாய் போற்றி " — திருவாரூர் - திருத்தாண்டகம்

713. முன் பாடலில் இறைவனின் முதற் பெயராகச் சொல்லப்பட்ட '**நான்**' என்ற அப்பெயருடன், (அச் சொல்லாற் குறிக்கப்படும் அப்) பரம்பொருளின் விளக்க வடிவாகவே '**இருக்கிறேன்**' என்றும் அனவரதம் விளங்குவதால், அந்த '**இருக்கிறேன்**' என்பதும் இறைவனின் முதற் பெயரேயாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— "யான் இருக்கிறேன்" என்ன அவரவர்க்கும் ஆன்மாநுபவமாய் இயைதலால், அத்தகைய 'இருக்கிறேன்' என்னும் பெயரும் ஆங்கே முதன்மை பெறுவதால் 'யான்' என்னும் பெயர் 'இயைதல்—(இருத்தல்)' என்னும் சொல்லடியாகப் பிறந்து, 'இருக்கிறேன்' எனப் பொருள்படுவதாமோ வென ஈண்டு தத்துவ விசாரத்தோடு கூடிய மொழிநூல் வல்லார் நிதானித்து நுனித்து ஆராய்தற் குரியதாம்.

714. எண்ணங்க ளற்று இதயத்தில் விளங்கும் இறை வனுக்குள்ள ஆயிரக்கணக்கான திருநாமங்களுள் (அவனது

மனோதீத) மெய்ந்நிலைமைக்கு உண்மையாகவே தகுதிவாய்ந்த இந்த "**நான்**" அல்லது "**இருக்கிறேன்**" என்ற திருநாமத்தைப்போல் எந்த ஒரு நாமமும் அவ்வளவு அழகுற அமைந்த தில்லை.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— கடவுளுக்குப் பல்வேறு சமயங்களிலும் மொழிகளிலும் கூறப்பட்டுள்ள பல்லாயிரக் கணக்கான திருப் பெயர்களுள் 'இருக்கிறேன்' என்னும் இந்தப் பெயர்போல் வேறெந்தப் பெயரும் உண்மையில் அவ்வளவு பொருத்த முடைத்தாய் உண்மை யழகு பெற வமைந்த தன்றும். ஹீப்ரு மொழியில் இறைவனுக்கு வழங்கும் '**ஜெஹோவா**' என்னும் பெயர் இப்பொருள் படுவதாம்.

715. ஆண்டவனது மந்திர நாமங்களாக அறியப்படும் எல்லாத் திருநாமங்களிலும் "**நான் நான்**" என்பதே, தன்னோட்ட முடையோர்க்கு அகந்தையழிந்த இதய வெளியில் நிறைந்து நின்று மோன பரா வாக்காக ஸ்புரித்து முழங்குவதாம்.

விளக்கக் குறிப்பு:— "பரா வாக்கு" என்று ஸ்ரீ பகவான் குறிப்பது 'நான் நான்' என்னும் ஆன்ம ஸ்புரணத்தையே என்பது இப்பாடலிலிருந்து தெளிவாக விளங்குவதால், இந்நூலின் (ப-12) என்னும் பாடலிற் கூறப்பட்ட 'வாக் பரை ஆர் தானம் தேர்தல்' என்றது தன் மூலநாட்டமே யாக முடிவதை வாசகர்கள் உய்த்துணர்க.

716. உண்முக நாட்டத்துடன் 'நான் நான்' என்னும் அத் திருநாமத்தையே விடாமற் கருதிக்கொண் டிருந்தாலுங் கூட, தேகசம்பந்த மூலமான அகந்தை அழிந்து போகும் வண்ணம் அதன் உற்பத்தி ஸ்தானத்தில் (இதயத்தில்) சாதகன் ஒருவனைக் கொண்டுபோய்க் கரைசேர்த்து விடும்.

விளக்கக் குறிப்பு:— "'நான் நான்' என்று கருதிக்கொண்டி ருந்தாலுங்கூட அவ்விடத்திற் கொண்டுபோய் விட்டுவிடும்" எனவரும் 'நான் யார்?' நூலின் அருள் வாசகமே இச் செய்யுள்.

717. தேகாத்ம புத்தியாகிய அகந்தையோ தோற்றமும் ஒடுக்கமும் உடையதாக இருப்பதால், நன்கு ஆராயுமிடத்து, 'நான்' என்று ஒவ்வொருவரும் சொல்லும் சொல்லுக்கு (அவ் வகந்தை சரியான பொருளாகாது; எனவே) அத் தேகாத்ம புத்திக்கு அதிஷ்டானமான (மூலமான) ஆன்மாவேதான் சரியான பொருள் ஆகும் (வஸ்து வாகும்) என்றறிக.

விளக்கக் குறிப்பு:— "நானென்னுஞ் சொற்பொருளாமது நாளுமே நானற்ற தூக்கத்து முந்தீபற, நமதின்மை நீக்கத்தாலுந்தீபற" எனவரும் உபதேச வுந்தியாரின் 21 ஆவது உபதேசத்தையும் இதனுடன் வாசித் துணர்க.

## ௫உ. பத்திமைத் திறன்

718. 'நீ' எனப்படும் 'த்வம்' பதச் சொல்லுக்குப் பொருளாகிய அகந்தை வடிவ (உண்மையில் இருப்பற்ற) சூனியனுகிய தன்னை 'தத்' பதமாய் நின்று விளங்கும் சதாசிவமாம் ஞானசொரூபத்தில், உபசாந்த வடிவான 'இருக்கிறேன்' என்னும் 'அசி' பத அனுபவத்தால் எவன் அழிக்கிருனே, அந்தத் தீர புருஷனே சிறந்த பக்திமான் ஆகும்.

விளக்கக் குறிப்பு:— 'நான் இன்னுராக இருக்கிறேன்' என்று தன்னை ஓர் தேக உபாதியுடன் சேர்த்து உணரும்போது, அவ்வகந்தையாம் ஜீவனே 'த்வம்' (நீ) என்ற பதத்தாற் சுட்டப்படு பொருளாகிருன். இதில் 'இன்னுராக' என்ற அகந்தையுபாதிப் பகுதியை மட்டும் அழிப்பதால் மிஞ்சுகின்ற 'இருக்கிறேன்' என்ற உபசாந்த சிற்பதமான 'அசி' பதமே 'நான் இருக்கிறேன்' என்று விளங்கும் 'தத்' பதமாக நின்ற சதாசிவமாகும். இவ்வாறு இப்பாடலில் 'தத்வமசி' என்னும் வேதாந்த ஞான மார்க்க மகா வாக்கியோபதேச மானது சித்தாந்த பக்திமார்க்கத்திலும் எங்ஙனம் செவ்வனே பொருந்துகின்றது என்ற உண்மை விளக்கப்படுகிறது. 'த்வம்' பதத்திலுள்ள அகங்காரத்தின் நாசமே, சம்பூரண சரணுகதி யாகிய பக்தி மார்க்கத்திலும் குறிக்கோளாக அமைகின்றது என்பதே அறிதற்குரியது.

719. மதியூக்கங் கொண்டு கண்டுபிடித்துவிட முடியாத உபசாந்தியாகிய பெருங்கடலில், நீர்க்குமிழிபோலத் தோன்றிக் காணப்படும் நினைவு வடிவான அகந்தையை அதன் போலித் தன்மை அழியும்படி மடிக்கும் தீரனே சிறந்த பக்திமான் ஆகும்.

குறிப்பு:— திடஞானி ஒருவனே உண்மையான சிறந்த பக்திமானும் ஆவான் என்பது மேற்கண்ட இருபாடல்களாலும் உபதேசிக் கப்படுகின்றது.

720. பக்தி மார்க்கத்திற் பக்குவம் முதிர்ந்த மனத்தால் பக்தியின் சுவையைப் பூரணமாகச் சுவைத்தறிந்தவர்கள், புத்தமுதமான அந்தப் பக்தியையே தாம் செய்யும் பக்திக்குப் பயனுகக் கொள்கின்றதான உத்தம பக்தியையே மேலும் விரும்புவார்கள்.

விளக்கக் குறிப்பு:— உத்தம பக்தர்கள் தம் பக்திக்குப் பயனாக சித்திகளையும், இகபர சுகங்களையும் விரும்பார். பக்தி ரசத்தைப் பருகி ருசிகண்டவர்க ளாகையால், தமது பக்திக்குப் பரிசாக மேலும் பக்தி செய்யும் பாக்கியத்தையே அருளும்படி இறைவனை வேண்டுவர். உதாரணமாக ஸ்ரீ ரமண பகவான் அருளிய அருணாசல நவமணி மாலையில் 7 ஆவது பாடலில் வரும் "......கண்ணே யுன்றன் கழலிணையிற் காதற் பெருக்கே தருவாயே" என்ற ஈற்றடி இந்த நுட்பத்தை வெளிப்படுத்துகின்றது காண்க.

721. அகந்தை முனைப் பழிந்து சும்மா விருக்கும் மோனமே முக்தி. அம் மோனத்திலிருந்து நழுவும் பெருங் கேடே விபக்தி (பக்தியின்மை) யாகும். தான் மனத்தின் எழுச்சி வடிவாகப் பிளவுபட்டு எழாமல் அடங்கி, அம் மோனத்தில் ஒடுங்கி ஒன்றாகி விடுவதே சிவ பக்தியின் உண்மை என்று தெளிக.

## ரு. பக்தி ஞான வபேதத் திறன்

722. ஆராயுமிடத்து, பரபக்தியும் ஞானமும் சொரூ பத்தின் இயல்பில் ஒன்றேயாக விளங்குகின்றன. (அவை இரண்டும் இரண்டல்ல; இவ்வாறிருக்க, சிலர்) இவ் விரண்டில் ஒன்று மற்றொன்றுக்கு உபாயமாக அமையும் என்று கூறுவதும் சரியல்ல. (அவ்வாறு கூறக் காரணமாவது) அவ் விரண்டில் எந்த ஒன்றின் உண்மையையுங்கூட அவர்கள் இன்னும் சரியாக உணராததால்தான் என்க.

குறிப்பு:— பரபக்தியின் நிலை தன்னிழப்பே யாதலின் அது ஞான சொரூபமே யாம்.

723. (பரபக்தி, ஞானம் என்னும் இவ் விரண்டில் ஏதாவது ஒன்றின்வழி இறுதி வரைச் சென்று அவற்றின் உண்மையை) அறிந்த பெரியோர்கள் கூட சிற்சில சமயம் (இவை ஒன்றுக்கொன்று உபாயம் எனக் கூறப்பட்ட) அக் கருத்தை ஆமோதிப்பதுபோல, அவற்றுள் ஒன்றைத் தாமும் சிறந்ததாகவே மேற்கொண்டு நிற்பதாகத் தோன்றுவது ஏனென்றால், இவ் விரண்டில் ஏதாவது ஒன்றையே சிறந்ததாக கருதிப் பின்பற்றிச் செல்லும் சாதகர்கள் இடையில் மற்றொன்றை விரும்பி, அதற்கு முன் தாம் பயின்ற ஒன்றை விட்டு நழுவி விடாமல் இருப்பதற்காகவேதான் என்றறிக.

## ௱௪. பக்தி விசாரத் திறன்

724. சாதகன் ஒருவன் மேற்கொள்ளும் ஞான விசார சாதனையின் இறுதியில் அடையும் சமாதி நிலையானது, அச் சாதகனின் உயிருக்கு உயிராகவும் (ஆன்மாவாகவும்) அவனது உண்மை சொரூபமாகவும் நின்று விளங்கும் கடவுள் அவன் மேற் பொழியும் திருவருளினுலேயே நடைபெறுகின்றது.

விளக்கக் குறிப்பு:— போலி யுயிராகிய ஜீவனுக்கு உண்மை உயிராக அமைவது ஆன்மாவே யாதலின், அதுவே மெய்க் கடவுளாகும். எனவே அத்தியந்தப் பிரியமுடன் ஆன்மாவை நாடும் தன்னுட்டமாகிய விசாரசாதனையொன்றே உண்மையான ஈசோபாசனையாக அமைவதால், ஆன்மாவாம் ஈசனருளாலேயே ஞானவிசாரியும் சமாதியில் நிலை பெறுகிறுன் என்க.

725. ஆன்மாவாக இதயத்திலிருக்கும் குருவுங் கடவுளு மான ஆண்டவன் தமது அருட் சக்தியால் நம் மனத்தை உள்ளே யிழுத்துத் தன்னிடம் நிறுத்தினு லொழிய, யார்தான் தனது கள்ள மன முயற்சியின் வலிவால் மட்டும் அம் மனத்தின் பகிர்முகப்போக்கைத் தடுத்து, இதயத்தில் மூழ்கி, அமைதிநிலை யடைய வல்லவ ராகும்? (யாராலும் ஆகாது என்றவாறு).

726. அஷ்டமூர்த்தியாக விளங்கும் இறைவனது திருவருளா னது சற்குருவின் அருளில்லாமல் அடைய முடியாதது. அது கல்வி கேள்வியாதி வித்தைகளாலும் வராது; மற்ற எவ்வுபாயத்தாலும் வராது; (குரு) பக்தியினுல் மட்டுமே அத் திருவருள் கிடைக்கும்.

விளக்கக் குறிப்பு:— இறைவனே சற்குருவாக எழுந்தருள்வதால் குருவருளின்றி இறையருளில்லை எனப்பட்டது. குருபக்தியே கடவுள்பக்தியு மாவதால் அதுவே கடவுளருளைக் கூட்டு விக்குமே யன்றி வேறெதனுலும் அத் திருவருள் கிட்டாது.

727. சாதகன் ஒருவன் தனக்குக் கடவுளருள் பற்றுக் கோடாக உதவுகின்றதா, இல்லையா என்று சந்தேகிக்கவே வேண்டியதில்லை. பந்தத்தினின்றும் முக்திபெறவேண்டி, விசாரசாதனையில் தன் மனம் ஊக்கம் மிகுந்திருப்பதே அவ் வீசனருள் தன்பால் சுரக்கப்பட்டிருப்பதற்குப் போதிய சான்ருகும்.

728. உண்மையைக் கூறுமிடத்து, இறைவனின் திருவருளும், 'நான் யார்?' என்று விசாரித்து இதயத்தில் நிலை பெறும் விசாரசாதனையும் ஒன்றுக்கொன்று உற்ற துணையாக ஒருங்கு சேர்ந்து சாதகனைப் பரமான்மாவில் ஒடுங்குவதான கைவல்ய நிலையிற் கொண்டு சேர்ப்பிக்கும்.

729. மெய்ப்பொருளாகிய கடவுளே (ஆன்மாவே) இதயத்துள்ளிருந்து நம்மை விழிப்புறுத்தினாலன்றி இவ்வுலகக் கனவாகிய மாயைத் தோற்றம் நீங்காது. இவ் வுலகக் கனவுத் தோற்றத்தைக் காணும் தான் (ஜீவன்) யார் என்று விசாரிக்கும் ஆன்ம விசார சாதனையே அக் கடவுளாகிய ஆன்மா நம்மை விழிப்பிக்குமாறு நாம் செய்யும் உபாசனையாகும்.

குறிப்பு:— ஆன்ம விசாரமே இறைவனருளைப் பெறுவதற்காக ஒருவன் ஆற்றவேண்டிய மேலான உபாசனை என்பது கருத்து.

730. தன் உண்மை சொரூபமான ஆன்மாவை தான் நாடி நிற்பதே, மனோ வாக்குக் காயங்களுக் கெட்டாத மகேசுவரனுக்கு ஆற்றும் பரபக்தி என்று கூறப்படும். ஏனெனில், பக்தன் நாடும் மகேசுவரனும், விசாரி நாடும் ஆன்மாவும் ஒரே வஸ்துவாகும்.

குறிப்பு:— சொரூபம், ஆன்மா, குரு, ஈசன், அருள் முதலியன ஒரு பொருட் பன்மொழியே யாம்.

731. ஞானமார்க்கமும் பக்தி மார்க்கமுமான இவ்விரண்டும் (ஒன்றுக் கொன்று விரோதமில்லாத) உறவு நெறிகளாகவே யறிக. அன்னிய மாகாத இவ்விரண்டினுள் ஒன்றை மற்றொன்றினின்றும் பிரித்து நோக்காமல், ஒன்றாய், சமமாகவே உள்ளத்திற் கொண்டு, கடைப்பிடிப்பாயாக.

**பகவான் (13)**

கடவுள் ஆன்மாவாகவே இருக்கின்றானுகையால் ஆன்மாவை நாடி நிற்கும் செயல் எதுவோ அதுவே (தன்னாட்டமே) பரமேசுவர பக்தியாகும்.

732. 'பக்தி செய்து கடவுளருளை அடைய விரும்பும் நான் யார்?' என்று விசாரித்துப் பார்த்தால், 'நான் ஓர் ஜீவன்'

என்ற உணர்வாகிய அகங்காரம் நசித்து, அதனுல் ஆண்டவனருள் (என்றுமிருப்பது) வெளிப்படும். நிச்சல இறைவனுன அந்த அருள்வெளியில் (அகந்தை) ஆணவம் அழிந்துபோன பிறகு (கன்மம், மாயை எனப்பட்ட) மற்ற எவ்வித மலத் தொடர்பும் இரா.

733. (ஆணவம், கன்மம், மாயை என சித்தாந்த மார்க்கத்திற் கூறப்படும் மும் மலங்களுள்) கன்மம், மாயை எனப்படும் மற்ற இரண்டு மலங்களும் ஆணவம் (அகந்தை) எனப்படும் முதற்பற்ருகிய ஒன்றை ஆதாரமாகக் கொண்டே வளர்வனவாம். மூலப் பற்ருகிய அவ்வாணவ மலம் அழிந்ததேயானுல், மற்ற கன்மம் மாயையாகிய இரண்டு மலங்களும் எவ்விதமும் மிஞ்சி நிற்பதே யில்லை.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் கூறியது: தானல்லாத உடம்பைத் 'தான்' என்று அபிமானிக்கும் மோகமே அகப் பற்று அல்லது முதற்பற்று. அறிவுமயமாய், உண்மையில் அகண்டமாய் நிற்கும் ஆன்மாவை அணுவாய்ச் சுருக்கலால் அம்மோகமே ஆணவம் எனப்பட்டது.

### ருரு. ஏகாக்கிர பக்தித் திறன்

734. (கப்பலின் திசையறி கருவியிலுள்ள) காந்தவூசி ஒன்று வடக்கு நோக்கி மட்டுமே நிற்பது போல, கடவுளின் திருவடிகளையே ஒருமுகப்பட்டு நேசித்து வாழும் மனத்தை (ஏகாக்கிர பக்தியை) யுடைய மக்கள் இவ்வுலக வாழ்வாகிய பாசக் கடலிற் புத்தி மயங்கி வழி தடுமாறிப் போகார்.

735. கடவுளை மனத்தாற் பற்றிக்கொண்டு இவ் வுலகில் வாழும் உத்தம பக்தர்கள், தூண் ஒன்றைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு சுற்றி ஓடிவரும் சிறுவர்களைப் போன்றவர்கள் (அதாவது, கீழே விழுந்துவிடும் பயமற்றவர்கள்). சிறந்த, அசையாத, (கடவுட்) பிடிப்பை யுடைய அவர்கள் ஆணவமற்றிருப்பதால் உலகமாயையில் அகப்பட மாட்டார்கள்.

736. உலக விவகாரங்கள் எல்லாவற்றிலும் எந்த ஒரே பொருள் அவைகளுக்கு ஆதாரமாக விளங்கிக் கொண்டிருக்

கின்றதோ, அந்தச் செம்மையும் மாட்சியுமுடைய பரம் பொருளில் மனம் பதியப்பெற்று நின்ருல், செய்யப்படும் அந்தப் பல்லாயிரக் கணக்கான விவகாரங்களாலும் அவர்கள் மனக் கவலை யடைய மாட்டார்கள்.

விளக்கக் குறிப்பு:— திரைப்படக் காட்சியில் தோன்றும் நீர் நெருப்பு முதலிய எல்லாப் படங்களினூடும் ஆதாரமாகிய திரைச் சீலையே விரவியிருந்தாலும் அப் படங்களாகிய நீர் நெருப்புத் தோற்றங்களால் அத்திரை முறையே நனைக்கவோ எரிக்கவோ படாதது போல என்றறிக.

ஸ்ரீ முருகனுர் கூறியது:—'எவ்விவகாரம்' என்றதில் இலௌகிகம், வைதிகம் என்னும் இருவகை விவகாரங்களும் அடங்கும். அன்னுன் 'சிந்தாகுலம் உருன்' என்றது, அம் மெய்ப்பொருட்கண் மேவிய அவனது சிந்தையினின்றும் கர்த்தத்துவம் அறவே கழிதலால் என்க. அத் தன்மையால் அத்தகையோன் எல்லாம் செய்தும் உண்மையில் ஒன்றும் செய்யாதவன் என்பதாம்.

737. திரிகையி லிடப்பட்ட அரிசித் தொகுதியுள் சுற்று முற்றும் அசைந்து திரியும் அரிசிகள் மட்டும் திரிகையாற் பொடிந்து அரைபட்டு (மாவாக) நசியுமே தவிர, திரிகை அச்சின் அடிப்பாகத்தை விட்டு விலகாத அரிசிகள் திரிகையால் அரைபடுவதில்லை. அதுபோல், உலகிற் பிறந்துள்ள ஜீவகோடி களுள் ஆண்டவன் திருவடி நினைப்பை விட்டு விலகி உலக விஷயங்களில் திரிவோர் மட்டுமே, பிறப்பிறப்பாம் மாயைக்கு இரையாகித் துன்புறுவாரே யன்றி ஈசனடிகளை விட்டு நீங்கா மனமுடையோர் மாயையால் நசுக்கப்படார் என்றறிக.

குறிப்பு:— இச் செய்யுள் உபமானத்தை மட்டுமே கூறி நிற்பது..., உபமேயம் மேற்கண்டவாறு வெளிப்படுத்தித் தரப்பட்டது.

## ௫௬. தியான விசாரத் திறன்

738. தன்னைச் சச்சிதானந்தமாய் விளங்கும் பரப்ரம்மமே என்று மனத்தாற் பாவனை செய்வதே தியானம் எனப்படுவது. (தன்னை இதுகாறும் ஓர் உடம்பாக - ஜீவனுகக் - கருதி வந்த) பொய் மயக்கமாகிய அகந்தை வேரோ டழியும்படி, மனத்தை ஆன்மாவில் இருப்பு மாத்திரமாக நிலைபெறச் செய்வதே விசார மாகும்.

குறிப்பு:— தியானம் என்பது மனத்தின் கற்பனையாகியதோர் தொழில்; விசாரமோ மனத்தின் நாச நிலையாகிய ஒழிவு என்பது கருத்து. இக்கருத்து நான் யார்? என்ற நூலிலும் வந்துள்ளது காண்க.

739. யார் யார் எந்தெந்த விதமாக பாவிக்கின்றார்களோ அவரவர் ஆன்மாவை அவ்வவ் விதமாகவே கண்டடைகின்றனர். ஆனால் அவ்வாறு எந்த விதமாகவும் தியானிக்காமல் யாதோர் பாவனையு மற்றுத் தன்னாட்டத்தாற் சும்மா 'இருக்கிறேன்' என்றபடி, சச்சித் மாத்திரமாய் இருக்கும் சாந்தராகிய பக்குவிகள் சிறந்த நிர்க்குணக் கைவல்ய ஸ்திதியை யடைகின்றனர்.

விளக்கக் குறிப்பு:— நாமரூபத் தியானோபாசனையால் ஆன்மாவின் சகுணஸ்வரூபமே யடையப்படுகின்றது என்பதும், பாவனைகளற்றுச் சன்மாத்திரச் சும்மாவிருப்பால் ஆன்மாவின் நிர்க்குணக் கைவல்ய ஸ்திதியே வாய்க்கின்றது என்பதும் வலியுறுத்தப் படுகின்றது. உள்ளது நாற்பதின் எட்டாவது பாடலின் சரியான பொருள் என்ன வென்பதை இப்பாடலால் அறிந்தமைக.

740. அகங்காரமே வடிவாகிய தன்னை (ஜீவ வியக்தியை) அடியோ டழித்த பிறகே, தனது மூலவஸ்துவான பரமான்ம நிலையை யடைய முடியும். (எனவே விசாரத்தால் தன்னை அழிப்பதை விட்டுவிட்டு) அகந்தை மதியால் 'நான் அந்தப் பிரம்மமே' என்று தியானித்துக்கொண் டிருப்பதால் எப்படி அதை யடைய முடியும்? (முடியா தென்க). ஆகவே விசாரத்தால் 'நான்' என்ற அகந்தை யழியப் பெற்று, சர்வ பாவனையு மற்ற மனோ மௌனத்தில் நிற்பதே சரியான சாதனை யாகும்.

விளக்கக் குறிப்பு:— "அது நீ என்று...." என வரும் உள்ளது நாற்பதின் 32ஆவது பாடலையும் இங்கு வாசித்துணர்க. சென்ற 739-ஆவது பாடலால், பரம்பொருளை நாமரூபமாகத் தியானிப்பது முடிவு நிலையான நிர்க்குணஸ்திதியைத் தராது என்பதை உபதேசித்த பின், இப்பாடலால், இது காறும் மக்கள் நிர்க்குணோபாசனை என்று தவறாகக் கருதி இயற்றி வரும் 'அகம் ப்ரம்மாஸ்மி' போன்ற மகா வாக்கியத் தியான முறைகளும் வெறும் மனக் கற்பனைத் தொழிலேயாகி விடுவதால் அவைகளும் அம் முடிவு நிலையைத் தரா என்றும் உபதேசித்துத் தன்னாட்ட மாகிய விசாரமே முடிவு நிலையைத் தரத்தக்க மோனசாதனம் என்று குறிப்பிடுகின்றார்.

741. அறிவாக விளங்கும் உருவற்ற சிவத்தையும் (பிரம்மத்தையும்), ஐம் பொறிகளால் அறியப்படும் அற்ப விஷயப்

பொருள்களுள் ஒன்றுபோலவே, "அது இப்படிப்பட்டது" என்று சிலர் தியானித்து (இது சிவ தரிசனம் என்று அந் நாம ரூப தரிசனத்தைப் பெற்று, பிறகு அக்காட்சி மறைவதால்) ஏங்கி வருந்தி நிற்பது ஏனென்றால், அதனைக் காண்பானாகிய 'நான் யார்?' என்று தன்னுள்ளே விசாரித்துத் தன்னை (ஆன்மாவை) அறியாத குற்றத்தால்தான் என்க.

குறிப்பு:— இந்நூலின் 1070, 1072, 1073 ஆவது உபதேசங்களும் இங்கு வாசித் துணர வேண்டியன வாகும்.

## ௫எ. சொரூபத் தியானத் திறன்

742. தன்னை (தேகம் முதலிய கோசங்களாகக் கருதுவதை விட்டுக் கேவல) அறிவு மாத்திரமாகக் காண்பவன் ஆன்மாவாம் சிவசொரூபத்தில் ஊன்றி நிலைபெறுவான்.

## ௫அ ஆகாயத் தியானத் திறன்

743. அளவிட்டுக் காணமுடியாத அருமை பொருந்திய அகண்ட ஆகாய வெளியைத் தியானிக்கும் சாதனையானது (காமிய மனத்தால்) அடைய நினைத்திருந்த பெரிய சிறப்புக்கள் அத்தனையையும் நினைத்த வண்ணமே எளிதாகக் கூட்டி வைக்கும்.

விளக்கக் குறிப்பு:— சாதகர் சிலர் காமிய நோக்குடன் — ஆனால் நாமரூப தெய்வங்களை யுபாசிக்காமல்—பரந்த ஆகாச வெளியைத் தமது தியான லக்ஷியமாகக் கொண்டு தியானிப்பதுண்டு. இத்தகைய தியான முறையாலும் காமியங்கள் நிறை வேறுகின்றன எனப்பட்டது.

744. ஆகாயத் தியானம் செய்வோருள், அதன் பிறகு "இத் தியானத்தைப் புரியும் நான் யார்?" என்ற தற்கவனத் தால், முன்னிலை நாட்டமாகிய அவ்வாகாயத் தியானத்தையும் விட்டு அகமுகம் உற்றவர்கள் மட்டுமே பிறவாப் பெரும் பேற்றை எய்துவர். ஆனால் அவ் வன்னிய ஆகாய நாட்டம் கழலப் பெறாதோர் பிறப்பிறப்புச் சுழலிற் சிக்குவர்.

விளக்கக் குறிப்பு:— 'எய்த நினைந்த இரும் பெருமை' என்று சென்ற பாடலிற் குறிப்பிட்டது காமியங்களின் அடைவையே யாகும். இப்

பாடலில் அதற்கு மாருக 'பிறவாப் பெருஞ் சிறப்பு' என்று குறிப்பிட்டது முக்தியை என்று கொள்க.

ஆகாயத் தியான முறையில் தியானிக்கப்படும் பொருள் தெய்வ நாமரூபம் போன்ற தல்ல வாயினும் ஆகாயமும் ஓர் நாமமும் ரூபமுமுள்ளதும், தனக் கன்னியமான, பூதாகாச மாகியதோர் முன்னிலைப் பொருளுமேயாகையால், பிறகு அக் குறிக்கோளையும் விட்டுவிட்டு, 'இவ் வெளியைக் காணும் நான் யார்?' என்னும் வடிவில் தன்னை நாடுவதே (ஆன்ம லக்ஷியமே) பிறப்பிறப்பற்ற உயர் கதியைத் தரும் என்று இப்பாடலில் உபதேசிக்கப்படுகின்றது.

745. அறிவு வடிவான ஆத்ம தேவனை உள்ளத்தில் நாடி, குற்றமற்ற நிஷ்டையடையப் பயிலும் (ஆன்ம விசாரி) ஒருவன் தன் புத்தி கலங்கிப் பித்துப் பிடித்து மயங்கிக் கெட்டான் என்று கூறுவது, அமுதத்தை யுண்டு ஒருவன் செத்தொழிந்தான் என்று கூறுவதைப் போன்றதே எனத் தெரிந்து கொள்க.

விளக்கக் குறிப்பு:— ஆன்ம விசார வழியைக் கடைப்பிடித்து ஒருவன் பைத்தியம் பிடிக்கப் பெற்ருன் என்று உலகோர் கூறுவது பிழை. இந் நெறியில் பைத்தியம் போன்ற மூளைக்கோளாறுகள் ஒருக்காலும் உண்டாகாது என்பதும், அதற்கு மாருக, தெளிந்த திடமான புத்தி வன்மையே அவனிடம் செழித்துக் காணப்படும் என்பதும் உபதேசம்.

இப்பாடலை ஆன்ம விசாரத் திறனிற் சேர்த்து வாசித்துணர்க.

## ரு௬. காலத் தியானத் திறன்

746. இறத்தலும் பிறத்தலுமாகிய கீழ்மை நீங்கி, என்றும் இறவாது வாழும் மேன்மையடைய விரும்புவீ ராயின், சிறிதும் தோற்ற வொடுக்க விகாரமே யில்லாத காலத்தை (அதாவது நிகழ் காலத்தை) விடாது பெரிதும் தியானிப்பதே செய்யத் தக்க சாதனை யாகும்.

விளக்கக் குறிப்பு:— "நிகழ்வினைப் பற்றி இறப்பெதிர்வு நிற்ப; நிகழ் கால் அவையும் நிகழ்வே ; நிகழ் வொன்றே...." என வரும் உள்ளது நாற்பது 15-ஆவது பாடலின்படி ஆராய்வோமாயின், "தோற்ற வொடுக்கத் துளக்கமிலாக் காலமதை..." என்று இப்பாடலிற் கூறப்படுவது நிகழ்காலத்தையே என்பது தெரியவரும். மேலும், முக்காலங்களுள் நிகழ் காலத்தையும் மூவிடங்களுள் தன்மை இடத்தையும் நாடுவதே ஆன்ம சாதனை என்ற உளவையும் நாம் இங்குக் கண்டுணர வேண்டும்.

747. (மேற்கூறியவாறு) நிகழ் காலத் தியான முயற்சியால் காலம் என்பது தானேயாக முடிவதைக் கண்டு அதனுல் காலமும் தனக்கயலான ஓர் இருப்பின்றி மறைய அதனுல் அக் காலத்தியானத்தையும் விட்டு 'நானே இருக்கிறேன்' (காலமோ இடமோ எனக்கயலாக ஏதுமில்லை) என்று காணும் அறிவு விளக்கத்தால் காலாதீதர்களாய், தன் இருப்பு மாத்திர மாய் மிஞ்சி நிற்கும் சத்துக்களே இவ்வுலகில் இறவாமை எய்திய பெரியோர்கள் ஆவர். மற்றவர்களெல்லாம் அந்தக் காலம் என்னும் வாளுக்கு இரையாகி அழிபவரே யாம்.

விளக்கக் குறிப்பு:— நிகழ் காலமும், 'நான்' என்னும் தன்மை இடமும் ஒன்றே என்பது இங்கு குறிப்பாக உணர்த்தப் படுவதை உய்த்துணர்க. மேலும், தன்மை இடத்தையோ நிகழ் காலத்தையோ தியானிக்கப் புகுங்கால் முறையே நான் என்ற அகந்தையும், நிகழ்காலமும் ஒடுங்கி இருப்பற்று, மறைந்து காலதேச மற்ற நம் இருப்புணர்வே (சச்சித்தே) மிஞ்சும் என்பதை இப்பாடலில் "......அந்தக் காட்சியையும் ஏலவே விட்ட இயல்பினராய்..." என்று குறிப்பிட்டார்.

ஸ்ரீ பகவானருளிய உள்ளது நாற்பது 16-ஆவது பாடலின் பாடபேத மாகிய "நாமன்றி நாளேது நாம் நம்மை நாடாது நாமுடலென் றெண்ணில் நமை நாளுண்ணும்...." என்னும் செய்யுளிலும் நம்மை உடலென்று கருதினுல் காலம் நம்மை உண்டுவிடும் என்று எச்சரிப்பது காணக. இக் கருத்தையே இப் பாடலில், "...மற்றெல்லோரும் வீவார் அவ்வாளின் கண் வீழ்ந்து" என்று கூறப்படுகிறது.

748. தன் இருப்புநிலையான மேற்கூறிய சத்பாவத்தைத் திடமாக அடைந்தோர், தம்மைத் தவிர காலம் என்று அன்னிய மாக யாதொரு பொருளையும் காணுர். எனவே அவர்கள் ஏக பரிபூரண (ஒரே) தத்துவமான தன்னை (ஆன்மாவை) இறந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் என மூன்று கால பேதங் களாக உணர்வதே யில்லை.

விளக்கக் குறிப்பு:—

நாமன்றி நாளேது நாடேது நாடுங்கால்
நாமுடம்பேல் நாள்நாட்டுள் நாம்படுவம் — நாமுடம்போ
நாம்இன்றன் றென்றும்ஒன்று நாடிங்கங் கெங்குமொன்றால்
நாம்உண்டு நாள்நாடில் நாம்".

உள்ளது நாற்பது 16, என்ற உபதேசம் இத்துடன் நோக்கி யுணரத் தக்கது.

## ௬0. நிதித்தியாசனத் திறன்

749. ஆராயாத போது இருப்புள்ளது போலத் தோன்றி, விசாரிக்கும் போது இருப்பற்ற தோர் பொய்த் தோற்றமாய்த் தீருகின்ற இவ்வெளி யுலகாதி அண்டங்களை எதிரிட்டு (சுட்டி) நோக்காமல், உள்ளத்திலுள்ள ஆன்மாவை ஒரு முகப்பட்டு நாடி அறிவோ மாயின், மறுபடியும் பிறத்தல் என்பது நினைக்கக் கூட அவசிய மற்றதாகி விடும்.

குறிப்பு:— இப்பாடலின் ஈற்றிரண்டடிகள் திருக்குறளில், துறவற வியலில், மெய்யுணர்தல் என்ற அதிகாரத்தில் வருவன. ஆன்ம சாதனையாகிய விசார நெறிக் கேற்ப இக்குறள் கையாளப்பட்டுள்ள பொருத்தமும் அருமையும் கண்டுணரத் தக்கனவாம்.

இங்கு மூன்று விஷயங்கள் குறிப்பால் உணர்த்தப்படுகின்றன. (1) உலகத்திற்கு உண்மையிருப்பு ஒன்றுமில்லை. அவிசாரத்தால் இருப்புள்ளது போல் தோன்றுகிறது. (2) பிறப்பிறப்புக்கள் வெறும் எண்ணங்களே. (3) ஆன்மாவை அறிந்தால் அதுவே பிறப்பிறப்பைக் கடத்தலாகும்.

750. ஒருவன் எதை இடைவிடாது (உயிருள்ள அளவும்) நினைப்பானோ, அந் நினைப்பின் பயிற்சிவன்மையால் அவன் அதுவாகவே ஆவான். (ஆன்மாவையே தியானிப்பா னுயின் ஒருவன் ஆன்மாவே யாவ) னுகையால், அவன் 'நான் — எனது' என்னும் பற்றுக்களின் தன்மையை விசாரத்தால் நன்குணர்ந்து, அப்பற்றுக்கள் அறுமாறு ஆன்ம நிஷ்டை பயிலுவா னுயின், இறப்பையும் பிறப்பையும் தருகின்ற அஞ்ஞான நோய் அவனை என்றுமே சாராது.

விளக்கக் குறிப்பு:—ஸ்ரீ முருகனுர் கூறியது:— உயிர் உடம்பினின்றும் நீங்குங் காலத்து அதனுல் யாதொன்று பாவிக்கப் பட்டதோ அஃது அதுவாய்த் தோன்றும் என்பது எல்லா ஆகமங்கட்கும் துணிபாதலின், வீடெய்துவார்க்கு, அக்காலத்தில் மறுபிறப்பிற் கேதுவாய் உள்ள பிற பாவனை கெடுதற் பொருட்டுக் கேவல ஆன்மப் பொருளையே சதாகாலமும் பாவித்தல் வேண்டும் என்பது உபதேசிக்கப் பெற்றது. இறப்பு எந்தக் கணமும் நேரலாமாதலின், அதற்கு முன்புள்ள கணமாகிய நம் வாழ்வின் எந்தக்கணமும் ஆன்ம சிந்தனையே நடைபெற வேண்டும் என்பது பகவான் கருத்து.

751. பூரண உபசாந்தியோடு கூடிய தெளிந்த ஞானமே வேதங்கள் அறிவிக்கும் முடிவான தவப் பயனாகும். இதைத் தவிர, தவத்தா லடையப்படும் பயனாக வேறு எவ்வித, அளவற்று நிறைந்த, பாக்கியங்களாக விருந்தாலும், அங்கு சிறிதளவாவது மனச் சஞ்சலம் மிஞ்சியிருக்கக் கூடியதே. அப்படியாயின் தயங்காமல் அவற்றைத் துறந்து விடுக.

752. 'இந்த ஒரு பொருள் இல்லாமல் முடியாது' என்ற எண்ணம் ஒருவனுக்கு இருக்கு மளவும், அவன் அப்பொருளைப் பெற்று அனுபவிப்பானாக. ஆனால் (மனபரிபாகம் முதிர்ந்து) அப்பொருளைப் பற்றி மனம் நொந்து அதை விலக்கிக் கொள்ள எண்ணம் மனத்தில் உதிக்குமாயின் அப்போதே அதை விரைவில் விட்டு நீங்கிவிடுவானாக.

753. (ஆன்ம சொரூபத்தை மறந்து போகும்) பிரமாதத்தால் உண்டாகின்ற மனக் கவலைகள் யாவும் அழிந்த உபசாந்த ஞானத் தெளிவு ஒன்றையே, இறைவனது பெருந் திருவருளை யடைந்ததற்கு அடையாளமாகக் கொள்க. அது ஒன்றைத் தவிர, நல் வழியில் வந்து சேர்ந்து பெருகும் பலவித ஐசுவரியங்களை மட்டும் அடைந்திருப்பதைக் கொண்டு நீ ஈசன் திருவருளை யடைந்து விட்டதாகக் கருதிக் கொள்ளாதே.

விளக்கக் குறிப்பு:— சகல ஐசுவரியங்களும் தனக்கு உண்டாகியிருப்பதால், தனக்கு ஈசனருள் கிடைத்து விட்டதாகப் பாமரர் எண்ணுவர். ஆனால், அருளுக்கு அறிகுறி அதுவல்ல. இவை புண்ணிய பிராரப்தவசமாய் வந்து சேர்வனவே. ஆன்ம சொரூபவுணர்வாகிய உபசாந்த முற்று, மனக்கவலை யற்றிருப்பவனே இறைவனருளை உண்மையாக அடைந்தவ னாவான் என்றறிக. பாடல் 751ல் 'தவப்பயன்' என்று குறிப்பிடப்பட்டதுவே இங்கு இறைவனருள் என்று கூறப்படுவது காண்க.

754. நினைத்தவற்றை நினைத்தபடியே யடையும்படிச் செய்விக்கும் வலிமை பொருந்திய சங்கற்ப சித்தியை அடைவதைவிட மெய்யுணர்வில் (ஆன்ம ஞானத்தில்) நிலை பெறுவதால் யாதொரு நினைவுமே யுண்டாகாத, உள்ளமைதி நிறைந்த (உபசாந்தி) நிலையை யடைவதுதான் சிறந்ததாகும்.

விளக்கக் குறிப்பு:— இச்சிப்ப தெல்லாம் எய்தப் பெறுவதை விட, இச்சையற்றிருப்பதே பூரண வின்பம் என்னுங் கருத்தையே, இங்கு

நினைத்ததை நினைத்தவா றடையும் ஆற்றலைவிட நினையாதிருப்பதே பேராற்றல் என்றவாறு கூறப்பட்டது. ஏனெனில், எவ் விச்சையும் நினைப்பே யாதலின் என்க.

## ௬௧. சாத னந்தரத் திறன்

755. உயிர்கள் நாளை வீணுக்காமல் விசார சாதனையை மேற்கொள்வராயின், தான் எடுத்த பிறவி மிகவும் சிறப்புடைய தாக அமையும். (அதாவது, அவ்வாறு செய்வதால்) 'இழிவான உடலுருவமே நான்' என்றுணரும் அகந்தை ஒய்ந்து, சிறந்த பரமானந்தக் கடல் தம் உள்ளத்திற் பொங்கி யெழும்.

756. பலிதத்தில் மிகச் சிறந்ததான ஆன்ம விசார சாதனையைத் தவிர மன மடங்குவதற்குத் தகுந்த வேறு சாதனங்கள் எதுவுமே யில்லை. மற்ற எந்த சாதனத்தால் அடக்கப்பட்டாலும், மனம் அடங்கியது போல் இருந்து, மீண்டுங் கிளம்பி விடும்.

குறிப்பு:— 'நான் யார்?' என்னும் நூலில் ஸ்ரீ பகவான் அருளும் 'மன மடங்குவதற்கு......கிளம்பி விடும்' என்னும் வசனப் பகுதியின் செய்யுள் வடிவமே இப் பாடல்.

757. பிராணனை அடக்குவதாலும் மனமடங்கும். ஆனல் பிராணன் அடங்கி நிற்கும் வரையிலுமே அம் மனவடக்கமும் இருக்கும்; பிராணன் மீண்டும் கிளம்பினுல் மனமும் அடக்க நிலையை விட்டுக் கிளம்பிப் பூர்வ வாசனைகளின் வசப்பட்டதாய் வெளி விஷயங்களில் அலைந்து திரியும்.

குறிப்பு:— இதுவும் ஸ்ரீ பகவானின் 'நான் யார்?' என்ற நூலின் அருள்வாக்கேயாம்.

## ௬௨. விசார சகாயத் திறன்

758. காண்பானும், காணப்படுபொருளும், காட்சியுமான முப்புடி விகாரமாய் வெளியில் தொழிற்படும் மனத்தின் வியவ காரத்தை யொடுக்குவதற்கு மிகச்சிறந்த மார்க்கம் யாதெனின், அந்த மனம் தன்னைத் தன்னுலேயே பார்க்க முயலும்படிப் பழக்கும் 'தன்னுட்டம்' என்னும் ஆன்ம விசார சாதனம் ஒன்றேதான்.

759. 'நான் இருக்கிறேன்' என்னும் உணர்வொளியாக உள்ளத்தில் (ஆன்மா) சிறந்து விளங்குங் காரணத்தால், உண்மைப் பொருளாகிய அந்த ஸத் வஸ்து தன்னைத் தானே உணரவும் வல்ல சித்தும் (அறிவும்) ஆகின்றது. மறுக்க முடியாத இந்த 'இருக்கிறேன்' என்ற ஆன்ம பிரகாசந்தான் தன் மெய் வடிவை உள்ளபடி இதயத்தில் விசாரித் துணர்வதற் குற்றதுணையாகும்.

பிறிதொரு பொருள்:— உயிருக்கும் உயிராய் விளங்குவதால் ஆன்மாவாம் அவ் வுண்மைப் பொருளே அடையத் தக்க உயர் பொருளாகும். மேலும், தன் நிஜ சொரூபத்தை உள்ளபடி விசாரித் தடைவதற்கு உற்ற துணையாக இருப்பதும் உள்ளத்தில் 'இருக்கிறேன்' என விளங்கும் அவ் வான்ம ஒளியே யாகும்.

760. இரு எண்ணங்களுக் கிடையில் அறிவு வடிவான மனம் எத்தன்மையதா யுள்ளதோ, சுத்தமான அந்தத் தன்மை தான் நமது பரமார்த்த சொரூப நிலை என்று ஆராய்ந் தறிந்து, அவ் வண்ணமாகவே உள்ளத்தில் திடமாய் நிற்பதே உயர்வற உயர்ந்த நிலையாகும்.

761. பெரும் அளவினதாக ஜபத்தையும், பிரியத்தோடு கூடிய மூர்த்தித் தியானத்தையும், மித சாத்வீக ஆகார நியமத்தையும் சாதனையாக மேற்கொண்டு தவறாமல் ஒழுகி வருவதால், பழைய வாசனைகள் தேய்ந்து, மனம் ஒருமுகப்பட்டு, வலிவடையும்.

762. யானை யொன்று தன் கையில் எளிதாக ஓர் இருப்புச் சங்கிலியை ஏந்திச் செல்வதால் (சதா சலித்துக் கொண்டிருக்கும்) அதன் துதிக்கையின் சலனம் நீங்குவது போல, அசுப வாசனைகள் பொருந்திய, பலஹீன, மனத்திற்கு மூர்த்தித் தியானம் நாம ஜபம் இவற்றைப் பழகக் கொடுப்பதால், மயக்கம் நிறைந்த அம் மனத்தின் சலனங்கள் கொஞ்சங் கொஞ்சமாகத் தாமாகவே நீங்கி அமைதி யடையும்.

குறிப்பு:— இச் செய்யுளின் வசனவடிவத்தை 'நான் யார்? என்னும் நூலிற் காண்க.

763. இவ்வாறு உண்முகப்பட்டு ஏகாக்கிர சக்தியைப் பெறும் மனத்திற்குத்தான் விசாரம் நல்ல பலனைத் தரும். மற்ற

மலின மனங்கள் ஞான விசார மாகிய நெருப்பிற் போடப்பட்ட பச்சை (ஈர) மரங்களாகவே யாகும்! (அதாவது, விசாரத் தீ மலின மனத்திற் பற்றுது என்பதாம்).

764. ஆசைகளால் மேன்மேலும் துன்பமே விளைவதை யறிந்து அவ் வாசைகள் அனைத்தையும் விட்டொழித்த மேலோர், தான் மேற்கொள்ளும் ஆன்ம விசார மாகிய நேர்சாதனையால் இதயத்தில் அழிவற்ற ஆத்மப் பேரானந்தச் சுவையை நுகர்வர்.

### சுங. சாதனை யெல்லைத் திறன்

765. திரிபுடி வேற்றுமை அனுபவ மாவதைக் கொண்டு, கற்பனையான மோக வகந்தை (தனக்கு இன்னும்) அழியவில்லை என்பதை யூகித்துக்கொள்ள முடியும். ஆகையால் திரிபுடி பேதத் தோற்றம் இருக்கும் வரையில் சாதனைகள் எப்படியும் அவசியமானதே என்றறிக.

766. பற்றுண்டாக்கும் திரிபுடி பேதங்கள் மற்ற தூல சூக்ஷ்ம தேகங்களினூடே எதுவரையில் தோன்றிக்கொண் டிருக்குமோ அதுவரையில் அஞ்ஞான மயக்க வடிவான காரண சரீரத் தோடுள்ள பந்தம் ஒழியவில்லை என்பதே தீர்ப்பு. ஆகவே அது வரையில் மாயமாம் மறுபிறவியும் நீங்கியதாகாது.

767. விசார சாதனையால் அந்த அகந்தை யழிந்தால், அதன் பிறகு தன்னினும் அன்னியமாக எப்பொருளுங் காணப் படாது. அதற்கு முன், வஞ்சகத் தோற்றமாய்த் தோன்றி அறி பட்ட அன்னியங்கள் (திரிபுடிகள்) இப்போது அத்வைத நூல் களாற் கூறப்பட்ட தன் ஆன்மசொரூப மாகவே அனுபவ மாகும்.

768. மூல வகந்தையழிந்து, ஆன்ம நிஷ்டையில் நின்று உண்மை கண்ட பெரியோர்கள் இவ்வுலகாம் நாமரூபங்களை வெறுங் கற்பனைத் தோற்றமாகவே யுணர்வர். எல்லை யற்ற அவ் வகண்ட ஆத்மாகாசமே தாமாக விருந்து அவர்கள் விளங்கு வதால் இவை யாவும் நாம ரூபமற்ற சின்மாத்திரமான தன் மயமே என்பது அவர்களது தீர்ந்த முடிபாகும்.

## ௬௪. நிட்டை விவேகத் திறன்

769. கேடற்று விளங்கும் ஆன்ம நிஷ்டை யொன்றுதான் அஞத்ம பந்தங்கள் யாவற்றையும் அழிக்கும் வன்மையுடைய தாம். தன் இயல்பான சத்திய ஆன்மாவினின்றும் அசத்திய தேகாதிப் பிரபஞ்சத்தைப் பிரித்துக் காட்டுகின்ற நித்தியா-நித்திய வஸ்து விவேகமோ பரிசுத்த நிராசையை யடைவதற்குத் துணை செய்யும்.

770. விசாரித்தால், இப்போது நீ எதுவென்று (தேகமே நான் என்று) எண்ணி வியவகரிக்கின்றுயோ, அத் தேகம் நீ யல்ல வென்றறிவாய். ஆகவே, இனியாவது 'நீ யார்?' என்று விசாரித்து, இதயத்தில் ஆழ்ந்து மூழ்கி, சாக்ஷாத் அந்தப் பிரம்மமே நீ யாக நிஷ்டையுறுவா யாக.

771. ஏக சத்திய இருப்பாய் மட்டும் மிஞ்சிச் சும்மா விருப்பதைத் தவிர வேறெதிலும் உயிருக்கு நிலைவேறு இல்லவே யில்லை யென்றறிந்து, எப்பொருள் மீதும் மனத்தில் விருப்பும் வெறுப்பும் அடியோ டற்று, அந்தக் கேவல சிற்பரத்திலேயே நீ நிஷ்டை யுறுவா யாக.

772. தெளிந்த ஞானத்தால் அவித்தை அறவே நீங்கி, மன மழிந்து, ஆன்மாவில் ஸ்திரநிஷ்டை பெற்ற மெய்ஞ்ஞானிகள் தமது சித்தம் சிவநிலையில் இரண்டற்று, நித்திய ஸஹஜ சமாதி யுற்று, ஜீவன்முத்தராய் வாழ்ந்திருப்பர்.

## சுரு. சும்மா விருத்தற் றிறன்

773. சிறந்த, பெரிய, சக்தி வாய்ந்த தவமாக நாம் கடைப் பிடிக்க வேண்டியதாக நம் பகவான் ஸ்ரீ ரமணர் உறுதியாக உபதேசிப்பது கீழ்க்கண்ட இவ்வளவு தான்! அதாவது, **சும்மா விருத்தலே!** இதைத் தவிர, புத்தி சாமர்த்தியத்தால் நாம் செய்ய வேண்டியதான (தியான, யோகக்) கடமைகள் யாதென்றுமே யில்லை!

விளக்கக் குறிப்பு:—மனோவாக்குக் காயங்களில் பிரவிருத்தியாகிய கர்மங்களாலேயே பிறவி வருவதால், அவற்றைச் சும்மா விருத்துவதாலேயே பிறவியறும் என்பது கருத்து. "சொன்மான தத்தனுவின் கன்மாதி சிறிதின்றிச் சும்மா வமர்ந்திருக்க அம்மா அகத்திலான்ம ஜோதியே...." எனவரும் ஆன்மவித்தைக் கீர்த்தனச் சரணம் 4ஐ ஒத்து நோக்கவும்.

774. மனோ விருத்திகள் யாவும் ஓய்ந்து, சோம்பி, 'இருக் கிறேன்' என்னும் பிரஜ்ஞை மாத்திரமாய்ச் சும்மாவிருக்கும் ஆன்ம சொரூப நிலையே, அந்த மகோன்னத ஸ்திதி தானே யாகி நிற்கும் பெருநிலையாகும். சிறந்த, பெரிய, அரிய தவத்தா லன்றி யாராலும் அடைய முடியாத (மனோ நாசமாம்) அச் **சோம்பல் போன்ற** நிலையை அடைந்தவர்கள் பெரும் புண்ணியவான்கள் என்று போற்றுக.

விளக்கக் குறிப்பு:— மேற்கூறிய இரு பாடல்களாலும் சும்மா விருப்பதே உயர்வற வுயர்ந்த பரநிலை என்று உபதேசிக்கப் படுகின்றது. இதைச் சோம்பல் நிலை என்றோ பயனற்ற வெறு நிலை (Static) என்றோ இகழ்ந்து கூறும் கொள்கையினரை எள்ளாமல் எள்ளும் முறையால், 'அச் சோம்பல் பொருந்தினோர் புண்ணியர்; அவரைப் போற்றுக' என்று நகைச் சுவையோடு அறிவுறுத்துகின்றார்.

## சுசு. வியட்டி யகத் திறன்

775. 'நான் நானே' என்னும் மெய்ஞ்ஞானனுபவம் இல்லாமல் எவனொருவன் தான் இன்னான் (நான் இவன், இது,

அது) என்று மாமிசப் பிண்டமாம் சரீரத்தையே தானுக அபிமானித்து நடப்பானே, அவன் கனவைப் போன்ற மோக விருளில் அகப்பட்டு, மூழ்கி, சரீர அழிவால் தானும் அழிவ தாகவே யுணர்ந்து வீணே துன்பம் அடைவான்.

விளக்கக் குறிப்பு:— 'நான் இவ்வுடல்; நான் இன்னுர்' என்ற உணர்வு சரியான, மெய்யான, தன்னறிவு (ஆன்ம ஞானம்) அல்ல; அது அகந்தை யறிவே. அவ்விதச் சுட்டொன்றும் இல்லாமல் 'நான் நானே' என்று தன்னை யுணர்வதே மெய்ஞ்ஞானம். 'மோசே' என்ற கிருஸ்துவ முனிவர் பண்டை நாளில் இறைவனின் ஓர் ஒளி வடிவைக் கண்டு, 'நீங்கள் யார்?' என்று வினவிய போது, அவ் வொளி, 'நான் நானே— I am that I am'—என்று கூறி விளக்கிய விபரம் கிறிஸ்துவ மதநூலான 'பழைய ஏற்பாட்'டில், தடித்த எழுத்துக்களிற் கொடுக்கப்பட் டுள்ளதை ஸ்ரீ பகவான் ஒரு முறை சுட்டிக் காட்டியது இதை விளக்குவதே யாம்.

776. குற்றமற்ற மெய்ஞ்ஞானப் பரம்பொருளோ ஏகமாய், பூரணமாய், முதற் பொருளாய் விளங்கிக்கொண்டிருக்கிற படியால், 'அது இப்படிப்பட்டது' என்று நினைக்கக் கூட முடியாத அந்தப் பரம்பொருளுக்கு அன்னியமாக, தான் ஒருவன் அதைத் தொழுவதற்காகவுங்கூட, ஓர் தனிப்பட்ட ஜீவனுகிப் பிரிந்து நிற்பது பெருங் குற்றமாகும்!

விளக்கக் குறிப்பு:— ஐக்கியமே அன்பின் பரிபூரண நிலை; பிரிவு அன்பின் குறைபாட்டையே காட்டுவது. எனில், இறைவனினின்றும் வேருகத் தன்னைப் பிரித்துணர்ந்து, அதன்பின் அவனை எவ்வளவு தொழுதாலும் அவ்வழிபா டெல்லாம் அவனிடம் நமக்குள்ள அன்பின் குறைவையே காட்டுகின்ற தாகலின், தனக்கோர் தனியிருப்பை யிழந்து ஆண்டவனில் ஒன்றுவதே உண்மை யன்பின் தன்மை என்று உபதேசிக்கப் படுகிறது.

777. அகண்டமான ஞான வெளியாம் பரம் பொருளுக்கு வேருகத் துள்ளி யெழுந்து, அலையும் 'நான் இது' என்ற ஓர் ஜீவ வியக்தியாகக் கிளம்புவதானது தலைசிறந்த அறமான அத்துவிதப் பிரம்மத்தைப் பிளந்து, பாழாகும்படி அதை 'நான்' (அகந்தை அல்லது ஜீவன்) என்றும் 'தான்' (ஆன்மா அல்லது இறைவன்) என்றும் இரு கூருக வெட்டிக்கொல்லும் பெரும்பாவச் செயலாகும் என்றறிக.

விளக்கக் குறிப்பு:— அகண்டமாய், ஏகமா யுள்ள பிரம்மத்தை இறைவன்-உயிர் என்று இரு கூருகப் பகுப்பது அப் பிரம்மத்தையே இரண்டாய்ச் சேதிக்கும் 'பிரம்மஹத்தி தோஷமே' யாகும் எனக் கூறப்பட்டது.

778. உண்டாகும்வெறும் நினைப்பு மாத்திரத்தால் பரம் பொருளுக்கு வேறாக ஒரு மனவுலகத்தைச் சிருஷ்டித்துக் கொண்டு, அதில் தான் ஒருவன் ஒரு தனி ஜீவனாக இருப்பதாகக் கருதுவது வெறும் பிரமையே தவிர, உண்மையில் அன்னிய அறிவறியாமையும் சித்தச் சலனமு மற்று, ஏகமாய் விளங்கும் சத்திய ஆன்மவுலகத்தில், அந் நிச்சல ஏக வியற்கைக்கு மாறாக (சலனமும் நானாவுமாகி) ஓர் ஆட்சி புரிவது எப்படி முடியும்?

விளக்கக் குறிப்பு:— அன்னியப் பொருள் ஒன்றுமில்லாததால் அறிவறியாமை யற்றும், அகண்ட மானதால் சலன மற்றும் இருந்து விளங்கும் ஆன்மநிலை யொன்றே சத்தியமா யுள்ளது. அதற்குமாறான சுபாவமாகிய பலவாதல், சலனமுறல், அறிவறியாமை இவைகளை யுடையதோர் உலகமாகவும், அதில் தான் ஓர் ஜீவனாகவும் இருப்பதுபோற் காணப்படுவது வெறும் மனோபிரமையே தவிர உண்மை யல்ல. அஜாத, ஏகாத்ம சொரூபமே சத்தியம் என்பது உபதேசம்.

779. மெய்ப்பொருளை விட்டுத் தானொருவன் தனியிருப் புள்ளவனாகத் தோன்றும் பொய் எண்ணமே பந்தத்தின் இயல்பு; (வேறல்ல). உண்மைப் பொருளைவிட்டுத் தானொருவன் தனியாக இருப்பது நிச்சயமாய் முடியவே முடியாதாகையால், (நீ பந்தத்தை அகற்ற விருப்ப முள்ளவனாயின்) 'தான் ஒரு தனி ஜீவன்' என்ற எண்ணம் எழுங்கால் உடனே அதனை (விசாரத் தால்) அகற்றி விடுக.

விளக்கக் குறிப்பு:— அகண்டமான இந்து மகா சமுத்திரத்தில் மானசிகமாக ஒரு எல்லைக் கோட்டைக் கற்பித்துக் கொள்வதால் 'இது வங்காளக் குடாக்கடல்' என்று ஒரு தனிப்பகுதி நிர்ணயிக்கப்படுகின்ற தல்லவா? இக் கோடு ஓர் கற்பனை எண்ணமே. உண்மையில் சமுத்திரம் பிரிந்து விடவில்லை. இவ்வெண்ணத்தால் வரையறுக்கப் பட்ட (பந்தப்படுத்தப்பட்ட) ஒரு கற்பனையுருவமே அக் கடலாகிறது. அது போல, அகண்டமாய் விளங்கும் 'நான்' என்னும் இருப்புணர்வை (சத் சித்தை) இவ்வுடலளவே நான்' என்று எண்ணுவதால் தான், அகண்ட ஆன்மாவினும் வேறான, எல்லைக்குட் பட்ட, பந்தப்பட்ட, 'நான் ஒரு தனித்த ஜீவன்' என்னும் உணர்வு உண்டாகின்றது. இப் பந்தம் கற்பனையான ஓர் எண்ணமேயன்றோ? எனவே 'நான் உடல்' என்னும் முதல் எண்ணத்தை நீக்குவதே பந்த நிவருத்தியாவதால், அவ்வெண்ணம் எழும்போதெல்லாம் விசாரத்தால் அதை விலக்குக எனப்பட்டது.

780. தன் நிலையில் (ஆன்மவுணர்வில்) இருப்பதை விட்டு எந்த எண்ணமும் ஒருவன் கொள்ள வேண்டாம். ஒரு முறை தவறி எண்ணுவானாயின், அதற்காகப் பிறகு வருந்தும் அவன் மேலும் மற்றொரு முறை அப் பேதைமைக்கு இடங் கொடாமலாவது இருக்கட்டும். இதோ வள்ளுவர் கூறுவதும் அதுவே! "அந்தோ, என்ன செய்து விட்டோம்! என்று ஒருவன் பிறகு கழிவிரக்கங் கொண்டு வருந்தத் தக்க காரியங்களை முன்னமே செய்யாம லொழியக் கடவன். தவறிச் செய்து விட்டானாகில் மீண்டுமாவது அப்படிப்பட்ட காரியங்களைச் செய்யாமலிருப்பது நல்ல தாகும்" என்பதாம்.

விளக்கக் குறிப்பு:— இங்கு வள்ளுவர் கூறியதோ மனிதன் (ஜீவன்) செய்யுங் கர்மங்களில் தீயவற்றை ஒரு முறைக்குமேல் தவறிச் செய்யாம லிருக்கட்டும் என்பதாம். ஆனால் ஸ்ரீ பகவான் உபதேசிப்பதோ, 'நான் மனிதன்' என்ற எழுச்சியே பெருந்தீய காரியம் என்பதால், அவ் வெழுச்சிக்குப் பின் செய்யும் ஏனைய தீய காரியங்களுக்கு நிவிருத்தி கூறுவதைவிட, அதற்கு முன் அவன் செய்த, தனி (வியத்தித்துவ) எழுச்சியாகிய, முதல் தவற்றையே ஒரு முறைக்கு மேல் செய்யாதே என்று வற்புறுத்தி, மூலத்திலேயே விஷத்தை நீக்கிவிடுவதாம். இச் செய்யுளின் பின் னிரண் டடிகள் குறள் எண் 655 ஆகும்.

781. ஆத்ம ஸ்திதியாகிய யோகானந்தத்தை 'நான் என்று அடைவேன்' என்று ஏங்க வேண்டாம். ஏனெனில், என்றும் ஏகமாய் விளங்கும் சத்திய ஞானாத்ம ஸ்திதியோ எவ்விதக் காலக் கட்டுப்பாடோ, தூரம் அல்லது சமீபம் என்ற எவ்விதத் தேசக் கட்டுப்பாடோ இல்லாமல் (இங்கேயே, இப்போதே) விளங்கிக் கொண்டிருப்பதாம்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— ஆன்ம சொரூபமே இறைவனாதலால் ஆன்ம நிஷ்டையே பரயோகமாகும். திருவருட் பேறாம் சிதானந்தம் விரும்பி மற்றனைத்தும் மறந்தொழிந்தார்க்கு, ஏக்க வடிவாகின்ற அவ் வெண்ணமே அதன் பேற்றுக்குப் பெருந்தடை யாகி விடுகின்றது. இறப்பு எதிர்வு முதலாம் கால வேறு பாடுகளும், சேய்மை அண்மை முதலாம் தேயப் பாகுபாடுகளும், கற்பனையாம் மனவுலகின்கண் ணன்றி உண்மையாம் ஆன்ம உலகின்கண் ஒன்றுமே யின்று. ஆதலால் 'என்று நான் ஆன்மாவில் ஒன்றுவேன்?' என்று ஏங்கற்க என்றார். அவ்வேக்கத்தில் வாளா கழிக்கும் நேரத்தை ஆன்ம நாட்டத்திற் கழித்தல் நலமாம்.

'என்றும் ஒன்றும்' என்ற சொற்றொடருக்கு, 'என்றுமே ஒன்றி இருப்பதாகும்—யோகம் உற்றதாகும்' என்றும் பொருள் கொள்ளலாம். உள்ளது நாற்பதின் 15, 16வது பாடல்களையும் இங்கு நோக்குக.

## கூஎ. மூல முனைவுத் திறன்

782. ஜீவர்கள் (அகந்தை) தாம் உற்பவித்த மூல இடம் (ஆன்மா) எது வென்று விசாரித்து, அறிந்து, தன் பிறப்பிடத்தை (இதயமாம் ஆன்மாவை) அடைவதுதான் அந்த ஜீவர்கள் புகுந்த விடத்தில் (தேகமே நான் என்று அபிமானித் துழன்ற ஜீவத்துவ நிலையில்) மட்டுமே இருப்பதும் தாம் பிறந்த விடத்தில் (ஆன்ம நிலையில்) இல்லாததுமான சகலவித தீமைகளையும் ஒழிக்கத் தகுந்த சாதனைகள் யாவற்றுள்ளும் தலை சிறந்த தாகும்.

விளக்கக் குறிப்பு:— ஆன்ம நிலையே பிறந்தவிடம் என்பதும், ஜீவத்துவமே—உடலுலகங்களாய் உருப்பட்டுத் தோன்றும் மனமே—புகுந்தவிடம் என்பதும், ஆன்ம நிலையில் யாதோர் தீமையும் இல்லை யென்பதும், ஜீவத்துவத்தில் தான் ஜனனமரணாதி சகல துன்பங்களும் குற்றங்களும் உள்ளன என்பதும், அக்குற்றங்களை நீக்குவதில் மூலான்வேஷணமான ஆன்ம விசாரத்தைத் தவிர மற்ற சாதனங்கள் சிறந்தவை யல்ல வென்பதும், இச்செய்யுள் மூலம் முக்கியமா யறிய வேண்டியனவாம்.

பெண்ணொருத்திக்குப் புக்ககத்தில்தான் போகாதி பாக்கிய முண்டாதலின் ''பிறந்த வகம் விட்டுப் புக்ககத்திற்குப் போ'' என்று அறிவுறுத்தும் உலக வழக்கிற்கு மாறாக ஆன்ம வழக்கில் ''புக்ககத்தில் தான் துயரமுண்டு; அவை நீங்க பிறந்த வகத்திற்குப் போ'' என்று அறிவுறுத்தும் விநயம், இச்செய்யுளிற் காண்க.

783. உன் சொந்த உரிமையான மோக்ஷத்தின் தன்மையே சுகநிலைதான் என்று அறிந்து கொள்ளாமல், சுகத்தை வெளியில் தேடி யலைந்து வருந்தும் அற்ப புத்தியே (மனிதனே), நீ எவ்வாறு (புற முக எழுச்சி யுற்று இவ்வித ஓர் ஜீவனாய்) வந்தாயோ, அதே வழியில் (உண்முகத்தில்) திரும்பிப் போவா யாகில், அழிவற்ற பேரின்ப வீட்டை யடைவாய்.

விளக்கக் குறிப்பு:— நம் ஆன்ம நிலையே பேரின்பமாகிய வீடு; அது நம் சொந்த சொரூபமே யாகையால் எப்போதும் நமக்கு உரிமையானது என்றறிய வேண்டும். சுக சொரூபமாகிய நம்மை விட்டு, நாட்டத்தை

வெளிமுகப்படுத்துவதால் சுகமற்றவன் போல் துடிக்கின்றோம். எனவே, சுகம் வேண்டுமெனில் எந்த வழியாக நாம் புறமுகப்படுகிறோமோ அந்த வழியாகவே திரும்பித் தன்னை நாடுவதே இழந்த சுகநிலையை எய்துவிக்கும் சாதனமாகும் என்று உபதேசிக்கப்படுகின்றது.

784. அனைத்திற்கும் நடுப்பொருளாக விளங்கும் இதயத்தில் நிலைபெறும் வரையில் (பற்பலவாக விரியும்) பஞ்சேந்திரிய அறிவு கொஞ்சமும் அடங்காது. மயக்கந் தரும் (அஞ்ஞானமாகிய) பஞ்சேந்திரிய அறிவு முழுவதும் அழியும் வரை மெய்ஞ் ஞானமாம் பேரின்பப் பேறும் கிட்டாது.

விளக்கக் குறிப்பு:— பாடல் 604ன் விளக்கத்தை இங்கு மீண்டுங் காண்க. அஞ்ஞான நீக்கமும் ஞான விளைவும் இருவேறாகாத ஒரே செயலேயாகும். இதை இரு காரியங்களாகக் கருதி, எது முதலில் நடைபெறுவது எனக் கலங்க வேண்டாம். அகந்தை நாசமாகிய தன்னிழப்பை இச்சிப்பது ஜீவனது சுதந்திரத்தின் உட்பட்டதே. எனவே, மனம் புறப்பட விரும்பாமை உள்ளத்தில் உதித்தாற் போதும்; திருவருளால் அது முற்று விக்கப் பெறும் என்று திண்ண முறுக.

785. ஏ மனமே, காணப்படும் கற்பிதப் பிரபஞ்ச வெளிப் பொருள்களை ஏறிட்டுப் பார்த்து (அதனால் விளையும் விருப்பு வெறுப்பாதிகளால்) நீ கலங்குவதை விட்டு, நீ எங்கிருந்து கிளம்பினையோ அந்த மூலஸ்தானத்தை (ஆன்மாவை) நாடி இதயத்தை அடைக. அப்போது அந்த ஞானமயப் பரநிலையில் (இதற்கு முன் கற்பனையில் முன்னிலையாகக் கண்ட) பிரபஞ்சாதி சகல பேதப் பொருள்களும் ஏக அத்துவிதமான உன் நிஜ சொரூபமாகவே விளங்கும்.

## ௬அ. சாதகர் நடைத் திறன்

786. ('தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்' என்ற குறள் வாக்கின் படி) தாம் செய்யத் தக்க தலைசிறந்த கருமமாகிய ஆன்ம நிஷ்டையில் ஈடுபடும் தீவிர சாதகர்களுக்கு, பரிசுத்த, அவ் வத்துவித ஆன்ம நிஷ்டையினின்றும் பிரமாதத்தாற் சோர்வுற்றுச் சிறிது நழுவுவதுங் கூட ஓர் பெருங் குற்றமாகும் என்று ஆன்றோர்கள் கூறுவரென்றால், அன்னியர் காரியத்தில் ஓர் சாதகன் தலையிடக் கிளம்புவது, ஆராயுமிடத்து கொஞ்சமேனும் தகுமா? (தகாது என்பது கருத்து).

விளக்கக் குறிப்பு:— தன்னை (ஆன்மாவை) நாடி நிற்றலே தவஞ் செய்வாரது தர்மம் (கடமை). அதினின்றும் நழுவுதலே தர்மந் தவறுதல் அல்லது கடமை தவிர்தல் ஆகும். பிறகு அன்னியத்தை நாடும் செயல் அதர்மம் (பாபம்) ஆகும். எனில் அன்னியர் காரியத்தில் ஆர்வமோடு ஈடுபடுவது இன்னும் எவ்வளவு கொடியது என்பதை விளக்கவே, 'தலையிடுதல் ஒன்றுமோ?' என்ற வினாவால் இச்செய்யுளை முடிக்கின்றார்.

787. பிறரிடம் குற்றம் என்று எதையும் பாராமல் குணமாக உள்ளவற்றையே ஆராய்ந்து ஒருவன் எப்பொழுதுங் காணக் கூடுமானால், அவனது உயிர் வாழ்க்கை அவனால் வெறுக்கத் தக்கதாய் ஆவதற் கிடமின்றி, எப்போதும் மனோகர மாகவே கழியும் என் றறிக.

788. தான்முயன்று திருத்தத் தகுந்தது (வேண்டியது) தன் சித்தமேதான் (பிறரையல்ல) என்னும் அறிவுரையை ஒருவன் கடைப்பிடித்தாலன்றி, அவன் மனம் எப்போதும் பிறருடைய குற்றங்களையே கவனித்துக் கொண்டிருப்பதால் மேன்மேலும் அசுத்தமடையும்.

789. ஏ நெஞ்சமே, ஞானிகளாகிய பெரியோர்கள் உன் மேல் அன்பு காட்டுவது நீ அகங்கார மற்று, சர்க்கரை போன்ற மிக வினிய நற்குணங்க ளமையப் பெற்று விட்டாய் என்றல்ல. பின் ஏனெனில், அளவற்றதாய்க் குவிந்துள்ள உன் குற்றங்களை யெல்லாம் அவ் வுத்தமர்கள் பொருட்படுத்தாமல் உன்னை மன்னித் தருளும் சிறப்பினால்தான் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— 'உயர்ந்த குணசாலிக ளாகிவிட்டோம்; அதனால்தான் பெரியோர்கள் நம்மேல் அன்பு கொண்டவர்களா யிருக்கின்றனர்' என்று நம்மை நாமே உயர்த்தி மதிப்பிட்டுக் கொள்ளக் கூடாது. நமது துர்க்குணங்களை யெல்லாம் பாராது, நம்மை யவர்கள் மன்னிப்பதால்தான் நம்மீது அப் பெரியோர்கள் அன்புடையவர்க ளாகின்றனர். ஆதலால், அது போன்றே நாமும் பிறரது குற்றங்களைப் பாராட்டாத இனிய குண முடையவர்களாக வேண்டும் என்பது கருத்து.

790. தவறுதல் மனித சுபாவமே யாயினும், உள்ளத்தில் நல்லொழுக்க வலிமையை வளர்த்துக்கொள்ளும் நல்ல சாதகர் கள் (தவறு செய்ய நேர்ந்த போது) மானத்தாற் கருவங்

கொண்டு அக்குற்றத்தை மறைக்காமல், ஒத்துக்கொண்டு, திருந்தி, மீண்டும் நல்லொழுக்க வழிக்கே நடக்க முயல்வது தான் செய்யத் தக்கதாம்.

791. (நன்மை தருவன வென்று) தொகுக்கப்பட்ட நியமங்கள் பலவும் ஆன்மசாதகன் ஒருவனுக்கு நெடுந் தூரம் உதவி புரிவனவே யாகையால், அவைகள் அவனுல் ஏற்று அனுஷ்டிக்கப்பட தக்கனவே. ஆனுல் மிகச் சிறந்த மெய்ஞ் ஞான ஆன்ம விசார சாதனையில் அவன் புகும் போது அந்த நியம அனுஷ்டானங்கள் அவனது முன்னேற்றத்தைத் தடுக்கக் கூடியனவா யிருப்பதை அவன் உணர்ந்தால், அதன்பின் அவற்றைத் தன் சாதனைக்குத் தடைகளே என்று அறிந்து, தீரத்துடன் விட்டு விடுவானுக.

*விளக்கக் குறிப்பு:— சகல நியமங்களும் சத்துவகுணத்தை மனத்தில் மேலோங்கச் செய்வதற்கே விதிக்கப்பட்டுள்ளன. ஞான விசார மொன்றே மெய்ச் சாதனை என்ற அறிவை சத்துவகுண முதிர்வு ஒன்றினுல் மட்டுமே ஒருவன் அடைய முடியுமாகையால், அதுவரை நியமங்கள் துணை புரிவனவாம். பிறகு சாதகன் ஆன்ம விசாரத்தில் ஈடுபட ஆரம்பித்ததும், எவ்வெப்போது எந்தெந்த நியமங்கள் விசாரத்திற்குப் பிரதிபந்தமாய் நிற்கின்றனவோ அவை யவைகளை அவ்வப்போதே விட்டுவிடவேண்டும். நியமங்களை அனுஷ்டிக்க 'நான்' என்ற அகங்கார விருத்தியொன்று எழ வேண்டியது அவசியமாவதாலும், விசார சாதனைக்கோ இந்த 'நான்' எழ இடந்தரவே கூடாதாகையாலும், நியமங்கள் பழுத்த இலைகள் போலத் தாமே அவனிடமிருந்து உதிர்ந்து விடுவனவாம்.*

792. தான் விரும்பியவை விரும்பியவாறே கிட்டுமானுல் அது தான் செய்த தவத்தின் சக்தியால்தான் கிட்டியது என் றெண்ணுதே. இறைவனது திருவருளால் தான் (அவை அவ்வாறு கிட்டின) என்றறிந்து மேன் மேலுங் கடவுளது திருவடிகளையே புகலாக ஏற்றுப் பக்தி செய்வாயாக.

793. கடவுளது அருள் திட்டப்படியே (உன் பிரபஞ்ச வாழ்வில்) நடப்பன யாவும் நடக்கட்டும் என்று விட்டுவிடுக. அதற்கு மாருக மீறி எதையும் செய்ய நீ சிறிதும் முனையாதே. ஏதொன்றையும் நீ முதலிற் செய்ய ஆரம்பித்துக் கிளம்பாமல், உள்ளத்தில் உபசாந்தமாக வீற்றிருக்கும் சாக்ஷிசொரூபமாகிய ஆன்மாவில் ஒடுங்கி, ஒன்ருகி யிருப்பாயாக.

794. ஒருவனது சாதனை முயற்சிகளில் தோல்வி உண்டாக்கப்படுவதின் பொருள் என்ன வெனில், இறைவன் அல்லது சற்குருவின் திருவருளாலன்றித் தன் முயற்சியால் மட்டும் ஆன்ம சித்தி கிடைத்து விடாது என்பதை அவனுக் கறிவுறுத்தி, அதன் மூலம் சற்குரு புரியும் திருவருளை நாடி நிற்குமாறு அவன் மனத்தைத் தயார் செய்வதே யாகும்.

விளக்கக் குறிப்பு:—அகங்கார நாசமே சர்வ சாதனைகளின் நோக்கமு மாகையால், சாதகன் ஒருவனது முயற்சியில் வெற்றிபோல் தோன்றுமாயின், 'நான் தவம் செய்து வெற்றி பெற்றேன்' என்ற வடிவிலாவது அவ் வகங்காரம் மீண்டும் துளிர்த்து மிக வலிவுடன் கிளம்பிவிட இடமேற்பட்டு விடு மன்றோ? அவ்வா றுகாதபடி தடுக்கும் இறைவனது கருணையினாலேயே அவனது நன் முயற்சிகளிலுங் கூடப் பல முறை தோல்வி யுண்டுபண்ணப் படுகின்றது என்று அறிவுறுத்துகின்றார்.

795. அத்திரிமா முனிவரின் புதல்வரான தத்தாத்திரே யரைப் போல உலகப் பொருள்கள் ஒவ்வொன்றினிடத் திருந்தும் ஒவ்வோர் நற்பண்பைக் கற்றுக் கொள்ளக் கூடிய நன் மக்களுக்கு, அவர்களது புத்தி வக்கிரம் (கோணல்) அற்றுச் சுத்தமாகவும் நேராகவும் இருக்குங் காரணத்தால், இவ் வுலகில் தாம் அடைந்துள்ள வாணாள் முழுவதுமே குருகுல வாச மாகவே அமையும் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ தத்தாத்திரேயர் இப் பிரபஞ்சத்தில் இருபத்து நான்கு பொருள்களிடமிருந்து இருபத்து நான்கு வித உண்மைகளை அறிந்து கொண்டதாய் பாகவதத்திற் கூறப்படுகின்றது. அவைகளாவன:

வானுலவு சுடரிரண்டும் பூதமைந்தும்
மலையரவுங் கடல்குளவி மானும் யானை
தேனெடுப்போன் வேசிபுறு சிறுகுழந்தை
சிலந்திகன்னி கொல்லனுடன் தேனீயொன்றும்
மீனென்றுங் கழுகுவிட்டில் விடஞ்சேர் நாகம்
எனுமிந்த நாலாறு விதக்குருக்கள்
ஞானியவ தூதத் தாத்திரேயர்
ஞாலமிசை நயந்ததாய் நவிலும்நூலே.*

*நூல் = பாகவதம்

இவை ஒவ்வொன்றினிடமிருந்தும் ஒவ்வோர் நற்பண்பை தத்தாத்திரேயர் கற்றுக்கொண்டது போலவே, நாமும் பிரபஞ்சப்

பொருள்கள் ஒவ்வொன்றினிடமும் ஒவ்வொரு நற்பண்பையே கண்டுகொள்ள இயலுமெனில் அப்போது இவ்வுலக அரங்கு முழுவதுமே நமது குருகுலமாகவும், நம் வாணுள் முழுவதுமே குருகுல வாசமாகவும் ஆகிவிடும்.

## கூகூ. அமைதித் திறன்

796. அமைதிக்கு (சாந்திக்கு) மேல் அடையத் தக்க உயர் நிலை ஒன்றுமில்லை. அமைதியில் நிலைத்து நிற்பதைவிட அதிக ஊக்கமான செயல் வேறொன்று மில்லை. அமைதியா யிருப்பதை விடச் சிறந்த தவமும் யாதொன்று மில்லை. அமைதியைவிடச் சிறந்த அமர வாழ்வும் எதுவு மில்லை.

விளக்கக் குறிப்பு: ஸ்ரீ முருகனுர் கூறியது:—இங்கு அமைதி என்றது மனத்தின் நிச்சலத் தன்மையை. அஃது இடையருத விசாரத் தால் அமைவது. உண்மையில் தள்ளவுங் கொள்ளவும் எதுவு மின்மையின், இதை யறிந்த மனம் சலன மொழிந்து பரம சாந்தியுடன் விளங்கும். அதுவே சகஜ நிலையின் வித்தாகலின் 'அமர வாழ்வு' எனச் சிறப்பித்தார்.

797. மனத்தின் பரபரப்பே துன்பந்தரும் பகையாகும். அதுவே பழிபாவங்களை யெல்லாம் உண்டாக்குவதாம். அப் பரபரப்பே மதுபானம் செய்ததற்குச் சமான மாகும். அதுவே ஒருவனை அறிவொளியற்ற அஞ்ஞானப் படுகுழியில் தள்ளுவது மாகும்.

விளக்கக் குறிப்பு: ஸ்ரீ முருகனுர் கூறியது:—அதி சூக்குமமான நினைவின் வேகமே துயராதலின், அப் பரபரப்பையே மதுபான மாகவும் பழிபகையாகவுங் கூறினுர். உண்மையில், காமம், குரோதம், மத மென்ற உட்பகையாவும் நினைவின் சலனமே யாதலின், அச் சலனம் ஒழிந்தோன் அன்றே எல்லாவிதப் பகை, பழிபாவம், இடர், அறியாமைப்படுகுழி யாவினின்றும் நீங்கப் பெற்றோனுவான் என்றவாறு.

## எ0. சீடாசாரத் திறன்

798. (சற்குருவால் தனது சகல பொறுப்புக்களும் ஏற்றுக் கொள்ளப்பட்ட) சீடனே தான் என்றாலும், தன்னை அவ்வாறு ஆட்கொண்ட அவ்வியாஜ கருணை என்னும் குணக் குன்றாக விளங்கும் சற்குரு, அவரது நித்தியானுபூதியால் அருளிய நல்லுப தேச நெறியினின்றுங் கனவிலும் நழுவாது ஊன்றி நிற்க வேண்டியது சீடனின் கடமை யாகும்.

விளக்கக் குறிப்பு:—ஸ்ரீ பகவானருளிய 'நானார்' என்ற நூலில் "புலி வாயிற் பட்டது எவ்வாறு திரும்பாதோ, அவ்வாறே குருவின் அருட்பார்வையிற் பட்டவர்கள் அவரால் ரக்ஷிக்கப் படுவரே யன்றி ஒருக்காலுங் கைவிடப்படார்; **எனினும்** குரு காட்டிய வழிப்படி தவறாது நடக்கவேண்டும்" என்ற அருள் வசனத்தில் வரும் "எனினும்" என்ற பதமே இங்கு "என்றாலும்" எனப்பட்டது.

799. மோக்ஷ வழிநாடி உறுதியுடன் முன்னேறும் சீடர்கள் மறதியினாலோ, அல்லது வறுமை, நோய் முதலிய வேறு எக்காரணங்களினாலுமோ,—வேத நெறியைப் பின்பற்றி நடப்பதினின்றும் நழுவ நேர்ந்தாலுங்கூட—தன் சற்குருவின் உபதேசங்களை மீறி நடப்பது கூடவே கூடாது.

விளக்கக் குறிப்பு:—வேதங்களை யருளியதும் பரமேசுவரனே யாயினும், அதன் வழியே பல பிறவிகளிலும் ஒழுகிப் பக்குவ முற்றிருக்கும் உத்தம உயிர்களுக்கு அதினினு முயர்ந்த, பேரின்ப வடிவான பரம்பொருளாம் தன்னை அத்துவிதானுபவத்தால் எய்துவிப்பதற்காக, அப்பரமேசுவரனே அருட்பெருங்கருணையால் குருவாகி வந்து ஆன்ம விசார நெறியைக்காட்டி யுபதேசித்தருளும்போது, அச் சற்குருவின் வாக்கே சதுர்மறை வாக்கினும் உயர்ந்ததாகச் சீடராற் கொள்ளப்படவேண்டிய தாதலின், ஆன்ம விசாரத்திற்குப் பிரதி கூலமாயின் மறைவாக்கும் தள்ளப்படவேண்டியதே என்று சற்சீடாசாரம் வலியுறுத்தப்படுகின்றது.

800. பரமேசுவரனிடம் ஒருவன் அபசாரப்பட்டால் அதைச் சற்குருவின் தயவால் மாற்றிக்கொள்ள முடியும். ஆனால் சற்குருவினிடம் அபசாரப்பட்டால் அதைப் பரமேசுவரனாலும் மாற்ற வியலாது என்று பெரியோர்களது வாக்கே உறுதிப்படுத்துகின்றது.

விளக்கக் குறிப்பு:—மேற்கண்ட, இரு பாடல்களுக்குமாக ஸ்ரீ முருகனார் கூறியது:—'வேதநெறி' என்றதற்கு இதர வேத விகிதாசாரங்கள் என்று

கொள்க. இவற்றை விலகி நடப்பார்க்கு கழுவாய் (பிராயச்சித்தம்) உண்டு. ஆனால் ஆசான் சொல்லை யதிக்கிரமித்து நடப்பார்க்குக் கழுவா யின்மையின், வேதநெறி தவறி நடந்தாலும் குருவாணையை உல்லங்கனம் செய்த லாகாது எனப்பட்டது. கடவுள் பக்தியினும் குருபக்தி சிறப்புடையது என வற்புறுத்தப் படுகிறது.

801. [இப்பாடல் அடுத்து வரும் (ப-14) ஆவது பாடலாக ஸ்ரீ பகவானால் செப்பனிடப் பட்டு, உள்ளது நாற்பது-அனுபந்தம் 39-ஆவது செய்யுளாக இடம் பெற்று விளங்குவதால் அப்பாடலுக்கே கீழே உரை கொடுக்கப்படுகின்றது].

**பகவான் (14)**

*புத்திரனே, அத்துவிதத்தை எப்பொழுதும் இதயத்தில் அனுபவிப்பதற்கே வைத்துக் கொள். வெளியில் செய்கையில் ஒருபொழுதும் அத்துவிதத்தைக் கடைப் பிடி யாதே. (பிரம்மலோகம், விஷ்ணுலோகம், சிவ லோக மாகிற) மூவுலகின் மூர்த்திகளையுங் கூட (தன்னிலும் வேறாகாதவர் களாய்) அத்து விதமாக நீ பாவிக்கலாம்; ஆனால் சற்குரு மூர்த்தியோடு மட்டும் அத்துவித பாவனை செய்தல் கூடவே கூடாது என் றறிந்து கொள்க.*

குறிப்பு:— இப்பாடல் ஸ்ரீ சங்கரரது '*தத்துவோபதேச*' என்னும் நூலில் 87வது பாடலாகிய வடநூற் செய்யுளின் மொழி பெயர்ப் பாகும்.

## எக. ஜீவ காருண்யத் திறன்

802. *[இப் பாடல் ஸ்ரீ பகவானால் பின்வரும் (ப-15) ஆவது பாடலாக இயற்றப் பட்டதால் ஸ்ரீ பகவானது பாடலுக்கே உரை தரப்படுகின்றது].*

**பகவான் (15)**

*பிறவித்தளையினின்றுந் தன்னை விடுவித்துக் கொண்டு உய்வுற்ற ஜீவன் முக்த னொருவனே, உலகத்தில் மற்ற ஜீவர்களையும் உய்விக்க வல்லவன் ஆவான். ஆனால், தான் முக்தி பெறாது பந்தத்துட் பட்டுள்ள ஒருவன் பிறரை உய்விக்கக் கிளம்புவது ஒரு குருடனுக்கு மற்றொரு குருடன் வழிகாட்டி யாவது போலவேதான் முடியும்.*

803. 'நான்' என்னும் அகந்தை யழியப் பெற்று ஞான மாகிய தன் ஆன்ம நிலையில் நிலைபெற்றுள்ள மெய்ஞ்ஞானி யொருவன், அஞ்ஞானத்தில் துன்புற்று உய்வு தேடித் தன்னை நம்பி வந்தடைந்துள்ள ஜீவர்களுக்கு, தேகாத்ம புத்தியாகிய மயக்கத்தை யொழித்து ஆன்மானுபவம் தருவது ஒன்றுதான் மெய்யான ஜீவ காருண்ய மாகும். தவிர, ஜீவ காருண்யம் என்ற பெயரால் மக்கள் செய்யும் பரோபகாரச் செயல்கள் யாவும் குறைபா டுடையனவே.

விளக்கக் குறிப்பு:—ஆன்ம ஞானத்தை யளிப்ப தொன்றைத் தவிர, 'பரோபகாரம், ஜீவகாருண்யம்' என்ற பெயரால் ஒருவன் எத்தகைய நன்மைகளை உயிர்களுக்கு அளிக்க வல்லவனானாலும், அல்லது இவ் வுலகையே சுவர்க்கமாக்கித் தர வல்லவனானாலுங்கூட அது மெய்யான ஜீவ காருண்ய மாகாது எனப்பட்டது. ஜீவத்துவ நிலையே சிறுமையுட் பெரிய தாகையால் அதை நீக்கிச் சிவத்துவ மாக்கும் ஆன்ம ஞானத்தை யருளும் சற்குருவின் அருளே மெய்யான ஜீவ காருண்யம் என்றறிக.

804. 'தாமே தமக்கு மருத்துவர்' என்பது ஆன்றோர் வாக்காகையால், ஏ வைத்தியனே, நீ எமக்கு நோய் நீங்க மருந்து கொடுக்க வருவதற்கு முன் உனக்குள்ள நோய் நீங்கப் பெற்றுப் பின் எம்மிடம் வருவாயாக.

விளக்கக் குறிப்பு:—உபமானத்தில் ஓர் வைத்தியனை நோக்கிக் கூறுவதாக இச் செய்யுள் அமைந்த தாயினும், உபமேயத்தில், சாத்திரங்களைப் படித்துவிட்டு உலக மக்களிடம் வலிந்து சென்று சொற்பொழிவும் உபதேசமும் செய்யப்புகும் வாசாலர்களை நோக்கி, 'தான் உண்மையில் உய்வடையாமல் பிறருக்கு உபதேசிக்க வரும் போதகனே, நீ எங்களுக்குப் பிறவி நோய் நீங்க மருந்து கொடுக்கக் கிளம்புவதற்கு முன் உன் பிறவி நோயைக் குணப்படுத்திக் கொண்டு, பிறகு எங்களிடம் வருக' என்று அறிவுடைய பொதுமக்கள் கூறுவதாக அமைந்துள்ளது.

ஸ்ரீ முருகனார் கூறியது:— எவர்க்கும் தமது ஆன்ம சொருபமே பிறவிப் பிணிக்கு மருந்தாகலின், அப்பிணி யின்றேல் உடற் பிணிகள் எவையும் இன்மையின், அதை முதலில் மாற்ற வேண்டுமென்பது கருத்து.

## எஉ. பிதிரர் கடமைத் திறன்

805. மாந்தர் தம்மைப் பெற்ற தாய் தந்தையர் இறக்கு முன்பு அவர்களது உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய உணவு

உடையாதிகளைத் தந்து காப்பாற்ற மாட்டார்கள். ஆனால் தம் பெற்றோர் இறந்த பிறகோ பிதிர்களுக்குச் செய்யுங் கடமை களாக, பெரிய தரும துரைகள் போல் அம் மக்கள் ஆடம்பர மாகச் செலவு செய்வர்! உலக இயற்கை என்ன விந்தையா யிருக்கின்றது!!

விளக்கக் குறிப்பு:— பெற்றோர் உயிர் வாழுங்கால் அவர்களைப் பெரிதும் பேணு திகழ்ந்து, பின்னர் பிதிரர் கடனெடுத்து நிகழ்த்துதல் மடமை யென்பதாம். இது அன்பற்ற ஆடம்பர வியல்பை விளக்குவது. 'தருமதுரை மக்கள்' என்றது இகழ்ச்சிக் குறிப்பு.

## எ௩. பரோபகாரத் திறன்

806. பிறரை ஏமாற்றி வாழ்பவன் தனக்குத்தானே பகை வனாகித் தனக்கே கேடு செய்துகொள்வோ னாகின்றான்.

807. பிறருக் கொருவன் கொடுப்பதெல்லாம் தனக்கே நன்றாகக் கொடுத்துக்கொள்கின்றான் என்ற உண்மையை உணர்ந்தால், பிறர்க்களித்தல் என்னும் பரோபகாரத்தை யார் தான் சிறப்பாகச் செய்யாதிருப்பன்? (எவனு மிலன் என்பது கருத்து.)

குறிப்பு:— ஸ்ரீ பகவானருளிய 'நான் யார்?' என்ற நூலிற் காணப்படும் அருள் வசனங்களே இச்செய்யுள்.

808. அனைத்துயிரும் தன் ஆன்ம சொரூபமாகவே இருந்து வருவதால், எவன் யாருக்கு (நன்மையையோ தீமையையோ) எதைச் செய்தாலும், அச் செய்கையைத் தனக்கேதான் செய்து கொள்கின்றான். (ஆகவே பிறருக்கு நன்மை செய்வதே வேண்டப்படுகின்றது).

809. மகாபலிச் சக்கரவர்த்தி யானவன் விஷ்ணுவின் வாமனாவதாரத்தால் மிதிக்கப்பட்டுப் பாதாள வுலகத்திற் கனுப்பப் பட்டானாயினும், திருமகள் கேள்வனாகிய கடவுளுக்கே யாசகம் (பூதானம்) அளித்த பெருஞ் சிறப்பை (உலகுள்ளளவும் ஒழியா வுயர்வை)ப் பெற்றவ னான னல்லவா? ஆகையால் பரோப காரத்தால் ஒருவனுக்குக் கேடே சூழுமாயினும், அக் கேடு தன்னை விற்றாயினுங் கொள்ளத் தகுதி யுடைய தாகும். பின்னிரண்டடிகளும் திருக்குறள் 220 ஆகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் கூறியது:— பண்ட மாற்ருகத் தன்னை விற்று ஊதியம் படக் கொள்ளத்தகுவ தொரு பொருள் எதுவுமே யில்லை; அப்படியிருந்தும், இது வாயின் அதுவும் செய்யத் தகும் என்று சிறப்பிக்கப்படுகின்றது. ஒப்புரவினுற் கெடுவது கேடன்று என்ட து கருத்து.

'கெடுவாக வையா துலக(ம்) நடுவாக
நன்றிக்கட் டங்கியான் ருழ்வு'—குறள்-117.

## எச. பூத தயைத் திறன்

810. எவ் வுயிரும் தன்னைக்கண்டு அச்ச மடையாதவாறு அனைவர்க்கும் இதமான அபய வசனங்களைக் கூறி, எவ ஞெருவன் எப்போதும் ஆனந்தம் பொங்க வாழ்வாஞே, ஞான சமாதியில் நிலைத்த அந்தத் தன்மய திருஷ்டியுடைய பெரியோன் எமனைக் கண்டும் அச்ச முறுவதில்லை.

விளக்கக் குறிப்பு:— மக்களுக்குத் தம் முடலின் மேல் மிகுந்த பற்றிருப்பதாலும், இயமன் தம்மிடமிருந்து உடலைப் பிரிக்கின்ருனே என்ற ஆற்ருமையாலுமே மரணபயம் அனைவர்க்கும் இயல்பாகவே உண்டாகின்றது. ஆஞல் ஞானியோ, தான் இவ் வுடலல்ல என்ற தத்துவ ஞாஞனுபவத்தால் உடலில் வாழ்பொழுதே தன்னை உடலினின்றும் பிரித்துக்கொண்டவ ஞகையால் அவனுக்கு இயமனிடங்கூட அச்சமேற்பட அவசியமில்லை என்பதாம். இயமனிடங் கூட அச்சமில்லாத தால் ஞானி யொருவனே அச்சமற்று எவ்வுயிர்க்கும் உண்மை யான தயை காட்டத் தக்கவன் என்பது கருத்து.

811. வலிமை யுடைய மக்கள் சிலர் தமது வல்லமையால் எளியவர்களைத் துன்புறுத்திஞல் அதைப் பார்த்து (சாதக ஞெரு வன் கோபமுற்று அவர்களை எதிர்க்கக் கிளம்புவதாகிய) மனச் சலன மடையாமல், 'எளியவர்க்கு இரங்கிக் காப்பாற்றும் இறைவன், அந்த வலிமையுடைய கொடியவர்களைத் தக்கவாறு தண்டிப்பான்' என்று சிந்தித்து, அந்த மெலியாரிடம் இரக்கம் பொங்க நடந்து கொள்வா ஞக.

விளக்கக் குறிப்பு:— வலியாரை எதிர்க்கக் கிளம்பும் இராஜஸ குணத்தினும், அந்நிலையில் எளியார் மேல் இரக்கங் கொண்டு அப்போது அவர்கட்குத் ஆவன செய்ய முற்படும் சாத்துவீகக் குணமே சாதகர்கட்குத் தக்கது என்று உபதேசிக்கப்பட்டது. தம்மைப் புடைத்த கள்வரை எதிர்க்கக் கிளம்பிய சீடர் ஒருவரைத் தடுத்து ஸ்ரீ பகவான் அடிபட்டவர்கட்கு அமிர்தாஞ்சனம் தடவி வலியை நீக்க முற்பட்ட சம்பவம் இங்கு நினைவு கூரத் தக்கது.

812. தேகத்தினின்றும் பிரிந்த ஓர் உயிரை மறுபடியும் அத் தேகத்திற் சேர்ந்திருந்து வாழுமாறு செய்யக் கூடிய சக்தி யில்லாத ஒருவனுக்கு எவ்வுயிரையும் எக் காரணத்தைக் கொண்டும் தேகத்திலிருந்து பிரிக்கும் அதிகாரம் இல்லை.

813. கேடு விளைக்குங் கொடிய வழக்கங்களை யுடையவர் களாய், அக் காரணத்தால் (பூத தயை யாகிற) செம்மை யியல் புக்கு மாறு பட்டவர்களாய், பாழ்படுத்தும் அறியாமைக்குள் அகப்பட்ட மக்கள்தான், இரங்கத் தக்கனவும் பழிபாவம் நிறைந்தவையுமான சீறும் விஷப் பாம்பு போன்ற கொடியபிராணி களிடம் தமக்கு இயல்பாகவே தோன்றும் உட்பகைமையால் நெஞ்சிற் பயமுண்டாகி, அவைகளை யடித்துக் கொல்வர். அந்தோ, இது தகாத தாகும்.

விளக்கக் குறிப்பு:— சென்ற 810 ஆவது பாடலின் கருத்துக்கியைய, தமக்கு மரணத்தையே உண்டாக்கும் எமனைக் கண்டுங்கூட, அஞ்சாத நிலையே இப்பாடலிற் 'செம்மை' எனக் கூறப் பட்டது. இச் செம்மையோ, 'உடல் நான்' என்ற அஞ்ஞானம் நீங்கினால்தான் உள்ளத்தில் உதிக்கும். எனவே இவ் வஞ்ஞானத்தாற் பீடிக்கப்பட்டுள்ள மக்கள், கொல்லுஞ் செயலுடைய விஷப் பாம்பு போன்ற கொடிய பிராணிகளைக் கண்டால், உடனே தேகாபிமான காரணத்தாற் பயமுண்டாகி, அதனால் அப் பிராணிகளிடம் இயல்பாகவே பகைமை கொண்டு, அவற்றை அடித்துக் கொன்று விடுவர். ஆனால் இது தவறு என்பதைக் காட்டவே "ஊறுபடும் ஒழுக்கம், பொல்லா வொழுக்கம், செம்மையொடு மாறுபடுவது, பாழ்த்த மடமையால் விளைவது" என்று இப் பாடலிற் கூறப் பட்டது. ஆகவே தமக்கு இன்னா செய்யும் பாம்பு போன்ற கொடிய பிராணிகளையும் அடிப்பது செம்மை யல்ல என்றுப தேசிக்கப்பட்டது.

ஸ்ரீ முருகனார் கூறியது:— பிராணிகள் மட்டு மன்றி விடப் பாம்புபோல் உயிர்களைக் கொல்லும் பாபச் செயல்களில் ஈடுபடும் மனிதர்களுங் கூட, தம்மை யறியாது உட்பகையால் உந்தப் பட்டுத்தான் அவ்வா றொழுகுகின்றன ராதலின், எத்தகைய பாவிய ரெனினும் அவரது மடமைக் கிரங்குத லன்றிச் சீற்றம் நமக்கு ஒவ்வாது.

814. அடுக் கடுக்காகத் தனக்குத் திரண்டு வந்து சேரும் துன்பங்களை யெல்லாம் பொறுமையுடன் சகித்து நின்று, அவற் றால் உடையாத மன வலிவுடைய ஞானிக ளாகிய பெரியோர்கள் தம்மை வந்தடையும் பக்தர்கள், அன்பர்களாகிய உற்றார்க்கும்

மற்றவர்க்கும் அவரவர் பிராரப்த வசத்தால் நேரும் துன்பங்களால் அவர்கள் வருந்தும் போது (தயை மிகுதியால்) தாமும் உருகி யுருகிக்கண்ணீர் சிந்துவர்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ ரமண பிரான் தனது வாணளிற் கள்வர் சிலர் ஓர் முறை தன்னைப் புடைத்த போதும், பொறுமையால் வெகுண்டு வேறு சிலர் தனதுடலுக்கு ஊறுவிளைக்கப் பலமுறை பலவாறு முயன்ற போதும், கதண்டுகளாற் காலிற் கொட் டுண்ட போதும், இறுதி நாளில் இடக்கையில் தோன்றிய புற்று நோய் சொல்லொணு வலியைத் தந்த சமயத்துங்கூடச் சிறிதும் வாட்ட மற்று மலர்ந்த செந்தாமரை மலரைப் போன்ற முகப் பொலிவுடன் விளங்கினர் என்பது உலக மறிந்ததே யன்றே? ஆயினும் தமது சந்நிதியில் வந்துற்ற அன்பர்கள் சிற்சில சமயம் தம் மகவை யிழந்தும் பிணியுற்றும் வருந்த நேர்ந்த போது அதைக் கண்டு ஸ்ரீ பகவான் அவர்களது துயரங்களிற் பங்கு கொண்டவராய் உருகிக் கண்ணீர் உகுத்ததும் உண்டு! இவற்ருல் இப் பாடலுக்கு ஸ்ரீ பகவானே இலக்கிய புருடராய் விளங்குகின்ருர் என்பது அறியக் கிடக்கின்றது.

815. அன்பர் முருகனரின் வினு :—

வேங்கட ரமணப் பிரானே, பச்சிலைகள் அடர்ந்த புதர் என்று கருதித் தாங்கள் காலை வைக்கவும், காட்டுக் குளவிகள் (தம் கூடு உடைந்ததாற் கோபித்து) அந்தக் கால் வீங்குமாறு கொட்டினவே! தற்செயலாக நிகழ்ந்த அத் தவறை மனப் பூர்வமாக (வேண்டுமென்றே) தாங்கள் செய்ததோர் குற்றம் போல் எண்ணி, அக் குளவிகளுக்காகப் பரிந்து, "இந்தத் தொடை தானே குளவிக் கூட்டை உடைத்தது; அது கொட்டப் படட்டும்" என்று கூறித் தாங்கள் காலைக் கொடுத்துக்கொண்டே நின்றது ஏனே?

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ பகவான் மலை மேல் வசித்த ஆதி நாட்களில் ஒரு சமயம் அருணசலத்தின் வடக்குச் சரிவில் உயரமானதோர் இடத்திற் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் போது தூரத்தில் மிகப்பெரிய் ஆலமரம் ஒன்று இருப்பதைக் கண்டு, அதை அருகிற் சென்று பார்க்க விரும்பி நெருங்குங்கால், இலைகள் அடர்ந்த ஓர் புதருள் குளவிகள் கட்டியிருந்த கூடு ஒன்றின் மேல் தமது தொடை மோதவே, அக் கூடு உடைந்தது. சீற்றங் கொண்ட குளவிகள் பறந்து திரண்டு வந்து, பகவானின் எந்தத் தொடைப் பகுதி கூட்டின்மேல் மோதிற்றே அப்பகுதியை மட்டும் பலமுறை வலிவுடன் கொட்டின! பகவான், "இந்தத் தொடைதானே குளவிக் கூட்டை உடைத்தது; அது கொட்டப் படட்டும்" என்று கூறி,

அக்குளவிகளுக்காக இரக்கப் பட்டு, தமது காலைக் கொட்டும்படி அமைதியாகக் கொடுத்துக் கொண்டே நின்றிருந்தார்! பிற்காலத்தில் அன்பர் முருகனார் இது பற்றி வினவிய வினாவும், அதற்குப் பகவானளித்த விடையும் பாடல் 815ம் பாடல் (ப-16)ம் ஆகும்.

**பகவான் (16) விடை**

பசிய இலைகளின் நடுவிற் கட்டப்பட் டிருந்த குளவிகளின் கூடு கலையும்படி வைக்கப்பட்ட கால் வீங்குமாறு அக் குளவிகள் கொட்டினாலும், மேலும் அது தற் செயலாக நேர்ந்த குற்றமே யாயினும், (அக் கூடு கலைக்கப் பட்டதே என்று) ஒருவன் இரக்கப்படுவது கூட இல்லை யென்றால், அவனது மனத்தின் கடினத் தன்மையை என்னென்று கூறுவது? (பூத தயை யற்ற மனமல்லவா அவ்வாறு இரக்கமற் றிருக்கும்?)

## எ௫. நடுவு நிலைத் திறன்

816. நல்லவர்களாக வாழ முயல்வோர், எல்லோருக்கும் பொதுவாகக் கிடைக்கக் கூடியதாயுள்ள உரிமைகளை மட்டுமே தாமும் பெறுவதாகிய நடுநிலைமையை விட்டு, தமக்கு மட்டும் சிறப்பாகச் சிற்சில உரிமைகளைக் கைப்பற்றி நடத்தல் மிகவும் குற்றமாகும்.

விளக்கக் குறிப்பு:— பகவான் ரமணர் தாம் வதிந்திருந்த ஆசிரமத்தில் மற்ற அனைவர்க்கும் உணவு முதலியன எவை பரிமாறப் படுகின்றனவோ அவை தவிர தமக்கென யாதொன்றும் பரிமாறக் கூடாது என்றும், அது போன்றே சகலவித சௌகரியங்களிலும் தமக்கு யாதொரு முக்கியத்துவமும் வேண்டாம் என்றும் ஒழுகி வந்த நடுவு நிலைமை இங்கு நினைவு கூரத் தக்கது.

817. மற்றவர்களுக்குச் சில உரிமைகள் மட்டுமே உண்டு என்றால், அந்த உரிமைகள் மட்டுமே தமக்கும் உண்டு. அவ்வா றின்றிச் சிற்சில உரிமைகளைப் பிறருக்கு இல்லை என்று மறுப் போமே யானால், அவற்றை நாம் மட்டும் கொள்ளுதல் தவறே யாகும்.

விளக்கக் குறிப்பு:— ஒருமுறை மேல் நாட்டார் ஒருவர் நம் நாட்டு வழக்க மறியாத காரணத்தால் ஸ்ரீ பகவானது இருக்கையை நோக்கித் தமது கால்களை நீட்டி உட்கார்ந்திருந்ததை, 'இது தவறு; பிறரை நோக்கிக் கால் நீட்டி உட்காரக் கூடாது; காலை மடக்கிக் கொள்ளுங்கள்' என்று

ஆசிரம வாசி ஒருவர் கூறியபோது ஸ்ரீ பகவானும், நீட்டியிருந்த தமது இரு கால்களையும் மடக்கி அமர்ந்து கொண்ட சம்பவம் இங்கு உணரத் தக்கது.

818. நடுநிலை மீறி (சமத்துவ மின்றி) நடப்பவர்கள் சமமே வடிவான இறைவனுக்கு விரோதமாய் நடப்பவர்களே யாகும். அவர்கள் இறைவனை பூஜையாதிகளால் நன்றாய் ஆராதிப்பவர்களாய் இருந்தாலுங்கூட அவர்கள் கடவுள் ஆராதனையை அடியோடு மறுப்பவர்களே யாகின்றனர்.

விளக்கக் குறிப்பு:— சமத்துவமே இறை இயல்பு ஆகையால் இறையனுபவத்தைச் சமாதிநிலை என்கிறோம். எனவே சமம் தவறி நடப்போர் இறைவனுக்கு முரணாக நடப்போரே யாவர்.

ஸ்ரீ முருகனார் கூறியது:— பகலவனையும் மழையையும் போலக் கடவுள் எவரையும் புறக்கணிப்ப தில்லை. "நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுவில் நின்ற நடுவே" என்பது வள்ளலாரின் அருட்பா. ஆதலின் அடியாரும் நடுவு நிலை சிறிதும் தவற லாகாது; தவறின் அவரது தெய்வ ஆராதனை ஏற்புடைத் தன்றாம்.

## எகூ. மனச் சான்றுத் திறன்

819. அதி தீவிர ஆன்ம சாதகர்கள் (செய்யத்தக்கவை தகாதவைகளை விவேகித்துத் தீர்மானிப்பதில் மிகச் சிறந்த கருவியாகிய) தமது மனச் சாட்சியின்படி ஒழுகிவரும் பொழுது முன்பே தாம் 'நல்ல மனிதர்கள்' என்று கருதி நட்புக் கொண்டிருந்த சிலரைத் தம் மனச்சாட்சி தற்போது விலக்கு மானால், பரிசுத்தமாகிப் பரிபாக முற்றிருக்கும் தம் மனச் சாட்சியை மறுத்து விட்டு, அம் மனிதர்களோடு மீண்டும் ஒத்து ஒழுகுவதை விட, அவர்களை விட்டு விலகித் தனித்து நின்றாவது, தமது மனச்சாட்சியின் படி ஒழுகுவதே தலை சிறந்த தாகும்.

விளக்கக் குறிப்பு:— இங்கு குறிப்பிடப்பட்ட மனச்சான்று மிக உன்னத நிலையிலுள்ள ஆன்மசாதகர்களின் மனச்சான்றை மட்டுமே குறிக்கும். இதையே "தூயமனச் சான்று" என்று பாடலிற் காட்டப்பட்டது. மற்ற சாமானிய மனிதர்களது மனங்களோ தத்தம் வாசனைகளின் போக்கை எதிர்த்து நிற்க மாட்டாமையால், தீய காரியங்களையுங் கூட செய்யத் தக்கதாய்க் கருதி நடக்கு மாகையால் அத்தகையோரது மனச் சாட்சியை இங்கு எடுத்துக் கொள்ளக் கூடாது. அவர்கள் நல்லோர்களாகிய பெரியோர்களின் அறிவுரைகளைக் கேட்டு நடப்பதே நல்லது.

ஸ்ரீ முருகனர் கூறியது:— நல்லினத்தின் கண்ணே நாம் இனிதுறைய வொட்டாது, ஊழ்வலியால் உந்தப்பட்டு மனச் சாட்சி ஒரொருகால் நம்மை வேறுபட விலக்கு மேல், அத் தெளிந்த மனச்சான்றை மறுத்து மீட்டும் அவ் வினத்தோடு பயில முயலாது தனிப்பட நின்று வாழ்தலே அறிஞன் ஒருவனுக்குச் சாலத் சிறந்த தாகும்.

## எஎ. பொய்யாமைத் திறன்

820. இப்பாடலுக்கு இரு பொருளுண்டு:— (1) தான் ஒருவர்க்கு ஒன்று கொடுப்பதாக முன்பே அளித்த வாக்கிற்கு மாறுபட்டு, சத்தியம் தவறி, பிறகு அதைத் கொடாது மறுப்ப தானது, தக்க பக்குவமற்றவனுக்கு (அநதிகாரிக்கு) 'ஆன்மா ஒன்றே பரம் பொருள்' என்ற இறுதியுண்மையை பிரியத் தோடு உரைப்பதை நிகர்த்த தவருகும்.

மற்ருெரு பொருள்:— தக்க பக்குவ மில்லாத மந்தாதி காரிக்கு 'ஆன்மாவே பரம் பொருள்' என்ற பேருண்மையை அன்போடு எடுத்துக் கூறுவது கூறுவோனது குற்றமாகவே முடியும். ஏனெனில், இதற்கு முன் அந்த மந்தாதிகாரிக்குத் தான் கூறியிருந்த சில வியவகாரிக சத்தியத்திற்கு மாருக இப் போது கூறும் பரமார்த்த சத்தியம் அமையும் ஆகையால், அவ் வநதிகாரியால் பரமார்த்த வுண்மை மறுக்கப்பட்டுத் தன் மெய்ம்மையை அது இழக்கும்.

குறிப்பு:— 'தன்னில்' என்ற சொல்லுக்கு 'அதைவிட' என்று ஒரு பொருளும், 'தன்னிடத்திலுள்ள' என்று மற்ருெரு பொருளுங் கொள்ளும் போது இப்பாடல் மேற்கண்டவாறு இருபொருள்களைத் தரும்.

821. எல்லார்க்கும் தலைவனுக, எல்லார் இதயத்தும் நடுவாக வுள்ள பரம்பொருளான கடவுள் (நான் நான் என்னும் ஆன்மாவாய்) அறங்கள் அனைத்திற்கும் தாயகமான சத்தியத் தின் சொரூபமாகவே விளங்குவதால், சாவே சம்பவிக்கக் கூடிய சமயமாக வந்து நேருமாயினும் ஒருவன் தான் சொன்ன

சொல்லை மீறி அசத்தியப்படாமல் இருப்பதே நல்லது. அன்றி மீறுவானாயின் இம்மை மறுமை இரண்டிலும் அது தப்ப வொண்ணாத் துயர் தருவதாகி விடும்.

## ஏஉ. அநாசத்தித் திறன்

822. தண்ணீரிற் படகு இருக்கலாமே தவிர, படகில் தண்ணீர் புகுந்தாற் பெருங்கேடே சம்பவிக்கும். அதுபோல், கடல் சூழ்ந்த இவ்வுலகில் மனிதன் வசிக்கலாமே தவிர, மனிதனின் உள்ளத்துள் உலகம் (உலகப்பற்று) வசிக்குமானால் அவனது உயிர் வாழ்க்கை முழுவதும் பெருங் கேடுடையதாகி விடும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— உலகுணர்ச்சியே சமுசாரபந்த மாவதன்றி, கேவலம் உலகே யன்று. அவ் வுணர்ச்சி ஒருவன் உள்ளத்தைப் பற்றி நிகழ்வதன்றிப் புறத்தைப் பற்றிய தன்று. ஒருவன் உலகத்தில் வாழ்ந்திருப்பதால் மட்டுமே அவனுயிர்க்கு ஊறு ஒன்றும் உண்டாகி விடுவதில்லை; ஆனால் அதனை உள்ளத்துட் கொண்டு உவக்கும் உணர்வாலேயே துன்பங்க ளெல்லாம் தோன்றுகின்றன.

823. நீரை உட்கொள்ளும் குடம் நீரில் முழுகிப் போகுமே தவிர, நீரை உட்கொள்ள முடியாத மரக்கட்டை (நீரிற் கிடந்தாலும்) அதில் மூழ்கி விடுவதில்லை. அது போல, உலக ஆசைகளை மனத்திற் பற்றிக் கொள்ளும் மக்களைத் தவிர, உலகப்பற் றில்லாத மேன்மக்கள் உலக வியவகாரங்களைச் செய்து கொண்டிருந்தாலும் அறிவு மயக்கம் அடைய மாட்டார்கள்.

824. உள்ளத்தில் உலகப்பற்று யாதொன்று மில்லாது வாழக்கூடிய ஒருவன் உலக வியவகாரங்கள் எல்லாவற்றையும் செய்து கொண்டிருப்பா னாயினும், அவனது சித்தம் சிவமயமாய்ப் பிரகாசிக்கும் திடத்தால் அவனுக்கு ஒருக்காலும் கேடுண் டாவதில்லை.

825. ஆச்சரியப்படத் தக்க விதமாய் உண்மை போல் தோன்றிக் கொண்டிருக்கும் இந்தப் பொய்யான உலகத்தையே (தன் சுகத்திற்கு) ஆதாரமாகக் கருதி, அதனிடம் பற்றுக்

கொண்டு சீர்கே டடையாமல், புளியம் பழம் தன் ஓட்டினுள் ளிருந்தாலும் அதனுடன் ஒட்டாதிருப்பது போலவே, இவ் வுலகில் வாழ்ந்திருந்தாலும் உள்ளத்தால் உலகத்தைத் துறந்து (ஆன்ம சொரூபத்தில் நிஷ்டையுற் றிருப்பதால் உடல்-உலகங்களின் மேலுள்ள அகந்தை-மமதைகளை) மறந்து வாழ்வதே அறிவுடைமை யாகும்.

826. வலிவாகக் கட்டப்படாத அஸ்திவாரத்தின் மேல் எழுப்பும் பெரிய கட்டிடம் நகைப்புக் கிடமாய்க் கீழே விழுந்து வீணாகும்; ஆகையால், ஆன்ம நெறியில் தவ மியற்றும் சாதகர் கள் முதலில் எப்பாடு பட்டாவது நல்லொழுக்கங் காத்து, பக்தி-வைராக்கியங்களாகிய சரியைகளைப் பயின்று பலம் பெறுவது கடமையாகும்.

விளக்கக் குறிப்பு:— புலனடக்கமாகிய மன வடக்கந் தரும் ஒழுக்கங்களிற் பழகி நல்ல வலிமையை முதலிற் பெறாத சாதகர்கள், பிறகு சாத்திரம், குரு முதலியோர் மூலம் தம் முள்ளத்தில் அத்துவித அறிவு எழுப்பப்படும் போது, அதன் உண்மைப் பயனான ஞானானுபவம் பெறும் வரை நிலைத்து நிற்க முடியாமல், இடையிலேயே உலக ஆசைகளால் அசைக்கப்பட்டு வீழ்ச்சியடைவர்.

ஸ்ரீ முருகனார் கூறியது:— சித்த விருத்திகளை யடக்கிப் பழகும் முயற்சி, சாதகர்கட்கு முதலில் இன்றி யமையாதது எனவும், ஆரம்ப சாதகர் சுதந்திரர் போல உலக விஷயங்களின் நடுவில் நடிப்பது முடிவில் ஏமாற்றத்தைத் தரும் எனவும் வற்புறுத்தப்பட்டது.

827. ஒருவனது உள்ளம் ஆன்ம சொரூப மெய்ப் பொரு ளைத் திடமாக அனுசந்தித்து (அதுவே தானாக)த் தெளிவடைந்து விடுமேல், உண்மையில் இருப்பற்ற நீலநிறம் ஆகாயத்தில் இருப்பதாய்த் தோன்றுவது போல் (உலகப் பொருள்களி னருகில் வாழ்வதால்) அத்தியாசத்தால் அவனிடம் இருப்பவை போல் தோன்றும் விஷயாசைகள் இயல்பாகவே எப்போதும் நீங்கப் பெற்றதாய் விளங்கும்.

## எசு. துறவு மாட்சித் திறன்

828. ஒருவன் மேற்கொள்ளும் துறவு நெறியானது வழுக் கும் நிலத்தில் நடப்பதற்குச் சமான மாகும். துறவு நெறி யினின்று மனத்தால் சிறிது தவறினாலுங் கூடப் பெருங் கேடு வந்து

சேரும். ஆகையால், வழுக்குநில மாகிய துறவறத்தை மேற்கொள்ளும் ஒருவன் வஞ்சகமான மறதி (ஆவரணம்) தன்னுள்ளத்திற் கள்ளமாகச் சிறிதாவது புகுந்து விடாதவாறு தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியது கடமையாகும்.

விளக்கக் குறிப்பு:— இங்கு 'மறதி' என்ற சொல், துறவறத்தின் ஆரம்ப நிலையில் மனக் கட்டுப் பாட்டையும் ஒழுக்க நடைகளையும் மறந்துவிடும் ஆவரணத்தைக் குறித்து நிற்கும். பிறகு துறவில் முன்னேறிய தீவிர சாதகர்களுக்கு அச் சொல் சொரூப நாட்டத்தினின்றும் நழுவுதலாகிய பிரமாதம் எனப் படும் தன் மறதியைக் குறித்து நிற்கும்.

829. தாம் இன்னும் எத்தனை நாள் உயிர் வாழ்ந் திருப்போம் என்று வரையறுத்துச் சொல்வது யார்க்கும் அரிதாகையால், பிறவித் தளையை யறுக்க வீரவுறுதியை மேற்கொண்டுள்ள தீவிர சாதகர்கள் தமது உடலின் மேலும் உலகப் பொருள்கள் மேலும் எந்தக் கணத்தில், வெறுப்புண்டாகிறதோ அக் கணமே உடனே யாவற்றையும் விட்டுத் துறவியாவதே உயிர்குறுதி பயப்பதாகும்.

விளக்கக் குறிப்பு:— திட வைராக்கியம் பரிபாகக் குறியாதலால், உடலுலகங்களில் வெறுப்பு உண்டான வுடனேயே (அச்சமயம் தான் மற்ற எவ் வாசிரமத்தானு யிருந்தாலும்) துறத்தல் உறுதியாகும் என்றார். ஆசிரமக் கிரமம் சாமானியார்க்கே யன்றித் தீவிர முமுக்ஷுக்களுக் கன்று என்பதாம்.

830. (முதிர்ந்து பழுத்த) பழம் மரத்தை விட்டுத் தானே நழுவுவதைப் போலவே (யாதொரு சிரமமுமின்றி) சாதகன் ஒருவன் பக்குவநிலை யடைந்ததும், அவனை (குடும்பியாக)த் தடுத்து வைத்திருக்கும்படியான பிராரப்தம் குறுக்கிட்டா லன்றி, உப்பில்லாத கூழை ஒருவன் விலக்கி விடுவது போலவே, குடும்ப வாழ்க்கையை அவன் சாரமற்றதாகக் கண்டு துறந்தே விடுவான்.

விளக்கக் குறிப்பு:— அத்தகையோன் குடும்பத்தில் இருக்க வேண்டியவாறு அவனது பிராரப்தம் அமைந்திருக்குமானுல் அவனது புறத்துறவில் அது குறுக்கிட்டு நிறுத்தி வைத்து விடும். ஆயினும் அத் தூயோன் அகப்பற்றற்றவனுகவே குடும்பத்தில் இருந்து வருவான்; ஏனெனில், நால்வகை பேத ஆசிரம வாழ்வுகளும் பிராரப்தத்தால் மட்டுமே அமைவனவாம். ஆனுல், அகப்பற்றறல் எவ்வாசிரமத்திலும் நிகழ்வதற்குப் பிராரப்தம் குறுக்கிடமுடியாது. புறவாழ்வுக்கே பிராரப்தக் குறுக்கீடே தவிர அகப்பற் றறுவதற் கல்ல.

831. கனவு (தன்னிடமிருந்து தோன்றுவது) போல், தன் னிடத்தில் (வாசனை வடிவாய்) இருந்து தோன்றி, இந்த நனவில் வெளியி லிருப்பதாகக் காணப்படும் பற்பலவான இப் பிரபஞ்ச மும் தன் மனத்தின் உண்மையற்ற வெறுங் கற்பனையே என்று நிச்சயித்து, அதன்மேல் நாட்ட மற்றுத் துறந்தவர்கள் மட்டுமே, வஞ்சக மயக்கமான (அஞ்ஞானக்) குற்றத்தை அறுத்தெறியக் கூடியவர்க ளாவர். மற்றவர்களோ அந்த மாயமான அஞ்ஞா னக் குற்றத்தை யறுக்கும் வழி யறியாதவர்களே யாம்.

விளக்கக் குறிப்பு:— இவ் வுலகத் தோற்றம் சொப்பனம் போல் தன் மனக் கற்பனையே என்றுணர்ந்தா லொழிய, அதன்மேல் சத்தியபுத்தி இருந்துகொண்டே யிருக்கு மாகையால் அத்தகை யோர்க்குத் துறவு பூரணமாகச் சித்திக்காது என்பது கருத்து. அடுத்த பாடலும் இதையே வற்புறுத்துவது காண்க.

832. ஏகமாம் மெய்ஞ்ஞான ஆத்ம சொரூபத்தை அனுப வித் தறிந்த சுத்த ஞானிகள் இந்தத் துவிதத் தோற்றங்களாகிய பிரபஞ்சத்தை நிஜமெனக் கருதிக் கலக்க மடையமாட்டார்கள். சாரமற்றதும் மாயமானதுமான ஓர் ஜாலத் தோற்றமாகவே கண்டு அதை மனத்தால் துறந்து விடுவர்.

833. உடல் - உலக வாழ்க்கையின் நிலையாமையை புத்தர் பிரான் நன்கு ஆராய்ந் தறிந்ததால் தனதாக விருந்த பெரிய அரசுச் செல்வத்தையும் துறந்து சென்றார். ஆகவே, புலன் களுக்கு அறிபடுபொருளா யுள்ள உலகத்தின் சத்தியமற்ற தன்மையை எவனொருவன் உள்ளத்தால் திடமாக உணர்கின் றானோ அவன் (உலகப் பற்றுள்ள) இலௌகீகனாக வாழ்வது இயலாத காரியமே யாகும்.

834. எதற்கும் சிறிதும் அஞ்சாத ஆண்மையுடன் (வைராக்கியத்தால்) இவ் வுலக வாழ்வுத் தோற்றத்தைத் துரும் பினுங் கீழானதாய்க் கருதித் துறந்த பெரியோர்களே நிச்சய மாக மெய்ப்பொருளாகிய கடவுளைக் காணும் பேரறிவின ராவர். மற்றவர்களோ பொய்ப் பொருள்களையே (உடலுலகமாம் பிரபஞ் சத்தையே) மெய்ப் பொருளாகக் காணும் அற்பப் புத்தி யுடை யோரே யாகும்.

835. உண்மையில் இருப்பற்று, ஆனால் இருப்பது போற் காணப்படும் இவ் வுலகத்தை, அத் தோற்றம் காணப்பட்டாலுங்

கூட அது இல்லாததாகவே அறிவாற் கண்டு துறந்து விடுவது தான், (புலன்களால் அறியப் படாததால்) இருப்பற்றது போற் கருதப்பட்டு, ஆனால் உண்மையில் எப்போதும் விளங்கிக் கொண் டிருக்கும் ஞானவஸ்துவாகிய ஆன்ம நிலையை அடைதல் என்று பெரியோர்கள் கூறுவர்.

விளக்கக் குறிப்பு:— கடவுளை அல்லது ஆன்மாவை அடைதல் என்பது என்ன? அது எப்போதும் உள்ள பொருள். உலகமோ எப்போதும் இல்லாத பொருள். ஆனால், உலகம் இருப்பதாக உணரப்படும் வரையிலும் கடவுளோ ஆன்மாவோ அடைதற் கரிதாய் — மறைந்தது போலவே — காணப்படும். உலகத் தோற்றத்தைப் பொய்யென அறிவாற் கண்டு விலக்கும் (துறக்கும்) அச் செயலே மெய்யாகிய கடவுளை — ஆன்மாவை — அடையும் நிகழ்வாய் அமையும்.

836. துறக்கக் கூடியவை யாவும் துறந்தபின் துறக்க முடியாததாய் எது மிஞ்சி நிற்குமோ, தள்ள (விட) முடியாத உள்ள பொருளாய் உள்ளத்தில் விளங்கும் அந்த ஆன்ம சொரூப சத்தியமே அளவற்ற பேரின்ப அடைவாகும்.

837. விடுவதற் கரியதான அகங்காரத்தை (நான் இவ்வுடல் என்ற புத்தியை) விட்டொழித்தவர்கள் அதற்கு மேல் துறக்க வேண்டியது யாதொன்றுமே யில்லை.

விளக்கக் குறிப்பு:—"அகந்தை யுண்டாயின்......." என வரும் உள்ளது நாற்பதின் 26 ஆவது பாடலும் இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

838. சாதுக்களது சித்தம் சதாசிவ மாகவே இருந்து பிரகாசிக்குங் காரணத்தால் அவர்கள் அதன்பிறகு விரும்பி அடைய வேண்டியது யாதொன்றுமே யில்லை. (துறந்தடைய வேண்டியதும் ஒன்றுமில்லை என்பதாம்).

839. தன்னிடம் யாதொரு உடைமையும் வைத்துக் கொள்ளாமலும், கொடுக்கப்படும் எதையும் வேண்டாமென்று மறுத்தும், உலகில் உலவும் கம்பீரமான உள்ளத்தையுடைய துறவி யொருவன், எந்தப் பொருளையும் அளிக்கவல்ல (செல்வம் படைத்தவனை) அரசனுங்கூட (தன்பால் யாதொன்றும் வழங்கமுடியாமல்) மனங்கலங்கித் தடு மாறும்படிச் செய்து விடுகின்றான்! ஆ! என்ன அற்புதம்!

## அ0. துறவுண்மைத் திறன்

840. 'நான் எல்லாவற்றையும் விட்டுத் துறந்தவன்' என்று தன்னைக் கருதிக்கொள்ளும் ஒரு துறவியின் நிலையைவிட, 'உடம்பே தானென்றும்' 'தான் அற்பமானதோர் குடும்ப பந்தத்தை மேற்கொண்டிருப்பவன்' என்றும் தன்னைக் கருதிக் கொள்ளாத ஒரு குடும்பியின் நிலை தலை சிறந்த துறவுநிலை யாகும் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— 'நான் எல்லாம் துறந்தவன்' என்ற உணர்வு இருக்கும் வரையில் ஒருவனிடம் 'நான் இன்னார்' என்ற தேகாத்ம புத்தியும் 'நான் துறந்தேன்' என்ற கர்த்ருத்துவ புத்தியும் திடமாகப் பற்றிக் கொண்டிருப்பது விளங்குகிற தன்றோ? ஆகையால் அவன் துறவு போலியே! ஆனால் ஒரு குடும்பி, 'நான் குடும்பி' என்றோ 'என் குடும்பம்' என்றோ எண்ணாதிருப்பானாயின் அப்போது அகந்தையும் மமதையும் நீங்கி நிற்கின்றானாகையால் அவனே தலை சிறந்த துறவி யாகின்றான். அகந்தையை விடுதலே ...னைத்தையும் விடுதல் என்பது உபதேசிக்கப்படுகின்றது.

## அக. சமட்டி மனத் திறன்

841. (நல்ல மனம் என்றும் கெட்ட மனம் என்றும்) மனம் இரு வகையாகச் சொல்லப்படுவது ஏனெனில் மேலெழுந்து வரும் சுப-அசுப வாசனைகளின் வசப்பட்டு அது நிற்பதைக் கொண்டே. நல்ல மனம் என்றும் கெட்ட மனம் என்றும் இருவேறு விதமாகக் காணப்படும் இது, ஆராய்ந்து பார்க்கு மிடத்து, உண்மையில் ஒரே மனந்தான் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— "நானார்?" என்ற நூலில் வரும் ஸ்ரீ பகவானது அருள் வசனங்களே இச்செய்யுள்.

842. என்னுடைய மனம் என்றும் உன்னுடைய மனம் என்றும் (இவ்வாறு தன்னிலையிற் பிரிந்து பலவிதமாகக்) காணப் படும் பேத மனமே பந்தஹேதுவாகும். தெளிந்த பரமாத்ம சிற்சக்தி வடிவாக எப்போதும் உள்ளபடியே உள்ள சுத்தமன மொன்றுதான் உண்மையான மனம் என் றறிக.

843. தேகங்கள் பலவாய்த் தோற்றுவதைக் கொண்டு பல பல 'நான்' (ஜீவர்கள்) ஆகக் காணப்படுவோர் யாவரும் ஒரே

யொரு உண்மையான 'நானே' என் றறிக. அன்னியமாகாத ஏக சச்சித்தாக விளங்கும் ஆன்ம சொரூப திருஷ்டியால் அவையனைத்தையும் ஒன்றாகவே கண்டறிக.

## அஉ. அகந்தை யொழிவுத் திறன்

844. துன்பந் தரும் மயக்க வடிவான அகங்காரத்தை, 'இது யார்? (நான் யார்?)' என்று கூர்மையான அறிவால் விசாரித்து அறுத் தெறிக. இவ்வாறு சிச்சடக்கிரந்தியின் வேர் அறுக்கப்பட்ட உள்ளத்தில் தவிர, வேறெங்கும் உண்மையான பேரானந்தமாகிய சாந்தி யுண்டாகாது.

845. ஆத்ம விசாரம் செய்வதால் முக்கரணங்களும் உள் ளத்தில் ஒடுங்கும் மோனமாகிய அருள்வாளாயுதத்தின் கூர் மையால் (எண்ணவெழுச்சிக்கே இடந்தராது நிற்கும் மிக நுட்பமான அறிவுக் கூர்மையால்) 'சரீரமே நான்' என்னும் வடிவில் முளைக்கும் அகந்தைப் பூண்டைக் கிழங்கோடு (வேரோடு) பறித்துக் களைந்தெறிவதுதான், பரம சாந்தியாகிய பிரம்ம சுகத்தை யடைவதற்குச் செய்யத் தக்க உபாய மாகும்.

846. 'இவ்வுடலே நான்' என்னும் அகந்தையுணர்வு ஒன்றுதான் எல்லாவிதமான சம்சார துக்கங்களுக்கும் மூல மாகும் என்றறிக, ஆதலால், 'உடலே நான்' என்னும் பொய் யுணர்வை யொழிப்பதாகிய ஆன்ம விசாரமென்னும் சத்திய சாதனை ஒன்றைத் தவிர வேறு எச்சாதனையும் பயனற்ற பொய்யுழைப்பே யாகையால், அவற்றில் திடமாக ஈடுபட வேண்டாம்.

847. அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட 'இவ்வுடம்பே நான்' என்ற மயக்கம் தீர்வது ஒன்றுதான் அடைதற்கரிய பேரின்பமாகிய மோக்ஷம், சிறந்த துறவு, சாகாமற் சாதல், சாமர்த்தியமான விவேகம் ஆகிய இவை யாவுமாகும் என் றறிக. (உடலகந்தை யறுவதே இவை யாவற்றையும் அடைந்த தாகும்).

848. (முன்பாடலிற் கூறப்பட்ட) தேகாத்ம புத்தி தீர்தல் ஒன்றே, கற்றல்-கேட்டலாகிய சிரவணம், மனனம், நிதித்

தியாசம், அருளேயடைதல், மோனம், பரமபதம், உபசாந்தி, யாகம், பக்தி, தானம், தவம், தர்மம், யோகமுறல் ஆகிய இவைகளெல்லாமு மாகும்.

குறிப்பு:— இவ்விரு பாடல்களேயும் ஒரே வெண்பாவாக ஸ்ரீ பகவான் தொகுத்தருளியதே இதையடுத்துவரும் (ப-17) என்ற உபதேச மாகும்.

**பகவான் (17)**

'நான் தேகம்' என்ற பொய் யெண்ணத்தை விடுவதொன்றே தானம், தவம், யாகம், தர்மம், யோகம், பக்தி, சுவர்க்கம், மெய்ப்பொருள், சாந்தி, சத்தியம், அருள், மோனநிலே, சாகாமற் சாதல், ஞானம், சந்நியாசம், மோக்ஷம், பேரின்பம் ஆகிய யாவு மாகும் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— 'நான் இத் தேகம்' என்ற தப் பெண்ணத்தை ஆன்ம விசாரத்தால் விலக்குவ தொன்றிஞலேயே ஒருவன் மேற்கூறிய யாவற்றையும் ஒருங்கே யடைந்தவ ஞகிறுன். ஆகையால் விசார மொன்றே இவையாவுமாம் என்றுணர்ந்து கொள்ள வேண்டும்.

849. பொன்ஞலான ஆபரணங்கள் பற்பல வெவ்வேறு நாமரூபங்களுடன் காணப்படுவது போல், சிறந்த தர்மங்களின் வகைகள் (முன் பாடல்களிற் கூறப்பட்டவாறு) பற்பல வாகச் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருந்தாலும், அப் பல்வேறு ஆபரணங் களுக்கும் பொன் ஒன்றே உண்மையான பொருள் ஆவது போல, அப் பல்வேறு தர்மங்களுக்கும் அகந்தைத் தியாகம் ஒன்றேதான் உண்மையான பொருளாகும் என் றறிந்து கொள்க.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகஞர் கூறியது:— அணி விசேடங்கட் கெல்லாம் சாமானியமாம் தங்கமொன்றே யுண்மை யாவது போல, அத் தர்ம விசேடங்கள் பலவற்றுக்கும் சாமானியமாம் தியாக மொன்றே யுண்மையாம். பொன்னின்றேல் அணி விசேடங்கள் இல்லாதவாறு போலத் தியாகமின்றேல் தர்மமாம் விசேடங்களும் இலவாம்.

850. பேராசை வடிவாகிப் பெருந் துன்பங்கட்கு வழி செய்யும் 'எனது' என்னும் மமகாரத்தின் (என்னுடையவை என்னும் உடைமை யுணர்வின்) தியாகத்தை நன்கு பெற்று (தன் உடைமை முழுவதும் துறந்து) மகா தைரியவாஞன

சாதக னொருவன், பிறகு ஆன்ம விசாரம் புரிந்து, 'நான்' என்ற அகங்காரத்தையும் மீதமின்றித் துறக்கும் தியாக முடையவ னுதலே, சகல தர்மங்களின் பயனையும் ஒருங்கே யடைந்த நிலையாகும்.

851. 'நான் (ஒரு தனி ஜீவன்)' என்று அகங்கரித்து எழும் எழுச்சியால் இறைவனது சத்திய நிலையான பரிபூரணத் துவத்தை (ஏகத்துவத்தை) கூறுக்கிக் குறைவுபடுத்தாமல், அவ் வகந்தை யெழுச்சி ஆன்மாவில் ஒடுங்குவதுதான் இறைவன் வதியும் திருமூலஸ்தானமான ஞான சந்நிதியை அடைய வேண்டிய ஒருவன் தவறுது கடைப்பிடித் தொழுகவேண்டிய நியமமாகிற தவ மாகும்.

விளக்கக் குறிப்பு:— சிவ சந்நிதியாம் திருமூலஸ்தானத்துட் பிரவேசிப்போருக்கு என்ன தவநியமம் இருக்க வேண்டும் என்பது இங்கு உபதேசிக்கப்படுகிறது. ஆன்மாவாம் சிவத்துக்கு அன்னியம் போல் 'நான் இவ்வுடல்' என்ற வடிவில் அகந்தை யுணர்வு ஒன்று எழுவதே சிவத்தின் ஏகத்துவத்திற்கு இழுக்கு உண்டாக்குவதாதலின், அவ்வாறு அகந்தை எழாமல் ஆன்மாவில் ஒடுங்கிநிற்கும் உத்தம நிலையே திருமூலஸ்தானத்துட் பிரவேசிக்கத் தகுதி தரும் தவம் எனப்பட்டது. அத் தவமில்லாதோர் யாரேயாயினும் அவர்கள் அகந்தைக் குற்ற முடையோரே யாதலால் அன்னுர் சிவசந்நிதியாம் ஆலயப் பிரவேசத்திற்கு அருகதை யற்றவரே என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

ஸ்ரீ முருகனுர் கூறியது:— உடற்பிறப்பு ஒன்றோடு ஒழியாது, "உயிராகிய யான் எங்கிருந்து எழுந்தோன்?' என்று ஆராய்தலால் அகந்தையழிந்து, தம் பிரம்ம மூலத்திற் பெயர்த்தும் போய்ப் பிறந்த இரு பிறப்பாள ரன்றி ஏனையோர் அதிபாவனமாம் அவன் திருமுன்னடைந்து திருமேனி காண்டலோ தீண்டலோ அனுமதிக்கப்படாமையால், அகந்தை உள்ளொடுங்கலே 'தவ நன்னியமம்' என்றுர்.

உண்மை மாத்திரமாம் ஆன்ம சொரூபமே சிவமாகவும், இதயமே சிவ சந்நிதியாகவும், ஆன்ம ஞானிகளே இரு பிறப்பாளராகவும் உணரற் பாலதாம் .

852. இறைவனது இயல்பேயான பரிபூரணத் தன்மையை ('நான் இத் தேகம்' என்றவாறு தேக அளவினதாக)ச் சுருக்கி அளவிற் குட்படுத்தும் அகந்தையுணர்வை ஒழிப்பதுதான் இறைவனுக்குப் பிழையின்றி ஆற்றும் உண்மை வழிபாடாகும் என்பது ஞானிகளின் கருத்தாகும்.

853. தாம் (அகந்தை) இறைவனுக்கு ஊணுக வேண்டும் என்று எண்ணுமல், இறைவனைத் தனக்கு உட்படுத்திக் கொள்ள வேண்டும் என்றெண்ணி (அகங்காரத்துடன்) உபாசனை புரியும் காமியார்த்திகளான பித்தர்கள், தமது அகங்காரமே தன் அழிவுக்கு (காரணமாய்) வழியாய், இயமனுக்கு ஊணுகிப் போவர்.

விளக்கக் குறிப்பு:— தம் உபாசனையால் இறைவனை வசப்படுத்தி அசுரர்கள் பலர் சுயநல வரங்கள் பலவற்றைப் பெற்றுக் கொண்டன ரன்றே? அத்தகைய உபாசகர்களின் போக்கையே இங்கு இறையை ஊணுக்க எண்ணுதல் எனப்பட்டது. இக் காமிய உபாசகர்கள் தமது சுயநல உபாசனை முயற்சியால் தம் அழிவையே தேடிக் கொள்கின்றனர் என்பதாம்.

854. புலன்களால் எதிரிட் டறியப்படும் பிரபஞ்சத்தோற்ற மும், அதைக் காண்பாணுகிய கேடு நிறைந்த அகங்கார எழுச்சி வடிவ ஜீவனும் (காண்பான், காணப்படுபொருள், ஆகிய இவ் விரண்டுடன் காட்சியும் சேர்ந்த திரிபுடியும்) ஞானமயமாய் விளங்கும் சிவ நிலையில் ஒடுங்கி யழிந்தா லல்லது சிரேஷ்டமான அந்தப் பரப்பிரம்ம நிலையை அடைதல் இயலாது.

855. சலனமற்று விளங்கும் சத்திய ஆன்ம சொரூப நிலை யானது (அலைதலே இயல்பான) அற்ப மனத்திற்கு விளங்குமோ? (விளங்காது; ஆகவே) சிச்சடக் கிரந்தி வடிவாய் ('ஜடவுடலே நான்' என்ற அறிவு வடிவாய்)க் கிளம்பியுள்ள அகங்கார வுணர்வு அழிந்து தீர்ந்தாலன்றி ஆன்மசொரூபமான நம் மெய்யியற்கை நிலை அடையக் கிடைப்பதில்லை.

856. 'நான் தேகம்' என்ற வடிவில் (சித்தாகிய ஆன்மா வுக்கும் ஜடமாகிய உடலுக்கும்) இடையில் (இவ்விரண்டுமல்லாத மற்றொன்ருய்) அகங்காரம் ஒன்று முளைத்து, தாணுகவே எப் போதும் இருந்து விளங்கும் சாந்தியாகிய சுகத்தை அடியோ டழித்துவிட்டதல்லவா? ஆதலால், அந்த 'நான்' என்னும் வீண் அகங்காரமாகிய விருத்திராசுரனை யழித்தா லன்றி, சாந்தியே வடிவான கைவல்ய நிலையைக் காணமுடியாது.

857. ஜீவணுகிய மன அறிவு என்னும் சந்திரனின் பிரதி பலன ஒளி பரமாத்மவுணர்வான மெய்ஞ்ஞான சூரியனது ஒளி

யில் மூழ்கி இறந்து, அங்கே ஆன்ம ஞானமயமாகவே என்றைக்கு ஒழியுமோ அன்று தான் மிக விசேஷ நன்னாளாகிய அமாவாசியை யாகும்.

858. செத்தால்தான் மோக்ஷலோகம் அடையலாமே தவிர வேறு எவ் வுபாயத்தாலும் அடையவே முடியாது! ஆனால் செத் தொழிவது என்பது எவ்வாறெனின், 'நான், எனது', என்னும் அகந்தை மமதை யுணர்வுகளைக் கொல்லுதலே தவிர (இவ்வுடம்பைக் கொன்றுவிட்டால் நாம் உண்மையாகச் செத்த தாகாது; ஆகையால்) இவ் வுடம்பைத் தற்கொலையாற் கொல்லுத லல்ல. அப்படிச் செய்யின் அது பெருங் குற்ற மாகும்.

விளக்கக் குறிப்பு:— ஒரு குற்றவாளியைத் தண்டிப்பதை விட்டு அவன் அமர்ந்திருக்கும் நாற்காலியை அடித்து உடைப்பது போன்றதே அகந்தையை அழிக்காமல் ஆக்கையை அழிப்பது மாகும் என்று ஸ்ரீ பகவான் கூறுவதுண்டு.

859. பற்பலவாக விரிந்து தோன்றும், மயக்கம் நிறைந்த இப் பிரபஞ்சத் தோற்றத்தின்மேல் அடியோடு ஆசையொழிந்த வர்கள் மட்டுமே சிவ வாழ்வு பெறுவர். அத்தகைய பரிசுத்த ஆத்மஞானுனுபவ விளக்கம் பெறுவதா லன்றி வேறு எதனாலும் நிஜானந்தம் வராது.

குறிப்பு:— ஆசைகள் நிறைவேறல் மெய்யான ஆனந்த மல்ல; ஆசையறலே மெய்யான பேரின்பம் என்று உணர்த்தப்பட்டது.

860. மரணமும் அதைத் தொடரும் எண்ணிறந்த பிறப்புக் களுமாகிய பெருந் துன்பத்தை ஒழிக்கக் கூடியதும், மறுபடி என்றுமே பிறப்பை உண்டாக்காததுமான மிகப்பெரிய சாவு எதுவென்று நீங்கள் கேட்பீர்களாயின், அஞ்ஞான வடிவான 'நான்' என்னும் அகங்காரமும் 'எனது' என்னும் மமகார மும் அழியப்பெறுவதே அது என் றறிக.

விளக்கக் குறிப்பு:— தேகத்தின் முடிவு என்று நேரும் ஒவ்வொரு மரணமும் மீண்டும் ஒரு தேகத்தில் பிறப்பதற்கே ஹேதுவாகின்றது. ஆகையால், இவ் வற்ப தேக மரணத்தை யடைவதைவிட மிகப்பெரிய மரணமாகிய அகந்தை மமதைகளின் மரணமே அடையத்தக்க சிறப்பான மரண மாகும். ஏனெனில், அதன்பின் இவ் வற்ப தேகப் பிறப்பும், இறப்பும் அடியோ டறும்.

861. 'உடம்பே நான்' என்ற பொய்யறிவு வடிவான அகந்தையின் வாழ்வு, 'நான் யார்?' என்று தன்னுண்மையை நாடும் தன்னுட்டத்தால் தான் அழிவதாம்.

862. நம் பொய்வடிவான அகந்தையை நம் உண்மை யிருப்புணர்வான மெய்யறிவிலே ஒடுக்கியழித்து, அவ்வறிவாக நிற்கும் சமாதி நிலையே உண்மையான தெளிந்த ஞானநிலை (மெய்ந் நனவு) ஆகும்.

863. 'நான் தேகம்' என்றுணரும் மயக்கமாகிய பொய் யறிவு நசித்தா லன்றி மெய்ஞ்ஞான அனுபவம் வராது என் றறிக.

864. எவன் தனது சத்சித் சொரூபத்தில் மோக அகந்தை அடங்கியொடுங்கப் பெறுவனே அவனே கர்மாரம்ப முயற்சி முழுவதும் ஒய்ந்துபோய் உள்ளத்திற் சாந்தானந்தம் இயல் பாகவே பொங்கி விளங்குவான்.

## அரு. தத்துவ ஞானத் திறன்

865. (எல்லாம் வல்ல பரப்பிரம்ம சொரூபத்தினின்றும் தான் வேறு போலவும், சமானம் போலவும் காட்டிக்கொண்டு) சர்வாதிகாரமும் உள்ளதாக எழும்பி, சர்வ சக்தியுடனும் பல வாறு பிரவிருத்திக்கின்ற மாயையினின்றும் உதித் தெழும் ஜீவ போதமான அகந்தை மயக்கம் ஒழிந்தால் தான், பிறகு பரமாத்ம ஞானம் அனுபவ மாகும்.

விளக்கக் குறிப்பு:— பொய்யான மாயையால் மெய் போலக் கற்பிக்கப்படுவதே 'நான் ஓர் ஜீவன்' என்ற தனியுணர்வு. இவ் வகங்காரத் தனித் தன்மை யழிந்தாலன்றி ஆன்மஞானம் உண்டாகாது எனப்பட்டது.

866. தேகத்தை 'நான்' என்று அபிமானிக்கும் புத்தி (அகந்தை) அழிந்தால், துன்ப முண்டாக்கும் மயக்கமும் அதனுல் வரும் கலக்கமும் அடியோடு நீங்கும். (அது நீங்கு மாறு) தன்னை விசாரிக்கும் உள்ளத்தில் உண்டாகும் சுகமானது விகற்ப மனைத்தும் அழிந்து விளங்கும் பரம்பொருளின் ஞான சொரூபமே யாகும்.

விளக்கக் குறிப்பு:— சகல விகற்பங்களுக்கும் (வேறுபாடுகளுக்கும்) மூலமாவது தேகாத்ம புத்தியே யாகையாலும், அஃது ஒழிய விசாரமே செய்யத் தக்கதாகையாலும், தேகாத்ம புத்தி யழிந்த விடத்து விளங்குவது நிருவிகற்ப சச்சிதானந்தமே யாம்.

867. (சுட்டறிவாற் காணப் படாததால்) இல்லாதது போலவே யுள்ள கடவுள் ஒருவரேதான் நித்தியப் பிரத்தியட்ச மாய் (எப்போதும் உள்ளவராய்) இருக்கின்றாரே தவிர, தான் ஒருவன் இருப்பது போல உள்ள அகந்தை (ஜீவன்) முக்காலத் தும் இல்லவே யில்லை என்று தன்னுடைய (அகந்தையினது) இன்மையைத் தானே யுணரும் தன்மைதான் பிரம்ம ஞானம் என்று சிறப்பித்துக் கூறப்படுகின்றது.

868. சுத்த சத்துவமே தன் சொரூபமான மனம் யாதோர் பிரவிருத்தியு மற்ற மோனத்துடன் தன் இருப்பில் நிலைபெற்று நிற்கும் சகஜ சமாதியே அத்துவைத ஞான அழகாகும் (தத்துவ ஞானச் சிறப்பாகும்).

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது : முக் குணங்களையுந் தாண்டி நிற்பது சகஜநிஷ்டை எனினும் சத்துவமே மனதின் ஆதி சொரூப மாதலின் "சத்துவ மோனம்" என்றார்.

## அச. காட்சி மாட்சித் திறன்

869. மாட்சிமை பொருந்திய ஞானாகாசமாய் தானே யொளிரும் அகண்ட சூரியனான ஆன்மாவிற்கு, எல்லாவற்றையும் சாட்சியாய்க் காணும் குண தர்மம் கூறுவது ஆன்ம ஞான மற்றவர்களின் கற்பனையே தவிர உண்மை யல்ல. (ஆன்மா குணாதீதன்). ஆன்மாவினிடத்துக் காட்சியாதி குணங்கள் உண்டாவதற்கு ஹேதுவான அஞ்ஞானப் பாழ் இருளாம் மாயை என்னும் மற்றோர் வஸ்து இல்லவே யில்லை. ஏனெனில் ஆன்மா இரண்டற்ற ஏக வஸ்து வாகும்.

விளக்கக் குறிப்பு:— உண்மையில் ஆன்மா குணாதீதன் ஆகையாலும், இரண்டற்ற தாகையாலும், ஆன்மாவை சர்வ சாட்சி என்றும், எல்லாம் அறியும் தன்மையது என்றும் கூறிச் சிறப்பிப்பது அஞ்ஞானிகளின் கூற்றே!

870. 'நான் உலகத்தைக் காண்கின்றேன்' என்று ஒவ்

வொருவருக்கும் உண்டாகும் உணர்வின் மர்மம் என்ன வென்றுல், 'மாசற்ற சத்திய ஜோதியான பரிபூரண ஞான சொரூபனும் என்னிடத்திலேயே (என் அகண்ட இருப்புணர்விலேயே) ஐம்புல விரிவான உலகமும், அதைக் காண்பானுகிய ஜீவனும் தோன்றுகின்றன' என்பதே!

விளக்கக் குறிப்பு:— ஐம்புல உணர்வாகிய உலகத் தோற்றமும் அதைக் காண்பானுகிய ஜீவனும் உண்மை யல்ல. ஆன்மாவிலேயே அவகாசங் கொண்டு உருவெளித் தோற்றம்போல (பேய்த் தோற்றம் போன்ற பொய்த் தோற்றமாய்) ஆன்மவொளிச் சேர்க்கைக் கற்பனையால் தோன்றுவதே அது. அத் தோற்றமும் ஆன்மாவுக்கல்ல; அத் தோற்றங்களுள் ஒன்றுன ஜீவனுக்கே யாகும். "உலகும் ஜீவனும் ஒன்றுய் உதித்தொடுங்குமேனும் உலகு ஜீவனுல் மட்டுமே காணப்படுகின்றது; ஆன்மாவாலல்ல. ஆன்மாவோ இவ்விரு தோற்றங்களாகிய உலகும் ஜீவனும் தோன்றி மறைதற்கு இடனுய், தான் தோன்றி மறையாது ஒளிரும் பூன்றப் பொருளாகும்" என்ற உள்ளது நாற்பதின் ஏழாவது பாடல் இங்கு ஒப்பு நோக்கற் பாலதாம்.

871. காணப்படும் உலகத் தோற்றங்களை உண்மை என நம்பவைக்கும் ஐம்புல அறிவு விபரீதமான (உண்மைக்கு மாறுன) முடிபே யாகும். அவ் வுலகக் காட்சியைக் காட்டித் தரும் ஐம்புலன்களும் அதை அறிந்து கொள்ளும் ஜீவனும் (அகந்தையும்) அத் தோற்றங்களுள் ஒன்றுன பொய்யுருவே என் றுணர்க.

விளக்கக் குறிப்பு:— காண்பான் (ஜீவன்), காட்சி (காணப்படும் உலகத் தோற்றம்), காணுதல் (ஐம்புல வுணர்வு), இவை முப்புடியே யாகையால் மூன்றும் பொய்யே எனப்பட்டது. காண்பானுகிய ஜீவனும் அவனது காணுஞ் செயலுங்கூட காணப்படும் உலகத் தோற்றங்களுள் அடங்கியவையே என்பது கருத்து. உதாரணமாக, ஓர் அரசன் முன்னிலையில் ஓர் படக்காட்சி நடப்பது போல ஓர் திரைப்படம் எடுக்கப் பட்டுள்ளது என்று வைத்துக் கொள்வோம். அது திரையிடப்பட்டால், அதில் அப்படக் காட்சியைப் பார்க்கும் அரசனும் அத் திரைப்படத்துள் ஓர் படமே யாவது போலவே என் றறிக.

872. கண்ணுக்குங் கண்ணுகிய ஆன்மாவை யார் தரிசிக்கின்றுனே அவன் தன் உண்மை சொரூபத்தை யடைந்தவனுய்,

'அப் பரமாத்மா வேறு, தான் வேறு' என்னும் பேத புத்தி அற்றுப் போவதால் 'அப் பரமாத்மாவே தான்' என வுணர்ந்து விளங்குவான்.

விளக்கக் குறிப்பு:— ஆன்மாவைத் தரிசித்தோன் தன்ஜீவ போதம் அறப்பெற்று, தான் அப்பரமான்மாவே என்னும் அத்துவித ஞானம் பெற்று விளங்குவான் என்ற வாறு.

873. (முற்பாடலிற் கூறியவாறு சொரூபஸ்திதி பெற்ற) ஆன்ம ஞானி பந்த மற்றவனுவான். அவன் சித்பராகாசத்தையே (ஞானப் பரவெளியையே) தனது அரசாட்சி (ராச்சியம்) யாக உடையவன் ஆகும். அவன், கண்ணுற் காணப்படும் இவ் வுலகக் காட்சிகளை யெல்லாம் தன் ஆன்ம திருஷ்டியால் தானே யாகக் கண்டு அருளாட்சி செய்ய வல்லவ ஞவான் என் றறிக.

874. பேய்த்தோற்றம் போன்ற பொய்த் தோற்றமாகிய இவ்வுலகில் நாம் மாயமாம் பிறப்படைகிறோம் என்பதின் உண்மை என்ன என்பதை, பரவெளியான ஆன்ம சொரூப திருஷ்டியாற் பார்க்கு மிடத்து, உடம்பை 'நான்' என்று அபிமானித்து எழுந்து தோன்றும் அகங்காரமாகிய மடமையே அது என்பது தெரிய வரும்.

விளக்கக் குறிப்பு:— உடலை 'நான்' என்று அபிமானிப்பது தான் பிறப்பு; அவ் வபிமானத்தை விடாது போஷிப்பதுதான் உலக வாழ்வு; அதைத் தாற்காலிகமாக மறந்து விடுவதுதான் மரணம்; அம் மடமையை நிரந்தரமாக அழித்து விடுவதே ஞானம் அல்லது மோக்ஷம் என்பது கருத்து.

875. அற்ப நான் ஆகிய அகந்தை யுணர்வு நீங்குவதாற் பெறும் அகண்டாத்மப் பார்வையாற் பார்க்கும் போது இப் பிரபஞ்ச மெல்லாம் அந்த மெய்ப்பொருளாகிய தன்னுள்ளேயே (தான் ஆகவே) இருப்பன என்பது விளங்கும். கனவிற் காணப் படும் பல்வேறு வகையான காட்சிகள் அக் கனவு காண்பானுக்கு வேறு போல் அப்போது காணப்படுவது போலவே, நாமாகிய ஆன்மாவே ஜாக்கிரத்தில் இப்பிரபஞ்சமாகிய அன்னியப் பொருள்கள் போலக் காணப்படுகின்றது என் றறிக.

விளக்கக் குறிப்பு:— தூங்குவோ னிடமிருந்தே கனவுக் காட்சிகள் தோன்றுகின்றன. அவை, கனவுக் காலத்தில் அவற்றைக் காண்பானினும் வேற்றுப் பொருள்கள் போலக் காணப்பட்டாலும்,

அவையாவும் (காண்பான் உள்பட) தூங்கும் ஒருவனுக்கு அன்னிய மின்றி அவனே யாகின்றன வன்றோ? அது போலவே, இந் நனவுக் கனவிலும் ஆன்மாவாகிய நாம் ஒன்றே காணும் ஜீவனாகவும், அவனுக்கு அன்னியமாகக் காணப்படும் உலகமாகவும் தோன்றுகின்றோம் என்பது கருத்து.

876. பொய்யாகிய பாம்புத் தோற்றம் நீங்கும் வரையில் அதற்கு ஆதாரமா யிருந்த மெய்யாகிய கயிறு விளங்காது. அது போலவே பொய்யாகக் காணப்படும் இவ் வுலகத் தோற்றம் நீங்கும் வரையிலும் இதற்கு அதிஷ்டானமா யிருக்கும் உண் மையான ஆன்ம சொரூபம் விளங்காது.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ பகவானருளிய 'நான் யார்?' என்னும் நூலிற் காணப்படும், "கற்பித ஸர்ப்ப ஞானம் போனு லொழிய அதிஷ்டான ரஜ்ஜுஞானம் உண்டாகாதது போல, கற்பித ஜகதிருஷ்டி நீங்கினு லொழிய அதிஷ்டான சொரூப தரிசன முண்டாகாது" என்ற வசனத்தின் செய்யுள் வடிவமே இப் பாடல்.

877. 'உலகம் மெய்' என்ற உணர்வு ஒழிந்த பொழுது தான் சிறந்த பரமான்ம அறிவொளி யுண்டாகும். அந்தச் சிறந்த ஆன்மஞானவொளி பெற்ற வாழ்வுதான் உயிர்களின் இயல்பான மெய்வாழ்வு ஆகும். மற்ற விதமான (பிரம்மலோக வாசிகளாக வாழும் வாழ்வு முதல் எவ்வித ஜீவனாக, எவ்வளவு மேன்மையான) வாழ்வைப் பெற்றாலும் அவை யாவும் அற்ப வாழ்வுகளே யாம்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— உலகம் என்பதே காணப்படுவது என்னும் பொருளுடைய சொல்லாதலால், 'உலக வுணர்ச்சி' என்று இப் பாடலிற் கூறப்பட்டது சுட்டறிவுக் கிலக்காக, பேதத்தோடு தோன்றும் திரிபுடிக் காட்சியுணர்வைக் குறித்து நின்றது. சோதி - நிர்விசேஷ வுணர்வாம் உண்மை விளக்கம்.

---

மூன்றாவது

# தத்துவ அநுபவ வியல்

## க.* அபரோக்க ஞானத் திறன்

878. ஆன்மாவே உண்மையான கண். அது அறிவது தன்னையே யாகையால் அவ் வான்மா வொன்றே மெய்யான அபரோக்ஷப் பொருள். ஆனால் ஆன்ம நோக் கில்லாத ஜடமான ஜீவர்கள் வெளியில் அன்னியமாகக் காணப்படும் விஷயங்களை (உலகை) ஐம்புலன்களால் உணர்ந்து, அவைகளையே பிரத்தியக்ஷ அறிவாக (மெய்யான அறிவாக)க் கூறுவர்.

விளக்கக் குறிப்பு:— சுட்டறிவால் அறியும் உலகப் பொருள்களின் அறிவையே மக்கள் பிரத்தியக்ஷம் என்று கூறுகின்றனர். ஆனால், கண்முன்னே காணப்படும் இப்பிரபஞ்சம் பிரத்தியக்ஷமல்ல, ஏனெனில் பிரபஞ்சத்தைக் காண மனம், கண், ஒளி முதலிய இதர உபகரணங்கள் தேவைப்படுவதால். அதை விட உண்மையான பிரத்தியக்ஷ மாவது தன் இருப்புணர்வான (சச்சித்தான) ஆன்மாவே. 'நான் இருக்கிறேன்' என்ற முதலறிவுக்குப் பிறகே 'உலகம் முதலிய மற்றவை இருக்கின்றன' என்ற அறிவு உண்டாவதால் அவை பிரத்தியக்ஷமாகா; தானே (ஆன்மாவே) நித்தியப் பிரத்தியக்ஷ மாகும் என்றார்.

879. எல்லையற்ற ஒரே கண்ணாக இருந்து விளங்கும் ஆன்மாவுக்கு முப்புடிகளாகக் காணும் காட்சி யறிவு உண்டாக முடியுமா? (முடியா தென்க). சக்தி வாய்ந்த ஞானக்கினி யாகிய பார்வையால், மற்ற அயற்பொருள்களாய்ச் சுட்டப்படும் தோற்ற மெல்லாம் வெந்துபோய் ஆன்ம மயமே யாக அவை விளங்குவனவாம்.

880. முன் பாடலில் 'எல்லையிலாக் கண்' என்று கூறப் பட்ட 'அனந்த விழி' என்பது யாதெனின், நன்மை தீமை காலம் இடம் காரணம் காரியம் பலன் முதலிய பேத வுணர்வு கள் சிறிது மில்லாமல், எதையும் தனக்கு வேறாக அறியும்படி தான் இரண்டாகாத ஒரே மெய்யறிவே அதுவாகும்.

---

* அபரோக்கம் = பிரத்தியக்ஷ, கண்கூடான அநுபவம்

## உ. நித்தாபரோக்கத் திறன்

881. அந்தர்முகமாகச் செய்யும் ஆன்ம விசார சாதனை யின் பயனெல்லாம் என்னவென்றால், போலியாக உதித்தெழும் ('நான் தேகம்') என்னும் அகந்தையுணர்வு அழிவதுதான்! தவிர, என்றுமே யடையப்பட்டதாகவும், சுயமே தெளிவாய் விளங்குவதாகவும் உள்ள ஆன்ம சொரூபத்தை **அடைவது** (விசாரத்தின் நோக்கம்) என்று கூறுவது மிகையாகும்.

விளக்கக் குறிப்பு:— "இடம் உண்டாக்க, அங்கு அடைத்துக் கொண்டிருப்பவற்றை அகற்றினாலே போதும்; வேறெங் கிருந்தோ இடம் புதிதாகக் கொண்டுவரப்படுவ தில்லை" என்று ஸ்ரீ பகவான் 'மஹர்ஷி வாய்மொழி' என்னும் நூலிற் கூறியுள்ள கருத்து இங்கு ஒத்து நோக்கத் தக்கது. அகந்தை யழிந்தாலே போதும்; ஆன்மா அடையப்பட்டதே யாகும்.

882. தசமன் கதையில் பத்தாமவன் கிடைக்கப்பெற்றது (மறதி நீங்கியதால் ஏற்பட்டது) போலவே, (ஆன்மாவை அறி யாததாகக் கருதும்) பொய்ம்மறதி விசாரத்தால் விலகுவதால் ஆன்மா அடையப்பட்டதாகிறதே தவிர, நித்திய அபரோக்ஷமாக விளங்கும் தன் ஆன்மசொரூப அறிவின் அனுபவம் புதிதாக வந்த தல்ல.

விளக்கக் குறிப்பு:— பத்து முட்டாள்கள் ஓர் ஆற்றைக் கடந்தபின், எல்லோரும் பத்திரமாகக் கரையேறினார்களா என்றறிய தம்மை எண்ணிப் பார்த்தனர். எண்ணும்போது ஒவ்வொருவனும் தன்னை விட்டுவிட்டே எண்ணியதால், ஒன்பது பேரையே கண்டனர். அதனால் அவர்களுள் யாரோ ஒருவன் ஆற்றில் மூழ்கிவிட்டதாக எண்ணி வருந்தினர். அச்சமயம் அங்குவந்த ஒரு வழிப்போக்கன் தன்முன் அப் பத்துப்பேரும் இருப்பதைக் கண்டு, இவர்களது அறியாமையைப் போக்க விரும்பி ஆளுக்கு ஒரு அடிகொடுத்து, அடிபடும்போது ஒவ்வொருவரும் தம்மை ஒன்று, இரண்டு என்று எண்ணிக் கொண்டே வரவேண்டுமென்று திட்டம் செய்தான். பத்துப்பேரும் அடிபட்டு "ஆம், நாம் பத்துப்பேரும் இருக்கிறோம். காணமற் போனவன் கிடைத்துவிட்டான்" என்று உறுதி பெற்றனர்! இவ்வுறுதி புதிதல்ல. இது போலவே "கண்ட தன் சொரூப உறுதி புதிதன்று" என்று இச்செய்யுளிற் கூறப்படுகின்றது. தன் மறதி நீக்கமே சாதனையின் பயன்; தன்னை (ஆன்மாவை)ப் புதிதாக அடைவ தல்ல.

883. பொன்னா லான ஆபரண வடிவம் ஒன்று உருக் கப்பட்டு உருவழிந்த பிறகுதான் பொன்னாக ஆகுமா?

ஆபரண வடிவில் இருக்கும் போதும் அது பொன்னே யல்லவா? ஆபரணம் எப்போதும் பொன்னே யாவது போல, சித்தத்தாற் கற்பிக்கப்பட்ட பொய் வடிவங்களான உலகு, உயிர், இறை என்னும் திரிபதார்த்தங்களும் என்றும் சத்சித் சொரூபமே (ஆன்மாவே) என்று அறிந்து தெளிக.

விளக்கக் குறிப்பு:— பலவாகத் தோன்றிக் கொண்டிருக்கும் பொழுதும் ஜக, ஜீவ, ஈசுவராதிகள் உண்மையில் ஆன்மாவாகவே இருக்கின்றன. இவைகளின் பொய் பேதத் தோற்றம் மறைந்த பிறகுதான் அவை ஆன்மாவாகவேண்டும் என்று கருதுவது தவறு என்று உபதேசிக்கப்படுகிறது.

884. ஒருமாது தன் கழுத்தில் அணிந்திருக்கும் ஆபரணம் காணுமற் போனதாகத் தவருக மயங்கி (எங்கெங்கோ தேடிய பிறகு) தன் கழுத்திலேயே தடவிப் பார்த்து அதைப் பெற்றதைப் போன்றதே (என்றுமே அது இழக்கப்பட வில்லை என்று அறிந்து கொள்வது போன்றதே) தன்னைத் தேடி ஆன்ம விசாரத்தால் தன்னுள் ஆன்மானுபவம் பெறுவதும் ஆகும். (அதாவது, தான் என்றுமே பந்தப்பட்ட ஜீவனல்ல; அன்றும், இன்றும் தான் பரப்பிரம்மமே என்ற அறிவைப் பெறுதல்).

885. மிக மர்மமாகத் தொழில் புரியும் புலனை இவ் வகந்தையை யார் என ஆராயும் விசார மார்க்கத்தைத் தவிர மற்ற கர்மம் முதலிய மார்க்கங்களில் எவ்வளவு முயன்று உழைத் தாலும், இதயத்தில் எப்போதும் உள்ளதாகிய ஆன்ம நிதியை ஒருவன் அடைந்து இன்பமுறப் போவதில்லை!

விளக்கக் குறிப்பு:— இப் பாடலில் ஸ்ரீ பகவான் தனது தீர்ந்த முடிவைத் தெளிவாக உபதேசிக்கின்ருர். கர்மம், பக்தி, யோகம், ஞானம் முதலிய எம்மார்க்கத்தில் ஒருவன் எவ்வளவு முயன்று உழைத்தாலும் ஆன்ம லாபமாகிய பேரின்பம்கிட்டாது என்பதும், அவ்வாறு அவற்றில் முயலும் தான் யார் என்று விசாரித்தால் மட்டுமே பேரின்பப் பேறு கிடைக்கும் என்பதும் உறுதிப்படுத்தப் படுகின்றது.

886. (சாதகன் ஒருவன்) சமாதி ஷட்க சம்பத்தியாகிய தவப்பயிற்சியின் முடிவில் இனிமேல் தான் ஒரு நாள் அனு பவிக்கப் போவதாகக் கருதும் அந்த ஒப்பற்ற பிரம்ம பதம்

(ஆன்மஞானம்) ஓர் சத்திய வஸ்து* வாக இருக்குமே யாஞல் அது அனுபவிக்கப் படவிருக்கும் வருங் காலத்திற்குச் சமமாக இப் போதும் அபரோக்ஷ மாகவே (பிரத்தியக்ஷ அனுபவமாகவே) அவனுக்கு இருந்தாக வேண்டும்.

விளக்கக் குறிப்பு:— ஆன்ம சாக்ஷாத்கார நிலையானது இப்போது இல்லாதிருந்து, பிறகு ஏதோ ஓர் காலத்தில்தான் அனுபவமாகப் போகிறது என்று கொள்வோமாயின், அவ் வஸ்துவுக்கு இப்போது இன்மையும், பிறகு ஓர்போது இருப்பும் கூறப்படுவதாகின்றது. அவ்வாறு ஓர் கால் இல்லாதிருந்து பிறகு வருவது மற்ருேருகால் இழக்கப்படவும் கூடியதே யன்ருே? ஆகையால் முக்காலமும் இருப்பற்ற அதை எவ்வாறு சத்திய வஸ்து என்று கூற முடியும்? ஆஞல் சத்தியப் பொருளாகிய ஆன்ம ஞானம் அப்படிப்பட்ட தல்ல. இன்றே இங்கேயே நித்திய சித்தமாய், பிரத்தியக்ஷமாய் உள்ளது என்பதே பொருந்தும். இக் கருத்தே அடுத்த பாடலிலும் தொடர்கின்றது.

887. அந்த ஆன்மநிலை இப்போது இல்லாமலிருந்து (தவம் செய்த) பிறகுதான் வந்தடையப் பெறுமாகில், அப்படிப் புதிதாக வந்த அந்த நிலை நமது சொந்த இயல்பு நிலை யல்லாத ஒன்று என்னும் காரணத்தால் (என்ருவது பிறகு ஒரு நாள்) நம்மை விட்டு விலகி விடுமே தவிர அது நம்மிடம் சாசுவதமாக இருக்க முடியாது.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகஞர் கூறியது:— முற்செய்யுளின் இறுதிக் குறிப்பை நோக்குக. ஓர் கால் அமைந்து மற்ருேர் கால் அகலும் அனுபவம் எவ்வளவு சிறந்ததாகவும், ஆனந்தமளிப்பதாகவும் இருப்பினும் இறுதிநிலை யாகாததால் நித்தியமன்று. தன்னியல்பு நிலையே இறுதி நிலையாக அமையின் அதற்கு அழிவில்லை. தன்னியல்பல்லாத மற்ற எந்நிலையும் தன்னினின்றும் ஓர் கால் அகலல் இயற்கையும் நியாயமுமே யாகும்.

888. அதுவும் (அந்தப் பிரம்மமும்) பூரணமே யாகும். இதுவும் (இந்தப் பிரபஞ்சாதித் தோற்றமும்) பூரணமே யாகும். அந்தப் பூரணப் பிரம்மத்தோடு பூரணமாகிய இச் சிருஷ்டியாதிப் பிரபஞ்சம் லயமாகி ஒன்றுபட்டாலுங் கூட பிரம்ம மாகிய அந்தப் பூரணம் பூரணமாகவே யுள்ளது. மீண்டும் அந்தப் பூரணப் பிரம்

---

* சத்திய வஸ்து = என்றுமுள்ள பொருள்.

மத்திலிருந்து இப் பிரபஞ்ச பூரணம் பிரிந்தாற் போல் வெளிப் பட்டாலும் அந்தப் பிரம்ம வஸ்து பூரண மாகவே மிஞ்சி நிற்கின்றது!

விளக்கக் குறிப்பு:— இச் செய்யுள்,

பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே|
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவஸிஷ்யதே ||

என்ற சுலோகத்தின் மொழி பெயர்ப்பு; பகவானால் மேற்கோளாகக் காட்டப் பெற்றது.

889. 'அது' எனப்படும் 'தத்' பதமும் பரவெளியே. 'நீ' எனப்படும் 'த்வம்' பதமும் பரவெளியே. 'தத்வம் (அஸி)' என்றறிவிக்கும் மஹா வாக்கியோபதேசமும் பரவெளி மயமே யாகும். சகலத்திற்கும் ஆதாரப் பொது வஸ்துவாக இருந் தொளிரும் சத்திய பரிபூரண பிரம்மத்தைத் தவிர்த்துப் புதுப் பொருளாக ஒன்று அடையப் படுவதற்கு மில்லை; அல்லது ('நேதி' செய்து) விலக்கப் படுவதற்கும் ஒன்று மில்லை.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— 'பந்தவீ டற்ற பரசுகம்...' என்ற உபதேச வுந்தியார் வாக்கை இச் செய்யுள் விளக்கி நிற்கின்றது. வீடு பெறுதலும் உண்மையில் இன்றென அறிய வேண்டும். பந்தம் கற்பனையாதலின் வீடும் கற்பனையே. சொரூபத்திற்கு (ஆன்மாவுக்கு) அயலாய் ஞானியுமில்லை; அஞ்ஞானியு மில்லை; (மஹா வாக்கிய) ஞானோபதேசமும் பரமார்த்தத்தில் இல்லை! இயல்பான சொரூபம் விட்டகன்றது என்ற நினைவும் பொய்; அந்நினைவால் வந்த துயரை நீக்கப் புரிந்த தவமும் பொய்; இயல்பில் மறுபடி யமர்ந்ததான ஞான நிலையும் பொய்யே! சொரூப மொன்றே என்று முள்ளது என்பது உபதேசம்.

890. இரண்டற்ற பூரண ஆன்ம சொரூபத்தைத் தவிர, 'அது' என்றும் 'இது' என்றும் வியவகார சத்திய அடிப்படையில் சொல்லப்படும் எல்லாத் தத்துவங்களும் கொஞ்சம்கூட உண்மையல்ல (பொய்யே) என்பதுதான் பரமார்த்தம். அந்தக் கைவல்ய பூரண ஆன்ம சொரூபத்தினிடத்திற் கூறப்பட்ட அவை யெல்லாம் வெறுங் கற்பனையே என்பதுதான் (ஞானிகளாகிய பெரியோர்களின்) சித்தாந்தம்.*

*சித்தாந்தம் = தீர்ந்த முடிவு

891. *(பிரபஞ்சமாகிய)* பற்பல பொருள்களாக உண்டாகி யுங்கூட அந்த ஏக வஸ்து சிறிதும் மாற்ற முண்டாகாதது என்றே *(தம் அனுபவத்திற் கண்ட மெய்ஞ்ஞானிகள்)* கூற வேண்டி யிருப்பதாலும், பழமைக் காலந்தொட்டு என்றுமே யாருமே அந்த வஸ்துவாகவே இருப்பதாலும், நம் யதார்த்த ஆன்ம நிலையானது நித்தாபரோக்ஷமே என்று அறியும் மெய் யறிவைப் பெறுதலே விடுதலை *(மோக்ஷம்)* ஆகும் என் றறிக.

892. ஆன்ம சொரூபமானது அத்துவிதம் என்பதைச் சிர வண மனனத்தால் நன்கு ஆராய்ந்து, பிறகு நிதித்தியாசனத்தால் அடைவதற்கு மிக முயற்சி செய்தும் பிரமாதத்தாற் பலமுறை தடுமாறித் தவறி, மேலொன்றும் செய்வ தறியாது திணறும் சாத கனின் ஜீவமுயற்சி ரூபமான சகல மனோவிருத்திகளும் அடங்கி ஓயும் போது *(அவ்வாறு மனமோய்ந்து அடங்கும்)* உள்ளத்தில் தாமாகவே விளங்கும் உணர்வுதான் அந்த மெய்ப் பொருளின் இயல்பாகும்.

விளக்கக் குறிப்பு:— *சாதகர்களின் உண்மையான அனுபவத்தை இச் செய்யுள் அப்படியே படம் பிடித்துக் காட்டுகின்றது. சிரவண மனனங்களை முறைப்படி யடைந்தபின் நிதித்தியாசன மாகிற தன்னோட்டத்திற் பலமுறை தவறித் தவறித் தனது (ஜீவ) அசக்தத்தை யுணர்ந்து, வருந்தி, ஓய்ந்து நிற்பது பல உண்மைச் சாதகர்களின் அனுபவமேயன்றோ? அவ்வாறு மனம் மிக ஓய்ந்து நிற்கும்போது, அந்நிலையானது சகல முயற்சிகளுக்கும் மூலமான மனத்தின் பரிபூரண ஒழிவேயாவதால், ஆன்ம உணர்வு பளிச்செனத் தடையற்று அனுபவப் படுவது அப்போதுதான் என்று இச்செய்யுள் தொட்டுக் காட்டுகின்றது.*

## ௩. நிருவிகற்ப சமாதித் திறன்

893. வேறுபடும் வெளிப்பொருள்க ளாகிய பிரபஞ்சம் உணரப்படாமல் *(கட்டை போன்று உடல்)* இருப்பதுதான் திறமையான நிருவிகற்ப சமாதியின் சிறப்பு என்பது தவறு. உள்ளே மனம் இறந்துபட்டதால் சகல சங்கற்ப விகற்பங்களு மற்று இருப்பதுதான் மிகச் சிறந்த நிருவிகற்ப சமாதி யாகும்.

விளக்கக் குறிப்பு:— உடலுலகம் அறியாமற் கட்டை போல் ஒருவன் இருப்பதுதான் நிருவிகற்ப சமாதி என்று பலர் எண்ணி வருகின்றனர்.

காஷ்ட நிருவிகற்பம் எனப்படும் இந்நிலையிற் சிறிது காலம் இருந்த பிறகு தேகவுணர்வு வரும் போது மனம் பகிர் முகப் பட்டு வாசனை வயத்ததாய் காமக் குரோதாதிகளை மீண்டும் எழுப்பும். இச் சமாதியானது அப்பியாச காலத்தில் தாற்காலிகமாக நிகழும் மனோலய அனுபவமே யாகும். தான் இவ்வுடல் என்ற விகற்பவுணர்வு நிரந்தரமாக அற்றுப் போவதே மனோ நாசமாகிய நிருவிகற்பம் ஆகும். இதுவே ஸஹஜ நிருவிகற்பம் எனப்படும் ஞான நிலை. முதலிற் கூறப்பட்ட காஷ்ட அல்லது கேவல நிருவிகற்ப நிலையானது ஒரு கயிற்றூற் கட்டப்பட்டுக் கிணற்று நீருள் மூழ்கித் தொங்கிக் கொண்டிருக்கும் ஓர் குடத்திற்குச் சமானமானது. குடம் போன்ற மனம் வெளிவராமல் இந் நிலையில் லயப்பட்டிருக்கிறது. ஆனால் எந்தச் சமயத்திலும் குடத்தை வெளியில் இழுத்து விடலாம்; அது போல, நாசமாகாத மனமும் காஷ்ட நிருவிகற்பத் திலிருந்து ஏதேனும் ஒருசமயம் மீண்டும் வெளிப் பட்டு அலையும். ஆனால் ஸஹஜ நிருவிகற்பத்திலோ நீரில் இடப்பட்ட உப்புப் பதுமையைப் போல மனம் ஆன்மாவிற் கரைந்து தன்னுரு வழியப் பெற்று விட்டது. அதனால் அது மீண்டும் எழாது. மனோ நாசமான ஸஹஜ நிருவிகற்பமே மெய்யான சமாதி நிலையாகும்.

894. "இருக்கின்றேன்" என்னும் நமது இயற்கையான சாமானிய இருப்புணர்வு மாத்திரமாய் இருப்பதுதான் சமாதி நிலை எனப்படும். அகங்கார உபாதியோடு ஒன்று பட்டு எழுகின்ற (நான் இன்னாராக இருக்கிறேன், நான் தேகமாக இருக்கிறேன், நான் மனிதனாக இருக்கிறேன், நான் இது அல்லது அதுவாக இருக்கிறேன் என்பது போன்ற) கலப்பு இருப்புணர்வினின்றும் பிரிந்து, அவ் வெல்லையற்ற (சுத்தமான) இருப்புணர்வாம் சமாதிநிலையிலேயே நிற்பா யாக.

895. "நான் இது, அதுவாக இருக்கிறேன்" என்ற அகந்தை யுணர்வற்று, "நான் இருக்கிறேன்" என்று மட்டும் வெறும் இருப்புணர்வாக மிஞ்சும் நடுநிலையே ஞானத்தின் வரம்பு (அறிவின் எல்லை) எனப்படும் மோன சமாதி என்று ஞானிகள் கூறுவர். ஆத்ம சொரூபமே தானாக விளங்கும் அந்த மோன சமாதி சித்திக்கும் வரையிலும் 'அகந்தை நான்' ஆகிய உணர்வு அற்றுப் போவதையே குறிக்கோளாகக் கொண்டு தன்னாட்டம் பயில்க.

896. உதிப்பதும் ஒடுங்குவதுமாயிருக்கும் 'நான்' என்னும் அகந்தைத் தன்மை யுணர்வைப் போலல்லாமல், ஆன்மாவாகிய

'தான்' (உதயாஸ்தமனமற்று) என்றும் ஒரே விதமாக நிலைத்து விளங்குவதால், 'நான்' என்ற பொய்த்தன்மையுணர்வு அழியு மாறு அதைப் புறக்கணித்து, 'தான்' என்னும் மெய்த்தன்மை யுணர்வே நீயாக இருந்து விளங்குவா யாக.

விளக்கக் குறிப்பு:— 'நான் இன்னார்' அல்லது 'நான் இது' என்று தோன்றும் கலப்புணர்வே (first person) தன்மையிடமாகக் கொள்ளப்படுவது. ஆனால் 'தான்' என்று மட்டும் தனித் தொளிரும் இருப்புணர்வோ தன்மை, முன்னிலை, படர்க்கை யெனும் மூவிடங்களுள் ஒன் றுகாத ஆன்ம வுணர் வாகும். ஆகையால் யானற்றுத் தானாய் விளங்குக என்றார்.

897. 'நான் ஓர் ஜீவன்' என்று நினைத்துத் தன் இயல்பு நிலை கெட்ட என் நெஞ்சமே, (நீ இனி) 'நான் பிரம்மம்-கடவுள்' என்று நினைக்க (தியானிக்க) ஆரம்பிப்பதால் மீண்டும் ஏமாறவே போகிறாய்! ஏனெனில் மேலான அந்த முடிவு நிலையில் உள்ளபடி யுள்ள உள்ளமாம் தன்னை (ஆன்மாவை)த் தவிர 'நான் இது' என் றறிய எதுவுமே யில்லை.

விளக்கக் குறிப்பு:— 'நான் மனிதன்' என்ற உணர்வு ஓர் எண்ணமே. இதுவே அகந்தையின் வடிவம். இவ்வாறே ஒருவன் 'நான் பிரம்மம்-நான் சிவன்-நான் அவன்' என்று தியானிக்க ஆரம்பிப்பானாகில் அதுவும் மற்றொருவித அகந்தை வடிவ எண்ணமே யாகிவிடுவதால், எண்ண வடிவத்தை விட்டு இருப்பு வடிவான ஆன்ம நிலையை யடையாமல், மற்றொருவித எண்ண வடிவத்தையே மீண்டும் அடைவதால் அவன் ஏமாந்து போகிறான் என்று எச்சரிக்கப் படுகின்றது.

898. எண்ண வடிவப் பிரவிருத்தி ஏதுமற்று, 'இருக் கிறேன்' என்றுமட்டும் விளங்கும் தன்னிலையில் மனம் ஒன்றி நிலைத்து விடுவதால் அனுபவப்படும் தன் அகண்ட இருப் புணர்வே சமாதியாகும். இவ்வாறு அடங்கியதும், (நான் இது அது என) இரண்டாக பிளவு படாததுமான பரமாத்ம நிலையிற் கூடி நிற்கும் மனமே கடவுள் என்பதின் உண்மை யாகும்.

விளக்கக் குறிப்பு:— அலைந்தால் அலை எனப்படும்; அவ்வலையே அலையாமல் அமைந்து நின்றால் சமுத்திரம் ஆகிவிடும்! அது போல, பிரவிருத்தியும் எல்லையுபாதியும் உள்ள வரையில் எது மனம் எனப்படுகிறதோ அதுவே நிச்சலமும் அகண்டமுமாய்த் திகழும்

போது கடவுள் சத்து எனப்படும் பிரம்மம் ஆகும் என்றார். 'இது, அது' என்னும் எல்லா உபாதிகளையும் கடந்து உள்ள தன்னிலையே கடவுள் எனப்படுவதாம்.

899. சுட்டி யறியும் மனவறிவுக்கு மூலமாய் உள்ளே இருக்குமறிவாய் உள்ள மெய்ப் பொருளை யடையும் உபாயத் தைக் கேட்பாயாக. பொருள்களைச் சுட்டியறியும் மன அறிவி னாலேயே, 'இந்த மனம் என்பதின் உரு யாது' அல்லது 'எங்கி ருந்து எப்படிக்கிளம்புகிறது?' என்று விசாரித் தறிவதுதான் அந்தர்முகமாகி ஆன்மாவில் மூழ்குவதற்கான வழி யாகும்.

விளக்கக் குறிப்பு:— "..........மணி கடைந்தென மனம் மன மெனுங் கல்லில் மறுவறக் கடைய நின்னருளொளி மேவும்........." எனவரும் அருணாசல அஷ்டகத்தின் ஐந்தாவது செய்யுளின் இரண்டாம் அடி இங்கு நோக்கற் குரியது. வேறு எக்காரியத்தைச் செய்யினும் அழியாத மனம், தன் உரு யாது என்று தன்னை நாடும்போது மட்டுமே நசிக்கும் என்பது ஸ்ரீ பகவானது அனுபவம். மனத்தால் பிறவற்றை ஆராய்வதும் தியானிப்பதும் அந்தர்முக மல்ல. அது மெய்ப்பொருளை யடையும் வழியுமல்ல. மனத்தால் மனமாகிய தன்மை யொருமை யுணர்வையே நாடி நிற்கும் தன்னாட்டப் பயிற்சியே மனத்தை ஆன்மாவில் மூழ்க வைத்து அழிக்கக் கூடிய வழியாகும். இதுவே மெய்ப் பொருளை யடையும் வழி.

900. அறிவு சலனமுறாது அடங்கித் தான் தானாகவே நிலைபெற் றிருப்பதுவே தான் சிவத்தை யடைந்த தாகும். ஏனெ னில், மற்றொரு இரண்டாவது பொருளாக அறிபடவோ அறிய வோ அவ் வறிவை விட ஏதொன்றும் இல்லாமல் விளங்கும் தனது ஸ்திர இருப்புணர்வே சுத்த சிவ மாகும்; அல்லவா?

901. விலக்கற் கரிய மெய்ஞ்ஞான முடிபாக மகான்கள் தீர்மானித்துக் கூறும் பேரின்ப மயமாம் மோன சொரூப முழு முதற் பரம்பொருள் எதுவென்றால், உள்ளும் வெளியும் ஒரே விதத் தன்னுணர்வு வடிவாக சமாதி நிலையிற் பிரகாசிக்கும் இருக்கின்றேன் என்னும் சிதானந்த விளக்கமே யாகும்.

விளக்கக் குறிப்பு:— எல்லைக் குட்பட்ட உடலையே 'நான்' என்று கருதுவதாலேயே 'இருக்கிறேன்' என்ற தன்னுணர்வு உடலுக்குள்ளே மட்டும் விளங்குவதாகவும் உடலுக்கு வெளியில் தான் இல்லாததாகவும் ஓர் உணர்வு எல்லோருக்கும் அனுபவ மாகின்றது. அவ்வாறு உடலை நான் என்று அபிமானிக்காவிடில் 'உள் - வெளி'

என்ற பேதவுணர்வு உண்டாக இடமில்லை. இந் நிலையில் உள் - வெளி யற்ற ஒரே உணர்வாய் விளங்கும் 'இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வே மெய்ஞ் ஞான முழுமுதற் பொருளாகும்.

902. மோனமே வடிவாகத் தீர்ந்து விளங்கும் (மேற்கூறிய) முழுமுதற் பொருளை 'நான் அது' என்று எண்ணியெண்ணி அல்லற்படுவது எதற்காக? எண்ணும் மனம் மோன மடைவதே சமாதி நிஷ்டை யாகும். அச் சமாதி நிஷ்டையோ 'நான்' என்னும் முதலெண்ணம் அற்றுப் போவதுதான். அதுவே மனமற்ற மோனம். இவ்வாறு 'நான்' அற்ற பிறகு 'நான் அது-பிரம்மம்' என்று எண்ணுவதற்கு இடம் ஏது?

விளக்கக் குறிப்பு:— அஹம் பிரம்மாஸ்மி, ஸோஹம், சிவோஹம் என்றெல்லாம் தியானிப்பது ஞான சாதனமல்ல என்பதே ஸ்ரீ பகவானது உபதேசம். தன்னை யார் என்று விசாரித்து நானற்றுப் போவதொன்றே உண்மையான ஞானசாதனம்.

## ௬. நிருவிகாரத் திறன்

903. அரிய பெரிய சிறந்த அறிவாளிகளே! காணப்படும் இப் பிரபஞ்சத்தின் தோற்றமும் மறைவு மாகிய விகாரமானது உண்மையிலேயே தொடர்ந்து நிகழும் நிலையான ஒன்றா? அல்லது உண்மையில் விகாரம் (மாற்றம்) அற்றதோர் மெய்ப் பொருள் விகாரம் போலத் தோன்றிக்கொண் டிருக்கிறதா? இந்த விகார நிலையை (மாற்றமுள்ள தன்மையை)ப் பற்றிய உங்களது முடிந்த கொள்கைதான் என்ன? (சொல்வீர்களாக.)

விளக்கக் குறிப்பு:— இந்நூலின் 63, 64, 65 ஆவது பாடல்கள் இங்கு மீண்டும் கவனிக்கத் தக்கன. உண்டாதல், வளர்தல், குன்றல், அழிதல் ஆகிய மாற்றங்கள் இவ்வுலகத்திற்கு உள்ளதாயினும், உண்மையான இத்தனை மாற்றங்களையும் கொண்ட ஒரு நீடித்த சத்தியமே இப் பிரபஞ்சம் என்ற கொள்கை யுடையோராய் சிலர் இருந்து வருகின்றனர். அவர்களது கருத்து தவறு என்பதை எடுத்துக் காட்டி, என்றும் ஏதும் மாற்ற மற்ற ஆன்மாவே உமது திருஷ்டி தோஷத்தால் பல வேறு மாற்றமுடைய இப் பிரபஞ்சமாகத் தோன்றுகிறது என்பதைக் கண்டு கொள்ளுங்கள் என்று ஸ்ரீ பகவான் உபதேசிக் கின்றார். இக் கருத்தொன்றே பல நியாயங்களால் பாடல் 903 முதல் 907 வரையுள்ள இத்திறன் முழுவதிலும் நிரூபிக்கப்பட்டு, அவ்வேற்றுக் கொள்கையினர்க்கு ஏற்ற மறுப்புரையாக அமைந்துள்ளது.

904. குறைபாடுடைய இவ் வழுக்குடலின் பிறப்பாலும் இறப்பாலும்தான் (உடலின் தோற்ற வொடுக்கத்தால் தான்) இவ்வுலகம் என்னும் அற்பமான தோற்றமும் அதன் மறைவும் காணப்படுகின்றன. ஞானுகாச சொரூபமான ஆன்மாவுக்கு இத்தகைய உலகமாகச் சிருஷ்டி யாதலும் அழிதலுமாகிய விகாரம் உண்டாகிறதென்று கூறுவது, மேகங்களின் தோற்றத் தையும் மறைவையுங் கொண்டு ஆகாசம் தன் வடிவில் மாற்ற முள்ளதாகக் கூறுவது போன்ற அறியாமையே யாகும்.

விளக்கக் குறிப்பு:— உடலின் தோற்றம்-மறைவு என்னும் அற்பத் தன்மையாற் காணப்படும் உலகத் தோற்ற வொடுக்கமாகிய விகாரமும் ஓர் அற்பமான அசத்திய நிலேயே யாகும்.

905. புலப்படும் இவ்வுலகை (தன் தூய அறிவுக்கண்ணுற் பார்த்து) அறவே புலப்படாததாக (இல்லாததாக) வாசனுக்ஷயத் தால் நீக்கி விடுகின்ற ஆன்மசொரூபத்தை, விகாரப்படும் ஒரு பொருளாகக் கருதித் தடுமாறும் மயக்கத்தைவிட வேறு பெரிய தோர் மயக்கமும் இருக்க முடியுமோ? (முடியா தென்றவாறு).

விளக்கக் குறிப்பு:— "………கண்ணலாற் காட்சியுண்டோ? கண் அதுதான் அந்த மிலாக் கண்ணுமே………" என்று ஸ்ரீ பகவான் உள்ளது நாற்பதின் 4-ஆவது பாடலிற் கூறுவதையும் இங்கு காண்க. கண் எப்படியோ காட்சியும் அப்படியே யாதலின் ஊறுபடும் ஊனக்கண்ணுற் காணுமல் மாறுபடாத எல்லே யற்ற தன் ஆன்ம சொரூபப் பார்வையாற் பார்க்கும்போது இப் பிரபஞ்சமே தோன்றுமல் தானே ஏகமாய் விளங்குவது தெரியும். அப்படியிருக்க, ஆன்மாவாகிய மெய்ப்பொருளே இவ் வற்ப உலகமாகக் காணும் மயக்கத்தைவிடப் பெருமயக்கம் வேறெதுவும் இருக்கமுடியுமா என்று கேட்கின்றுர் ஸ்ரீ பகவான்.

906. மண், நீர், நெருப்பு, காற்று ஆகிய நான்கு பூதங் களின் குணகுண விகாரங்கள் வியாபகமான நிர்விகார ஆகாயத்தை எப்படிப் பற்றுவ தில்லேயோ, அதுபோலவே தோற்றமாத்திர இப் பிரபஞ்சப் பிரவிருத்தி வடிவ சலனங்களால் ஏற்படும் மாற்றங்களாகிய கேடுகள் மாறுபாடற்ற ஆன்மாவை ஒருபோதும் அடையா.

விளக்கக் குறிப்பு:— 'நான் யார்?' என்ற நூலில் ஸ்ரீ பகவான் கூறும் இக் கருத்தையும் இங்கு ஒத்து நோக்குக.

907. மனேவி என்றும், நாத்தி என்றும், மருமகள் என்றும், மைத்துனன் மனேவி என்றும், தாய் என்றும் இன்னும்

பலவித உறவுப் பெயர்களால் ஒருத்தியேதான் பலரது நினைவு களில் தோற்றுகின்றாள். ஆயினும் உண்மையில் அவள் சிறிதும் உருமாற்றம் அடைவதில்லை யல்லவா? (அது போலவே, ஜீவனது அஞ்ஞான திருஷ்டியில் ஜக ஜீவ ஈசுவர நானாவித நாமரூப விகாரங்களுடன் கருதப்பட்டாலும் ஒன்றேயான ஆன்மா நிர்விகாரியே என்பது கருத்து).

## ரு. ஏகாந்தத் திறன்

908. அழிவற்ற மோக்ஷத்தை அடையும் வழிநிற்கும் சாதகர்கட்கு இனிதே யமையவேண்டிய பற்பல நற்குணங்களையும் ஆராய்ந்து பார்க்குமிடத்து, நிலைத்த தனிமையை (ஏகாந்தத்தை) விரும்பும் குணமே மனத்தில் நன்றாக ஊறியிருக்க வேண்டிய தொன்றாகும்.

விளக்கக் குறிப்பு:— 'ஏகாந்தம் ஒரு இடமல்ல; அது மனத்தின் பாங்கு' என்று ஸ்ரீபகவான் கூறுவதுண்டு. முமுக்ஷு ஒருவனின் மனம் சகல வாசனைகளும் (நினைவுகளும்) அற்றிருக்கும் ஆனந்த நிலையையே விரும்புவதாக இருக்கவேண்டும் என்பது வற்புறுத்தப்படுகின்றது. **912** ஆவது பாடலையும் இங்கு வாசித்துணர்க.

## சு. அசங்கத் திறன்

909. ஏ, மனமே! (உண்மையில் ஆன்ம சொரூபமான) உன் சந்நிதியில் உன் சந்நிதி விசேஷத்தால் (பொய்யான) தேகாதி சகல தத்துவங்களும் தம்முள் ஒன்றோடொன்று இணைந்து அளவிலா விகார வியவகாரங்களை அடைந்து கொண் டிருந்தாலும், தான் பற்றற்று அவைகளுக்கு வேறாக மிஞ்சி நிற்கும் சொரூப ஞானானுபவ திடத்தால், உள்ளங் கலங்காமல், அவைகளுக்குச் சாட்சியாக இருந்து விளங்குவாயாக.

விளக்கக் குறிப்பு:— மனத்தை விளித்துக் கூறுவதாக இச் செய்யுள் அமைந்திருந்தாலும், மனத்தின் மூல வுண்மைப் பொருளாகிய ஆன்மாவாகவே அதனை மதித்துக் கூறப்பட்டதாகும்.

910. எவையெவை தம்மிடம் எவ்வளவெவ்வளவு வந்து சேர்ந்தாலும், அல்லது தம்மிடமிருந்து எவையெவை எவ் வளவு நீங்கினாலும், அவைகளின் போக்கு வரவுகளுக்குச்

சாட்சியாகிய ஆன்மாவாம் தான் அவைகளுக்கு வேருன வஸ்துவாய் — காற்ருல் துரும்பு அலேவது போல் அவைகளால் சித்தம் விகாரமுற்றுக் கலங்காதவனுய் — அவைகளிடம் தாம் அவ்வப் போது அமைந்திருக்க வேண்டியவாறு (திரையில் வந்து போகும் நீர் நெருப்புப் படங்களின் போதும், அவற்ருல் பாதிக் கப்படாமலும் ஆனுல் அவ்வமயங்களில் அவற்றின் இருப்புக்கு ஆதாரமாய் திரை யமைந்து நிற்பது போலவும்) இருந்து கொண்டு, அவற்றுடன் பற்றற்று நிற்பதே சகஜாத்ம ஞான நிலேயாகும்.

911. எல்லாப் பொருள்களின் உள்ளிலும் வெளியிலும் குறுக்கு - நெடிக்கிலும் (எங்கும்) ஆகாயம் வியாபித்திருந்தும் அப்பொருள்களோடு சிறிதும் பற்றடையா திருப்பதைப் போல, எதிலும் பற்றற்ற ஆன்மாவாக ஒருவன் தன்னே யறிந்து கொண்டாலன்றி, அவைகளின் மயக்கத்துள் அகப் படாதிருப்பது இயலாது.

குறிப்பு:— ஆன்மஞான மின்றேல் உலகிற் பற்றற்று வாழ்வது இயலாது என்று உபதேசிக்கப்படுகின்றது.

912. உள்ளே யுள்ள பூர்வ வாசனேகள்தான் உண்மை யான பற்று ஆவதால் அவைகளே விடப்பட வேண்டியவை யாகும். (வெளிப் பொருள்களே விடுதல் பற்றை விட்டதாகாது). ஆகையால் வஞ்சகமான அவ் வாசனேகள் அழிக்கப்பட்டு, மனேநாசம் என்னும் சிறப்பைப் பெற்ற ஞானிகள் உலகில் எந்த வருணுசிரம முறையில் வாழ்ந்தாலும் குற்றமில்லே (அவர்கள் பற்றற்றவர்களே).

## எ. மனே நிக்கிரகத் திறன்

913. ஒரு நிலேப்படாமல் தாறுமாருகத் தம் மனத்தை அலேய விடும் மக்களுக்கு வாழ்வில் எல்லாக் காரியங்களுமே (எதிர்பார்த்த பலனேத் தராமல்) முரணுகி மாறுபட்ட பயனேயே விளேவிக்கும்.

குறிப்பு:— மனம் போன வழியெல்லாம் போகும்படி விடாமல் கட்டுப்பாட்டுக்குட் கொண்டுவருவதே வேண்டும் எனப்பட்டது.

914. வாயுதேவனும் அஞ்சும்படியான வேகத்துடன் எந்த இடத்திலும் நிலேயின்றி யலேயும் மனத்தை, எங்குமே போக முடியாமல் இருக்கு மிடத்திலேயே கிடக்கும் முழுமுடவன்

ஒருவனைப் போல அசைவற்ற தாகும்படி அடக்கி யழிப்பதுதான் உண்மையான சாவாத் தன்மையை அடைவதாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் கூறியது:— ஜனனமரணச் சம்சாரம் உண்மையில் மனத்துக்கே யன்றி ஆன்மாவுக் கின்மையின், அம் மனத்தோடு அதன் வடிவாகவே தானும் சலியாது, அதனைத் தனக்கு அயலாக்கி மாய்க்கவே, தன் உண்மையாம் அமரத் தன்மை ஒருவற்கு அறிபடும் என்பதாம்.

915. (விளை பயிரைக் கெடுக்கின்ற) களையைப் போல முளைக்கும் மூவாசைகளையும் அவைகள் முளைத் தெழும் முன்பே வேரொடு கிள்ளி விடுவதால், காற்றுல் உந்தப்பட்டு எழும் அலைகள் சிறிது மில்லாது அமைதியுற்றிருக்கும் ஓர் பரந்த கடல்போல, மனம் (எண்ணமாகிய அலையெழுச்சியே சிறிது மில்லாமல்) அடங்கி யிருக்கப் பெறுவது தான் ஞான மாகும்.

916. வீசியெழுந்து அலைக்கழிக்கும் பெருந் துன்பங்கட்கும் இடந்தரக் கூடியதா யுள்ள ஐம்புலன்களுள் எந்த ஒரு புலன் வழியிலும் சிறிதும் மனம் செல்லாமல், கொந்தளித்த கடலானது அலை முற்றும் ஓய்ந்து அமைதியுற்றது போல, மனம் அடங்கி யிருப்பது தான் ஞானம்.

917. மேகக் கூட்டங்கள் நிறைந்த வானத்தில் சூரியன் தோன்றியிருப்பதை நாம் பார்க்க முடியாதது போலவே, அஞ்ஞான இருளாகிய எண்ணக் கூட்டங்கள் நிறைந்த மன வெளியில் ஆன்ம சொரூபத்தைக் காண்பது முடியாத தாகும்.

918. மனத்தை வென்றவன் ஞானயானையின் பிடரியில் ஏறியமர்ந்து பவனிவரும் அருட் சக்கரவர்த்தி யாவன். மனத்தின் சுழற்சியே கொடிய பிறவிப் பெருந்துய ராகும் பந்தம் என்று தெளிவா யறிக.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் கூறியது:— சித்தச் சலனமே பிறவித் துன்ப வேர் ஆதலின் நினைவே பந்த மென்றுர். நினைவுகளை யொழித்த கணமே தன் இயல் (ஆன்மா) விளங்குவதால், அவ்வாறு மனமிறந்தவனை ஞான வேழத்தின் மேல் அமரும் அரசர்க் கரச னென உருவகப் படுத்திச் சிறப்பித்தார்.

919. மனக் கலக்க மற்றுச் சிந்தை ஓய்ந்து தெளிந்த நிலை தான் மோக்ஷத்திற் கேற்ற உறுதியான சமாதிநிலை யாகும். ஆகையால் உள்ளம் தெளிவதாகிய உபசாந்த உணர்வு வடிவாய் ஆவதற்காக ஊக்கத்தோடு முயன்று வஞ்சகமான மனக் கலக்கத்தை அழிப்பாயாக.

920. ஆன்ம தரிசனத்தாலன்றி அகங்காரம் அழியாது. அதே போல, மனோ நாசச் சிறப்பாலன்றித் துன்பக் கனவேயான உலகவாழ்வுத் தோற்றமும் நீங்காது.

விளக்கக் குறிப்பு:— உலக வாழ்வின் துன்பம் நீங்க வேண்டுமாயின் மனம் அழிய வேண்டும். மனம் அழிய வேண்டுமாயின் ஆன்மா உணர்வாக வேண்டும். ஆகையால் ஆன்ம ஞானமே துக்க நிவிருத்தி என்று தேற்றப்பட்டது.

921. (பொறி வழி வெளிப் பாயும் சுபாவத்தை யுடைய) மனத்தின் பிரவிருத்தி இயல்பை எதிர்த்து அழித்தல் யாருக்கும் இயலாததே. (ஆனால் அதனை வெல்லும் உபாயம் யாதெனின்) அம்மனம் ஓர் மெய்யான பொருளல்ல (வெறும் பொய்த் தோற்றம்) என்று கருதி, அதனைப் பொருட்படுத்தாமல், உதாசீனப் படுத்தி, அதன் (தோற்ற வொடுக்கத்திற்கு) அடிப்படையான ஆன்மாவையே நாடி யறிந்து அனுபவித்து அதிலேயே நிலை பெறுவாயாகில், பொய்யான அம் மனமாயையின் பிரவிருத்தி வேகம் (கவனிப்பாரின்மையால்) கொஞ்சங் கொஞ்சமா யழிந்து போம்.

விளக்கக் குறிப்பு:— வாலியை நேரே எதிர்ப்போர் தம் வலிமையிற் பாதியை அவனிடம் இழந்து விடுவது போலவே, மனமாயையின் வேகத்தை நேரே எதிர்த்துப் போராடுவதும் ஆகும். ஆகையால் அது கூடாது. நம்மால் அறிபடு பொருளாகிய அம் மனத்தை முன்னிலைப் பொருள்களுள் ஒன்றாய்க் கொண்டு, அதனைக் கவனியாது உதாசீனப்படுத்தி, நம் நாட்டத்தைத் தன்மையுணர்வாகிய நம் மீதே திருப்பி நிறுத்துவதால், மனம் நம் அனுக்கிரக லாபத்தை யிழந்து வலிவு குன்றிக் கிரமமாகத் தானேயழியும்.

922. மனத்தைத் தொழிற்படாமல் அழிக்கும் உபாயத்தைத் தாம் சிறிது மறியாமல் ஏங்கி வருந்தும் மக்களே! காணப்படு பொருளாகிய பிரபஞ்சமும், அதைக் காண்பானாகிய ஜீவனும் பொய்த் தோற்றங்களாகத் தன்னிலிருந்து (ஆன்மாவிலிருந்து)

எழுவனவே என்ற மெய்க்காட்சி பெறுவது ஒன்றுதான் (மனத்தை யழிக்கும்) உபாய மாகும்.

923. பொன்னில் பலவித ஆபரணங்கள் தோன்றுவது போலவும், கானலில் நீர் தோன்றுவது போலவும், கனவில் அரண் சூழ்ந்த நகரம் தோன்றுவது போலவும் (இம்மூவிதத் தோற்றங்களும் பொன், கானல், துயில்வோன் ஆகியவைகளின் மயமாகவே முடிவது போல) காணப்படுவன யாவும் உண்மையில் தன்மயமே (ஆன்ம மயமே) யாகும். காணும் தன்னைவிட அன்னிய சத்துக்களாக அவைகளைக் கருதுவது பிழையாகும்.

## அ. மிருத மனத் திறன்

924. மனம் எண்ணங்களாக விரிந்து அலையாமல் (நான் என்னும் அகந்தையுணர்வு) முற்றும் ஒழிந்த பிறகுங்கூட, அறிவுக்கும் இன்பத்திற்கும் இருப்பிடமாய் (நான் நானே என்னும்) ஓர் உண்மைப் பொருள் — அது வரையில் காலக் கற்பனைக்குள் மறைந்திருந்தது போல் தோன்றினும் — என்றும் விளங்கிக் கொண்டே யிருக்கின்றது என்று நிச்சயமாகக் கூறுவேன்.

விளக்கக் குறிப்பு:— 'நான் இவ்வுடல்' என்ற வடிவில் எழுந்துள்ள மூல எண்ணம் அழிந்த பிறகும் 'நான் நானே' என்று விளங்கிக் கொண்டிருக்கும் சச்சிதானந்தாத்மா ஒன்று உண்டு என்று இங்கு வலியுறுத்தப்படுகின்றது. "நான் ஒன்று தானத்து நான் நான் என்றொன்றது தானாகத் தோன்றும்........." என உபதேசவுந்தியார் 20 ஆவது பாடலிற் கூறப்பட்டதை இங்கு நோக்க வேண்டும். பௌத்தம் போன்ற மதக் கொள்கையினர் சிலர், 'முடிவில் ஆன்மா என்று ஒன்றும் மிஞ்சாது; பாழே, சூனியமே' என்று வாதிப்பதை மறுத்து 'ஞானானந்த சத்திய வஸ்து ஒன்று நிச்சயமாக உண்டு, அந்நிலை பாழன்று; அது பூன்றம்' என்று தனது அனுபவத்தினின்றும் எடுத்துக் காட்டி ஊர்ஜிதப்படுத்துகின்றார் ஸ்ரீ பகவான். "......தான் அறிவாகும்; பாழன்றறி" எனவரும் உள்ளது நாற்பதின் 12 ஆவது பாடலும் இக் கருத்தை விளக்குவதே.

925. 'இப்போது-அப்போது' என்ற காலபேதமும், 'இங்குள்ளது-அங்குள்ளது' என்னும் இடபேதமும், 'இருப்பது-இல்லாதது' என்னும் உண்மை (உள்+மை, சத்)பேதமும் ஆகிய இந்நினைவுகளுள் ஏதொன்றும் கொஞ்சங்கூட இல்லாத

தாய், அழிவற்ற ஒன்றாய், நித்திய சித்த (என்றும் அடையப்பட்டுள்ள) வஸ்துவாய் எங்கும் நிறைந்துள்ளதாய் தானுக விளங்கும் சித்தமே சுத்த சிவமாகும்.

## கூ. முற்றுணர்வுத் திறன்

926. தன்னை (ஆன்மாவை)த் தவிர வேறு எந்த ஒரு பொருளுக்கும் இருப்பை (உண்மையை)க் காணுததால், இரண்டற ஏகமாய் விளங்கும் பேரறிவுதான் தலைசிறந்த முற்றறிவு (சர்வஜ்ஞத்துவம்) ஆகுமே யன்றி முக்காலங்களின் நடப்புக்களை யறியும் அயலறிவு சிறந்ததோர் அறிவாகுமா? ஆகாது என்று தெரிந்து கொள்க.

விளக்கக் குறிப்பு:— முக்காலங்களில் நடப்பவற்றை அறிவதையும், அறுபத்து நான்கு கலை ஞானங்களாகிய அபர வித்தையைப் பெற்றிருப்பதையும் இன்னும் இதுபோன்ற பலவித அன்னிய அறிவுகளுமே சர்வஜ்ஞத்துவம் அல்லது முற்றறிவு என்று மக்கள் போற்றி வருகின்றனர். ஆனுல் உண்மை அப்படியல்ல. "அகந்தையே யாவும் ஆம்......" என்றும் "நானுவா ஞான மஞ்ஞானமாம்.."என்றும் உள்ளது நாற்பதில் கூறப்பட்டபடி இவை யாவும் அகந்தையின் விசேஷ அறிவுகளே யாவதால் இவை அறியாமையே யாகும். அறியும் அது உண்மை யறிவு ஆகாது. ஏனெனில் ஒன்றை அறிதற்கோ அறிவித்தற்கோ அன்னியப் பொருள் ஏதொன்றும் சத்தியமில்லை. ஆகவே அன்னியமொன்றும் அறியாது தானே பூரணமாய் விளங்கும் ஏகான்ம அறிவே முற்றறிவு அல்லது சர்வஜ்ஞத்துவம் எனக் கண்டு கொள்க.

927. மனம் முழுதும் ஒடுங்கப் பெருத மக்க(சாதகர்க)ளுக்கு தாம் இதுவரை பெற்றுள்ள அற்ப அறிவுகளாலேயே பற்பலவித மயக்கங்களாகிய கேடுகள் சேர்ந்து குவிந்திருக்கும் போது, இன்னும் தமக்குத் தெரியா திருக்கும் எல்லாவற்றையும் பற்றி மேலும் அறியக் கிடைப்பதால், ஏற்கெனவே யுள்ள மயக்க விருள் மேலும் தடித்துப் பெருகுமே தவிர நற்பயன் ஒன்றுமே விளையாது!

விளக்கக் குறிப்பு:— பிறவற்றை அறியும் அறிவு அறியாமையே யாதலால் மனமடங்கப் பெருத ஓர் சாதகன் தற்போது தனக்குத் தெரிந்திருக்கும் பிறபொருளறிவாகிய எண்ணங்களின் அலைவுகளாம் சுமையையே தாங்க முடியாமற் குழம்பிக் கொண்டிருக்கும் பொழுது, மேலும்

முக்கால தேசங்களின் அறிவும் (எண்ணங்களும்) கிடைக்கப் பெறுவானுயின் அவன்து மனம் இன்னும் அதிகமாகவே அலேவுறு மல்லவா? ஆதலால் எல்லாப் பிற அறிவுகளேயும் மறந்து தன்னறிவில் சாந்தமா யமர்ந்திருப்பது அவனுல் இயலாத காரியமாகிவிடும். எனவே யாவு முணர்தல் என்பது உயிர்க்கு யாதொரு பயனுமற்றது என்பதோடு பெருங்கேடு விளேவிப்பதே என்றும் சுட்டிக் காட்டப்பட்டது.

928. வெறும் இருப்பு வடிவான (ஸத் ஸ்வரூபமான) தன்னே (ஆன்மாவை) பல பொருள்களே யறியும் மனவடிவனுக (மனித னுக) எண்ணி மயங்கி, அம் மயக்கத்தால், பொய்க்காட்சியான இப் பிரபஞ்சத்தை மெய்யாகக் காணும் அஞ்ஞானிக்குத்தான், பல திறப்பட்ட அறிவுகளே (அறுபத்து நான்கு கலே ஞானங்களே) அடைவதை ஓர் 'முற்றுணர்வு' என்று கொள்ளத்தகுமே தவிர, அம் மயக்க மற்ற ஆத்மஞானிக்கோ அவ் வறிவுக ளெல் லாம் வெறும் 'பித்துணர்வே (பைத்தியமே)' யாகும்! வேறென்று மில்லே!

929. அன்னியத்தை யறியும் மனமாக (ஜீவனுக)த் தன்னேக் கருதி மயங்கும் போதுதான், 'அந்தோ, நான் அறிவிற் சிறியேன் — சிற்றறிவினன்' என்று ஒருவன் வருந்த நேரிடுகின்றது. அன்னியத்தைப் பற்றிய அவனது அறிவி னளவு சிறியதாய் சிற்றறிவாய் இருந்தாலும், அது ஆன்ம ஞானனு பவ காலத்தில் உண்மையற்று அழிவதுபோலவே, (சர்வகலேகளே யும் முக்காலத்தையும் அறியும்) அது ஓர் பெரிய முற்றறிவாக இருந்தாலுங்கூட, அதுவும் அவ்வான்மானுபவத்தில் உண்மை யற்று ஒழிய வேண்டியே வரும்.

விளக்கக் குறிப்பு:— எல்லாம் அழியும் ஞானப் பிரளயத்தில் நம் இருப்பு மாத்திரமாய் மிஞ்சும் இயலறிவு எதுவோ அதுவே மெய்ப்பொருள். ஆகையால், சிற்றறிவைப் போலவே பல திறப்பட்ட முற்றறிவும் அப்போது அழிந்தே யாகவேண்டும். ஆன்ம ஞானமாம் பேரறிவில் 'நான் இருக்கிறேன்' என்ற தன்மை யொருமை யுணர்வாகிய ஏக சத்திய அறிவைத் தவிர மற்றெதுவும் மிஞ்சாது என் றுணர்த்தப்பட்டது.

930. வேதங்கள் இறைவனே 'எல்லாமறிந்தோ' னுகப் போற்றிக் கூறுவது, தம்மைச் சிற்றறிவினராக (அகந்தையாக)க் கருதி மயங்கும் அஞ்ஞானிகளுக்கு ஏற்பச் சொன்னதே தவிர, இறைவனே அனுபவத்தில் அடைந்து அறிந்தால், அவன்

என்றும் தன் இயல்பு நிலையான சத்திய பரிபூரண ஏக வஸ்துவா யிருப்பதால் (அறிவதற்கு இரண்டாவது பொருள் இல்லாததால்) ஒன்றையும் அறிவதில்லை என்பது விளங்கும்.

931. "காட்சி முதலிய அனுபவங்கள் மற்றவர்களைப் போலவே ஜீவன்முக்தர்களுக்கும் ஒரே விதமாக அமையும் காரணத்தால், முக்தர்களுக்கும் அவர்கள் காணும் போது பேதங் கள் பலவும் தோன்றவே செய்கின்றன. ஆனால் அவர்கள் பேதங்களைப் பார்த்துக் கொண்டே அவற்றுள் அபேதத்தை அனுபவிக்கின்றனர்" என்று மக்கள் கூறும் கருத்து பொய்யே, தவறே யாகும்.

விளக்கக் குறிப்பு:— மக்கள் ஜீவன் முக்தனைப் பற்றி எத்தனையோ தவறான கருத்துக்களைக் கொண்டிருக்கின்றனர். அவற்றுள் ஒன்று இங்கு விளக்கப்படுகின்றது. ''இது தண்ணீர், இது உணவு என்ற வாறு மக்கள் எவ்வெப்பொருள்களைக் காண்கின்றனரோ அவ்வப் பொருள்களை ஜீவன் முக்தனும் அவ்வாறே காண்கின்றான். ஆகை யால் காட்சி முதலிய அனுபவங்களில் இருவரும் ஒரே தன்மை யுடையவர்களே. ஆனால் ஜீவன் முக்தனோ பேதங்களைக் கண்டு கொண்டே அதே சமயத்தில் அவற்றுள் அபேதத்தை அனுபவிக் கின்றான்'' என்றெல்லாம் அனுபவமற்ற வெறும் நூலாராய்ச்சி யாளர்களும் வேதாந்தப் பிரசங்கிகளும் வியாக்கியானம் செய்து வருவதைக் கேட்டிருக்கிறோமல்லவா? ஆனால் இதைப்பற்றி யார் சரியான முடிவு கூற முடியும்? உண்மையாகவே ஞானப் பேறு பெற்ற ஜீவன் முக்தன் ஒருவனே கூறமுடியும். அவ் விதம் எழுந் தருளிய மகானுபவியும் உலக குருவுமாகிய ஸ்ரீ ரமண பகவான் ஒரு வரே ''இக்கூற்று பொய், தவறு'' என்று இப்பாடலால் மறுத்து, ஏன் அக்கூற்று தவறு என்பதையும் அடுத்த பாடலால் விளக்கியருள் கின்றார். பகவானிடத்திலன்றி மற்றைப் பண்டிதர்களிடம் நாம் கேட்டறியக் கிடைக்காத ஓர் புது உண்மை இதுவாகும்.

932. மயங்கிய அறிவால் பற்பல பேதங்களைக் காணும் அஞ்ஞானிகளான அன்னியரது திருஷ்டியில்தான், முக்த னொருவனுங்கூட பற்பல பேதமான உருவப் பொருள்களைப் பார்ப்பது போலக்காணப்படுகிறதே தவிர அம் முக்தன் அவ்வாறு ஒன்றையும் பார்ப்பதே யில்லை; அவன் ஒரு காண்பானு மல்ல!

விளக்கக் குறிப்பு:— இந் நூலின் 119 ஆவது பாடல் இங்கு மீண்டும் நோக்கத் தக்கது. ஓர் மனிதன் தன்னை ஓர் தனிவியக்தி (individual) என்று

காணும் வரையிலும் ஞானியையும் ஒரு வியக்தியாகவே காண்பான்; வேறு விதமாகக் காண அவனால் முடியாது. ''கண்ணலாற் காட்சியுண்டோ'' என்ற உள்ளது நாற்பது 4ம் பாடல் இங்கு கருதற் பாலது. ஆகவே அவ்வியக்த, அசரீர, ஞானமே தானான முக்தனையும் ஒரு காண் பானாகவே காணுவதும், அவனும் தன்னைப் போலவே பேதங்களைக் காண்கின்றான் என்பதும் அஞ்ஞானியின் திருஷ்டியில் தான் உண்மையே தவிர ஞானி ஓர் காண்பானுமல்ல; அவன் ஒன்றையும் காண்பதுமில்லை என்பதே சத்தியமாகும்.

933. தான் ஓர் சிற்றறிவினன் என்று ஒருவன் கருதுவது முன்னிலைப் பொருள்களை அறிவதால் ஏற்பட்ட குற்றமேயாகும். அயற் பொருள்களை அறிவதை விட்டுவிட்டு, ஆன்ம விசார சாதனையால் தன் உண்மையை யறிந்தால் அச் சிற்றறிவு நசித் துப் பூரண அறிவாக மலர்ந்து விளங்கும்.

934. (ஜீவர்களின்) தோஷ திருஷ்டியால் (உருவற்ற) எந்த ஆன்மா பல்வேறு வடிவுற்று இந்தப் பிரபஞ்சத் தோற்றம் முழு வதும் ஆகி யிருப்பதாகத் தோன்றுகிறதோ, அந்த அத்துவித ஆன்மாவைப் பிரத்தியக்ஷமாக அனுபவித்து, (அது அவ்வாறு என்றுமே எதுவாகவுமே ஆகிவிடவில்லை என்று) அறிவதுதான் சரியான முற்றுணர் வாகும்; மற்றவை முற்றுணர் வாகாது.

விளக்கக் குறிப்பு:— இப் பிரபஞ்சம் முழுவதும் இன்பதுன்ப மிசிரமாகவே சிருஷ்டிக்கப்பட்டுள்ளது என்று மயங்கிக் கருதும் மக்கள் சிலர் இச் சிருஷ்டியின் தோஷத்தை மாற்றி உலகை இன்பமயம் மட்டுமே யாக்கிவிட நினைத்து முயல்கின்றனரன்றோ? இது முழு அறியாமை என்பதைச் சுட்டிக்காட்ட, இப்பாடலைக் 'குற்ற நோக்காலே' என்று ஆரம்பித்து, ''உன்னுடைய தோஷ திருஷ்டியினாலேயே பிரபஞ்சம் அவ்விதம் உனக்குத் தோன்று கிறது; பரம்பொருள் ஒன்றும் அப்படிச் செய்யவில்லை; இது உன் திருஷ்டி தோஷமே தவிர சிருஷ்டி தோஷமல்ல'' என்று கண்டித்து அறிவுறுத்தி, ''தோஷ திருஷ்டி'' நீங்கிச் சரியான ஞான திருஷ்டியை யடைவதே முற்றுணர்வு அல்லது சர்வஜ்ஞத்துவம் என்று ஸ்ரீ பகவான் உபதேசிக்கின்றார். தன்னை யறிந்திடிற்... அறிய என்ற ஆன்ம வித்தைக் கீர்த்தனம் அடி இங்கு நோக்கற்பாலது.

935. நாம் கனவிற் காணுங் கற்பனையாகிய எல்லாப் பொருள்களும் நம்முள்ளேயே ஏகமாக இருந்திராவிட்டால் அவை அக் கனவில் தோன்றியிருக்க முடியாது என்னும் நியா யத்தின்படியே, நனவிற் காணப்படும் இப் பிரபஞ்சம் எல்லாமும்

எந்த ஒரே பொருளினிடம் கற்பனையாகக் காணப்படுகின்றனவோ அந்த ஏகமாம் ஆன்மாவை அனுபவித்தறிதல் மட்டுமே முற்றறிவு அல்லது எல்லாமறிதல் ஆகும்.

936. தற்கால நாகரீகம் என்னும் மயக்கத்திற்கு ஆட்படாமலும், கீழ்த்தரமான உலக அறிவுத் துறைகளில் ஆர்வங் கொள்ளாமலும் விலக்கி விடுவதோடு, (ஆன்மீகப் பாதையிலுள்ள மதியீன மாகிற) 'சிவன் (பரமாத்மா) வேறு, சீவன் (ஜீவாத்மா) வேறு' என்ற பேத புத்தியையும் வேர் பெயர்த்து எறிந்தால் தான் சிவஞான போதம் என்பதின் உண்மைப் பொருள் விளங்கும்.

## க0. துரியாதீதத் திறன்

937. நனவு கனவு துயில் என்னும் மூன்றாகத் தோன்றிக் கொண்டிருந்த அவஸ்தைகள் (நிலைகள்) அகங்காரத்தை யழித்த ஞானியினிடமிருந்து நீங்கிவிடவே, சிறந்த நிலையாகிய துரியாவஸ்தையே (நான்கா மவஸ்தையே) துரியாதீதமு மாக அவர்களிடம் விளங்கும்.

938. கேவல சத்சித் சொரூபமான துரீயநிலையே இரண்டற்ற துரீயாதீதமு மாகும். மூன்று விதமாக வந்து போகும் நனவு கனவு துயில் ஆகிய அவஸ்தைகள் உண்மையற்ற வெறும் தோற்றங்களே என்றும், தான் (ஆன்மா) ஒருவனே அவைகள் ஒடுங்கவும் உதிக்கவும் இடமான அதிஷ்டானம் என்றும் உணர்க.

939. ஏனைய அவஸ்தைகளான நனவு கனவு துயில் மூன்றும் உண்மையிருப்பு உள்ளனவா யிருந்தா லல்லவா பரிசுத்த ஞான நிலையான ஜாக்கிரசுழுப்தியை "நான்காவது அல்லது துரீயம்" என்று சொல்லலாம்? அந்த நிலைகள் மூன்றும் துரீயத்தின் முன் பொய்யானவையாக அறியப்படுவதால், அந்த ஜாக்கிர-சுழுப்தி யொன்றே மெய்யான, முதலான நிலையாகும். (துரீயம் என்று சொல்லப்பட்டாலும் இந்நிலையில்) இதுவே துரீயாதீதமு மாகும் என்றறிக. மேற்கூறிய மூன்று பாடல்களின் முக்கியக் கருத்துக்களை ஒன்றாய் திரட்டி ஸ்ரீ பகவான் அடுத்துவரும் ப-18 ஆவது செய்யுளாக அருளியுள்ளார். இது உ.நா அநுபந்தம் 32 ஆக அமைந்துள்ளது.

**பகவான் (18)**

நனவு கனவு தூக்கம் ஆகிய மூன்று நிலை களையும் மெய் யென்று கருதும் அஞ்ஞானிகளுக்காகத்தான் இம் மூன்றிற்கும் மேலாக '**நனவுதுயில்**' என்னும் ஜாக்கிர சுழுப்தியானது 'துரீயம் (நான்காவது)' என்று பெயரிடப்பட்டது. அவ்வாறு சொல்லப்படும் துரீயம் ஒன்றே உண்மையான அவஸ்தை யாட தாலும், தோற்ற மாத்திரமான மற்ற மூன்று நிலைகளும் இருப்பற்றுப் பொய்யே யாவதாலும், அந்தத் துரீயம் எனப்படும் முதல் ஒரு நிலையே துரியாதீதமும் ஆகும் என்று திண்ணமா யறிக.

விளக்கக் குறிப்பு:— 'துரீயம்' என்றால் 'நான்காவது' என்று பொருள். நனவு, கனவு, தூக்கம் என்னும் மூவவஸ்தைகளே ஒவ்வொரு மனிதனின் அனுபவத்திலும் இருப்பதால், இம் மூன்றுமல்லாத ஜாக்கிரசுழுப்தி (விழிப்புத் துயில்) எனப்படும் ஞான நிலையைத் 'துரீயம்—நான்காவது' என்று நூல்கள் கூறின. நித்திய ஆன்ம விழிப்பாகிய இந்நிலை அனுபவமாகும்போது ஏனைய நனவு கனவு துயிலாகிய மூன்று நிலைகளும் உண்மை யிருப்பு அற்றனவாக உணரப்படுவதால், அவை மூன்றும் இல்லாதபோது, இந்நிலையை 'நான்காவது அல்லது துரீயம்' என்று ஏன் பெயரிடவேண்டும் என்கிறார் ஸ்ரீ பகவான்! இதுவே முதல் ஒரு நிலை யாகின்ற தல்லவா? மேலும், இந் நிலைக்குப் பிறகு வேறொரு நிலையும் இருப்பற்ற போது ஒரே உண்மை நிலையாகிய இதை 'முதலாவது' என்றுங்கூடக் கூறுவது பொருந்தாத தன்றோ? ஆகையால் இதை ஒன்றாவது என்றோ நான்காவது என்றோ கூறாமல் 'அதீதம்' (கடந்த நிலை—துரீயாதீதம்) என்றே கூறவேண்டும் என்பது உபதேசம்.

ஜீவர்களின் நனவு கனவு துயிலாகிய மூன்றவஸ்தைகள் கூட உண்மையில் மூன்றல்ல; அவை இரண்டே. சகல கேவலங்களாகிய அவ்விரண்டுங்கூட வியவகாரிக சத்தியம் (Relative reality) உள்ளனவே.

ஸ்ரீ பகவானருளிய உபதேச மஞ்சரியில் ஆரூடப் பிரகரணத்தின் 8-ஆவது விடையையும் இங்கு வாசித் துணர்க.

940. போற்றத் தக்க மெய்ஞ்ஞான நிலையான இந்தத் துரீயம் என்பதை 'என்றுமே விழிக்காமல் தூங்கும் சிறந்த பெருந்தூக்கம்' என்று கூறினாலும், அல்லது, வந்துபோகும் தூக்கக் கலப்பே யில்லாத 'ஒரே முழுவிழிப்பு' என்று கூறினாலும் மிகவும் பொருத்தமானதே என் றறிக.

குறிப்பு:— இம் மெய்ந் நிலையை, 'நனுத்துயில், விழிப்புறக்கம், உறக்கவிழிப்பு, துயில்நனு, விழியாத் துயில், துயிலா விழிப்பு, பிறவாச் சாவு, சாவாப் பிறப்பு' என்று பலவாறுங் கூறலாம்,

## கக. அகண்ட விருத்தித் திறன்

941. விருத்திகள் எல்லாம் பின்னம் (கண்டம்) உள்ளவை என்னும்போது, கடந்த நிலையான 'அகண்டம்' என்பது விருத்தியற்ற ஒரு நிலையாகு மல்லவா? அவ்வாறிருக்க, பிரம்ம நிலையில் உள்ள உணர்வை அகண்டாகார விருத்தி யென்று அழைப்பது (சமுத்திராகார நதி) 'கடல் வடிவாகிய நதி' என்பது போன்றதோர் கூற்றே!

விளக்கக் குறிப்பு:— உண்மைக்குப் பொருந்தாததாகவும், ஆனுல் மந்தாதிகாரிகளின் மனத்துக் கேற்பச் சொல்லப்படவேண் டியனவாகவும் சாஸ்திரங்களிற் கையாளப்பட்டுள்ள பல பதங்களை ஸ்ரீ பகவான் தனது அனுபவத்தால் விளக்கி, அவைகளின் பிரயோகப்பொருத்த மற்ற தன்மையை நிரூபித்த துண்டு. 'அகண்டாகார விருத்தி' என்ற பதமும் அவற்றுள் ஒன்ருகும். சாதகர்களுட் சிலர், "அகம் பிரம்மாஸ்மி என்ற அகண்டாகார விருத்தித் தியானத்தைப் பயின்று வருகிறேன்" என்று கூ றிக்கொள்வதும், அவ்வாறே மேடைப் பிரசங்கங்கள் மூலம் அகண்டாகாரவிருத்தியைப் பயிலும்படிப் பிறருக்குப் போதித்து வருவதும் கேள்விப்படுகிருே மல்லவா? அகண்ட நிலையில் விருத்திக்கு இடமேது? சமுத்திரத்தில் நதி கலந்து விட்டால், பிறகு அதைச் சமுத்திரம் என்று கூறிவிடவேண்டுமே தவிர மீண்டும் அந் நீர்ப் பரப்புக்கு ஓர் நதி சப்தம் கொடுத்து 'சமுத்திராகார நதி' என்று கூறுவது வீண் சொற் பிரயோகமே யல்லவா? அவ்வாறே சொரூபமான நிலையை அகண்டம் என்றே குறிப்பதைத் தவிர, ஓர் விருத்தி சப்தம் கொடுத்து 'அகண்டாகார விருத்தி' என்று கூறுவது தவறு என்று இப்பாடலால் விளக்கப்படுகிறது.

## கஉ. கிரந்தி பேதத் திறன்

942. வரும் துன்பங்களில் மனம் வருந்தாமலும், வரும் இன்பங்களில் சிறிதும் மனம் பூரித்து மூழ்கிவிடாமலும் சமமாக வும், உதாசீன பாவத்துடனும் நிறைந்த சாந்தியுடனும் உள்ள தன்மையே கிரந்தி பேதம் அடைந்த நிலையின் அடையாள மாகும்.

943. சென்றவைகளையும் நினையாமல், இனிவர விருப்பவை களையும் நினையாமல் தற்போது பலவாய் விரிந்து நிகழ்ந்து கொண்டிருப்பவற்றுக்கும் பற்றற்ற சாக்ஷியாய் நின்று உபசாந் தியால் திருப்தியுற்றிருப்பதே கிரந்தி பேதிக்கப்பட்டதின் சிறப் பியல் பாகும்.

944. எந்தெந்த எண்ணங்கள் வந்தாலும் அவை தன்னை (ஆன்மாவை) விட்டுத் தனியே நிற்க முடியாத தன்மையுடைய னவே. (ஆகையால் அத்தகைய ஆன்ம ஞான திடத்தால்) "அந்தோ, எண்ணங்களால் ஆன்ம நாட்டம் நடுவில் விட்டுப் போயிற்றே" என்றுணரும் பிரமாதம் (தடை) அடையாதிருப் பதும் கிரந்திபேதித்த நிலையின் சிறப்பாகும்.

## கஙூ. கிருத கிருத்தியத் திறன்

945. யார் யார் எந்தெந்தப் பொருள்களால், எங்கெங்கே எந்தெந்த அனுபவங்களைப் பெற்றாலும் புலன்களாற் பெறும் அவ் வனுபவங்கள் ஒவ்வொன்றும், மெய்யறிவாற் பார்க்கும் போது, ஆன்மானுபவத்தின் கூறுகளே யாகும்.

விளக்கக் குறிப்பு:— இந்நூலின் 1074 ஆவது பாடலையும் இங்கு வாசித்துணர்க. ஸ்ரீ பகவானருளிய உபதேசமஞ்சரியில் அப்பியாசப் பிரகரணத்தின் ஆறாவது விடை இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

946. ஆன்மானுபவம் ஏற்பட்டவுடனே, அதன் சுகம் இப் படிப் பட்டது என்றறிய விரும்பும் முதல் விருத்தியாகிய மனம் (ஜீவபோதம்) தலை தூக்கிக் கிளம்பக் கூட முடியாதவாறு இழுத்துச் செல்லப்பட்டு, உள்ளமாம் தெள்ளிய ஞானக் கடலில் அமிழ்த்தப்பட்டு விடுவதால் (மனம் ஆன்மாவை 'இது சுகம்' என்று கூட அறிய முடியாமற் போவதால்) ஆன்மா சுகாதீதமே தவிர சுகசொரூபம் என்று கூறுவதும் கற்பனையே யாகும்!

விளக்கக் குறிப்பு:— 'இது சுகம், இது துக்கம்' என்ற இரட்டையை யுணர்வது மனமே. ஆன்மாவோ இரட்டைகளைக் கடந்த வஸ்து. ஆன்மானுபவம் ஏற்படும்போது சுக துக்கப் பாகுபாடு செய்யக் கிளம்பும் மனமே தலைதூக்க முடியாதபடி ஞான வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டு, உள்ளக் கடலில் (இருப்பு மாத்திர வெற்றறிவில்) மூழ்கடிக்கப்படுவதால் மனனுபவத்திற் கெட்டாத ஆன்மாவைச் 'சுகவடிவம்' என்று கூறுவதைவிட 'சுகாதீதம்' என்பதே பொருத்தமானது என்றார்.

947. "தான் மேற்கூறியவாறுன சுகாதீத ஆன்மாவே (இவ் வுடல்வடிவ ஜீவனல்ல)" என்று விசாரத்தால் ஆராய்ந்து ஆன்மாவை அபரோக்ஷமாகத் திடம்பட அனுபவித் தறிந்த பிறகு, அந்த மெய்யான மகாஞானி உண்மையற்றதான ஐம்புல இன்பங்களுள் எந்த ஒன்றை யார் அனுபவிக்க வேண் டிக் கிலேசமடைவான்? (தனக்கு அயலாகப் பிறரோ, பிற இன் பமோ இல்லாத தால் ஆசையற்றவ ஞவான் என்பது கருத்து).

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் கூறியது:—அகண்டானந்தமாம் ஆன்ம சொரூபமே தானுதலால் தனக்கயலாகப் பிறிதோர் இன்பமோ, அன்றிப் பிறிதோர் ஜீவனோ இன்மையின், 'பின்னமாம் எந்த நுகர்ச்சியை யாருக்காக இச்சித்து' எனவும், ஆசையா லன்றித் துன்பத் தோற்ற மின்மையின் 'இச்சித்துச் சிந்தைப் பரிவெய் துவான்' எனவும் கூறினர்.

948. அஞ்ஞானமாகிய கர்த்ருத்துவ புத்தி அழியப் பெற்ற மெய்ஞ்ஞானிக்கு 'இதைச் செய்தாக வேண்டும்' என்று கூறும் கர்ம விதிகள் ஒன்றுங் கிடையாது. ஆனுல் மெய்ஞ்ஞான முற்றவர்களுங் கூட இன்னின்ன கர்ம தர்மங்கள் புரிவர் என்று வேதத்தின் கர்ம காண்டங்கள் கூறுவது ஏனென்றுல், இதர மக்கள் பின்பற்றுமாறு வைதிக தர்மத்தைக் காப்பாற்றுவதற் காகவே (தவிர ஞானிகள் செய்தாக வேண்டும் என்பதற்காக வல்ல).

949. அகங்காரம் அழிந்த சுகாதீதர்களான ஞானிகள் தாம் பெற்ற (அகங்கார நாசமாகிய) பேற்றைவிட உயர்ந்த லாபம் வேறெதுவும் இல்லாத காரணத்தால், இனி அவர்கள் செய்யவேண்டியது யாதொன்றுமில்லை. அதனுல் அவர்கள்தான் செயற்குரியன யாவும் செய்து (கிருத கிருத்தியர்களாய்) உய் வடைந்தோ ராகும்.

விளக்கக் குறிப்பு:— "மனவுரு மாயமெய்ம் மன்னுமா யோகி தனக்கோர் செயலிலை யுந்தீபற........." எனவரும் உபதேச வுந்தியார் 15-ஆவது பாடல் இங்கு ஒத்து நோக்கத் தக்கது. ஸ்ரீ முருகனுர் கூறியது:— நிரகங்கார நிலையே சுத்த மோனம்; ஆனந்தாதீதம் என்பதும் துரீயாதீத மென்பதும் அதுவே. பராற்பரமாம் அந்நிலையை யடைந்தார்க்குப் பின்னும் முயன்றடையக்கடவதொரு நிலையின்மையால், அன்னேரே கிருத கிருத்திய ரென்பதாம். "நிறைகுடந்தான் நீர் கொளுமோ நிச்சயமா மோன முறையுணர்ந்தார் யாதை முயல்வார்?"

— தாயுமானுர்.

950. தன் உண்மைசொரூபமான சதாசிவ நிலையில் அம்மயமாகவே தனது முயற்சி யாதொன்றுமின்றியே அடங்கி நின்றால், அந்தஞானி அதன் பிறகு செய்யவேண்டியது யாதொன்றும் இல்லாதவாறு யாவும் முன்பே செய்து முடித்த வனாய் (கிருதகிருத்தியனாய்) சாந்த சுகத்தில் திளைத்திருப்பான்.

951. பரிபூரணமான ஆன்மானுபூதி பெற்ற அந்த மகான் கள் தனக்கு அன்னியமாக வேறு எதையும் அறிவார்களோ? (இல்லை). துவந்தத் தோற்றங்களற்ற அவர்களது பேரின்பானுப வத்தை, மயக்க முற்றதும் கண்ட மானதுமான மனித புத்தி யால் எண்ணி அளவிட முடியுமோ? (முடியாதென்க).

விளக்கக் குறிப்பு:— "......அவர் நிலைமை இன்னதென் றுன்னல் எவன்?" என்னும் உள்ளது நாற்பதின் 31 ஆவது பாடலையும் இங்கு காண்க. ஞானிகளின் நிலையை இப்படிப்பட்ட தென்று தீர்மானிப்பது இயலாததும் தகாததுமாகும். சுகாதீதர்களாகிய அவர்களது பேரின்பானுபவத்தை எத்தகைய மதி நுட்பம் வாய்ந்த மனிதர்களாலும் அளவிடமுடியாது. ஏனெனில் அளவிடும் கருவியாகிய மனம் அழிந்த பிறகே பிரகாசிக்கும் பேரின்பத்தை (மனிதர்) மனம் இருக்கும் போதே எவ்வாறு உணர முடியும்?

## கச. துக்காபாவத் திறன்

952. எல்லோருள்ளும் அவரவரது உண்மை நிலையாக (இருப்பாக) விளங்கும் உள்ளமே மெய்யான இன்பக் கடலாகும். ஆகையால் துன்பம் என்பது பொய்யான ஆகாயநீலம் போல, வெறும் மனோ கற்பனையில்தான் தோன்றுகிறதே தவிர உண்மையில் அது இருப்பற்றதே.

விளக்கக் குறிப்பு:— இந்தத் திறனில் "இன்பமே எந்நாளுந் துன்பமில்லை" என்னும் ஆன்றோர் வாக்கின் உண்மை விளக்கப் படுகின்றது. சத்தியமாக இருப்பது நம் சுபாவமான ஆனந்த மொன்றே. 'துன்பம்' என்று ஒன்று முக்காலும் இல்லவே யில்லை. பொய் யெழுச்சியான அகந்தையின் தோஷ திருஷ்டியால்தான் 'இன்பதுன்பம்' என்னும் ஓர் இரட்டை கற்பிக்கப்பட்டுள்ளது. அகந்தையின் சத்தியம் எவ்வளவோ அவ்வளவேதான் துன்பத்தின் சத்தியமும் இருக்கமுடியும். அகந்தை உண்மையற்ற ஓர் பொய் தோற்றமாகையால், நிறமற்ற ஆகாயத்தில் நீலம் தோன்றுவதுபோல, ஜீவனின் தோஷ திருஷ்டியில் தோன்றும் துன்பமும் ஓர் பொய்த் தோற்றமே என் றுபதேசிக்கப்படுகின்றது.

953. *அஞ்ஞான மயக்கமாகிய இருளையே காணாத ஞான சூரியனான நம் (ஆன்ம) சத்திய இருப்பே ஆனந்த வடிவாக விளங்குவதால், பொய்யான ('நான் உடல்' என்ற) அகங்காரத் தால்தான் கலக்கமாகிய துன்பம் தோன்றுகிறதே தவிர, அப்படித் 'துன்பம்' என்ற ஒன்றை எவருமே உண்மையில் அடைகின்றதே யில்லை!*

விளக்கக் குறிப்பு:— பசியாற வுண்டு சுகமாக நித்திரை செய்யும் ஒருவன் கனவில் தான் எங்கெங்கோ அலைந்து பசியாற் களைத்துத் துன்புறுவதாகக் காண்கின்றான். ஆனால் அவன் விழிப்புற்றால் தான்பட்ட பசிக்களைப்பும் துன்பமும் உண்மையில் இருப்பற்ற பொய்யே யல்லவா? "………இங்கு அசைவற்றும் கனவில் குன்றேறி வீழ்வார் குழி" என்ற உள்ளது நாற்பது அநுபந்தம் 30-ஆவது பாடல் உபமானத்தையும் இங்கு பொருத்திக் காண்க. துன்பம் மனோ மாத்திரப் பொய் என்பதே உபதேசம். வாழ்வில் வரும் துன்பங்களாற் சாதகர்கள் மனமுடைந்து சாதனையை விட்டு நழுவி விடாமல் இருக்கத் தக்க திதிக்ஷா உரத்தை யூட்டுவதற்கென்றே இத்திறனில் எல்லாப் பாடல்களும் துக்க அபாவத்தை (இன்மையை) விவரிக்கின்றன.

954. *ஆனந்த வடிவான தன் ஆன்ம சொரூபத்தை ('நான் யார்?' என்னும் விசாரத்தால்) ஆராய்ந்தறிந்தால், வாழ்வில் துன்பம் என்பது ஒரு சிறிதும் இல்லவேயில்லை என்ற உண்மை விளங்கும், என்றுமே நம் சொரூபமாகாத ஜடதேகத்தில் 'நான் இது' என்ற தேகாத்ம புத்தி கொள்வதால்தான் துன் பம் அடைகிறோம். நமக்கு அடாததான இந்த மயக்கத்தை நாமாக ஏற்றுக் கொள்வதால்தான் இவ்வாறு வருந்த நேரு கின்றது.*

955. *தன்னை (இரண்டற்ற) ஏகான்மாவாய் அறிந்து கொள்ளாதவர்கள் (தனக்கு அன்னியமான இரண்டாவது பொருளாக உலகத்தைக் காண்பதால்) வீணாகப் பயந்து எப் போதும் துக்கித்து அழிகின்றனர். (துன்பத்துக்கு) மூல காரணமான 'உடலே நான்' என்னும் அகந்தை யுணர்வை (விசாரத்தால்) ஒழித்து, தன் மெய்யுணர்வான ஆன்மஞான திடத்தால் ஏகனாய் இரண்டற்ற நிலையில் இருப்பா யாக.*

956. *தன் ஆன்மசொரூப ஞானமே சற்கதியாக நாடி யடைந்தால் அஞ்ஞானத்தால் வரும் (a) பிறவித் துன்பம் அடியோடு நீங்கும். (b) துக்க வுற்பத்தி அடியோடு நீங்கும்.*

## கரு. சுழுத்தி வியாபகத் திறன்

957. [இப்பாடலில் கனவிற் சுழுத்தி என்று வரும் பதங்கட்கு இருவிதமாகப் பொருள் கொள்வ துண்டு. (1) நனவுக் காலத்திற் பேதங்களை யுணராத நிலேயே யாகிய நனவிற் சுழுப்தி என்பது, ஜாக்கிர சுழுப்தி என்னும் துரீயமாகும். சாதகர்கள் இந்நிலேயை யடைவதற்காக நனவில் முயற்சிக்கின்றனர். ஆனுல் அவர்களுட் சிலர், 'நனவைப் போலவே கனவிலும் கனவின் பேதங்கள் தோற்ருத ஓர் கனவுச் சுழுப்தி நிலே எனக்கு இன்னுங் கிடைக்கவில்லேயே; அதற்குக் கனவிலேயே முயற்சிக்க வேண்டுமோ' என்று ஏங்கி வினவுவ துண்டு. அத்தகை யோருக்கு விடையாக அமைவது இப்பாடலின் ஒரு பொருள். (2) கனவில் சுழுப்தி என்ற சொற்ருெடருக்குக் கனவற்ற தூக்கம் என்று பொருள் கொள்ளும்போது அது இரண்டாவது பொருள்.]

(1) கனவிற் பேதங்கள் தோற்ருத ஓர் கனவுச் சுழுப்தி நிலே இன்னுங் கைவரவில்லேயே என்று கவலேப்பட்டு ஊக்கங் குலேந்து மனம் மயங்க வேண்டாம். இப்போதுள்ள நனவில் (விசார பலத்தால் மனமடங்கி) பேதந் தோன்ருத தூக்க நிலே யடையப் பெற்ருல், கனவிலும் அவ்வாறே சுழுப்தி கலப்பு அடையப்பெறும். (தனித் தனியே முயலவேண்டு வதில்லே என்ற வாறு).

(2) கனவில்லாமல் மனமடங்கித் தூக்கம் சேருவ தில்லேயே என்று கவலைப்பட்டு ஊக்கங் குலேந்து மனம் மயங்க வேண்டாம். இப்போதுள்ள நனவில் (விசார பலத்தால் மன மடங்கி) பேதந் தோன்ருத தூக்க நிலே யடையப் பெற்ருல், கனவற்ற தூக்கமும் அடையப்பெறும்.

விளக்கக் குறிப்பு:— நனவின் தூல தேகாத்ம புத்தியை ஆதாரமாகக் கொண்டே கனவின் சூக்ஷ்ம தேகாத்ம புத்தியும் இருப்புக் கொள்வதால், ஆத்ம விசாரத்தால் நனவில் அதை நீக்கிப் பயின்ருலே போதும்; கனவிலும் அது தாமே நீங்கிக் கொண்டு வரும். ஆகவே கனவிலும் அது பூரணமாக நீங்கும் வரையிலும் நனவில் விசாரத்தைக் கைவிடக் கூடாது என்று ஸ்ரீ பகவான் வற்புறுத்துகின்ருர். ஸ்ரீ பகவானருளிய விசார சங்கிரக நூலின் முதல் அத்தியாயத்தில் நான்காவது பாராவில் இவ்விஷயம் விளக்கப்பட்டிருப்பதும் காண்க.

958. நனவிற் சுழுப்தி நிலே (ஜாக்கிர சுழுப்தி என்னும் துரீயம்) அடையப் பெறும் வரையில் தன்னே யார் என்று கேட்டு

விசாரிக்கும் ஆன்ம விசாரத்தை ஒருவன் கைவிடலாகாது. மேலும் கனவிற் சுழுப்திநிலை அடையப் பெறும் வரையிலும் நனவில் ஆன்ம விசாரம் செய்தல் அவசிய மாகும்.

**பகவான் (19)**

*சதா காலமும் 'நான் யார்?' என்னும் ஆன்ம விசாரத்தைக் கடைப்பிடிப்பதால் நனவிற் சுழுப்திநிலை (ஜாக்கிர சுழுப்தியாகிய துரீயம்) கிடைக்கப் பெறும். ஆகவே நனவிலும் கனவிலும் சுழுப்தி கலந்து விளங்கும் வரையிலும் எப்போதும் ஆன்ம விசாரத்தையே புரிக.*

## கசூ. அறிதுயிற் றிறன்

959. உலகின் கொடிய மயக்கமாகிய வலையில் அகப் பட்டுப் பெருந் துன்பங்களாகிய கூரான அம்புகளால் தாக்கப் பட்டு, நெஞ்சம் புண்ணுகி மிக வருந்திப் பேரின்பப் பேற்றை விரும்பி அலையும் முமுக்ஷுக்களே, அறிவுக்கு (பிரஜ்ஞைக்கு)க் கேடில்லாமல் தூங்கும் அறிதுயிலே (ஜாக்கிர சுழுப்தியே) அழி வற்ற சுக மாகும்.

விளக்கக் குறிப்பு:— அறிவு அழியாத தூக்கம் என்றது ஆன்மஞான நிலையையே குறித்த தாகும். அறிவு என்பது தன் இருப்புணர்வாகிய பிரஜ்ஞையே; மற்றொன்றை யறிவது உண்மையான அறிவல்ல. உடம்பு உள்பட பிற பொருள்களை அறியாத நிலையைத் தூக்கம் என்கிறோம். விழிப்பிலோ 'நான் இருக்கிறேன்' என்ற தன் இருப்பறிவோடு மற்ற பொருள்களை அறியும் அறிவும் இருக்கிறது. விழிப்பி லிருக்கும் தன்னிருப் புணர்வாகிய பிரஜ்ஞை மாத்திரமாய் மிஞ்சி நின்று, அன்னியப் பொருள்களை யறியும் அறிவு (மனம்) எழும்பாமல் உள்ள நிலையே அறிவோடு கூடிய துயில்—அறிதுயில்— ஆகும். பிறவற்றை அறியாததால் இந்நிலை ஓர் துயிலாகும்; தன்னிருப்பு விளங்குவதால் இது அறிவு ஆகும்.

960. வஞ்சகமான ஐம்புலன்களின் வழியே பிரவிருத்திக் காமல் இதயகமலத்தை யடைந்து ஆன்மாவில் ஸ்திர நிலை யுற்றுத் 'தூங்காமற் றூங்கும்' அறிதுயில் கொள்ளும் பெரியோர் கள் மட்டுமே மெய்ஞ்ஞான மாகிய மோக்ஷ விழிப் படைந்தவர்க ளாகும். மற்றவர்களெல்லாம் பொய்த் தோற்றமான இவ் வுலகப் பிரவிருத்தி என்னும் தடித்த இருள்வசப்பட்டுத் தூங்கிக்கொண் டிருப்பவர்களே யாம்.

## கஎ. அத்துவித ஞானத் திறன்

961. 'நான்' என்னும் அகந்தை சிவனுக் கடங்கி யழியப் பெறுவதால் தடையின்றி ஓங்கி யெரியும் சிவ பக்தி நெருப்பின் சுவாலையாகிய ஆன்மானுபவத்தில் நிலைத்து விளங்குவதே 'சிவோஹம்—சிவனே நான்' என்னும் மெய்த்தெளிவான அத்து வித வெற்றி யாகும்.

விளக்கக் குறிப்பு:— சிவோஹம் என்பது அகந்தை யழிந்ததின் விளைவாக ஏற்படும் ஓர் முடிவான அநுபவநிலை யாவதாலும், அகந்தையின் அழிவுக்கு ஆன்ம விசாரமே சாதன மாவதாலும், 'சிவோஹம், சிவோஹம்' என்று ஜபித்து அல்லது தியானித்துக் கொண்டிருப்பது அந்நிலையை யடைவிக்கும் அப்பியாசமுறை யல்ல என்பது உணரப்பட வேண்டிய தாம்.

962. மன அழுக்குகள் நீங்குமாறு 'நான் யார்?' என்னும் ஆன்ம விசாரத்தைக் கடைப்பிடித்து, அதனுல் மனத்தை உள்ளம் என்னும் சாணைக் கல்லில் தேய்த்துத் தீட்டுவதாகிய தன்னுட்டத்தில் மேன்மேலும் ஊன்றி உள்ளழுந்திக் கடையும் விசாரத் தீயால் விளையும் பிரகாசமே முகம்மதிய மதத்தின் மகா வாக்கியமாகிய 'அனல் ஹக்—நான் அப் பரம்பொருளே' என்னும் மெய்ஞ்ஞானமாகும்.

விளக்கக் குறிப்பு:— இந் நூலின் 341 ஆவது செய்யுளிற் கூறப்பட்ட கருத்தை இங்குக் காண்க. உண்மையான ஓர் மதம் என்ருல் அம்மதத்தின் வேத நூலில் அதீதமான ஆன்மநிலையைப் போதிப்பதற் கென்று ஒரு அருஞ் சொல்லாவது—மகாவாக்கியமாவது—அமைந்தே இருக்கும். இன்றேல் அம் மதம் ஓர் பூரண மத மல்ல. இவ்விதம் கிறிஸ்துவ மத வேத நூலான விவிலியத்தின் பழைய ஏற்பாட்டில், "நான் நானே—I am that I am" என்றதோர் ஒப்பற்ற மகா வாக்கியத்தை ஸ்ரீ பகவான் ஒரு முறை சுட்டிக் காட்டினர். அங்ஙனமே முகம்மதிய மதத்திலும் உள்ள "அனல் ஹக்" என்னும் அருஞ் சொற்றொடர் 'நான் அப் பரம்பொருளே' என்னும் பேருண்மையைக் கூறுவதாக அமைந்திருப்பதையும் பகவான் ஸ்ரீ ரமணர் குறிப்பிட்டுணர்த்தி, இம் மதங்களின் முடிவான நோக்க மெல்லாம் தன்னை அறிவதே என்று விளக்கினர். 663 ஆவது பாடலையும் இங்கு ஒத்து நோக்குக.

963. அத்வைத ஞான திடமே உண்மையான ஆண்மை யாகுமே தவிர, பொய்யாகிய துவித வியவகாரிக உலக வாழ்வில் பகைவர்கள்மேல் தம் வலிமையைச் செலுத்தி அடக்கி யாளு

வதுங்கூட பலஹீன மனத்திற் பற்றிக் கொள்ளும் பயத்தின் காரணத்தினுலேயே என் றறிக.

விளக்கக் குறிப்பு:— தனக்கு அன்னியமாக இன்னொரு பொருள் இருப்பதாக உணரப்படும்போதுதான் அப்பொருளைக் கண்டு அச்சமோ ஆசையோ உண்டாகும். அத்துவிதத் தன்னுணர்வில் அன்னியப் பொருள் இல்லாததால் ஆசை யச்சங்களுக்கு இடமே யில்லை. ஒருவன் தன் பெருவலிமையாற் பகைவர்களை யெல்லாம் அடக்கி யாளக் கூடியவனு யிருந்தாலுங்கூட அவனை ஆண்மை யுள்ளவனுகக் கூறமுடியாது. ஏனெனில், அப் பகைவர்களால் தனக்குத் துன்பம் வருமோ என்னும் பயத்தால் தான் அவன் அவர்களை அடக்கியாள முனைகின்றன். அவனது அடக்குமுறைகளுக்குப் பயமே காரண மாகின்றது. பயத்திற்கோ இருமையுணர்வே காரணமாகின்றது. எனவே அத்துவித அனுபவ முடைய ஞானி யொருவனுக்கு அன்னியம் யாதொன்று மில்லை யாகையால் அச்சமில்லை; ஆகையால் அவனே உண்மையில் ஆண்மையுடைய மகாதீரன் ஆகும்.

964. அடர்ந்து கவ்விய பெருமயக்கமான அகந்தையால் உண்டாகியுள்ள வேற்றுமைகள் யாவும் ஒழிந்த அத்துவித நிலையே கைவல்ய ஆன்மதரிசனம். பேதங்கள் யாவுங் கடந்த அந்த அதீதமான மோன அருட்பேரறிவே மகான்கள் அனுப விக்கும் பரந்தாம நிலையாகும்.

## கஅ. திருவருட் டிறன்

965. நீ இறைவனை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தால், பெற்ற தாயினும் பெரிதுங் கருணையுடைய இறைவனும் உன்னை நோக்கி ஒன்பதடி தூரம் நெருங்கி வந்து, உன்னைத் தன் பாது காப்பில் ஏற்றுக் கொள்கிறுர். சற்குருவாய் நம்மை யாட் கொண்ட இறைவனது கருணை அவ்வளவு பெரிதாகும்!

966. ஒவ்வொருவ ருள்ளும் ஆன்மாவாய் 'இருக்கிறேன்' என்று உணர்வாகும் இதயவிளக்கமே திருவருளின் வடிவம் எனப்படும். (அதாவது திருவருள் இவ் வடிவில் எல்லோரையும் அனுக்கிரகித்துக் கொண்டே யிருக்கின்றது; அவ்வாறிருக்க,) உயிர்கள் அன்புபொங்கி அவ் விதயமாம் ஆன்மாவைத் தியானிக்கா திருப்பதால் அவ் விறைவனைத் திரும்பிப் பாராத (கருணையற்ற) குற்றம் இவ்வுயிர்களுக்குத்தான் பொருந்துமே தவிர, அருள் செய்யாக் குற்றம் அவ் வுள்ளபொருளாகிய இறை வனுக்கு எவ்வாறு பொருந்தும்? (பொருந்தா தென்க).

விளக்கக் குறிப்பு:— "இருக்கிறேன்" என்னும் தன்மையுணர்வு எல்லோருக்கும் அனுபவம். இவ் வுள்ள வுணர்வு இறைவன் ஆன்மாவாய் நம்முள் எழுந்தருளியிருக்கும் பெருங் கருணையாலேயே நமக்கு இருந்து வருகின்றது. ஆகவே அனைவரையும் இறைவன் "இருக்கிறேன்" என்ற சித்ரூபத்தில் அருளிய வண்ணமே யிருக்கின்றான். ஜீவர்கள் தன்னை அடைந் துய்ய இவ்வருள் விளக்கமாகிய "இருக்கிறேன்" என்ற உணர்வே பேருதவி யாவதால் இதுவே இறைவனது திருவருள் எனப்பட்டது. அப்படியிருக்க, உயிர்களோ தன்மை வடிவிலுள்ள இருப்புணர்வான ஆன்மாவைக் கருதி நாடாமல் முன்னிலை-படக்கைகளையே நாடி நிற்பதால், '**உயிர்களுக்குத்தான் அவ் விறைவன்பாற் கருணையில்லை**' என்றே சொல்ல வேண்டிவரு கிறது! எனவே, 'அருளாமை' என்ற குற்றத்திற்கு உயிர்களே ஆளாகின்றன ரன்றி ஆண்டவன் சிறிதும் ஆளாகான் என்பது கருத்து!

ஸ்ரீ முருகனார் கூறியது:— உயிர்கள் தன்னை அறிந்தடைதலிற் சற்றும் வருந்த லாகா தென்றே தான் அவற்றுக்கு அயலாக நில்லாது, எவ் வுயிர்களுள்ளும் அவ் வுயிர்களின் உண்மையாம் ஆன்ம சொரூபமாகவே இறைவன் இருந்தொளிர்தல் அவன் அவற்றின்பாற் கொண்ட பெருங்கருணைத் திறமாதலால் "உள்ளதே யுள்ளமென ஓங்குந் திருவரு" ளெனவும், இதயத்தில் இறைவன் இடைவிடாது 'யான்யான்' எனத் திகழ்ந்து கொண்டேயிருக்குந் திகழ்ச்சி வடிவாய் அனைத் துயிர்களுக்கும் அல்லும் பகலும் அருள் செய்து கொண்டே யிருத்தலின், "இன்னருள் செய்யாக் குறை அவ்வுள்ளதனுக்கு எங்ஙன் உறும்?" எனவும், அவனுக்கு அபிமுகமாய் அகத்தே திரும்பித் தாம் அவனை நோக்கினு லொழிய, அவன் அவ்வாறு தங்களுக்கு அருள் செய்துகொண்டே யிருக்கும் உண்மை அவற்றுக்குப் புலனாகாமையின், அருளே வடிவாம் அவனை அகத்தால் ஆய்தலில்லாத உயிர்கள் அவன் சற்றுமே தமக்கு அருளவில்லை என்று கூறுதல் பெருந் தவறு மாதலின், "உள்ளுருகி உள்ளா உயிர்கட்கே. உள்ளதனை எள்ளுகுறை யேயும்" எனவுங் கூறினார். இதயத்தில் இரண்டற இருந்தொளிரும் ஆன்ம சொரூபமாம் பொருள் ஒன்றே தான் பலவாயிருத்தல் போன்று, உபாதியாற் பலவாம் ஒவ்வொருவ ருள்ளும் தனித்தனி "யான் யான்" என்று இனிது உறையப் பெறுதலின் "உள்ளம் (உள்ளோம், இருக்கின்றோம்)" என்னும் பன்மை ஏற்புடைத்தா மாறு உணர்க. அது அவ்வாறு இருந்தொளிர்தற் கிடனும் காரணம் பற்றியே **இதயம் தமிழில் 'உள்ளம்' என வழங்கப் பெறுதலின்** ஈண்டு அவ் வுள்ள மெனும் பெயர் இரட்டுற மொழிதலால் அவ்விரண்டு பொருளும் ஒருங்குபட நின்றது!

967. ('நானார்' என நாடுவதால்) அறிவு அந்தர் முகப் பட்டு 'உடலே நான்' என்னும் அகந்தை யடங்கி யொடுங்கு மொடுக்கத்துள் 'நான் நான்' என்று அகண்டமாய் விளங்கும்

உண்மை விளக்கமே (இருப்புணர்வே, மெய்யறிவே) குறி குணங் கடந்து மனத்துக் கப்பாலாய் நிற்கும் தானே (தன் சுத்த மாயை யாற் பக்குவ அடியார்கள் மேல் உள்ள கருணையால் அவர்களை உய்விக்க விரும்பிக் குறிகுணங்களோடு கூடிய) சற்குரு வடிவில் புறத்திலும் வந்து தோன்றும் நம் ஆன்ம சொரூபமான இறைவன் திருவருளாகும்.

விளக்கக் குறிப்பு:— இப்பாடலில் ஆன்மாவே குரு என்பதும், ஆன்மாவே ஈச னென்பதும், ஆன்மாவே அருள் என்பதும் தெளிவாக உபதேசிக்கப் படுகின்றது. குறிகுணங்க ளற்றவனு யிருந்தும் ஈசனும் ஆன்மா அடியார்கள் மீதுள்ள அருட்பெருக்கால் குறிகுணங்களை மேற்கொண்டு குருவடிவில் எழுந்தருள்கின்றான் என்று உபதேசிக்கப்படுவதால், ஆன்மா-ஈசன்-குரு-அருள் இந் நான்கும் ஒன்றே என்பது பெறப்படுகின்றது.

968. (முற்பாடலிற் கூறியவாறு வந்து தோன்றும் அருள் வண்ண வடிவான சற்குருவைத் தரிசித்த — அல்லது அருளின் வண்ணமானது ஆன்மாவே என்று விசாரத்தால் தன்னுள் ளுணர்ந்த) மெய்யன்பர்களின் மனமானது, மருள் வடிவான மனக் கலக்கத்தை யுண்டாக்கும் சிச்சடக் கிரந்தியாம் அகந்தை எழும்பாமல் இதயத்தில் அழியப் பெறுவதால், அது அந்த மெய்ப்பொருள் வடிவாகவே விளங்கும் என்பதாம்.

969. (966 ஆவது பாடலிற் கூறியவாறு எப்போதும் எங் கும் எல்லோருக்கும் பொதுவாக இறைவன் திருவருள் செய்து கொண்டே யிருப்பதால்) வெள்ளமாகப் பெருகும் அவ் விறை வனது அருளமுதத்தில் இயல்பாகவே மூழ்கி நிற்கும் எல்லா ஜீவர்களும் மருளின் வசப்பட்டு மயங்கித் தவிப்பது (எதைப் போன்ற தென்றால்) பொங்கிப் பெருகுங் கங்கை நதியின் நீர்ப் பெருக்கின் நடுவில் நின்று கொண்டிருந்தும் ஒருவன் (அதைப் பருகித்) தனது தண்ணீர்த் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளத் தெரியாமல் தாகத்தால் மிக வருந்தித் தவிக்கின்ற மடமை போன்றதே யாகும்.

970. ('நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே' என்று ஆன்றோர் கூறியவாறு) "எல்லா ஜீவர்கட்கும் தமது திரு வருட் கடைக்கண் ணளித்து வரும் பொதுவாகிய கடவுள் தீய வர்களை மட்டும் ஏன் அருள் செய்யாது ஒதுக்குகின்றார்?" என்று கேட்டால், காணப்படும் எல்லாப் பொருள்களிலும்

அபின்னமாய் நிறைந்து விளங்கும் கண்ணேதானுகிய கடவுள் ஏதொன்றையும் புறக்கணிப்பதே கிடையாது. அவ்வாறு இறைவன் புறக்கணிப்பதாக மற்றவர்களுக்குத் தோன்றுவதன் காரணம் அவர்களது மங்கிய மாலைக் கண்ணுன மன மயக்கமேயாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் கூறியது:— ஆன்ம சொரூபமாய் அனைத்துயி ருள்ளும் நிறைந்து இடைவிடாது எப்பொழுதும் அவற்றையெல்லாம் தன்மயமாய் இறைவன் அறிந்து கொண்டே யிருக்கவும், அவர்தாம் அவனை யறிந்தா லொழிய அவ் விறைவன் அவர்களை அருளலாகிய அறிவை அவர்கள் அறிய வாகாமையின் "அவர் மங்குங்கண் மாலை மயக்கு" என்று கூறப்பட்டது.

ஒருவர் நம்மைப் பார்க்கவில்லை என்று நாம் கூறுவதென்றுல் நாம் அவரை நன்றுகப் பார்த்த பிறகுதான் அவ்வாறு கூறமுடியும்! அவ்வாறே, கடவுள் நமக்கு அருளவில்லை என்று குறை கூறுதல், அவர் விளங்கும் வண்ணமாகிய ''நான் இருக்கிறேன்'' என்ற ஆன்மவுணர்வை நோக்கி நாம் திரும்பி அகக் கண்ணுற் கண்டபிறகு தானே கூற முடியும்? இங்ஙனம் ஆன்மாபி முகப்படாமல் பகிர்முகப் பட்டுக் கொண்டிருக்கும் போதே 'கடவுள் என்னைக் கடைக்கணிக்கவில்லையே' என்று குறைகூறல் பொருத்தமற்றதும் இயலாததும் ஆகும். ''திரும்பி அகந்தனைத் தினமகக் கண்ணுற் கண்டால் (அவர் அருள் செய்வது) தெரியும்'' என்னும் அக்ஷரமணமாலை 44 ஆவது பாடலின் தீர்ப்பைக் காண்க. இதனுல், அகக்கண் காணுதவர்களது புறப்பார்வையையே இப்பாடலில், ''மங்குங் கண் மாலை மயக்கு'' என்று சுட்டிக் காட்டப்பட்டது.

## கக. சச்சிதானந்தத் திறன்

971. பிறவற்றை யறியும் மயக்க வறிவான புத்தியைப் புறமுகப்படாமல் தடுத்து, இருப்புணர்வான சிறந்த இதயத்தை (ஆன்மாவை) நோக்கித் திருப்பி நாடினுல் அந்த சச்சிதானந்தமானது நித்திய சித்தமாய் அனுபவிக்கப்படும்.

972. உண்மையில் தான் சித்சொரூபமே யான சித்தம் எனப்படும் ஓர் மயலறிவு தன் பிரவிருத்தி ரூபச் சலனம் நீங்கி நிற்குமானுல் அப்போது அது தன் இருப்பையே சத்தாக (மெய்ப் பொருளாக) அறிந்து கொள்ளும். இவ்வாறு சத்துடன் சித்சக்தி (தன் இருப்பை யறியும் சக்தி) இரு வேறு பொருள்க ளாகாமல்

ஒன்றாய்ச் சேர்ந்து விளங்கும் பேரின்ப நிலையே பிரம்மத்தின் மற்றொரு மூன்றாவது அம்சமாகச் சொல்லப்படும் ஆனந்தமும் ஆவதால், அவ்வானந்தம் சச்சித்தான தன்னைத் தவிர வேறு எதுவாகும்? (எனவே தான் சச்சிதானந்தம் என்பதாம்).

விளக்கக் குறிப்பு:— தன்னைச் சத்தாக அறிந்து கொள்வதே பேரின்ப மாகும். ஆன்மாவாகிய தன்னை உடலாக அறிந்து கொண்டிருக்கும் மயக்கறிவே 'சித்தம்' எனப்படுவது. இத் தவறான அறிவினாலேயே துன்பம் என்பது தோன்றி இருந்து வருகின்றது. இவ்வாறின்றித் தன்னை ஆன்மாவா யறிந்து கொள்ளும்போது சித்தம் என்ற தன் சலன வடிவம் நீங்கிச் சத்ரூப இருப்பு வடிவமாதலால் அது தன்னையே சத்தாக அறிகின்றது. இச் **சச்சித்** ஐக்கியமே **ஆனந்த** நிறைவாவதால், துக்கம் என்பது என்றுமே இருப்பற்றதாகி, தானே சத்தும், சித்தும், ஆனந்தமும் என்ற உண்மை விளங்கும் என்பது உபதேசம்.

973. சித்தாகிய ஆன்மாவுக்கும், ஜடமாகிய உடலுக்கும் போடப்பட்டுள்ள போலி முடிச்சே தானாகிய ஜீவன் என்றதோர் போலியறிவு. இவன் ஜடவுடலை 'நான்' என்று அபிமானிப்பதை விட்டவுடன் (தான் அழிந்தவுடன்) சித்சொரூப (அறிவு சொரூப) மாகவே விளங்குகின்றான். அப்போது அந்தச் சித்சொரூப மானது (அங்கே தனக்கு வேறான மற்றொரு சத் பொருளின்றி) தானே கேவல சத் மாத்திரமாக மிஞ்சி நிற்பதால், (இருபொரு ளற்ற அந் நிலையில்) ஆனந்தம் என்பதும் எப்போதும் தானே யாகும். (தன்னிருப்பறிவே இன்பமு மாகும்).

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— சடவகந்தை சாதல்— சிச்சடக் கிரந்தி பேதித்தல். சிச்சடக் கிரந்தி பேதமாவது, அவிச்சையால் ஒன்றுபட்ட உடலுயிர்கள் ஆன்ம விசாரத்தால் வேறாதல். "ஊனுயிர் வேறு செய்தான் நொடித்தான் மலையுத்தமனே" என்பது ஸ்ரீ சுந்தரர் தேவாரம். இங்கு, 'தன்மாத்திர இன்பம்' என்று கிரந்தி பேதப் பயனும், அதற்குக் காரணமாகச் 'சன்மாத்திரம்' என்று சைதன்னிய இலக் கணமுங் கூறப்பட்டன.

974. பிரமாதத்தால் மறந்து நழுவிவிடாத சொரூப ஞானமே குன்றாத உண்மை யன்புறவாகிய பக்தி நெறியாகும். ஏனெனில், தன் சத்சொரூப மெய்ஞ்ஞானமே அன்பின் மெய்த் தன்மையாகவும், இரண்டாகாத பேரின்ப மயமாகவும் விளங்கிக்

கொண்டிருக்கிறபடியால் என்க. (என்றும் இயல்பாக விளங்கும் ஆன்ம சொரூப மெய்யறிவே இரண்டற்ற ஆனந்த நிறைவாகவும், அன்பின் உண்மையாகவும் பொங்கிப் பொலிவதாலென்க.)

விளக்கக் குறிப்பு:— சத்து, சித்து, ஆனந்தம், இம்மூன்றும் மூன்றல்ல; ஒரு பொருளே. தன் இருப்பை (சத்) அறிவதே (சித்) இன்பம் (ஆனந்தம்) என்று நான் அறிய வேண்டும். 979 ஆவது பாடலையும் இங்கு ஒத்து நோக்குக. அன்பால் விளைவது இன்பம் என்று அன்பையும் இன்பத்தையும் காரண காரியங்களாகக் காணுமல் அன்பே இன்பம் என்று காண்பதும், தன்னிடத்திலுள்ள அன்பே தன்னை யறியவைப்பதால், அறிவே இன்பம் எனக் காண்பதும், தானும் ஓர் அறியப்படு பொருளாகாமல் தானுயிருத்தலே யாவதால் தானே இன்பம் எனக் காண்பதும் வேண்டும். எனவே, அன்பு அல்லது இன்பவடிவான 'நாமே இருக்கிறோம்' என்ற மெய்யுணர்வே ஏக பரிபூரண ஆனந்த நிலை என்பது கூறப்பட்டது.

975. இவ்வுலகங் ளெல்லாம் நிலையான உண்மைப் பொருள்போல் தோன்றிக் கொண்டிருப்பதற்குக் காரணமாயிருப்பது யாதெனில், நிலையற்றதான புலையுடலை 'நான்' என்று அபிமானித்திருக்கும் அகந்தையே யாகும். இக் குற்றம் (அகந்தை) அழிந்தால் அப்போது மிஞ்சி நிற்கும் ஸ்வாத்ம நிலையே இத் தோற்ற மாத்திர நாமரூபப் பிரபஞ்ச மெல்லாம் மெய்யாகவே சார்ந்து நின்ற சத்துப் பொருள் என்பது தெரிய வரும்.

விளக்கக் குறிப்பு:— அகந்தை சத்தல்ல வாகையால் உலக நாமரூபங்களும் உண்மை யல்ல என்பதும், ஆன்மாவே சத்தாகையால் பிரபஞ்சமும் ஆன்மாவாக உண்மை என்பதும் பெறப்பட்டது.

976. இவ் வுயிரினங்களெல்லாம் அறிவுள்ள பொருள்கள் போலத் தோன்றிக் கொண்டிருப்பதற்குக் காரணமா யிருப்பது யாதெனில், சுயமாய் அறிவற்றதான, பேய் போன்றதோர் உண்மையற்ற, மயக்கவெறி வடிவாயுள்ள அகந்தையே யாகும். இம் மயக்க அறிவு அழிந்தால் அப்போது மிஞ்சி நிற்கும் ஸ்வாத்ம நிலையே இத் தோற்ற மாத்திர உயிர்களின் அறிவுகளுக் கெல்லாம் அறிவு கொடுத்துக் கொண்டிருந்த சித் என்பது தெரியவரும்.

977. இவ்வுலகப் பொருள்க ளெல்லாம் இன்ப முள்ளவை

போல் தோன்றிக் கொண் டிருப்பதற்குக் காரணமா யிருப்பது யாதெனில், இன்பம் சிறிது மற்றுத் துன்பமே வடிவா யிருக்கும் அகங்காரச் செருக்கே யாகும். இச் செருக்கு (அகந்தை) அழிந்தால் அப்போது மிஞ்சி நிற்கும் ஸ்வாத்ம நிலையே இத் தோற்ற மாத்திர உலக இன்பங்க ளெல்லாம் அனுபவிக்கப் படுதற்கு ஆதாரமா யிருந்துகொண் டிருந்த ஆனந்தம் என்பது தெரியவரும்.

விளக்கக் குறிப்பு:— மேலேயுள்ள 975, 976, 977 ஆகிய மூன்று பாடல் களும் ஒருங்கே வாசித் துணர வேண்டியவை யாகும். இவ்வுலகம் என்றும் நிலைத்துள்ள ஒரு சத்துப் பொருள் போலவும், உலக உயிர்க ளெல்லாம் சைதன்னிய விலாசம் — அறிவுவிளக்கம் — உள்ளவை போலவும், உலகிலுள்ள பொருள்க ளெல்லாம் நமக்கு இன்பந் தருவன போலவும் தோன்றுகின்றன வன்றோ? இதன் இரகசியம் இம் மூன்று பாடல்களாலும் விளக்கப்படுகின்றது.

இவ்வுடலோ, நிலையற்றது, அறிவற்ற ஜடம், ரோகாதி சகல துன்பங்கட்கும் இருப்பிடமானது. நான் என்ற உணர்வோ சத் சித் ஆனந்தத்தின் விளக்கமாகும். இவ்வுடலை 'நான்' என்று அபிமானிக்கும் அறிவே அகந்தை எனப்படுவது. இவ்வாறு அசத்தும் ஜடமும் துக்கமுமான உடலை நிலையுள்ளதாகவும், அறிவுள்ளதாகவும், இன்பந்தருவ தாகவும் (அதாவது சச்சிதானந்தமாக) அபிமானிக்கும் அகந்தையின் வியவகாரிக காலத்தில் மட்டுமே இவ் வுலகங்கள் நிஜம் (சத்) போலவும், உடலுயிர்கள் அறிவுள்ளன (சித்) போலவும், உலகப் பொருள்கள் இன்ப முள்ளவை (ஆனந்தம்) போலவும் இவ் வகந்தையின் திருஷ்டிக்குத் தோன்றுகின்றன. ஆகவே, பிரம்மத்தின் மித்தியாம்சங்களான நாம ரூபங்கள் சத்தியாம்சங்களான சச்சிதா னந்தம் போலத் தோன்றுவதற்கு இவ் வகந்தையே காரணம் என்று இம் மூன்று பாடல்களும் தீர்ப்பளிக்கின்றன. அதாவது பொய்யான நாமரூபங்களில் மெய்யான சச்சிதானந்தத் தன்மையை ஆரோபித்துக் காண்பதே அகந்தையின் திருஷ்டி தோஷமாகும். இவ் வகந்தை ஆன்ம விசாரத்தால் அழிந்தால், ஆரோபித உலக சச்சிதானந்தம் மறைந்து அதிஷ்டான் ஆன்ம சச்சிதானந்தமே விளங்குவதால், ஆன்ம இருப்பால்தான் நாமரூப உலக இருப்பும், ஆன்ம அறிவால்தான் நாமரூப உயிர்களின் அறிவும், ஆன்ம இன்பத்தால்தான் நாமரூப உலகப் பொருள்களின் இன்பமும் பொய்யா மகந்தைக்குப் புலனாகிக் கொண் டிருந்தன என்ற உண்மை தெரியவரும்!

இம் மூன்று பாடல்களும் சத்து, சித்து, ஆனந்தத்தைக் குறிக்கும் 'நிலை, அறிவு, இன்பம்' என்ற மூன்று பதங்களால் ஆரம்ப

மாவதையும், அகந்தையை விவரிக்கும் மூன்றிடங்களிலும், 'புலே யகங்காரம், வெறி யகங்காரம், துன்ப வகங்காரம்' என்றவாறு சச்சிதானந்தத்தின் எதிர்மறைப் பதங்களால் அகந்தைக்கு அடைமொழி கொடுக்கப்பட் டிருப்பதையும், இம் மூன்று பாடல்களிலும் சச்சிதானந்தத்திற் கேற்ற பயனிலேப் பதங்களாக 'சார, தேர, ஊர' என்ற வினேச் சொற்களேக் கையாண் டிருப்பதையும் சொல்நயம், பொருள் நயங்களாக வாசகர்கள் கண்டுணர்ந்து மகிழ்க.

978. "சுகவடிவான பரப்பிரம்ம மாகவே ஆகிவிட்டால் சுகத்தை அனுபவிக்கும் உணர்வு நமக்கு இராது. (ஆகையால் நாம் சர்க்கரை போலாகாமல் அதை ருசிக்கும் எறும்புபோல் துவிதமாகவே இருக்க வேண்டும்.)" என்று கூறும் சிலர், சர்க்கரை எப்படித் தன் சுவையைத் தானே அறிய முடியாத ஜடப் பொருளோ அதேபோல ஆனந்த வடிவ பிரம்மமும் ஜடப் பொருளே என்று தர்க்கித்துச் சாதிப்பவர்களே யாகும்!

விளக்கக் குறிப்பு:— "நான் சர்க்கரையாகவே ஆகிவிட விரும்பவில்லே; அருகில் அமர்ந்து சர்க்கரையைச் சுவைக்கும் எறும்பாகவே இருக்க விரும்புகிறேன்" என்று துவித பக்தியின் மோகத்தில் சிலர் கூறுவதுண்டு. அதாவது, பிரம்மத்துடன் இரண்டறக் கலந்துவிடும் அத்துவித நிலே ஆனந்தானுபவம் அற்ற வெற்று, வறட்டு நிலே என்றவாறு ஓர் தவருன அபிப்பிராயம் சில பக்தர்களிடம் இருந்து வருகிறது. இப்படிக் கூறுவது பக்தியின் பூரணுனுபவம் பெருத நிலேயிலேயே சாத்திய மாகும். "அன்னியமில் அன்பு செய்யும் அன்னேனே" சம்பூரண பக்திமான்.

சர்க்கரையோ ஜடப் பொருள்; எறும்போ அதை அனுபவிக்கும் அறிவுடையது. ஆனல் பிரம்மம் இப்படிப்பட்டதல்ல; அது சர்க்கரையைப் போன்றதோர் ஜடப் பொரு ளல்ல. சத்தாகிய அதுவே தன்னே யறியும் சித்தும் ஆகும். அவ் வறிவின் சுபாவமான ஆனந்தமும் அதுவே யாவதால் பிரம்மானந்தத்தை அறிந்து அனுபவிக்க பிரமத்திற்கு அன்னியமாக ஓர் சித் பொருள் தேவை யில்லே. "உள்ளதுணர..." என்னும் உபதேசவுந்தியார் 23வது செய்யுள் இங்கு வாசித்துணர்க. ஆனந்தமும் ஆனந்தத்தின் அறிவும் தானேயாகிய ஆன்மாவை ஜடமான சர்க்கரைக்கு உபமானப்படுத்துவது அறியாமைக் கூற்றே யாகும்.

979. திரவத்தன்மை, இனிமை, குளிர்ச்சி ஆகிய இம் மூன்று குணங்களும் சேர்ந்த தண்ணீர் எப்படி ஒரே பொருளோ, அவ்வாறே பிரம்மம் சத்து, சித்து, ஆனந்தம் என்ற மூன்று அம்சங்கள் போலக் கூறப்பட்டாலும், அனு பவித் தறிந்தால் அம் மூன்றும் (நாமாகிய - ஆன்மாவாகிய) ஒருபொருளே என்பது விளங்கும்.

## ௨0. உண்மை மாட்சித் திறன்

980. நம் இயல்பே 'இருப்பு'தான்! அந்தத் தன்னிருப்பு ஒன்றைத் தவிர (வேறு எவையாவது இருப்பனபோல் தோன்றி ஞல்) மற்றவை யாவும் கற்பனைக் கூட்டங்களாகிய பொய்யே யாகும். 'இருப்பு' அற்றனவாகிய (அசத்தாகிய) அவை யாவும் நம்மை விட்டு நீங்கி மறையக் கூடியனவே; ஆனுல் நம் இருப்போ என்றென்றும் நீங்குவதே யில்லை.

விளக்கக் குறிப்பு:— இங்குக் கூறப்பட்ட 'நம் இருப்பு' என்றது உடல் மன மற்ற நம் இருப்புணர்வே என அறிய வேண்டும். தூக்கம், மரணம் பிரளய மாகியவற்றில் ஏனையவை யாவும் பொய்யாய் மறைந் தொழிந்தாலும் ஒழியா இருப்புணர்வாய் விளங்குவது நாமே (பிரம்மமே) என்பது கருத்து.

981. அறிவு வடிவாகவே யிருக்கும் நாம் இல்லாமற் போவதே யில்லை. ஏனைய (பிற) பொருள்களை யறியும் சுட்டறிவு நீங்கி நாம் நின்றுல், அதாவது சுத்த அறிவாகிய ('இருக்கிறேன்' என்ற) உணர்வில் பொய்யாகத் தோன்றும் (அது இருக்கின்றது, இது இருக்கின்றது என்னும்) துவிதக் கற்பனை ஓய்ந்தால், அறிவு வடிவாகவே யுள்ள நமக்கு அழிவே யில்லை என்பது விளங்கும்.

விளக்கக் குறிப்பு:— சுட்டறிவுக்கு இலக்காகும் பொருள்களே அழிவுக் குரியன வன்றி இருப்பறிவாகிய நமக்கு அழிவில்லை. ஏனெனில், சுட்டறிவாகிய அகந்தை நீங்கிய பின்னும் 'இருக்கிறேன்' என்ற சுத்த அறிவு விளங்குவதால் நமக்கு என்றும் அழிவே யில்லை என்றுர்.

982. மேலாம் உண்மையான தமது பரமான்ம சொரூபத்தில் வெறும் கற்பனையால், 'நான் இன்னுர்' என்னும் அகந்தையுணர்வு சிறிது தோன்றவே அதனுல் ஆன்ம சொரூபத்தையே மறைக்கின்ற பிரமாதத்திற்கு உட்பட்டவர்களுக்கு (அஞ்ஞானிகளுக்கு)ப் பரிபூரண ஆன்ம சொரூபம் ஒன்றுமில்லாத வெறும் சூனியமே போல (இல்லாத தாகவே) ஆகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீமுருகனுர் கூறியது:— 'நான்' என்ற நினைவே அகந்தை யாதலின், அது சிறிது எழவும் தேகாத்ம புத்தியால் பந்த முண்டாகி, சொரூபத்தினின்றும் நழுவுதலாகிய பிரமாதம் என்னும் அஞ்ஞானம் ஜனிக்கின்றது. அஃதே உண்மையில் பிரம்மஹத்தி தோஷமென் றறிக. இவ்விதம் பிரமாதத்திற்கு வசப்பட்டுழலும் பந்த ஜீவர்க்குப் பூரண நிலை அறியக் கூடாததாய், சூனியத்தைப் போலவே தோற்றும்.

983. முன்னிலைப் புறப்பொருள்களை எதிரிட் டறியும் ஜீவனுகத் தன்னைக் கருதிக் கலக்க மடையாமல், சிறந்த மெய்ந் நிலையே (ஆன்ம நிலையே) தானுகத் தன்னை அறிந்தவன் அஷ்ட சித்திகளையும் அறிந்து கொள்ளும் ஆசையற்றவனுய் நிறைந்த ஆன்ம சாந்தியை யடைவான்.

விளக்கக் குறிப்பு:— இப்பாடலைச் சுட்டறுத்தற் றிறனிலும் சேர்த்து வாசித்துக் கொள்க.

புறத்தே பொருள்கள் நிஜமா யுள்ளன என்று கருதிச் சுட்டியறியும் மயலறி வுடையோர்க்கே அஷ்ட சித்திகள் ஆச்சரியப்படத் தக்கனவாயும், ஆற்றுவதற்குச் சிறந்தனவாயுந் தோன்றும். சுட்டறிவு நீங்கி, இருப்பறிவாகிய ஆன்மாவாய்த் தன்னை யுணர்ந்தோன் அஷ்ட சித்திகளின் அற்ப அசத்திய நிலையை யுணர்ந்து, அவற்றைத் துச்சமாயகற்றி, அவற்றினும் மிகவுயர்ந்த, உண்மையானதான ஆன்ம சாந்தியையே யடைவான்.

984. ஸத்வஸ்து வாகிய தன் இருப்புணர்வை விடாது நாடி நிற்கும் நிஷ்டாபலம் உடையவன் எதற்கும் மனங் கலங்கி அஞ்ச மாட்டான்.

விளக்கக் குறிப்பு:— பயவுணர்வு அன்னியப் பொருள் ஒன்று இருக்கும் வரையிலுமே உண்டாகக் கூடும். உள்ள பொருள் தான் மட்டுமே என்ற அனுபவ உரம்பெற்ற தீரனே நிஷ்டா பல முடையவ னுகும். அதனுல் அவனது திருஷ்டியில் அன்னிய மின்மையால் அச்சமோ கலக்கமோ ஏற்படாது என்பது உபதேசம்.

## உக. சருவம் பிரம்மத் திறன்

985. பொய்யான மன அறிவாகப் பிரதிபிம்பித்து, அப் பிரதிபிம்ப அறிவிற்கு வேறுவேருன துவிதத் திரிபுடித் தோற்றங் களாகக் காணப்படுவதும் மெய்யறிவான நம் ஆன்ம சொரூப மொன்றே. ஆகவே ஏகமாய் விளங்கும் அறிவாகிய தன்னை யறிந்து அவ் வான்மாவிலேயே நிலைபெற்ற ஞானிக்குக் காணப் படும் இப் பிரபஞ்சத் தோற்றம் முழுவதும் ஏக வஸ்துவாகிய தான் ஒருவனே.

986. நிலைத்துள்ளதான தன்னைத் தவிர இரண்டாவது பொருள் வேருென்று மில்லாததாகவும், (அப்படி இருப் பதாகத் தோன்றும்) வேறெந்தப் பொருளும் உண்மையில் தான் அல்லாததாகவும் உள்ள பொருள் ஒன்றேயாகும் சத்சித் பரம்பொருளாக இருந்து விளங்கும். அந்தப் பரசிவ நிலையில் அனுபவ மாவதெல்லாம் அப் பரப்பிரம்மமே; வேறல்ல.

987. சத்தியப் பொருளாஞலும் சரி, அல்லது அசத்தியப் பொருளாக விருந்தாலும் சரி; புத்தியால் அடையத் தகும் வித்தைக ளாஞலும் சரி; அல்லது அறியாமை யாஞலும் சரி; மனத்திற்குப் பிரியமானவை யாஞலும் சரி, அல்லது வெறுப் பானவை யாஞலும் சரி; எல்லாம் பிரம்மமே; வேறல்ல.

988. சிரத்தை அசிரத்தை, நினைப்பு நினைப்பின்மை, வெறுப்பு விருப்பு, அறிவு அறியாமை, மேன்மை கீழ்மை, போற்றற் குரியன இகழற் குரியன, யாவும் பிரம்மமே; வேறல்ல.

விளக்கக் குறிப்பு:— இத் திறனிலுள்ள நான்கு பாடல்களாலும் பிரம்ம சொரூபத்தின் ஏகத்துவமே வலியுறுத்தப்பட்டது. இப் பாடல்களிற் கூறப்பட்ட இரட்டைகள் யாவும் உண்மையில் இல்லாதன வென்றும், ஏகமாம் பிரம்மம் ஒன்றே உள்ளது என்றும் கொள்ள வேண்டுமே தவிர, இரட்டைகளும் பிரம்மமே யாதலால் இருமை நோக்கைச் சிறப்பித்துக் கூறப்பட்டதாகவோ, அல்லது அவைகளிலேயே உழன்று நிற்பதால் தவருென்றுமில்லை என்று கூறப்பட்டதாகவோ கொள்ளக் கூடாது.

## உஉ. சமரசத் திறன்

989. மோனமே ஞான வரம்பு. ஆகையால், மோனத் தையே தமது பொது இயல்பாக வேதாந்த நெறி கொண்டிருப்

பதால், எல்லா மதங்களுமே பரிசுத்தமாய்ச் சிறந்து விளங்கும் மெய்யான அத்துவித சாதனைக ளாகவே அம் மோனத்திற்கு உடன்பாடாக அமைந்து விடுகின்றனவே யன்றி அவை அற்புத மான அவ் வேதாந்தத்திற்குச் சிறிதும் விரோத மாவதே யில்லை!

விளக்கக் குறிப்பு:— எம் மதங்களால் எத்தகைய அறிவுகள் முடிந்த குறிக்கோளாகக் கொள்ளப்பட்டாலும், அடையப்பட்டாலும், மோனமே ஞானவரம்பாதலின், அந்தந்த மதங்களின் முடிவறிவுகளும் மோனத்தில் அடங்கி விடுவனவே யாம். வேதாந்தமோ மோனத்தையே தனது முடிவாகக் கொண்டதோர் பொது தத்துவ மாதலால், எம்மதமும் வேதாந்தத்திற்குட்பட்ட சாதனமேயாகி அதற்கு உடன்பாடாகி விடுகின்றது எனப்பட்டது.

990. பரந்த நோக்க மில்லாமலும் அற்பப் புத்தியுடனும் யாரேனு மொருவர் ஆத்திரமே காரணமாகக் கொண்டு (தற்போதுள்ள மதங்களை எல்லாம் மறுத்து) இனி புதியதோர் மதத்தைக் கற்பித்தாலுங்கூட அகண்ட அறிவே வடிவாக விளங்கும் சிவத்திற்கு (பிரம்மத்திற்கு) அந்த மதமும் உரிய தாகவே யாகும் என் றறிக.

991. உனக்கு எந்த மதத்தின்மீது நம்பிக்கை யிருந் தாலும் சரி, அந்த உன் சொந்த மதத்தின் மேலிருக்கும் அபிமானத்தால் மற்ற மதங்களை எதிர்த்து வாதாட வெளிமுகப் படாமல், உள்முகமாகத் திரும்பி உன் மதத்தை உண்மை யன்போடு பின்பற்றி ஒழுகுவா யாக.

992. துவித மதம், விசிட்டாத்துவித மதம், சுத்தாத்துவித மதம் ஆகிய மதங்களைப் பற்றிப் பற்பல விதமாக வழக்கிட்டு வாதம் புரிந்து கொண்டிருப்பதை விட்டு விட்டு, இறைவனை நினைத்து உபாசித்து அதனால் வளருந் தவத்தால் அவனது திருவருளைப் பெற்று மெய்யுணர்வு பெறுவதே மேன்மை யாகும்.

993. 'மதி' என்று ஒன்று இருக்கும் வரையிலுந்தான் 'மதம்' என்பதும் இருக்கும். அந்த மதியானது தன்னை யார் என்று ஆராய்வதால் உள்ளே திரும்பி இதயத்தில் ஒடுங்கவே, அந்த உபசாந்தி வடிவான மகாமௌன ஸ்திதியில் மேற் கூறப் பட்டபடி 'மதம்' என்று ஒன்றும் உயிர்த்திருக்க முடியாது!

## உங. சைசவியத் திறன்

994. கணக்கற்ற மனித குலத்தினருள் அகங்காரத்தின் சேஷ்டையறிவு (சலனபுத்தி) அறவே ஒய்ந்து சிசுக்களைப் போன்று வாழும் ஞானிகளே (தாய் தந்தையராற் பெரிதும் கவனித்து வளர்க்கப்படும் சிறு குழவிகளைப் போல) அம்மை யப்பரான ஆண்டவனுல் எக்காலத்தும் கருணையோடு இடை விடாமல் நினைவிற் கொள்ளப்பட்டு அனேக மடங்கு (அருமை பெருமையாகக்) கவனத்துடன், எவ்விதத் துன்பமுடி மடையாமற் காப்பற்றப்படுகின்றனர்.

995. கொஞ்சமும் மனவிகார மடையப் பெருத பரிசுத்த மகான்களே பாக்கியசாலிகளாகும். ஏனெனில், பிரம்மம் எனப் படும் தாயின் மடியை விட்டு அகலாது எப்போதும் ரமித் திருக்கும் ஆனந்தமே அவர்களுக்குப் பூரண அனுபவ உரிமை யாக அமைந்து விடுகின்றதால் என்க.

விளக்கக் குறிப்பு:— அகந்தையின் எழுச்சியும் சேஷ்டையுமே ஆண்டவ னருளைத் தடுப்பதாகும். இறைவனே தாமே வலிந்தூட்டும் அருளுடைய வனுயினும் அகந்தையாகிய நாமே நம் எழுச்சி - சேஷ்டைகளால் அருளைத் தடுத்துக் கொண்டு விடுகிருேம். இவ் வகந்தைச் சேஷ்டை யற்ற ஞானிகள் மாதா பிதாக்களின் போஷிப்பைத் தடுக்காத பச்சிளங் குழவிகளாக ஒழுகுவதால் ஆண்டவனருளுக்கு அவர்களே முழுதும் உரிமையுடையவர்களாகிச் சதாகாலமும் பேரின்பத்தில் வாழ்கின்றனர்.

## உச. ஆன்ம முயக்கத் திறன்

996. 'நான் இது அல்லது இன்னுர்' என்னும் அகந்தை மதி களையப்பெற்று, சத்திய ஞானகாசமாகிய ஆன்மநாத னுடன் ஒன்ருய்ச் சேர்ந்து, தானென்ருே அவனென்ருே (ஜீவ னென்ருே கடவுளெ ன்ருே) பிரித்தறிய முடியாதபடி இருமை யற்று அனுபவிக்கப்படும் ஆன்மக் கலப்பே (பிரம்மாத் மைக்ய நிலையே) கற்புள்ள சிவ பக்தியின் (ஜீவன் இறைவனிடங் கொள்ளும் மதுரபாவ பக்தியாகிய கற்பின்) சிறப் பாகும்.

குறிப்பு:— இப் பாடலுடன் இந்நூலின் 73-ஆவது பாடலையும் ஒத்து வாசித் துணரின் 'சிவமொன்று கற்பின் சிறப்பு' என்பதின் விளக்கம் தெளிவாகும்.

997. நான் (ஜீவான்மா) என்றும், அவன் (பரமான்மா) என்றும் இருவிதமாகக் கூறப்படும் பாவனைக ளற்று ஒன்ருகி விடுகின்ற அந்த மோன ரமிப்பில் பேச்சு மூச்சுக்கு இடமேது? (இல்லை என்க). 'நான்' என்ற அகந்தை யற்றுப்போய், அறிவுக் கடலோடு அறிவு நதி இணைந்து, ஒன்ருகிய நிலையில், அந் நிலையை விளக்க வாய்ச் சொற்கள் எவ்வாறு பயன்படும்? (பய னற்றவை என்றவாறு).

விளக்கக் குறிப்பு:— இப் பாடலின் பின்னிரண்டடிகள் திருக் குறளின் 1100 ஆவது பாடலாக, காமத்துப் பாலின் களவியலில் வரும் செய்யுளாகும்.

சிவன் - சீவன் என்றும், குரு - சீடன் என்றும் தோற்றிய இருமையுணர்வு அகந்தை யழியுங்கால் அறவே யழிவதால், ஞான வரம்பான மோனவுணர்வே இக் கலப்பின் விளைவாய் மிஞ்சி நிற்கின்ற தன்றே? சிவ - சீவ பேத நிலையில் நடந்தேற வேண்டிய தோத்திராதி சகல உபாசனைகளின் பயனும், குரு - சீட பேத நிலையில் நடந்தேற வேண்டிய உபதேசாதி சகல வாய்ச் சொற்களின் பயனும் இம் மகாமௌன சித்தியே யாவதால், 'நான் - அவன்' என்ற பேத நோக்கற்ற இந்நிலையில் வாய்ச்சொற்கள் பயனறறவை எனப்பட்டது. "நானறவே கண்ணொடு கண்ணினை நோக்கு ஒக்கில்" என்ற சொற்ருெடரில், 'நான்' அற்ற பிறகு விளங்கும் கண் - அதாவது ஞானம்-அறிவு என்று கொள்க. ஆன்ம உணர்வால் நோக்குதலே "இணை நோக்கு, ஒத்த நோக்கு, சமதிருஷ்டி" என்றும் ஆழ்ந்த பொருள் கொள்ளுதல் நல்லது.

திருக்குறளில் சிற்றின்பக் காதலர் இருவரின் கண்ணேக்கு ஒத்த நிலையை விவரிக்கும் இச்சொற்ருெடரையே இந்நூலில் ஆன்மீக நெறிக்கு உகந்தவாறு உயர்ந்த பொருளில் இந்நூலாசிரியர் கையாண்டிருப்பதன் சிறப்பும் நயமும் உணர்க.

998. ஆன்மாவில் ரமிக்கும் அனுபவம் பெற்ற ஞானிகளின் ஆனந்த நிலையை அவ்வான்ம ஞானத்தை யனுபவித்தவர்கள் மட்டுமே அறிய முடியும். அதை அனுபவியாதவர்கள் எவ்வாறு அறிய முடியும்? தேனைக் குடித்த தேனீ அதிலேயே மயங்கிக் கிடப்பது போலவே, ஆன்மானந்த முயக்கம் பெற்றவர்களின் நிலை தன்னைத் தவிர அன்னியப் பொருள் ஏதுமின்றி ஏகமா யிருக்கும் (கைவல்யச்) சிறப்பை யுடையதாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனர் கூறியது:— வஸ்துவணைந்தோ ரியல்பு தேனையுண்ட தேனீப் போல பிறரால் அறியப்படாத மாண்புடைத்தது. அவர் அன்னியத்தைக் காணுததாலும் அவ்வா றுகும். அணைந்தோர் இயல்பை அணைந்தோரே யறிவர் ; அணையார் அறியார் என்பதாம்.

999. ஆன்மானுபவம் பெற்றவர்கட்கும் அவ் வான்மானுபவ சுகத்தை யனுபவிப்பது மட்டும் இயலுமே தவிர, அவர்கள் தாம் தேகான்ம புத்தி யழிந்து அவ் வானந்தாதீத மோனத்தை யடைந்த முறை எப்படி என்று எண்ணிப் பார்ப்பதுங் கூட அரிதாகும்.

விளக்கக் குறிப்பு:— சென்ற பாடலில் அணைந்தோ ரியல்பை யணைந்தோரே யறிவர் என்று கூறப்பட்டது கொண்டு, அவ் வணைந்தோராவது அதனியல்பைப் பிறருக்கு அறிவிக்க வியலுமன்றோ என வினவின், அவர்களுங் கூடத் தாமனுபவிப்பதன்றி அறிவிக்க வியலாததாகும் அது எனவும், மேலும் பிறருக்கறிவிக்க அவர்கள் இயலாரேனும் தாமாவது அதன் முறையைச் சிந்திக்க வியலுமா வென்றால், சிந்திக்கும் அகந்தை யழிந்ததாற் சிந்திப்பதுங் கூட அவர்களால் இயலாததே எனவும் இப்பாடலால் விளக்கப்பட்டது.

## ௨௫. சைதன்னிய மாட்சித் திறன்

1000. அகந்தையாகிய சுட்டறிவால் இவ்வுலகைத் தனக்கு வேறானதோர் பொருளாகக் காணும் போது, காணும் அவ்வறிவும் ஜடமே (அறிவின்மையே). அகங்காரம் அழிந்தால் அவ் வகந்தை யுதிக்கும் மூலஸ்தானத்தில் (மெய்யறிவான) சுத்த அத்துவித ஞான ஒளி (தாமாகவே) அனுபவ மாகும்.

1001. சத்தாகிய உள்ள பொருள் எதுவோ அதுவே அதை யறியும் சித்தாகிய அறிவு மாகும். ஆகையால் சித்தம் எனப்படும் மனம் தன் உபாதிகள் நீங்கி, கேவல சித்து மாத்திர மானாலொழிய, சித்தே சத்திய வஸ்துவாக விளங்கும் சிரேஷ்ட மான அத்துவித நிலையை உண்மையற்ற கற்பனைப் பொருளாகிய சிதாபாசனும் அற்ப மனிதபுத்தி அறிய இயலாததே யாகும்.

1002. கிழக்குத் திக்கின் அடிவானத்திற் சூரியன் உதிக்கும் வரைதான் உலகிற் சந்திரனின் ஒளி பெருமை பாராட்டிக் கொள்ள முடியும். அது போல, அகந்தையாகிய மயக்கவுணர்வு ஓயும் வண்ணம் ஆன்ம ஞானோதயம் ஏற்படும் வரைதான் ஜீவனாகிய மன (மனித அறிவின்) மேம்பாடுகள் பெருமை யுடையனவாகக் காணப்படும் என் றறிக.

1003. தோற்ற மறைவில்லாமல் எப்போதும் சிதாகாச இதயத்திற் பிரகாசிக்கும் சிறந்த ஆன்ம சூரியனாக விளங்கும்

ஆன்மஞானிகளுக்கு, அவர்களது மனவறிவானது, இடமகன்ற இவ்வுலகில், பட்டப் பகலிற் காணப்படும் சந்திரனைப் போன்று பயனற்ற தாகும்.

1004. இந்த மாயமான நாமரூப உலகத் தோற்றத்தை விளக்கி வைப்பது யாதெனில், கண்ணுடியிற் பிரதிபிம்பிக்கும் சூரியனது பிரதிபிம்ப ஒளிக்குச் சமானமான மனவறிவே யாகும். ஆன்மப் பேரொளியோ சூரியனைப் போன்ற சுயம் பிரகாச மாகும். (அதாவது, ஆன்ம அறிவொளியின் முன் உலக நாமரூபம் பொய்யாகும் என்பதாம்.)

## உகூ. பூமா மாட்சித் திறன்

1005. எந் நிலையில் பார்ப்பதற்கு யாதொரு முன்னிலைப் பொருளும் இருப்பதில்லையோ, எந்நிலையில் கேட்பதற்கு யாதொரு முன்னிலைப் பொருளும் இருப்பதில்லையோ, எந் நிலையில் எதிரிட்டுச் சுட்டியறிவதற்கு யாதொரு முன்னிலைப் பொருளு மிருப்பதில்லையோ, அந்த அறிவு நிலையே "**பூமா**" எனப்படும் என் றறிக.

1006. காணப்படுபொருள்களும், கேட்கப்படுபொருள்களும் (அதாவது, பஞ்சேந்திரியங்கட்கு அனுபவமாகும் திரிசிய மனைத்தும்), அவைகளை அறியும் பின்ன அறிவுள்ளதான பிரமாத ரூப அகந்தையும் ஒருங்கே எதில் நாச மடைகின் றனவோ, அந்த இரண்டற்ற, அளவற்ற, ஞானவடிவ பூமாவே (பிரம்மம்)தான் துக்கக் கலப்பற்ற உபசாந்தப் பேரின்பமாகும்.

## உஎ. ஞான வெளித் திறன்

1007. உலகின் பல விடங்களுக்கும் ஓடிச் சென்று ஆங் காங் குள்ள தவசிகளைத் தரிசித்து வணங்கி மிக்க பக்தி வினயத் துடன் மெய்ப் பொருளை யாராயும் முமுக்ஷுக்களாகிய நன்மக்களே! அப்பெரியோர்கள் சந்தேக விபரீதமின்றி அனு பவிக்கும் பரம்பொருள் எதுவென்று கேட்பீர்க ளாயின், அது யாதொன்றுமில்லாத சிதாகாச வெறும் வெளியே யாகும்! ('இருக்கிறேன்' என்ற ஸத்தின் உணர்வு மாத்திரமே ஞானி களுக்கு அனுபவமான மெய்ப்பொருள் என்பது கருத்து).

1008. உலக மெல்லாம் விரைவில் வலமாகச் சுற்றி (உலகி லுள்ள பற்பல க்ஷேத்திரங்களையும் வலம் வந்து) சற்குருவைத் தேடி வந்தடையும் சீடர்களுக்கு அக் குருமார்கள் காட்டித் தரும் அற்புதமான கடைசி நிலை எது வென்று கண்டால் ('இருக்கிறேன்' என்னும்) தன் இருப்பறிவான வெறும் ஞான வெளியே யாகும்!

1009. (பிறப் பிறப்பாகவும், பிறவிதோறும் தேக-மனங் களின் அலைச்சலாகவும்) எங்கெங்கோ அலைந்த சலனங்களின் வருத்தம் முற்றுந் தீரும்படி நாம் நிலைபெறும் புகலிடமான, அழிவற்ற நிலை யாதெனில், குறைபாடற்ற மெய்யறிவாய்ப் பிர காசிக்கும் சிவ சொரூபியான ஞானகுரு காட்டித் தருகின்ற ஆச்சரியமான துரிய நிலையாம் வெறும் பரவெளியே யாகும்!

1010. நாகம் சட்டையைக் கழற்றி விடுவதுபோல திரளான சங்கற்பங்களை யெல்லாம் கழித் தொழிக்கக் கூடிய ஸ்திரமான ஆன்ம நிஷ்டையில் ஒருவன் இறுதிவரை முயல்வா னாயின், அவனுக்கு அனுபவமாவது யாது? அறிவு மாத்திரமான வெற்ற வெளியே யாகும்!

1011. அளவு கடந்த அஞ்ஞானக் கற்பனைகளின் மூல காரணரூபமான சிதாபாச ஜீவன் ஞானாக்கினியினால் அடி யோடு வெந்து அழியும்போது, அச் சீவனழிந்த சுடுகாட்டு வெட்ட வெளியில் ஏகமாய் எரியும் சிதாகாச ஜோதியானது, அடர்ந்த உலர்ந்த பெருங்காடு ஒன்று ஒரே சமயத்தில் எல்லா விடத்திலும் தீப்பற்றிப் பரவி வெறும் வெளியாக எரிந்தோங்கும் சுவாலைக்கு ஒப்பாகும்.

1012. 'நான் தேகமே' என்னும் ஜீவபோதம் அறியாமை யாய் மறைந்தொழிய, பிறகு 'தான்' என்று விளங்கும் வெறும் ஆன்மரூப மோனமே அடையத் தக்க சிறப் பாகும். 'ஏன் அவ்விதம்?' என்று உண்மையைக் கேட்பீர்களாயின், அந்தப் பரமோன நிலை துன்பத்திற்குக் காரணமாக ஆசைப்படு பொருள் யாதொன்றுமற்ற வெறும் வெளியே யாவதா லென்க!

1013. மற்றெதுவும் சிறந்தோங்க முடியாத அவ்வளவு சிறப்பு வாய்ந்த சத்திய ஞானகாச ஸ்திதியின் செழுமையை

(மகிமையை)க் காண்பது (அறிவது) என்பது, எல்லாக் குற்றங் கட்கும் மூலமான அகந்தைக் குற்றத்தை வேரறுக்கும் **சற்குரு வின் திருவருளா லன்றி** வேறெதனாலும் எளிதில் ஆகக் கூடிய தன்றாம்.

1014. (முற்பாடலிற் கூறியபடி) ஞானகாசச் செழுமை யைக் கண்டவர்கள், (தேகமே நான் என்னும்) தேகாபிமான அகங்காரச் செருக்கும், தேகாதி உலகத் திருசியப் பொருள்கள் என்னுடையவை என்னும் மமகாரச் செருக்குங் கூடுவதால் மேன்மேலுங் கொழுக்கும் பிறவித் துன்பங்கள் யாவும் நீங்கப் பெற்றவர்களாய், பேரானந்த மோனமான சிவசொரூப மாகவே விளங்குவர்.

1015. சுவைத்தும், மணம் நுகர்ந்தும், கண்டும், கேட்டும், தொட்டும் அறியப்படும் ஐம்புலப் பொருள்களாகிய உலகங்களை யெல்லாம் தன்னுற் செய்யப்படு பொருளாகக் கொண்ட பய னிலையாகத் தொழிற்படும் பராசக்திக்கு ஓர் ஆச்சரியமான எழுவாயாக இருப்பது யாதெனின் வெறு நிலையான ஞானு காசமே (வெட்டவெளியே) யாகும்.

*விளக்கக் குறிப்பு:— சாதகர்கள் பலகோடிப் பிறவிகளூடே பல திறப்பட்ட பாடுகளாலும் தியாகங்களாலும் முடிவில் அடையப் போகும் பெரும் பேருகிய —புருஷார்த்தமாகிய— ஞான நிலையை, பாடல்கள் 1007லிருந்து 1015 வரையுள்ள இத்திறனில், மிகப் பெரியதோர் இலாபமாகக் காட்டாமல் 'வெற்ற வெளி, வேட்க யாதொரு பொருளுமில்லாத வெறு வெளி, வெறும் மோன நிலை' என்றும், 'தனது தொழிலாற்றலால் இப் பிரபஞ்சச் சிருஷ்டிஸ்திதி விநோதங்களைச் செயப்படுபொருள்களாகக் கொண்டதோர் பயனிலை—வினையாகிய பிரவிருத்திரூப அபார சக்திக்கும் எழுவாயாக (எழுமிடமாக) இருப்பது யாதெனில் யாதொன்று மில்லா வெறு ஞான வெளி' என்றும் இகழ்வதுபோலக் காட்டப் படுவது ஏனெனில், அவ் வெறுவெளி நிலையின் தனிச்சிறப்பை யுணர்த்துவதற்கே என்று வாசகர்கள் அறிய வேண்டும்! எண்ணற்ற மகிமையுடைய இவ் விசுவப் பிரபஞ்மாகிய பன்மைப் பொருள் கள் யாவும், அவற்றைச் சிருஷ்டித்து நிலைப்படுத்தும் பரமேசுவர சக்தியுங்கூட, வெறும் 'அஸ்மிதா' (இருக்கிறேன்) என்னும் ஆன்மா ஞானகாசத்திலிருந்தே உண்டாகித் தொழிற்பட்டு விரிவதால், சர்வசக்திக்கும் ஆசிரயமான* ***இருப்பு மாத்திர ஞானமே*** *உயர்வறவுயர்ந்த பெருநிலை என்பது உணர்த்தப்படுகின்றது.*

சகல ஜீவராசிகளின் மனமும் இருப்பறிவை விட்டு எழுச்சி வடிவாம் சுட்டறிவிலேயே பெருமை கொள்ளும் வண்ணம் புறமுகப்பட் டிருப்பதால், அது மாறி, இருப்பு மாத்திர நிலையிற் பெருவிருப்பும் அதி திருப்தியும் கொண்டாலன்றி அது மோக்ஷமாகிய ஞான லாபத்திற்கு அருகதை பெறுது என்பதை யுபதேசிக்கவே இந்த ஞானவெளித் திறனில் அந் நிலையை இழிவுப் புகழ்ச்சியாக வருணிக்கப்பட்டது: இது குறித்தே ஒருமுறை ஸ்ரீ பகவான் ரமணரும், "இங்கு வருபவர் எல்லோரும் தாம் மோக்ஷம் ஒன்றுக்காகவே வந்திருப்பதாகக் கூறிக்கொள்கின்றனர்! ஆனால் மோக்ஷத்தின் ஓர் லவலேச அனுபவத்தை மாதிரி காட்டினலே போதும்; இங்கு ஒரு காக்காய் குருவி கூட இராமல் ஓடிப் பறந்துவிடும். நாம்தான் உட்கார்ந்திருக்கவேண்டும்!!" என்று ஹாஸ்யமாகக் கூறியருளினர்.

## உஅ. சிற்றம்பலத் திறன்

1016. எல்லா விடங்களிலும் 'நான் நான்' என்று சுய மாகவே யிருந்து விளங்கிக் கொண்டிருக்கும் ஞானகாச ஆன்மாவை (பிரம்மத்தை) அங்குமிங்குந் தேடி யலைதல், பூரணச் சந்திரனும் மங்கும்படியான ஒளியின் மேன்மையாற் பிரகாசித் துக் கொண்டிருக்கும் சூரியனைப் பட்டப் பகலிலேயே தீப் பந்தத்தை ஏற்றிக்கொண்டு தேடுவதற்குச் சமான மாகும்.

குறிப்பு:— ஸ்ரீ முருகனர் கூறியது:— சிற்றம்பலம்—தகராகாயம், இதயாகாயம், சிதாகாயம், ஞானகாயம் என்பனவும் அதுவே. அதுவே ஆன்ம சொரூபமாய் விளங்கும் இறைவனது உண்மை வடிவ மாம்.

1017. 'நான்' என்பதும் பொய்யே. அன்னியமான 'இது' என்று தோன்றுவதும் (உலகமும்) பொய்யே. அந்த நான் இந்த உலகைக் கண்டு பெறும் அறிவும் பெரும் பொய்யே (அஞ்ஞானமே). காண்பான்-காணப்படுபொருள்-காட்சியாக மேலே கூறப்பட்ட முப்புடியும் எதை மூல ப்ரக்ருதியாகக் கொண்டு தோன்றுகின்றதோ அந்த மாயையும் (அகந்தையும்) பொய்யே. (இவ்வாறு திரிபுடிரூப விகாரமற்று, இருப்பு மாத்திரமாய் விளங்கும்) ஆச்சரியமான ஞானகாசம் ஒன்றே மெய்ப்பொருளாகும்.

1018. சராசரங்களால் நிறையப்பெற்று விரிந்துள்ள பற் பல உலகங்களுங் காணப்படுவதற்கு (படக்காட்சிக்கு ஆதாரத் திரைபோல) ஆதார சத்திய வஸ்துவாயுள்ள சிதாகாசமாம் தம்

இருப்பைப் பொய்யாகவும், ஐம்புலன்களாற் காணப்படும் உலகத் தோற்றங்களேயே மெய்யாகவும் பார்த்து மயங்குவோர் சிறந்த பயனுகிய மெய்ஞ்ஞானத்தை யடைவது அசாத்திய மாகும்.

1019. எவ்விதமானதோர் குற்றமுங் குறையு மில்லாத பெருமையுடைய சிதாகாசத்தின் (ஞானத்தின்) மகிமையை, சித்தமெனப்படும் அசுத்தங்களாகிய வாசனைகள் யாவும் அழி யப் பெற்றுத் தாம் சிவ சொரூபமாகவே விளங்கும் ஞானிகளைத் தவிர வேறு யார்தான் நன்கறிய முடியும்? (யாராலும் ஆகாது என்பது கருத்து).

## உகூ. அறிவுறுத்த திறன்

1020. "உண்மை இவ்வா ருவதால், அந்தச் சிதாகாசமே யாராலும் விவரிக்க வியலாத மெய்யான பரசிவ சொரூப மாகும்". இத்தகைய சிவமயமான **ஆன்ம நிலையை யானும் உணருமாறு பரம ஞானியான ஸ்ரீ ரமண தேவர் அருள் செய்தனர்!**

1021. தன் சொரூபமான ஆன்மாவை அடையும் வண் ணம் தன் சொரூபமான ஆன்மா தானே கருணை கூர்ந்து காட்டித் தரவும், தன் சொரூபமான ஆன்மாவை ஆன்ம சொரூபமேயான காலத்தில் ஆன்ம சொரூபமேயான இடத் தில், தன் சொரூபமான ஆன்மாவே யறிந்து கொண்டனன்!

விளக்கக் குறிப்பு:— எந்த ஜீவனும் ஆன்மாவை யறிவதில்லை; அறியப்போவது மில்லை. இந்த ஜீவபோதம் அழிந்தபின் ஆன்மாவே தன்னை என்றும் போலவே அறிந்துகொண் டிருக்கின்றது என்ற உண்மை இங்கு விளக்கப்படுகின்றது.

இவ் விருபாடல்களும் பகவான் ஸ்ரீ ரமண சற்குரு தமக்கு அருள்செய்த பரமஞானப் பேற்றை ஸ்ரீ முருகனர் எடுத்துக் கூறிய வெண்பாக்க ளாகும். இத் திறனின் இரண்டாவது பாடலாகிய பாட்டு

1021ல், "யான் அறிந்தேன்" என்று கூடக் கூறுமல், அத் தன்மை யுணர்வும் அடங்கி "ஆன்மாவை ஆன்மாவே யறிந்தான்" என்று கூறும் ஸ்ரீ முருகனுரது விநயம் நோக்கத் தக்கது.

## ௯0. ஆன்ம நிலைத் திறன்

1022. உலகைத் தோன்ற வைத்துக் கொண்டு, ஆனுல் அவ்வாறு தோற்றுவிக்கும் தான்மாத்திரம் யார் என்பதைக் காட்டாமல் மறைமுகமா யிருந்துவரும் அகந்தையானது தன் எழுச்சிக்கு மூல நிலமாய் இருப்பது (ஆன்மா) எது என்ற விசாரத்தோடு உள்ளே திரும்பும்போது, அவ் விடமாகிய உள் ளத்தில் ('நான் நான்' என்று) ஸ்புரித்து மிகவும் பிரகாசிக்கும் ஆன்ம போதமே என்று மழியாத நம் உண்மை நிலையாகும்.

விளக்கக் குறிப்பு:— அகந்தையின் இயல்பே தன்னைத் தவிர பிறவற்றைக் கவனிப்பதே. அதனுல் அகந்தை தன்னை யாரென்றறிவ தில்லை. உண்மையில் தனக்கோர் இருப்பற்ற இவ் வகந்தை இவ்விதம் தன்னை யாரென் றறியாத நிலையையே "ஒளிக்கும் அகங்காரம்" என்று கூறப்பட்டது.

1023. துஷ்ட மனமானது தனது புறமுக நோக்கால் தனக் கெதிரே காணப்படுகின்ற அன்னியப் பொருளான பிரபஞ்சத்தையே கண்டு அறிந்து மயங்கி அலையாமல் "இவ்வாறு பிரபஞ்சத்தை எதிரிற் கண்டு அறியும் நான் யார்?" என்று தன்னை நோக்கித் திரும்பி விசாரித்துத் தனது நிஜசொரூபமான ஆன்மாவில் நிஷ்டை யடைவதே மெய்யாக அடைய வேண்டிய மேல் நிலை யாகும்.

1024. ஆன்ம ஞானிகள் தாம் (சதுர்வித ஆசிரமத்துள்) எந்த ஆசிரமத்தை மேற்கொண்டி ருக்க நேர்ந்தாலும், (சதுர் வித வருணத்துள்) எந்த வருணத்தில் தமது உடல் பிறந்து வந்திருந்தாலும் தமது ஆன்மநிலையிலேயே (சகஜ நிஷ்டை யிலேயே) தாம் இருப்பர். வருண ஆசிரம பேதங் கடந்த அவர்களது சகஜாத்ம ஸ்திதியே அவர்களது சத்தி நிலையா குமே தவிர, பிராரப்தவசமாய் அவர்களது உடல் வாழ்வுக்கு ஏற்பட்டிருக்கும் ஏனை வருண ஆசிரம நிலைக ளெல்லாம் வெறும் பொய்ந் நிலைகளே அல்லவா? சொல்க.

விளக்கக் குறிப்பு: ஞானமே ஞானி: நரவடிவ மன்று. ஆகையால் பிறப்பிறப்புக் குட்பட்ட தேகத்திற்கே யுரிய வருணுசிரம தர்மங்கள்

ஞானிக்கு இல்லை என்பதும், அவன் 'அதீதாசிரமி' (வருணாசிரம அதீதன்) என்பதும் கூறப்பட்டது.

1025. ஆன்ம நிலை ஒன்றுதான் உண்மையான அன்பு நிலை (அல்லது, விரும்பத் தக்க மெய்யான நிலை) யாகுமே தவிர, சத்தியலோகத்திற் பிரம்மாவைப்போல் எல்லா பாக்கியங்களும் பொருந்திய மிகப் பெரிய நிலைகள் கூட, கானலிற் காணப்படும் தண்ணீரைப் போல் மனக் கற்பனையாற் றோன்றி, உயிர்களுக்கு மேன்மேலும் மயக்கத்தையே உண்டாக்கி வைக்கக்கூடிய மாயா (பொய்ந்) நிலைகளே யாகும்.

விளக்கக் குறிப்பு:— "வான் முளரிபோல்" என்ற சொற்றொடர் (1) பிரம்மலோகம் என்றும் (2) ஆகாசத்தில் தாமரை என்றும் இரு பொருள் தருவதா யமைந்திருப்பதால் "ஆகாயத்திற் காணப்படும் பொய்யான தாமரை மலர்போல் உண்மையில் இருப்பற்ற ஏனைய அனாத்ம நிலைகள் யாவும்" என்று மற்றொரு பொருளுங் கொள்ளலா மென்பது ஸ்ரீ முருகனாரது கருத்து.

1026. அனைவர்க்கும் தத்தம் சுபாவநிலையான ஆன்ம சொரூப சத்தியமே நிறைந்த இன்பமாக (தினம் நித்திரையில் அனுபவித் தறிந்து) இருந்தும், அவ் வுண்மையை உணராத மயக்கம் பொருந்திய வஞ்சக மனத்தால் சதா காலமும் அனாத்ம அயல் விடயங்களிற் போய் ஒருவன் இன்பத்தை மிக வருந்தித் தேடிகொண் டிருப்பதே, ஆன்மானுபவமான அப் பேரின்ப நுகர்ச்சியை யடைய முடியாமல் அவனைத் தடுத்து விலக்கி வைப்ப தாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— "தூங்கி விழித்தேன்; சுகமாய்த் தூங்கினேன்" என்று ஒவ்வொருவரும் தாம் அனுபவித்த உண்மையையே கூறலால், விஷயச் சேர்க்கை யற்றுச் சித்தம் வெறிதே யிருக்கும் சுழுப்தியாம் சுபாவ நிலையில் ஆன்மா சுகசொரூபமாக விளங்குதல் யாவர்க்கும் ஒப்ப முடிந்ததாம். அந் நிலையில் தன்னியல்பாயிருந்த அவ்வின்பம் துயில் நீங்கியதும் தோன்றா தொழியக் காரணம் யாதெனில் இன்பவடிவாம் தன் இயல்மறந்து தன்னிலையிற் பிரிந்து, விஷயங்களை விரும்பியோடும் வேட்கையே யாகும். ஆகையால் மோகத்தாலுண்டாகும் விஷய வேட்கையால் மனம் அலையாது, தன்னைத்தான் அறிந்தமைந்து, விழிப்பிலும் சுழுப்திபோல சாந்தமாய், பிரமாதமற விளங்கி, தனது நிஜானுபவமாம் நிரதிசயானந்தப் பேறடைக என்பதாம்.

1027. ஆன்மசுகம் ஒன்றுதான் பேரின்பம் என்பதை ஆராய்ந் தறிந்ததனுல் ஞானிகள் ஆன்மாவிலேயே நிஷ்டையுற் றிருக்கின்றனர். ஆன்ம சுகம் ஒன்றுதான் உயர்வற வுயர்ந்த அழிவற்ற இன்பம் என்றறியாதோர் உலகிற் சுகந்தேடும் இலௌகிகர்களாகவே யிருக்கின்றனர்.

1028. தமது யதார்த்த சொரூபமே (ஆன்மாவே) ஆனந்தந்தான் என்றறிய முடியாத அஞ்ஞானிகளே, கஸ்தூரி மான் (தன்னிடமிருந்தே வருகின்ற சுகந்தத்தை வேறெங் கிருந்தோ வருவதாக எண்ணி அதற்காக எல்லாவிடமும் நாடி) ஓடியலேவது போல, (சுகம் உலகப் பொருள்களிலிருந்தே வருவதாகத் தவருக எண்ணி அவைகளேயே நாடி) அலேந்து கலங்குவர். தமது ஆன்ம சுகத்தை நன்ரு யறிந்த ஞானி களோ சுகத்திற்காக உலகப் பொருள்களேத் தேடாமல், சுக மயமான தமது ஆன்மாவிலேயே ரமித்து நிஷ்டை யடைவர்.

விளக்கக் குறிப்பு:— 585வது பாடல் இங்கு மீண்டும் நோக்கத்தக்கது.

1029. சுகம் என்பது ஆன்ம சொரூபமே. நிறைந்த அச் சுகத்தைத் தவிர ஆன்மாவானது வேருென்று மல்ல. ஆன்ம சுகம் ஒன்றேதான் உள்ளது. (மற்றவை சுகமே யல்ல). இவ் வுண்மையை யறிந்து ஆன்மாவில் நிஷ்டையுற்று ஆன்ம சுகத்தையே சதாகாலமும் அனுபவிப்பா யாக

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ பகவானருளிய "நான் யார்?" என்ற நூலில், "சுகமென்பது ஆத்ம சொரூபமே; சுகமும் ஆத்ம சொரூபமும் வேறன்று. ஆத்மசுகம் ஒன்றே யுள்ளது. அதுவே சத்தியம்" என்று கூறப்பட்ட வசனங்களே இச் செய்யுள்.

## ௬௧. ஆன்ம வலத் திறன்

**பகவான் (20)**

ஆன்மஞானத்தால் யாரொருவன் ஐம்புலன்களே வென்று சத்சித் ஆன்மாவில் நிஷ்டையுற் றிருக்கிருனே, ஆன்மாவை யறிந்த அவனே. ஞாஞக்கினி யாவன். அவனே வஜ்ஜிராயுதம் தரித்த சிவன் ஆவன். காலகாலனுன அவனே மரணத்தை (யமனே)க் கொன்ற மகேசுவரனு மாவன் என்று கூறுக.

1030. சிறிதும் பிரமாதத்தால் தடைபடாமல் மிகவும் திட்பமுட னெங்கும் ஆன்ம நிஷ்டையால் ஐம்புலன்களேயும் ஒருங்கே அடியோ டழித்த ஞான வலிமையாளன்றன், பின் வாங்காத இயமனே வென்ற ஞானக்குலிசம் தரித்த சிவபிரா னுகும். அவனே காமக் குரோத, லோப, மோக, மத, மாற்சரிய மெனப்படும் மனே விகாரங்களாகிய இருட்பகை தோன்று வதற்குக்கூட இடங்கொடா தொளிரும் ஞான சூரிய னுவன்!

1031. மெய் வாய் கண் மூக்கு செவி யாகிய ஐம்பொறி களின் வழியே தொழிற்படும் மனம் ஆருவது பொறியா யமைய, இவைகளின் மூலம் கணக்கற்ற உலகங்களேத் தோற்றுவித்து அவைகளே அனுபவிக்கும் சக்திவாய்ந்ததான அகங்காரம் என்னும் கொடிய சூரபதுமனேக் கோபித்து (அவ் வகங்காரம் புறமுகத்தே தொழிற்படாதவாறு) அகமுகமாய் மடக்கித் திருப்பிக் கொணர்ந்து இதயத்தில் அதை நாசமாக்கிய மெய்ஞ் ஞானி எவனே அவன்றன் பேரின்பம் படைத்த குமரவேள் என் றறிக.

விளக்கக் குறிப்பு:—அகந்தையை யழித்து வெற்றி கண்ட மெய்ஞ்ஞானி யொருவனே எல்லா ஈசுவர மூர்த்திகளு மாகும் என்ற இப்பாடலின் கருத்தை,

"அவன்றனே நான்முகனு மச்சிவனு மாலும்
அவன்றேவர் கோன்குகனு மாவன் அவன்றன்
அகில சுரர்குருவு மாவன்மா யோகி
யகில தபோதனனு மாம்".

எனவரும் தேவிகாலோத்தரச் செய்யுள் 6 ஆவதுடன் ஒத்து நோக்கி யுணர்க.

## ௬௨. ஆன்மசொரூபத் திறன்

1032. ஓர் சித்திரத்தைப் போல ஜடமா யிருக்கும் இவ் வுடலேயே 'நான்' என்று அபிமானித்து வாழும் மக்களே! சித் திரம் எதையாவது நினைக்குமா? (நினையாது, ஆதலின்) அவ் வுடலுள் ளிருக்கும் உயிர்தான் நினைப்பதும் மறப்பதுமான காரியங்களேச் செய்யக்கூடிய தல்லவா? ஆகையால் 'நாம்' என்பது அந்த உயிர்தான் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— இங்கு, போலியுயி ராகிய அகந்தையையே 'நாம்' என்ற நிஜவுயிர் போலக் கூறப்படுவது ஏனெனில், "தாலத்தில் மரங்கள்

காட்டித் தனிப்பிறை காட்டுவார் போல், ஆலத்தின் உடுக்கள் காட்டி யருந்ததி காட்டுவார் போல்..." என்னும் கைவல்ய முறைக் கிணங்கக் கூறியதே யாகும். முதலில் ஜடவுடலை 'நானன்று' என விளக்குவது மாத்திரமே நோக்கமாகக் கொண்டதால், நினைப்பு மறப்பு வடிவான ஜீவனையே — மனத்தையே உயிராகக் காட்டி, அதனால் உடல் 'நானன்று' என்று நிரூபிக்கப்படுகின்றது. பிறகு இந்த மனமும் 'உண்மை நான்' அன்று என்ற உண்மை அடுத்தடுத்து வரும் பாடல்களால் விளக்கப்படுகின்றது.

1033. முற்பாடலிற் கூறப்பட்ட நினைத்து மறக்கும் உயிரானது "உடம்பே நான்" என்ற வடிவ முடைய ஜீவனாகும். ஆனால் உடம்பு நானல்ல என்று முற்பாடல் மூலம் தீர்மானிக்கப்பட்டு விட்டதால் அந்த ஜீவபோதத்திற்கு (அகந்தைக்கு) ஓர் வடிவம் காண முடியாமல் ஆகிவிடுகிற தன்றோ? ஆகையால், இதுகாறும் அந்த ஜீவனையே தனது இருப்பிடம்போல் —உயிருக்கோர் உடல்போல்—இயக்கிக் கொண்டு அந்த ஜீவனுக்குள் இருந்துவந்த வேறோர் உயிரே (ஆன்மாவே) 'உண்மை உயிர்' என்று ஒப்ப வேண்டி வருகிறது. எனின், உண்மை யுயிரான அவ் வான்மாவைத் தவிர, ஜீவன் என்ற பல்வேறு உயிர்கள் எங்ஙனம் உண்மையா யிருக்க முடியும்? சொல்க.

விளக்கக் குறிப்பு:— ஜடமாகிய உடம்பை 'நான்' என்ற விளக்கமுள்ள ஓர் சித்துப்போல அபிமானிக்கும் அபிமானமே ஜீவனாகும். ஆனால் இந்த ஜீவன் உண்மையிருப்பற்றவனாதலால் இவன் மெய்யுயிர் அல்ல. ஜடவுடலை ஜீவன் இயக்குவதுபோல இந்த ஜடஜீவனை எந்த ஆன்மா இயக்கி வைக்கின்றதோ (அதாவது இந்த ஜீவன் இயங்குவதற்கு ஓர் சித்தாக—உயிராக எது இருக்கிறதோ) அவ் வான்மாவே உண்மை யான உயிராகும். அதைவிட்டு வேறாக எந்த ஜீவனாவது உயிர்த்திருக்க முடியுமா? முடியா தாகையால், இவ் வான்மாவாம் ஒரே மெய்யுயிரைத் தவிர எங்கும் என்றும் எந்த ஜீவர்களுமே யில்லை என்று உபதேசிக்கப்படுகின்றது. பாடல் 1051 ஐயும் இங்கு ஒத்துணர்க.

1034. உலகம் உணரப்படும் ஜாக்கிர சொப்பனங்களில் மட்டுமின்றி, உலகம் உணரப்படாத தூக்கத்திலுங்கூட சரீர மில்லாமலும் சுகமாகவும் எந்த உன் இருப்பு விளங்கிக் கொண் டிருக்கிறதோ அதுதான் உன்னுடைய நிஜசொரூப மாகும்.

1035. ஐம்புலன்களுக்கு உணர்வாகும் இவ் வுலகம் உண்மையாகத்தா னிருக்கட்டும், அல்லது ஐம்புல வழியே அதைக் காணும் மனத்தின் கற்பனையேதா ளுகட்டும். (அஃது எவ்வாருயினு மென்ன?) அறியும் அறிவுருவனுக நீ அங்கு இருக் கின்ரு யல்லவா? "**இருக்கிறேன்**" என்ற அந்த சுத்த இருப்பறிவே (சத்-சித்தே) உன் ஆன்ம சொரூபமாகும்; அறிக.

1036. அறிவும் அறியாமையும் முற்றிலு மற்று, வெறும் 'இருக்கிறேன்' என்ற இருப்பறிவாக மட்டும் உள்ளதே ஆன்மா. பூரண விளக்கம் பொருந்திய தன்னுணர்வான (பிரஜ்ஞை வடிவான) அந்தப் பிரம்ம சொரூபத்தில் எவ்வித மானதோர் அஞ்ஞானமுங் கிடையாது என் றறிக.

விளக்கக் குறிப்பு:— இதரப் பொருள்களை அறியாத நிலை ஓர் அஞ்ஞான நிலை என மக்கள் சாதாரணமாகக் கருதுகின்றனர். ஆனுல் உண்மை அப்படி யல்ல. இதரப் பொருள்களின் அறிவே அஞ்ஞானம். அவ் வறிவாகிய அஞ்ஞானம் அற்றபோதும் "நாம் இருக்கிரும்" என்னும் சுத்தத் தன்னறிவு யாருக்கும் அனுபவ மாவதால், இத் தன்னிருப்புணர்வே பூரண ஞானமாகும். இதர அறிவினின்றும் வேருனஅறிவாகிய இதையே வெற்றறிவான உண்மை என்றும், பிரஜ்ஞானம் என்றும், பிரம்மம் என்றும், ஆன்மா என்றும், சொரூபம் என்றும் இப் பாடலிற் கூறப்பட்டது.

1037. அந்தப் பிரம்ம சொரூபமாம் தன்னுணர்வு அஞ்ஞான மில்லாத வொன்று என்பது மட்டுமல்ல, அது சுத்த ஞானமே வடிவானது மாகும். அது அவ்வாறு ஓர் ஞான சொரூபமாக இல்லாவிடில், புத்திக்குப் புலனுகும் திரிபுடிபேதங்களான மன அறிவு அதனின்றும் எவ்வாறு உண்டாக முடியும்? (உண்டாக முடியாது என்றவாறு).

விளக்கக் குறிப்பு:— விஞ்ஞானமய கோச வுணர்வான பேத அறிவுகள்—இரட்டை முப்புடிகளான அறிவுகள்—யாவர்க்கும் அனுபவ மாதலால், இவ் விசேஷ அறிவுகள் ஓர் சுத்த அறிவிலிருந்துதான் பிறக்க முடியும் என்பது கருத்து. ஆகையால் ஆன்மா ஞான சொரூபமே என்பது முடிவு. "...தான் அறிவாகும்; பாழன்று; அறி" என்னும் உள்ளது நாற்பதின் 12 ஆவது பாடலின் இறுதி வாக்கியம் இங்கு ஓர்த்துணரத் தக்கது.

1038. ஆன்ம சொரூபம் நிர்க்குணம் (குணமற்றது) ஆகையால் அறிவு ஆன்மாவுக்கு ஒரு குணம் ஆகாது. மேலும் ஆன்மா கர்த்ருத்துவ மற்ற தாகையால் அறிவு ஆன்மாவின்

ஒரு தொழிலும் ஆகாது. எனவே ஆன்மா அறிவுவடிவமே யாகும் என் றறிக.

1039. மற்றென்றின் உதவி தேவைப்படாமல் எது தானே தடையின்றி 'நான் இருக்கிறேன்' என்று ஒவ்வொருவருள்ளும் விளங்கிக் கொண்டிருக்கிறதோ, யாதோர் உபாதிக் கலப்பும் சேரா துள்ள, திடமான, இருப்பு மாத்திரமான அந்தத் தன்னுணர்வே பெருஞ்சிறப்பு வாய்ந்த ஆன்மாவின் சொரூப லக்ஷண மாகும்.

1040. மேற்கூறியவாறு அறிவே சொரூபமாயுள்ள ஆன்மாவின் இருப்பை, சுட்டியறியப்படும் ஏனைய அற்ப விஷயப் பொருள்களை (முன்னிலைப் பொருள்களை) அறிவதுபோல எப்படியறிய முடியும்? (முடியா தென்க). ஆகவே, 'நான் இது-இன்னார்' என்றவாறு உபாதிக் கலப்புடன் எழுகின்ற பொய்த் தன்மையுணர்வு அழியுமாறு தான் தன்னிடத்திலேயே எழுச்சியற்றுச் (சும்மா) சாந்தமாய் நின்றால், உண்மைத் தன்மையுணர்வான ஆன்மா தான் தானாகவே விளங்கும்.

1041. திரிபுடிகளாக அறியப்படும் பற்பலத் தொகுதிகளுக்குள் எவ் வொன்றும் (எந்த ஒரு முப்புடியும்) நாமாகிய ஆன்மாவை விட்டுச் சுயமாக ஓர் இருப்பற்றதே; என்றாலுங் கூட, அத் திரிபுடிகளுள் ஏதொன்றும் நாமல்ல (ஆன்மா வல்ல). அவைகளுக் கெல்லாம் இடமளித்துக்கொண் டிருக்கும் ஆதார வஸ்துவா யிருப்பதே சத்திய ஆன்மநிலை யாகும்.

விளக்கக் குறிப்பு:— காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்பவை ஒரு திரிபுடி. 'நான் காண்பவன், நான் காண்கிறேன், இவை என்னாற் காணப்படுபவை' என்னும் இம் மூன்றில் யாதொன்றும் 'நான்' இல்லாமல் இருப்புக் கொள்ள முடியாததே; ஆயினும் காண்பவனாகிய 'நான்' என்பது ஆன்மவஸ்து வல்ல. அது அகந்தையே யாவதால் அம் முப்புடியில் யாதொன்றும் ஆன்மா வல்ல என்று கூறப்பட்டது. காணல் முதலிய தொழில்கள் (பிரவிருத்திகள்) ஆன்மாவின் சுபாவமல்ல. 'காண்கிறேன்' என்பது அகந்தை யறிவின் இயல்பு. 'இருக்கிறேன்' என்னும் தன் இருப்பறிவே ஆன்ம சுபாவம். 'இருக்கிறேன்' என்ற மூல அறிவு இன்றேல் 'காண்கிறேன்' என்னும் விசேட அறிவு அகந்தைக்கு உண்டாக முடியா தாகையால் ஆன்மாவை விட்டுவிட்டுத் திரிபுடி எதுவும் நிற்கமுடியாது என்றும், அதே சமயம் காட்சி யறிவுகள் ஆன்மாவுக் கல்ல வாதலால் அத்திரிபுடிகள் ஆன்மாவு மல்ல என்றும் கூறப்பட்டது.

1042. நித்திய, பரிபூரணமான, சிறப்பு வாய்ந்த ஆன்ம சொரூபம் சிறிதும் துவிதமாக அடையப்படத் தக்க ஒரு பொரு ளல்ல. தன்னை யடைவது (யோகம் உறுவது) என்பது தன் இருப்பை யுணரும் அறிவே. அதுவும் வேறொரு அறிவு மல்ல; தன் இருப்பறிவாகிய அதுவே ஆன்மாவின் நிஜசொரூப மாகும்.

1043. தூலம்-சூக்ஷ்மம், சூனியம்-பூரணம், ஏக்கம்-இறு மாப்பு இவை போன்று உணரப்படும் இரட்டைக ளெல்லாம் தோன்றுவதற்கு மூல நிலமாயிருந்து விளங்கும் முடிவில்லாப் பேரறிவு எதுவோ அதுவே ஆன்மா (நான்) ஆகும்.

1044. அகந்தையாகிய ஓர் பொய்யுணர்வு (பல வகைப் பட்ட நாமரூப உபாதிகள் உடையதாய், அளவற்ற தடவை) எழுச்சியுற்று, நல்-தீவினைகள் எதுவும் உண்மையிற் செய்யப் படாதிருந்தும் செய்யப்பட்டனவேபோல் கருதி, அலைந்து, எண்ணங்கள் தோற்றுவிக்குந் துன்பங்களால் உண்மையில் வருத்தமற்றிருந்தும், வருந்துவதா யுணர்வதற்கு இடமளித்துக் கொண்டிருக்கும் ஓர் மெய்யான அறிவே ஆன்மா (தான்) ஆகும்.

1045. 'இருக்கின்றேன்' என்னும் இயல்புணர்வு மாத் திரமாய், எவ்வித வுடலையும் 'நான்' என்று கருதும் அபிமான மில்லாத தெளிவான உண்மையாய், சூரியனைப்போல் தனக்குத் தானே சுயமா யிருந்து விளங்கக் கூடியதான இதயாகாசமே ஆன்மா (நான்) என் றறிக.

1046. அதிசூக்ஷ்மமான இருப்பறிவின் பிரகாசமாய், 'நான் இது' என்ற கலப்புணர்வுட னெழுந்து எதிரிலுள்ள தாகப் பொருள்களைச் சுட்டியறியும் அகந்தை வடிவில்லாததாய் (அகந்தைக்கு வேறாய்), 'என் மெய்ந்நிலை யாதென என்னால் அறிய முடியவில்லையே' என்று புத்தி அயர்ந்து வருந்தும்படிச் செய்வதாய், மோன நிறைவாய், உள்ள பொருள் எதுவோ அதுவே சச்சித்தான ஆன்மா வாகும்.

1047. இப் பிரஞ்ச மெல்லாம் அசையும் படக்காட்சி போன்ற பொய்ச் சித்திரங்களே. ஆன்மாவோ சலனமற்ற

சத்திய ஞான சொரூபம். (சினிமாக் காட்சியிற் படங்களைப் போன்றது பிரபஞ்சம்; அசையாத திரை போன்றது ஆன்மா என்பது கருத்து).

1048. அந்த சச்சித் சொரூபமான திரைமேல் காணப் படுங் காட்சிகளே இம் முப்புடி வடிவான பிரபஞ்சம்.

1049. இசைவிசேடங்கள் ஏழும் இசைப்பதற்குத் தான் இன்றியமையாததாய், அவைகளின் ஆதாரமாய் அவைகளுக் குள்ளே சேர்ந்து ஒலிக்கும் ஸஜ்ஜம சுருதியைப் போலவும், மின்விசையால் அசையும் திரைப்படங்களுக்கு ஆதாரமான (ஆனால், தான் மாத்திரம் அசையாத) திரை போலவும், தான் மாறாமல் நின்று ஆனால் இப் பிரபஞ்ச மாற்றங்கட் கெல்லாம் இடம் தரும் இன்றியமையாத ஆதாரமாய், குற்றமற்று (பிரபஞ் சத்தாற் பாதிக்கப்படாமல்) தன்னில் தானே யிருந்து விளங்கு வதே ஆன்ம வஸ்து வாகும்.

1050. பொய்யான இப் பிரபஞ்சப் பொருள்கள் எல்லா வற்றுள்ளும் தான் கலந்திருப்பதால், பலவகைப்பட்ட அப் பொய்ப்பிரபஞ்சத்தையும் மெய்போலக் காண வைத்துக் கொண் டிருப்பதாய், ஆனால் அப் பொய்ப் பொருள்களின் சின்னமாகிய நாம ரூபங்களின் உண்டாதல் - அழிதல் போன்ற குணத்தைத் தான்பெறாததாய், எங்கும் எப்போதும் இருந்து விளங்குவதே மேலான ஆன்ம வஸ்து வாகும்.

1051. ஒவ்வோர் ஜீவனுள்ளும் தான் இருந்தும் அவர் களால் தான் அறியப்படாமல், அந்த ஒவ்வொரு ஜீவனையும் தனக்கோர் உடம்பாக (தான் இருக்கும் இடமாக)க் கொண்டு, கணமும் நீங்காமல், அயராமல் நன்றாக இயக்கிக் கொண் டிருக்கு மவனே அழிவற்ற அந்தராத்மா வாகும்.

1052. (மேலுங் கீழுமாய்) சுழன்று கொண்டே யிருக்கும் வண்டிச் சக்கரத்தின் கால்களைப் போன்று உதிப்பதும் ஒடுங்குவதுமே தனது இயற்கையாய்க் கொண்டு சதாகாலமும் உழன்று கொண்டிருக்கும் அகந்தையுயிர் (ஜீவன்) அல்ல ஆன்மா! அசையாமல் (சக்கரத்தின்) உள்ளே யிருக்கும் அச்சைப் போன்று (உதியாது ஒடுங்காது என்றும்) சலனமற் றிருப்பதே சத்திய ஆன்மா வாகும்.

1053. தோன்றிக் காணப்படுவன (எது வெனினும்) தோன்றட்டுமே; அவ்வாறே மறைந்து போவன (எதுவெனினும்) மறையட்டுமே! ஆன்மசொரூப ஞானத்திற்கு அதனாற் கேடோ நலமோ என்ன நேர்ந்துவிடும்? (ஒன்றுமில்லை). பூரணமாக நிறைந்து விளங்கும் சிவமாகிய ஏக வஸ்துவில் அவையாவும் புகுந்து மறைந்துவிடவே, மீதியாய்த் தங்கி நிற்பது எதுவோ, அதுவேதான் நம் (ஆன்ம) சொரூப மாகும்.

விளக்கக் குறிப்பு:— சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குள்ளாகும் பிரபஞ்சத் தோற்றம் இருந்தாலும் மறைந்தாலும் அதனால் யாதொரு விதத்தும் பாதிக்கப்படாம லிருப்பதும், பிரளயத்தில் இத்தோற்றம் யாவும் அழிந்த பின்னும் தான் ஏக பரிபூரணமாய் மிஞ்சி விளங்குவதும் எதுவோ, அதுவே ஆன்மா என்பது கருத்து. பிரபஞ்சத்தின் இருப்பும் மறைவும் அகந்தைக்கே தோன்றுகிறதே தவிர ஆன்மாவுக்கு அதுவு மில்லை எனக் கொள்க.

1054. வஞ்சகம் பொருந்திய அகந்தையை (இந்த 'நான் யார்?' என்று) விசாரிப்பதால், அது அடங்கி யழியவே, அப்போது ஸ்புரித்து விளங்குவதும், சிவபிரான் செய்தருளும் சிறப்பான திருநடனக் காட்சி (நடராஜ தரிசனம்) இதுவே என்று உபநிடதங்கள் சிறப்பித்து கோஷிக்கும் கடவுளருளுண்மையின் தெளிவுமாகிய பேரறிவே ஆன்ம வடிவமாகும்.

1055. இரண்டாவது பொருள் ஒன்றுமில்லாத (அத்துவித) பிரம்ம சொரூப லக்ஷணமானது அனாதிச் சிறப்புடைய தாகும். அந்தப் பழைமையான ஆன்ம சொரூபம் சூனியம் போலத் தோற்றினாலும் அது ஒரு பாழல்ல. பரிபூரண உண்மை யையே தனது இருப்பாகக் கொண்டதோர் ஏக சச்சித்தே அது!

குறிப்பு:— உள்ளது நாற்பதின் 12 ஆவது பாடலும் இங்கு ஒத்துணரத் தக்கது.

1056. 'நான்' என்னும் அகந்தை சிறிதும் எழாத இடமே மோனம் என்றும், ஆன்ம சொரூபம் என்றும் ஞானிகள் கூறுவர். அந்தப் பரமோன ஆன்ம சொரூபமே ஜீவேசுவர ஜகங்களுமாகும்.

குறிப்பு:— 'நான் யார்?' என்னும் நூலில் ஸ்ரீ பகவா னருளியுள்ள, "நான் என்னும் நினைவு கிஞ்சித்து மில்லா விடமே சொரூப மாகும். அதுவே

மௌன மெனப்படும்... சொரூபமே ஜகம்; சொரூபமே 'நான்'; சொரூபமே ஈசுவரன்; எல்லாம் சிவ சொரூபமாம்'' என்னும் வசனமே இச் செய்யுள் வடிவம்.

1057. எல்லாப் பொருள்களுக்கும் ஆகாயமே மூல இடமாவதுபோல, ஜீவேசுவர ஜகங்களான மூன்றிற்கும் இருப்பு மாத்திரமான ஆன்மசொரூபமே மூல சத்திய வஸ்து வாகும். தன்னை அடைந்தோர் மீண்டும் போக்கு வரவற்றிருக்கும் மனத்துக் கெட்டாத 'பரந்தாமம்' என்றும், 'பரசிவம்' என்றும் வழங்கப்படுவதும் அதுவே!

## ௩௩. ஆன்ம மாட்சித் திறன்

1058. பார்க்கப்படும் பொருள்கள் யாவும் பார்ப்பவனே யாகும் என்னும் ஏக சொரூப மாட்சியால் ஆன்மாவே மிகப் பெரிய உண்மை யாகும். ஆனால் மற்றவற்றை எதிரிட்டுக் காண்பவனாகிய அகங்காரத் தன்மை (ஜீவத்துவம்) அடியோ டழிந்துபோன மோனப்பிரஜ்ஞையாகிய தன்மையே பரம ஞான சொரூபமாகிய ஆன்மா.

விளக்கக் குறிப்பு:— காணப்படும் இப் பெரிய பிரபஞ்சம் முழுவதும் அதைக் காண்பானாகிய அகந்தையின் விரிவே. அகந்தையோ ஆன்மாவின் அணுமாத்திர அற்பப் பிரதிபிம்பமே. ஆகையால் ஆன்மாவே மகத்துக்கட் கெல்லாம் மகத்தான பொருள். அகந்தை யழிந்த மோன நிலையில் விளங்கும் தன் இருப்புணர்வே பரம ஞான மயமாகிய ஆன்மா என்பது கருத்து.

1059. ஞானானந்த ஸ்தானமான ஆன்ம சொரூபம் மிகப் பெரிய சாந்த சமுத்திர மாகும். மனம் உண்முகப்பட்டு அதில் ஆழ முழுகுவோர் அளவற்ற நிதியான ஆன்ம சொரூபத் திருவருளைப் பெற்றவ ராவர்.

1060. தானுகிய ஆன்மாவே மிகப்பெரிய சிறந்த பொரு ளாகும்; அன்றி ஆன்மாவிலும் சிறந்த பொருள் ஏதொன்று மில்லை. ஆகையால், தன்னை (ஆன்மாவை) விலைப்படுத்தி அதற்கீடாக அடையத் தக்க வேறு எந்தச் சிறந்த பொருளையும் எவ்விதத் தவஞ்செய்தும் நாம் கண்டதே யில்லை!

விளக்கக் குறிப்பு:—அணிமாதி அஷ்ட சித்திகள் போன்ற எந்த லாபத்தைப் பெறுவதற்காகவும் ஆன்ம லாபத்தை ஒருவன் இழக்கக் கூடாது; ஆன்ம லாபத்தினும் பெரிய பேறு வேறென்று மில்லை என்பது கருத்து.

1061. மகத்தான பரமான்ம சாக்ஷாத்காரப் பேற்றைத் தவிர இம் மனிதப் பிறவியில் அடையத் தக்க லாபம் வேறொன்று மில்லை. அவ் வான்மாவை யறிந் தனுபவிக்க வேண்டுமாயின் உண்முகப்பட்டுச் செய்யும் விசாரணையால், சாரமற்ற அகந் தையை யழிப்பா யாக.

1062. எப்போதும் சித்தமாய் இருந்து விளங்கிக்கொண் டிருக்கும் மெய்ஞ்ஞானமாம் அழகிய ஆன்ம இரத்தின மென்னும் அரிய **ஐசுவரியத்தை** விசாரணையால் இதயத்து எய்தி நின்றால், துன்ப காரணமான ஜனனமரணத் தொல்லை நீங்குமாறு பெரும் மோகம் (அஞ்ஞானம்) என்னும் **வறுமை** யழியும்.

1063. அந்த ஆன்மஞான மணியின் அருமையை அறி யாததால் மக்கள் அதை யடையும் முயற்சியற்ற சோம்பேறி களாய்த் (அஞ்ஞானத்தில்) துன்புறுகின்றனர். ஒவ்வொருவரின் உரிமையுமான அவ் வான்ம இரத்தினத்தை (விசார) உபாய மறிந்து அடைந்தவர்களே பெரியோர்கள். அவர்களே பேரின் பம் அனுபவிப்போ ராகும். ஆகவே அவர்களை பேணுவாயாக.

1064. (புலன்களிற் செல்லாது) மனத்தை அமைதியாக வைத்துக்கொண்டு, 'இருக்கிறேன்' என்ற அறிவு வடிவான நான், 'யார்?' என்று விசாரித்துத் தன் சித்சொரூப ஆன்மாவில் நிஷ்டை பெறுவதை விட்டு, சித்தினின்றும் வேருய், சித்த வடிவத்தை யடையும் சிதாபாசனுக (ஜீவனுக)த் தன்னை மயங்கிக் கருதி, குறைபாடுடைய ஐம்புல விஷயங்களிற் சென்று துன்பப்படுவது ஏன்?

1065. பாமர உலகமக்கள் விரும்பும் அணிமாதி யஷ்ட சித்திகளும் ஒருங்கே நன்ருய்ப் பொருந்தும்படி ஒருவற்குக் கிடைத்தாலுங்கூட, மூலமுடிச்சாகிய சிச்சடக் கிரந்தியை யறுத்து ஆன்ம முழுமணியை யடையார்களாயின் அவர்கள் கற்ற கல்வி யெல்லாம் பயனற்ற பாழே யாகும்.

1066. நல்ல ஆன்மவுணர்வு குன்ரும லிருக்கும் மோன மாகிய அருட் செல்வமே மெய்யான செல்வம் என்று பெரியோர் கூறுவர். அடைதற் கரிய சிறப்புள்ள ஞானவொளியான அப் பெருஞ்செல்வமானது, மனமழியப்பெற வேண்டுமென்னும் பெருவிருப்பம் பெற்றவர்களுக்கு மட்டுமே கிடைக்கக் கூடிய பாக்கிய மாகும்.

1067. (முத்துக் குளிப்போர் தமது) மனம் ஒருமைப்பட்டு, ஓர் கல்லை இடுப்பிற் கட்டிக் கொண்டு கடலுள் மூழ்கி, அங்கு மறைந்து கிடக்கும் சிறந்த நன்முத்துக்களை எடுத்துவந்து மகிழ்வதுபோல, வைராக்கியம் என்ற கல்லைக் கட்டிக் கொண்டு, இதயத்துள் ஆழ்ந்து மூழ்கி, ஆன்ம முத்தாகிய செல்வத்தைப் பெற்றுத் துன்பங்கள் ஒழிந்து மகிழ்வா யாக.

விளக்கக் குறிப்பு:— "நான் யார்?" என்ற நூலில் ஸ்ரீ பகவா னருளிய "முத்துக் குளிப்போர் தம் மிடையிற் கல்லைக் கட்டிக் கொண்டு மூழ்கிக் கடலடியிற் கிடக்கும் முத்தை எப்படி எடுக்கிருர்களோ, அப்படியே ஒவ்வொருவனும் வைராக்கியத்துடன் தன்னுள் ளாழ்ந்து மூழ்கி ஆத்ம முத்தை யடையலாம்" என்னும் வசனபாகத்தின் செய்யுள் வடிவம் இதுவாகும்.

1068. 'நான்-எனது' எனப்படும் அகந்தை-மமதை இரண்டு மற்று, யாதோர் களங்கமு மின்றி (இருக்கிறேன் என்ற) பிரஜ்ஞை யொளியோடு மட்டும் விளங்கும் தன் ஆன்ம

சொரூபத்தில் மோனமாய்ப் பொருந்தி நிற்கும் அதிபரிசுத்த அனுபவமாகிய தன் இருப்புணர்வே யாவற்றிலும் சிறந்த வெற்றிச் சிகரமாய் விளங்குவ தாகும்.

## ௯௪. ஆன்ம பரத் திறன்

1069. என்றும் ஊனமற்று விளங்கும் தன்னிருப்புணர்வே மனமும் மூச்சும் ஒருங்கே ஒடுங்கி நின்று சுகிக்கும் மனோதீதமான (மனங்கடந்த) ஆன்ம சொரூப மாகும். சாந்தி முழுதுந் திரண்டதான அவ் வருட்பர நிலையே எண்ணங்களாக அலையும் மனத்தைச் சாந்தப்படுத்தக் கூடிய மருந்தாகும்.

1070. நிலையற் றழியும் பொய்ப் பொருளாகிய இச் சரீரத்தைத் தவிர, பொய் கலவாத சத்திய ஆன்ம சொரூபத்தையே 'தான்' ஆக அறிய முடியாத மக்கள்தான், பலவகைப்பட்ட நாமரூப தெய்வ தரிசனங்களைச் சிற்சில பொழுது கண்டு, உணர்ச்சி வசப்பட்டுப் பூரிப் படைந்த மனத்தால் மகிழ்வர்!

1071. தனக்கு அன்னியமாகக் காணப்படும் தெய்வங்களைப் போற்றி உபாசித்தால் அன்னியப் பொருள்களாகிய சகல ஐசுவரிய பாக்கியங்களையும் ஒருவன் பெறமுடியும். ஆனால் என்றும் நிலைபெற்ற பரம சத்சித்தான சிவஞானத் தெய்வமாம் ஆன்ம வாழ்வில் நிலைபெறும் பேற்றை அற்பமான அவ் வன்னிய தெய்வங்களுள் எவர்தான் ஒருவனுக்கு அளிக்க முடியும்? (முடியா தென்க).

விளக்கக் குறிப்பு:— தனக்கு (ஆன்மாவுக்கு) அன்னியமான பொருள்களையடைய வேண்டுமாயின், தனக்கு அன்னியமான தெய்வங்களை ஒருவன் வழிபடலாம். ஆனால் சிவ வாழ்வான ஆன்ம சாக்ஷாற்காரம் பெற விரும்பும் ஒருவன் ஆன்ம நாட்டமாகிய விசாரத்தைத் தவிர அன்னிய தெய்வ நாமரூப உபாசனைகளைச் செய்வதாற் பயனில்லை என்பது உபதேசம்.

"எப்பெயரிட்டு....உணர்" என்ற உள்ளது நாற்பது 8ஆவது பாடலுக்கு "எந்த நாமரூபத்தை இட்டு யார் வழிபட்டாலும் நாமரூபமற்ற பரம்பொருளை அந்தந்த நாமரூபத்தில் தான் பார்க்கமுடியுமே தவிர, நாமரூபமற்ற அப்பரம்பொருளை உண்மையிற் காண அவ்வுபாசனை உதவாது." என்ற கருத்தை ஸ்ரீ பகவான் இப்பாடலால் ஊர்ஜிதப் படுத்துவதை வாசகர்கள் உணர்க.

1072. வரும் தூக்கத்தில் எப்பொருளும் சிறிதும் தெரியாம லிருந்ததற்கும், விழிப்புக் காலத்திற் பொருள்கள் தெரிவதற்கும் (சகல-கேவலங்களாகிய இரண்டிற்கும்) தாம் (ஆன்மா) சாக்ஷி யாக விருப்பதை அறிந்து கொள்ளாதவர்களே ஓர்கால் ஒன்றை (ஓர் தெய்வ தரிசனத்தை) அடைந்த தாகவும், பிறகு ஓர்கால் அதனை இழந்ததாகவுங் கருதி மயங்குவர்.

விளக்கக் குறிப்பு:—தெய்வ தரிசனங்கள் சில சமயங்களில் தோன்றியும் மற்ற சமயங்களில் மறைந்தும் போவது போலவே, இவ் வாழ்வில் உலகப் பொருள்களும் விழிப்புக்காலத்தில் தோன்றி துயிலில் மறைந்து போகின்றன. ஆகையால் தோன்றி மறையும் பிரபஞ்சத்தைவிட இத் தெய்வ தரிசனங்கள் எவ்விதத்தும் நிலைத்த தன்மை யுடையன வல்ல. ஆனால் விழிப்பிலும் துயிலிலும் (பொருள்கள் தெரியும்பொழுதும் தெரியாப் பொழுதும்) எப்போதும் விளங்கிக் கொண்டிருப்பதோ ("நான் இருக்கிறேன்" என்ற பிரஜ்ஞை வடிவான) ஆன்மா வாகும். ஆகையால் ஆன்மாவின் சதாவிளக்கத்தை உள்ளபடி நாடி யறியாத தால்தான் சாதகர்கள் சிலர் சிலசமயம் தெய்வங்களைப் பார்த்ததாக மகிழ்ந்தும் அவை மறைந்ததாக வருந்தியும் நிற்பர். தோற்ற மறை வற்ற ஆன்மாவைத் தரிசித்தோர் இவ்வாறு வருந்த நேருவதில்லை என்பது உபதேசம்.

1073. சிரத்தையோடு செய்யப்படும் வழிபாட்டால் நாம் காணும் பற்பல தெய்வங்களும் (முன்பு நம்முன் காண்பதற் கில்லா திருந்து பிறகு) தோன்றுவதும், தோன்றியது பிறகு மறைவதுமாக மாறிவிடுந்தன்மை யுடையனவா யிருப்பதால், என்றுமுள்ளதாக அனுபவமுள்ள தன் இருப்பே (ஆன்மாவே) மாற்ற மில்லாதிருக்கின்ற நிஜமான தெய்வ மாகும்.

விளக்கக் குறிப்பு:— மாறாது மறையாது விளங்குவதே நிஜ வஸ்துவின் இலக்கணம். தெய்வ தரிசனங்களோ தோன்றி மறைகின்றன. ஆனால் நம் இருப்புணர்வோ (சத்சித்தோ) அத் தெய்வம் தோன்றுவதற்கு முன்பும் இருந்து வந்தது; அத் தெய்வம் தோன்றிய போதும் "அதைக் காணும் நான் இருக்கிறேன்" என்ற வடிவில் அத் தன்னிருப்பு இருந்து வந்தது; அத் தெய்வம் மறைந்த பின்னும் அம் மறைவை யுணர்ந்து கொண்டு தான் இருந்து வருவது நம் அனுபவ மாகின்றது. ஆகவே முக்காலும் மறைவற்று விளங்குவது தன் இருப்புணர்வே யாகையால் சத் சித்தாகிய தானே (ஆன்மாவே) 'பரதெய்வம்', 'நிஜதெய்வம்' என்று இப் பாடலால் உபதேசிக்கப் படுகின்றது.

1074. இந்த இடம், அந்த இடம், இந்தப் பொருள், அந்தப் பொருள் என்றெல்லாம் முன்னிலையாக எதிரே சுட்டி யறியும்

மனஅறிவால் எவ்வெவ் விடங்களில் எந்தெந்தப் பொருள்கள் அறியப் படுகின்றவோ அங்கங்கும் அந்தந்தப் பொருள்கள் யாவும் தானே யாக இருந்து விளங்கும் தன் உண்மையானது (ஆன்மாவானது) பிரஜ்ஞைப் பிரகாசமாகிய தோர் பரிசுத்த ஆகாசமே (ஒளிவெளியே) யாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ பகவான் அருளிய உபதேச மஞ்சரியில் அப்பியாசப் பிரகரணத்தின் 6 ஆவது வினுவின் விடையையும், வாசித்து இப்பாடலின் உபதேசத்தை நனகுணர்ந்து கொள்க.

1075. இந்தப் பொருள் அந்தப் பொருள் என்று முன் னிலைப்-படர்க்கைகளாகக் கருதப்படும் எந்தப் பொருளும் மனத் தின் கற்பனையே என்றறிந்து, (எவ்வித முன்னிலை-படர்க்கை யையும் சுட்டி நோக்காத) பொது நோக்காகிய '**நான் இருக்கிறேன்**' என்றவாறு **சும்மா விருந்தால்**, அப்போது விளங்கும் தன் இருப்புணர்வே சிறந்த மகிமை பொருந்திய சச்சித் சொரூபமான ஆன்மா வாகும்.

1076. சிரேஷ்டமான ஆன்ம வுண்மையை (தத்துவத்தை)த் தவிர அன்னிய மாகின்ற (தேகாதி-சூனியம் வரை விரிவாகக் கோஷிக்கப்படுகின்ற) அனுன்ம தத்துவங்களை (அவை இத்தனை, அவைகட்கு இன்னின்ன பெயர் என்று) ஒருவன் அறிவின்மை யால் மயங்கி ஆராய்ந்து கற்றுக் கொண்டே செல்வானுகில் அவ னது செயல், அகற்றித்தள்ள வேண்டிய அற்பமான, நாவிதனது உரோமக் குப்பைகளை ஒருங்கே சேர்த்து உடனே தள்ளிவிடா மல், அவைகளை வைத்துக் கொண்டு பாடுபட்டு ஆராய்ந்து கொண்டிருக்கும் மடமை போன்றதே யாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ பகவா னருளிய 'நான் யார்?' என்ற நூலில் வரும் "குப்பையைக் கூட்டி............பயனில்லை" என்னும் வாசகங்களே இச் செய்யுள். பிரபஞ்சம் உற்பத்தியான பஞ்சீ கரண விபரம், உடற் கூறுகளின் விபரம், நானுஜீவ பேத விளக்கங்கள், கருவி கரணுதிகளின் பெயர்கள், வகைகள் அவைகளைப் பாகுபாடு செய்து காட்டும் உட்பிரிவுகள் முதலியனவாய் சாஸ்திரங்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ள அனுத்ம தத்துவ விபரங்களை யெல்லாம் படித்து நெட்டுருப் போட்டு, எவ்வெவற்ரோடு எவ்வெவற்றைச் சேர்க்க வேண்டும்—பிரிக்க வேண்டும் என்றெல்லாம் வாதப்பிரதிவாதங்கள் செய்து, அவற்றையே அலசி யாராய்ந்து கொண்டிருக்கும் வெறும் படிப்பாளிகளின் காலவிரயக் காரியத்தைக் கண்டித்தது இச் செய்யுள்.

இவற்றில் வீணுக்கும் நேரத்தை ஆன்ம நாட்டத்திற் செலவிட வேண்டும் என்பது கருத்து.

1077. ஆன்மக்காதல் பூண்டு தன்னுள் நிஷ்டையுறு வோர்க்கு இன்பம் மேன் மேலும் பொங்கி யெழும். இன்பம், அன்பு, சிவம், ஆன்மா, அருள், ஞானம், சாந்தம், மோக்ஷம் என்று கூறப்படுவன யாவும் தன் (ஆன்ம) நிஜ நிலையைக் குறிக்கும் பெயர்களே யாம்.

## ௩௫. அபய நிலைத் திறன்

1078. சிறந்த தேவர்கள் கூட வேறுபாடுகளையே யுணரும் மனத்தின் பேதமையால் (விஷயங்க ளாகிற அன்னியம் ஒன்றுமே யில்லாததும், சூனியம் போல் தெரிவதுமான) ஆன்மா மாத்திரமாக மிஞ்சும் ஏக நிலையைக் கண்டு பயப்படுகின்றனர். தானல்லாதவற்றை விலக்கும் விசாரத்தால் தன் சத்திய ஆன்ம சொரூபத்தை யடைந்து, அங்கு இரண்டாவது பொருள் ஏதுமற் றதால் பயமே யில்லாததான ஏகான்மப் பரமநிலையில் நிற்பதே அறிவுடைமை யாகும்.

விளக்கக் குறிப்பு:— தன்னுடன் மற்றொருவர் இருந்தால்தான் பயம் நீங்கும் என்று கருதும் ஜீவ சுபாவம் மூடத்தனமானது. ஆன்ம நிலையில் அன்னியம் எதுவுமே இல்லாதபோது எதைக் கண்டு பயப்படும் அவசியம் ஏற்படப் போகின்றது? தன்னைத் தவிர மற்றொரு பொருள் இருக்கும் பொழுதுதான் அப்பொருளைக் கண்டு ஒருவன் அச்சமடையவோ அல்லது இச்சை யடையவோ முடியும். ஆகையால் அன்னியப் பொருள் யாதொன்று மற்றுத் தான் மாத்திரமா யிருக்கும் அத்வைத நிலையில்தான் உண்மையான அபயம் கிடைக்கும் என்றறிக. இரணிய வதத்திற்குப் பிறகு பிரகலாதனுக்கு ஏற்பட்ட பயமும் அதன் நிவர்த்தியும் பற்றிய கதை இங்கு நினைவிற் கொள்ளத் தக்கதாகும்.

1079. ஆன்ம சுதந்திரம் (ஆன்ம சாக்ஷாத்காரம்) அடைந்த அன்று தான் ஒருவனுக்கு நிரந்தரமாக இன்புற் றிருக்கத் தக்க சித்தோப சாந்தி யுண்டாகும். ஆகாயம் போன்று எங்கும் நிறைந்ததும், இரண்டாவது பொருளற்ற சத்தியவஸ்து வுமான அவ் வாத்ம சாம்ராஜ்யத்தில் தான் மட்டுமே ஆட்சி புரிபவனுயுள்ள ஏக வுணர்வில் எவ்விதமான ஆசையும் பயமும் சிறிதும் இல்லவே யில்லை!

குறிப்பு:— இருமையற்ற இவ் வேகான்ம நிலையில் தான் "அஞ்சுவ யாதொன்று மில்லை, அஞ்ச வருவது மில்லை" என்ற அப்பர் பெருமான் வாக்கின் ஆழ்ந்த உண்மை புலப்படுவதாம்.

## ௩௬. அத்துவிதத் திறன்

1080. ஒன்றே யான ஆகாயம் கடத்து (பானை) உள்ளும் மடத்து (வீடு) உள்ளும் இருக்கும் பாகுபாட்டால் கடாகாயம் மடாகாயம் என்று வேறு படுத்திக் கூறப்படுவது போலவே, சச்சிதானந்த கன ஆன்ம சொரூப மொன்றே தேகம் முதலிய உபாதி திருஷ்டியால் ஈசுவரனுகவும் ஜீவர்களாகவுங் காணப்பட்டாலும் ஜீவேசுவரர்களின் மெய்த்தன்மையில் பேதம் ஏதுமில்லை என் றறிக.

1081. "இருக்கிறேன்" என்ற உள்ள உணர்வில் (உண்மையுணர்வில்) ஜீவன் என்றும் சிவன் என்றும் இருவேறுவித உணர்வுகள் உண்டாக முடியுமோ? (முடியாது). ஒரே அமிர்தத்தால் தலைவனுகவும் தாசனுகவும் செய்யப்பட்ட இரண்டு பதுமைகளி னிடையே அவற்றின் மூலப் பொருளில் வேறுபாடுண்டோ? சொல்க.

குறிப்பு:—

"இருக்கு மியற்கையா லீச சீவர்கள்
ஒருபொரு ளேயாவ ருந்தீபற
உபாதி யுணர்வே வேறுந்தீபற"

என்ற உபதேசம் இங்கு ஒத்து நோக்கி யுணரத் தக்க தாகும்.

## ௩௭. நாத்திகத் திறன்

1082. தன்னை 'இல்லாதவன்' (தான் இல்லை) என்று தன்னிருப்பை மறுக்கும் ஒரு தடுமாற்றக்கார னன்றோ உன்னை 'இல்லாதவன்' என்று வாதிக்க முடியும்? தன் உண்மையை— இருப்புணர்வை — ஒருவன் உள்ளபடி அறிவானுகில், அந்தத் தன்னிருப்புணர்வேயான உன்னை 'இல்லாதவன்' (இருப்பற்ற சூனியம்) என்று கூறுவது எப்படி முடியும்?

விளக்கக் குறிப்பு:— இச் செய்யுள் இறைவனை முன்னிலைப் படுத்திக் கூறுவதாக அமைந்துள்ளது.

"......தான் கடவு ளன்றி இலதால்" என்னும் உள்ளது நாற்பதின் 20-ஆவது பாடலின்படி, 'கடவுள் இல்லே' என்று கூறும் நாத்திகர் தன்னேயே இல்லே யென்று மறுப்பவரே யாகும் என்று இச் செய்யுளிற் கூறப்படுகின்றது. தன்னிருப்பை யாரும் மறுக்க முடிவதில்லே யாதலால், அத்தகையோர் 'தன் இருப்பின் உண்மை என்ன? தான் யார்?' என்பதை விசாரித்தறிவார்களாயின் அதுவே மெய்க்கடவுளின் இருப்பை விளக்கு மாதலால், தன்னே உள்ளபடி அறிவோர் கடவுளிருப்பை மறுக்கும் நாத்திக ராகார் என்பதும், எனவே தன்னிருப்பை ஒப்பும் எவரும் நாத்திக ராகார் என்பதும் உணர்த்தப் படுகின்றது. அதாவது, தன்னிருப்பை யாரும் மறுக்க வியலாததால் யாரும் நாத்திக ரல்லர் என்று முடிவு. ஆனுல் உண்மையான ஆத்திகர் யார் என்பது *1084* ஆவது பாடலால் விளக்கப்படுகின்றது.

## ௩அ. ஆத்திகத் திறன்

1083. கடவுள் உண்டு என்று நம்புவார்க்கு அக் கடவுள் அறிவு வடிவமாக உள்ளத்தே யிருப்பவ ஞகின்ருன். ஆனுல் (நம்பிக்கையற்றுக் கறை பொருந்திய) அசுத்த மனத்தில் அக் கடவுள் ஒருக்காலும் இரான் (அதாவது விளங்க மாட்டான்). ஆகையால் மன அழுக்கைப் போக்கிச் சுத்தமாக்கி மயக்கமில்லாத (தெளிவான) பார்வையால் நோக்கினுல் அக்கடவுள் ஆன்மாவாகச் சிறந் தோங்கி விளங்குவான்.

1084. அறிவு மயமான ஆன்ம சொரூபம் இன்னதுதான் என்று (மேற் கூறியவாறு சுத்தீகரிக்கப்பட்ட) தெளிந்த புத்தியால் பரிசுத்தமான உண்மை விளக்கம் பெற்ற ஞானி யொருவனே ஆத்திகன் என்னும் பெயருக்கு உண்மையில் தகுதியுடையவ ஞகின்ருன்.

விளக்கக் குறிப்பு:— ஜீவ ஈசுவர ஜகங்கள் ஏக காலத்தில் தோன்றி இருந்து மறைவதால் சம சத்தியம் உடையவையே. அதனுல் தன் ஜீவ இருப்பை ஒத்துக்கொள்ளும் எவரும் உலகம் கடவுள் ஆகிய மற்றிரண்டின் இருப்பையும் ஒத்துக் கொண்டவர்களே யாவதால் யாருமே நாத்திக ரல்லர் என்று 1082 ஆவது பாடலின் விளக்கக் குறிப்பில் முடிவு கூறப்பட்டது. எனினும் உண்மையான ஆத்திகர் யார்? கடவுள் உண்டு என்று சொல்லிக் கொள்பவர் அனைவரும் உண்மையான ஆத்திக ராகார். தன்னே அற்ப ஜீவ வியக்தியாகக் கருதும் பொய்யறிவு நீங்கி, யார் தன்னேப் பரமான்ம சொரூபமாகவே உணர்கின்ருனே அந்த ஞானி ஒருவனே மெய்யான ஆத்திகன் என்று இங்கு விளக்கப்படுகின்றது.

"தன்னிருப்பை மறுக்க முடியாத எவனும் நாத்திகனுமல்ல, தன்னை யறியாத எவனும் ஆத்திகனுமல்ல" என்று தீர்ப்புக் கூறும் நயம் இங்கு கண்டுணரத் தக்கது.

## ௩௬. அநாதி மல முத்தத் திறன்

1085. மெய்ஞ்ஞான சூரியனாய், சிதாகாசமே வடிவாயுள்ள தமது உண்மைச் சொரூப நிலையை அறிந்தவர்களது திருஷ்டி யில் தேகாத்ம புத்தியாகிய மாயையிருள் என்று ஒன்று என் றுமே (இருந்ததுமில்லை, இருக்கிறது மில்லை இருக்கப் போவது மில்லை) யில்லை என்பதே அனுபவம். 'தேகமே நான்' என்று கொள்ளும் குருடர்களுக்குத் தான் அஞ்ஞான விருள் உண்மை யெனத் தோன்றும் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— போலி யுயிராகிய ஜீவனது திருஷ்டியில்தான் மல (அகங்காரம், மாயை முதலிய) பந்தம் இருக்கின்ற தென்றும், அது சாதனையாலும் திருவருளாலும் அறுக்கப்பட்டுப் பிறகு முக்தி யுண்டாகிற தென்றும் நூல்களிற் கூறப்பட்டுள்ளது. ஆனால் இந்த ஜீவனே இருப்பற்றதோர் பொய்யுணர்வே யாகையால் சத்திய வஸ்துவாகிய ஆன்மாவாம் உனக்கு என்றுமே மலமோ, மாயையோ, பந்தமோ ஒன்றும் இல்லவே யில்லை யென்றும், 'மலமுத்தி' உனது அநாதி சுபாவமே என்றும் இத் திறனில் உபதேகிக்கப் படுகின்றது.

1086. பாச மயக்காற் பீடிக்கப்பட்டவனான ஜீவனிடத்தில் தான் செய்யவேண்டிய விசாரம் என்று ஒன்றும், அதனால் அடையப்பட வேண்டிய ஞானம் என்று ஒன்றும் பொருந்தும். ஆனால் அனாதியாய், என்றுமே மலமயக்க மில்லாததான இரண்டற்ற (ஏக) ஆன்மாவினிடத்து (ஞானிகளிடத்து) அஞ் ஞான மயக்கம் என்றுமே யில்லாததால், ஞானமும் அதற்கு ஏதுவான விசாரம் என்பதும் பொருந்தாதன வாகும் (அவசிய மற்ற தாகும்.)

1087. எல்லாவிடத்தும் உண்மையான சத்தாகத் தானே நிறைந்து நிற்கும் ஆன்மா, பேய்த்தேர் போன்ற பொய்யான மாயையால் வசப்படுத்திக் கட்டப்படக் கூடிய ஒன்றோ? (அல்ல). ஆகையால் ஆன்மாவாகிய நீ பந்தத்திற் சிக்கியவனாகக் கருதிப் பதறாமல் நிதானமாக சமாதான புத்தியுடன் ஆராய்ந்து, இவ் வுண்மையை யறிந்து, தெளிவடைவா யாக.

1088. நீ ஏன் உன்னை உபாதியாக ஓர் உடலளவாகக் கருதி அவசியமின்றி அல்லற் படுகின்றாய்? உன்னைச் சேரு கின்ற அந்தத் தேகமாகிய உபாதியொன்றும் இல்லாமல் நீ உறங்கும் போதுங் கூட உன் இருப்பு (ஆன்ம சொரூபவுண்மை) யாதோர் தடையு மில்லாமல் விளங்கிக் கொண்டே யிருக்கின் றது என்பதை நன்றா யறிந்து கொள்வா யாக. (துயரம் ஒழிவா யாக.)

## ௪0. சதாசார வாழ்க்கைத் திறன்

1089. அழியாமல் வாழ்ந்திருக்கவே நினைக்கின்ற மக்களே! அவ்வாறு வாழும் விதம் எதுவென்று நீங்கள் அறியா திருக்கின் றீர்கள்! பாழில் (சூனியத்தில்-மாயையில்) நின்றும் உண்டா கின்ற மயக்கத்திற் கிடந்துகொண்டே, பகற்கனுப் போன்று நினைப்பளவே யான இச் சாக்கிர அவஸ்தையை யடைந்து, இழி வான இவ் வவஸ்தையி லிருப்பதையே நிஜவாழ்வாக நினைத்துப் பேசி வாத மிட்டு அகங்கரிக்கின்றீர்களே! (இப் பொய்ம்மயக்க சாக்கிராவஸ்தைக்குக் காரணமா யிருக்கும்) பாழை (மாயையை) '**இருக்கிறேன்**' என்று விளங்கும் தன்னறிவால் ஊடுருவிக் கடந்து, உமது உண்மை வாழ்வாகிய ஆன்மநிலையை யடைந்து (என்றென்றும் அழிவற்று) வாழ்வீராக.

1090. பிழையான மனமாயை யாகிய தடுமாற்றம் அழியு மாறு, துன்பந்தரும் கோபம் ஆசை இவைகளை விலக்கி, எதி லும் உதாசீன பாவத்துடன் நடந்துகொள்வதே மெய்ப்பொருளை நாடிவாழும் சிறந்த (சத் ஆசார-ஆன்மீக) வாழ்க்கை யாகும். இதைக் கடைப்பிடிப்பா யாக.

1091. தன்னிருப்பே வடிவாய், யாதோர் தடையு மற்று உள்ளத்தில் நிலைபெறும் மெய்யன்பு மயமான வாழ்க்கைதான், பொய்யா மகந்தை மயக்க மழிந்த ஞான வழகாகிய ஆன்மசிவ போக மாகும்.

1092. தனது வாழ்வுச் சுமை (பொறுப்பு) முழுவதையும் இறைவனது திருவடியில் ஒப்படைத்துவிட்டு, எதையும்பொருட் படுத்தாத (உதாசீன பாவத்தோடு கூடிய) கம்பீரமான வாழ்வை மேற்கொண்டு, அதனால் ஆன்ம சுகத்தில் திடமாக இருந்து

விளங்கும் ஞானிகளே மெய்யழ குடையவர்க ளாகும். அவர்களே யாவற்றிலும் உயர்ந்த பாக்கியம் (புருஷார்த்தம்) பெற்றவர்களாகும்.

1093. அன்புமயமான தன் ஆன்ம ஞானுனுபவம் தோய்ந்த இதயத்தில் பேரின்பம் பொங்கி யெழும். துன்பந் தரும் மயக்கமாகிய ஆசைகள் அங்கு இரா. அந்தப் பரிசுத்த இயல்பான ஆன்ம சொரூப வாழ்வு சாந்தி நிறைந்த தாகும்.

1094. நமது குறிக்கோளாகக் கொண்டு முயலத் தக்க வஸ்து பேரின்பமான ஞானசொரூப ஆன்மாவே. சிறிதும் மறதியற்ற தன்னுணர்வால் இதயத்தில் அதுவே நாமாக நிஷ்டை யுறுவதுதான் பரிபூரண வாழ்வாகும்.

1095. இவ்விதம் ஞான நிஷ்டையுற்றிருக்கும் பரிபூரண வாழ்வான அருள் வாழ்க்கைதான் பரம்பொருள் வாழ்வாகும். அவ்வாறின்றி, காணப்படும் இவ்வுலக வாழ்க்கையானது மயங்கிய (இருள்) வாழ்க்கையே. அழிவின் அச்சம் நிறைந்த இவ்வுலக வாழ்வு வாழ்வது என்ன மாயம்! இவ்வாறு வாழ்வது மனோமாயக் கற்பனையில் ஆழ்வதே தவிர வாழ்வதல்ல.

1096. ஐவகைப் புலனறிவாற் காணப்படும் இவ்வுலகத்தை நிஜம் என்று நம்பி, அவ் வற்பப் புலன்களின் வழியே புற நோக் கிற் பாய்ந்து, மயக்கம் தரும் (நாம) ரூபப் பிரபஞ்சத்தையே பற்றுகின்ற ஜீவச் சேஷ்டை யற்று வாழத் தெரிந்தவர்களுக்கு வேறு தவம் செய்ய வேண்டிய அவசியமே யில்லை.

விளக்கக் குறிப்பு:— 'உயிர்ச் சேட்டை' என்று இப்பாடலிற் குறிப்பிடப்பட்டது உலகின்மேற் புலன்களின் வழியே பாயும் மனத்தின் புறமுகப் பிரவிருத்தியையே. மனம் அவ்வாறு முன்னிலை படர்க்கைகளை நாடி ஓடாமல் தடுத்துத் தன்மை யுணர்வில் நிலைத்து நிற்பதையே "சத் ஆசாரம்", சத்தில் சரிப்பார்க்கு" என்று இங்குக் கூறப்பட்டது.

1097. எழும்பும் அகந்தை யெழுச்சி முற்றும் ஓய்ந்து, சுகதுக்கம் முதலிய இரட்டைகளைக் களைந்து (கடந்து) சகலமும் ஆன்மாவாம் தானேயாக அனுபவ முற்ற அருள் வாழ்வு படைத் தோர்க்கு வேறு தவம் யாதொன்றும் செய்யவேண்டியதே யில்லை.

விளக்கக் குறிப்பு:—எந்தத் தவத்தையும் இயற்றுவதற்கு 'நான்' என்ெருரு கர்த்தாவாக அகந்தை எழுந்தேயாக வேண்டும்; இந் 'நான்' எழாது ஒழிக்கப்படுமாயின் அதுவே தவத்தின் பூரணப் பயனுகையால் அதன்பிறகு வேறு எந்தத் தவத்தை, யார் செய்வது, ஏன் செய்வது என்பது சிந்தித் துணரத் தக்கது. இது குறித்தே அகந்தை யொழிப்பைத் தவிர வேறு எந்த யோகங்களும் பயனற்றவை என்பதை உணர்த்த ஸ்ரீ தாயுமானவர்:—

"சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே
இம்மாயா யோகமினி ஏனடா — தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்லவேண் டாங்கன்ம
நிட்டா சிறுபிள்ளாய் நீ"

என்று கூறினர்.

## சக. நிட்களத் திறன்

1098. நாம் இவ் வுடலுருவந்தான் என்று ஏற்றுக் கொண்டால் நமது தலைவனுகிய மூல ஆன்ம சொரூபமும் அவ்வாறே ஓர் உருவமுள்ள கடவுளாய்க் காணப்படுவார். நாம் இவ் வுடலல்ல வென்றால், நமக்கு யாதோர் அன்னிய அறிவுமே உண்டாகாத அந்நிலையில் 'கடவுள் உருவ முள்ளவர்' என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? (பொருந்தா தென்க.)

விளக்கக் குறிப்பு:— நிட்களம் = உருவ மில்லாமை. கடவுளுக்கு உருவமுண்டா என்பது பற்றிக் கூறும் திறன் இது. ஒருவன் தனக்கு உடலாகிய உருவம் இருக்கிறது என்று கருதும் வரையிலும் கடவுளுக்கும் ஏதேனும் ஓர் நாம ரூபம் இருப்பதாக ஒத்துக் கொண்டேயாக வேண்டும். 'உடலே நான்' என்ற அகந்தையுணர்வு அற்ற போதுதான் கடவுளையும் உருவமற்றவர் என்று ஒருவன் உணர முடியும். அதுவரையில் கடவுளை உருவமுள்ளவர் என்ருே இல்லாதவர் என்ருே தீர்மானிக்கக் கிளம்ப வேண்டாம் என்பது கருத்து. "உருவந்தானுயின் உலகு பரம் அற்ரும்....." என வரும் உள்ளது நாற்பதின் 4 ஆவது பாடலும் இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

1099. மாயையாகிய உபாதியின் பொய்யான சம்பந்தத்தால் எண்ணற்ற நாம ரூபங்களை அடையக் கூடிய சிவபிரான், அன்பர்கள் பாவனையால் நெடுங்காலம் நினைந்து நினைந்து கற்பனை செய்த ஓர் உருவத்தையே தானும் மேற்கொண்டவனுய்க் காட்சியளிக்கின்ரு னுயினும், உண்மையில் உருவமற்ற அறிவே அவனுகும் (ஹரனுகும்.)

விளக்கக் குறிப்பு:—ஜீவன் தன் சித்தத்தில் உறைந்து கிடக்கும் வாசனைகளையே பஞ்சேந்திரியங்களின் வழியே வெளியில் நாமரூப உலகக் காட்சியாகக் காண்கின்றான். கீதோபதேச நடுவில் கண்ணபிரான் அர்ச்சுனனுக்குக் காட்டிய விசுவரூப தரிசனமும் இப்படிப்பட்டதே என்று ஸ்ரீ பகவான் ஒரு முறை விளக்கி யருளினர். அர்ச்சுனனது சித்தத்திற் கடவுளைப் பற்றிய என்னென்ன விசேஷ பாவனைகள் இருந்தனவோ அவைகளையே அவன் தன்னிடம் காணும்படி ஸ்ரீ கிருஷ்ணன் அவனுக்குத் திவ்விய திருஷ்டி யருளினர். இத் திருஷ்டியாவது அவனது சித்தத்திலுள்ள நுட்பமான வாசனைகளைத் தூலமாக்கிக் காணவல்ல திவ்விய திருஷ்டியே தவிர **ஞானதிருஷ்டியல்ல** . ஞானதிருஷ்டியில் ஞானத்தைத் தவிர நாமரூபம் ஒன்றுமே தோன்றாது. சில உரையாசிரியர்கள் இதை ஞான திருஷ்டி என்று உரை செய்திருப்பது தவறு. "திவ்யம் ததாமி தேசக்ஷு" என்றே ஸ்ரீ கிருஷ்ணன் கூறியிருப்பது காண்க, மேலும், "யச்சான்யத் த்ருஷ்டு மிச்சஸி" என்று மட்டுமே கூறுகிறார்! அதாவது "இன்னும் வேறு எவ்வெவற்றை யெல்லாம் **பார்க்க இச்சிக்கிறாயோ** அவற்றைப் பார்" என்று கூறினரே தவிர, "நான் உண்மையில் எப்படி யிருக்கிறேனோ அதைப் பார்" என்று கூறவில்லை !! அர்ச்சுனனது சித்தத்திற் பண்டு நிறைந்து கிடந்த ஈசுவர நாமரூப பாவனைகளையே அவன் தூலமாக்கிக் காண அவர் உதவினர் என்பது இங்கு அறிய வேண்டிய தாகும்.

1100. **மனோ வாக்குக் காயங்கள் மூன்றும் சும்மா விருக்க, இதயத்தில் விளங்கும் பராவாக்கால் (நான் நான் என்று விளங்கும் அகம் ஸ்புரணத்தால்) உயர்ந்த மெய்ப் பொருளாகிய ஆன்மாவை அனுசந்தானம் செய்வதுதான், ஆகாச நீலத்தைப் போன்ற மாயப்பொய்யான நாம ரூபங்களின்றி, இதயத்தினுள்ளே விளங்கும் ஞானப்பிரகாசமான முழு முதற் பொருளை மிக நன்றாகத் துதிப்ப தாகும்.**

விளக்கக் குறிப்பு:— ஆன்மானுசந்தானமே மிகச் சிறந்த தோத்திரமாகும். ஏனெனில், துதிகளின் நோக்கமாவது யாது? இறைவனின் மெய்ப்பெருமையை அனுசந்திப்பதே யன்றோ? இது எப்பொழுது கைகூடுகிறது எனின், 'நான்' என்னும் அகந்தை எழாது ஆன்மாவில் மூழ்கி யழியும் போதுதான் நிகழ்கின்றது. அதாவது அகந்தை யெழுச்சியால் இறைவனின் ஏக சொரூபத்தை இருகூறாக்கிக் குறைவுபடுத்தாமல் அப்போதுதான் நிறைவுபடுத்தல் நிகழ்கின்றது. ஆகையால். அகந்தை யெழுச்சி யற்ற ஆன்ம நிஷ்டை யொன்றே இறைவனை மிக நன்றாகத் துதிப்ப தாகும்.

1101. மேற்கூறியபடி அத்தகைய ஆன்மாநுசந்தானம் செய்யும் ஞானசாரர்களாகிய பெரியோர்கள் பாடிய தோத்திர வடிவிலுள்ள நூல்கள் எவையே யாயினும், அந்நூல்களின் உள்ளக் கிடக்கை "ஆன்மாவே மிகச் சிறந்த கடவுள்" என்பதே தவிர, எந்தத் தனித்ததோர் நாமரூபக் கடவுட் பாவனை யோடும் அவை பாடப்பட்டவை யல்ல என்றறிக.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது: ஆன்மாநுசந்தான வடிவான ஞானசாரத்தின் ஒழுகும் சான்றோரால் அருளப் பெற்ற எவ்வியல் வாய்ந்த தோத்திர நூலுக்கும், கற்பனை கடந்த அச் செம்பொருளின்கண் ணன்றி அதன் அறிகுறியாக மட்டும் அன்னோர் கையாண்டு வரும் எந்தப் பெயர் வடிவப் பாகுபாட்டிலும் அதன் உண்மை நோக்கம் இன்றாம். அந்நூல்கள் மேற்பார்வையிற் பல்வேறு சமயச் சார்புடையனவாகத் தோன்றுங்காலும், ஆழநோக்கி உய்த்துணர் வார்க்கு, அஃது அற்று நடக்கும் நடுநிலையாம் பொதுத் தன்மை புலனாகாமற் போகாது.

ஸ்ரீ பகவான் ரமணர் 'அருணாசலம், அண்ணாமலை' என்று துதிபஞ்சகம் போன்ற நூல்களிற் பாடும்போதெல்லாம் அச் சகுணப் பெயர்களால் ஆன்மாவையே குறிப்பிடுகின்றார் என்றே நாம் கொள்ளவேண்டு மென்பது இதிலிருந்து தெரிய வருகின்றது. இவ்வாறே ஞான சம்பந்தராதி நால்வர் பாசுரங்களிலும் போற்றப்படும் சிவபிரானும், ஆழ்வாராதிகளாற் போற்றப்படும் திருமாலும் ஆன்மாவே என்று காண்க.

1102. நடராஜப் பெருமானது தூக்கியாடுந் திருவடிக் கருணைச் சிறப்பின் தத்துவ மானது, தமது அடியார்களை ஆன்ம விசாரமாகிய நடனத்தால், மூலமாகிய இதயம் அடையும்படிக் கொஞ்சி விளையாடும் அருளாட்டமே யாகும். இது (தன் மூல வொளியாகிய ஆன்மாவாம் நடராஜப் பெருமானுடன் இதயஞ் சேரும் ஜீவனாகிய அடியார்களது இவ் வைக்கியம்) பிரதி பலன வொளியாகிய சந்திரன் தனது மூலவொளியான சூரியனுடன் ஒன்றாயிணைந்தது போன்றதோர் புது விந்தை யாகும்.

1103. இவ் வாழ்வில் பற்பல குறிக்கோள்களைக் கொண்டு பிரிந்து பலதிசைகளில் ஓடி யலைந்து (முயன்று) மயங்குதல் அறிவீன மாகும். அலையும் அகந்தையின் சலனங்கள் யாவற் றையும் அழிக்கின்ற நித்திய மங்களமாகிய (பரமசிவ) மோன மெனும் சிறந்த சொரூபத்தையே (ஆன்மாவையே) அநுசந்தித்து நிற்பாயாக.

1104. 'இருக்கிறேன்' என்ற இருப்பறிவு உணர்வோடு இதயத்தில் அடங்கி நிற்கும் ஆன்ம நிஷ்டை யுடையவர்களைத் தவிர மற்றவர்கள் குற்றமற்ற அவ் வுண்மை நிலையை (பிரம்ம நிலையை) அடைய மாட்டார்கள். ஏனெனில், மனத்திற்குத் தூக்கத்திலும் விழிப்பிலும் முறையே ஏற்படும் மறப்பு நினைப்பு ஆகியவற்றால் தன் உண்மைநிலை மறைபடுவதால் என்க.

## சஉ. சகஜ நிட்டர் திறன்

1105. சரீரத்தில் இருந்தும் தன் இயல்பு நிலையாகிய சகஜான்ம நிலையில் தூங்காது தூங்கும் நிர்விகார ஞானி ஒருவன், அச் சரீரத்தோடு நடக்கும் வியவகாரம், நிஷ்டை, தூக்கம் இவைகளில் ஏதொன்றையும் அறிவதில்லை. இது, இங்கு மாட்டு வண்டி ஒன்றில் தூங்கிக் கொண்டே செல்லும் வண்டிப் பிரயாணி ஒருவன், அவ்வண்டி போவதையும் நிற்பதையும், மாடுகள் அவிழ்த்து விடப் பட்டிருப்பதையும் அறியாதது போன்றதாகும்.

**பகவான் (21)**

மாட்டு வண்டியில் தூங்கும் வண்டிப் பிரயாணி ஒருவனுக்கு அவ் வண்டி செல்வதும், நிற்பதும், மாடுகள் அவிழ்த்து விடப் பட்டு வண்டி தனிப் பட்டிருப்பதும், எப்படித் தெரியாதோ, அப்படியே, வண்டி போன்ற இவ் வூன தேகத்தி னுள்ளே தூங்காது தூங்கியிருக்கும் ஞானிக்கும் அவனது சரீர வாழ்வில் நடக்கும் தொழிலும் நிஷ்டையும் தூக்கமும் தெரியாத தாகும்.

விளக்கக் குறிப்பு:— ஞானியின் உடல் வாழ்வு பிறர் திருஷ்டிக்கே உண்மை போற் காணப்படும். ஆகையால், "இந்த ஞானி ஜாக்கிராவஸ்தையில் இதோ வேலை செய்கிறார்" என்று அஞ்ஞானிகள் நினைக்கின்றனர். ஆனால் ஞானியோ உண்மையில் அசரீரி யாகையால் அவனுக்கு அது தெரியாது; அது மட்டுமல்ல, அது அவனுக்கு இல்லாததே என்பதுதான் இச் செய்யுளின் உபதேசம். மாட்டு வண்டியில் தூங்கிக்கொண்டிருக்கும் ஒரு பிரயாணிக்கு வண்டி செல்வது எப்படித் தெரியாதோ அப்படியே ஞானியின் உடலும் இந்திரியங்களும் மனமும் தொழிற்படும் வியவகார நிலையை (உறங்கும் பாலகன் உணவருந்துதல் போல) அவன் அறியாதவனே. இந்திரிய மனங்கள் பிரவிருத்தி யற்றிருக்கும் போது அவனது நிலையை "இந்த ஞானி சமாதியிலிருக்கும் நிலை இது" என மக்கள் கருதுகின்றனர்.

இது மாடுகள் நகராமல் வண்டியிற் பூட்டப் பட்டபடியே நின்றிருக்கும் நிலைக்கு ஒப்பாகும். ஆகவே இந்தச் சமாதி நிலையும் ஞானிக்குத் தெரியாததே; இல்லாததே. "இந்த ஞானி தூங்கிக் கொண்டிருக்கிறார்" என்று மக்கள் கூறுகின்றனர். உடல் கட்டவிழிந்து கிடப்பது போற் காணப்படும் இத் தூக்க நிலையானது மாடுகள் வண்டியிலிருந்து அவிழ்த்து விடப்பட்டிருப்பதற்குச் சமானமாகும். வண்டிப் பிரயாணிக்கு இதுவும் தெரியாதது போலவே ஞானிக்கு இத்தூக்க நிலையும் தெரியாததே; இல்லாததே யாகும்.

*அசரீரியாகிய ஞானியை உடலாகக் காணும் பிழை நோக்குடைய அஞ்ஞானிகளுக்கே ஞானியிடம் இம் மூவித வாழ்வு நிலைகள் இருந்து வருவதாகக் காணப்படுகிறதே தவிர உண்மையில் ஞானிக்கு நனவு (கனவு), சமாதி, தூக்கம் ஆகியவை ஒன்று மில்லை. "அவன் நிலைமை இன்னதென்று உன்னல் எவன்" என்று கூறும் உள்ளது நாற்பது 31ஆவது பாடலின் கருத்தே ஒப்பத் தக்கதாம்.*

1106. எதிலும் பற்றற்ற சாட்சியாய் இருந்து விளங்கும் ஞானிகளது ஆகாயம் போன்ற பரிசுத்த மனமானது, அவர்களிடம் வரும் மற்ற அஞ்ஞானிகளது நேர்மையற்ற மனக் குற்றங்கள் நிறைந்த நினைப்புக் களையுங்கூடத் தம்மிடம் பிரதிபலித்துக் காட்டுங் கண்ணாடி போன்று விளங்கும். அதனால் மக்கள் அந்த ஞானியரை மயக்க வசப்பட்டு விட்டவர்களாகக் கருதி புத்தி மருட்சி யடைவர்!

1107. முக் குணங்களிற் சிறந்த சத்துவ குணத்தையுங் கடந்து வாழும் சகஜ நிஷ்டர்களாகிய ஞானிகள், கர்த்ருத்துவ புத்தியோடு கலங்கி அஞ்ஞானிகளாகிய மக்களின் கண்களுக்கு, குற்றம் நிறைந்துள்ள இராஜத குணங்களை யுடையவர்கள் போல் சிற்சில சமயங்களில் தோன்றும். (ஆனால் அது பார்ப்போரின் இராஜத விருத்தியின் பிரதிபிம்பமே) ஆகையால் அதைக் காரணமாகக் கொண்டு அச் சகஜநிஷ்டர்களின் ஞானத்தைச் சந்தேகிக்காதே.

1108. பரம்பொருளுக்கு உரிமை யுடையவர்களாக உணர்ந்து விளங்கும் ஜீவன்முத்தப் பெரியோர்களுக்குப் பிழை செய்வார்க ளானால், மக்கள் இப்பிறப்பில் பெரும்பழியையும் மறுபிறவிகளுக்குப் பெரும் பாவத்தையும் சம்பாதித்துப் பெரிய சுமையாகச் சுமக்க வேண்டியவர்க ளாவர்.

1109. (வழிந்து வரும் எண்ணெய்யைக் குடிக்க விரும்பி) இது அற்பமான செக்கு, இது ஆண்டவனான சிவலிங்கம் என்ற பேதம் அறியாமல் இரண்டின் மேலும் ஒரே விதமாகத் தன் நாக்கால் நக்கிக் குடித்து வாழும் அற்பமான நாயைப் போன்ற கீழ் மக்கள், குற்றமுள்ள கீழோரையும் குற்றமற்ற ஞானிகளையும் வேறுபடுத்தி யுணர்ந்து கொள்ள இயலாதவர்களாய் இருவரிடமும் ஒரேவிதமாகத் தடையின்றி அபசாரம் செய்வர்.

1110. சூரியனைப் பார்த்து நாய் குரைத்தாலும் அந்த ஏளனம் சூரியனை எட்டாது. அவ்வாறே சூரியனைப் போல மெய்ஞ் ஞான சக்தியும் ஒளியும் மிக்கப் படைத்த ஞானிகளை அற்ப மனிதர்கள் இகழும் சொற்களும் தீண்டாது என்க.

## சங. திதப் பிரஜ்ஞர் திறன்

1111. உண்முகப்படுதல் புறமுகப்படுதல் என்று சொல்லப்படும் நோக்க வேற்றுமை ஒன்றுமில்லாமல், 'இருக்கிறேன்' என்று மட்டும் விளங்கும் சின்மாத்திர திருஷ்டி யொன்றே பொருந்தி வாழும் ஞானியே நிலைத்த ஸ்திதப் பிரஜ்ஞன் (ஞானம் திடப்பட்டவன்) ஆகும்.

விளக்கக் குறிப்பு:— அந்தர் முகமாகிச் சமாதியுறுவதும் பிறகு பகிர்முகப்பட்டு வியவகாரிக நிலை யடைவதுமான இருவிதபேத வுணர்வு என்றும் கொஞ்சமு மில்லாமல் (உள்வெளி என்ற இருமையுணர் வற்றவனாய்) விளங்கும் ஒருவனே திட ஞானி எனப்படுவான். சமாதியில் மட்டும் ஆன்ம வுணர்வும் அது கலைந்தால் உடலுலக வுணர்வுகளும் பெறுவோன் ஓர் அப்பியாசியே தவிர ஆரூடனல்ல என்பது கருத்து. திடஞானிக்கோ இவ் வேறுபாட்டுணர்வு இல்லாததால் அவன் சதாகால சகஜ நிஷ்டனாவான் என்றறிக.

1112. இதய மெய்யுணர்வாகிய ஆன்ம ஞானத்தால் எவனொருவன் 'நான்' என்னும் அகந்தை யற்று, 'தான்' என்னும் சிவ சொரூபமாகவே விளங்குகின்றானோ, அவனே எதற்கும் அசையாது (சலனமில்லாது) இருக்கக் கூடிய முழுமோன நிலை பெற்ற ஸ்திதப் பிரஜ்ஞன் ஆகும் என்றறிக.

விளக்கக் குறிப்பு:— 'நான் இவ்வுடல்' என்னும் அகந்தை யெழுச்சியே சகல அசைவு (விருத்தி) களுக்கும் ஆதியசைவு ஆகும். ஆகையால்

'நான் இது' என்ற அகந்தை யெழுச்சி யற்று, ஆன்மாவாகிய அசைவற்ற (பூரண) சிவமே தானாக அறிந்து அடங்கி மௌன முற்றவனுக்கு எவ்வித இதர சலனங்களும் இயல்பாகவே இல்லாமற் போவதால், திரப்பட்ட அவ் வுணர்வே திதப் பிரஜ்ஞை நிலையாகும் எனப்பட்டது.

## சச. கிரந்தி பேதித்தார் திறன்

1113. *(பொருள்களை முன்னிலை - படர்க்கைகளாக — தனக்கு அன்னியமாக)* எதிரிட் டறியும் அறிவால் அலையும் மனம் உடைய பாமரர் விஷயங்களாற் கட்டுப்பட்டதோர் தொகுதியாகிய உலகத்தையே எங்கும் பார்ப்பது போலவே, கிரந்தி பேதிக்கப் பெற்றுள்ள ஞானியொருவன், சுட்டறிவு நீங்கியவ னாகையால், ஆதாரமான ஆன்ம சிற்சொரூபமே எங்கெங்கும் நிறைந்து விளங்குவதைக் காண்பான்.

1114. பல்வேறு வேற்றுமைகளுடன் விசித்திரமாகவும் அன்னியப் பொருளாகவும் காணப்படும் இவ்வுலகத் தோற்றம், சூரியனைப் போல் சுயம்பிரகாசமாய் இருந்து விளங்கும் எவனது திருஷ்டியில் (தனக் கன்னியமாய்த்) தோன்றாமல் நீங்குமோ அவன்தான் ஞானியாகும்.

1115. எப்போதும் ஆன்ம சம்பத்தின் பெருமிதத்துடன் இதயத்தில் நன்றாக நிஷ்டை பெற்றுள்ள மெய்ஞ்ஞானி ஒருவன், இவ்வுலகத்தை நிறைந்த மாயையென்றோ, தனக்கு வேறான தோர் அன்னியப் பொருளென்றோ ஒருக்காலுங் கருத மாட்டான்.

1116. அறிவிலே தோன்றும் இவ் வுலகம் முழுவதும் சுத்த அறிவு வடிவாகவே (ஞானமயமாகவே) ஞானி காண்பான். அந்த ஞான பாக்கியவானான புருஷன் அறிவைத் தவிர உலகிற்கு வேறு தனியாக ஓர் சத்தியம் இல்லாததைக் கண்டு, எப்போதும் ஆன்ம அறிவாகிய தன்னிலேயே நிலைபெற் றிருப்பான்.

1117. இரண்டற்ற பரிபூரணப் பொருளில் மூழ்கி மனமழியப் பெற்ற மகான்கள் உண்மையற்ற இவ்வுலக வாழ்வான இரட்டைகளில் மயங்கார். யாதொரு உபாதிக் கலப்பும் இல்லாது சுத்தமாக 'நான் இருக்கிறேன்' என்று மட்டும் விளங்கும்

ஆன்ம சொரூப அருள் நிலையில், பூரணப் பொருளான அவ் வான்மாவைத் தவிர 'நான் இன்னார்' அல்லது 'இது' என்று யாதோர் உபாதி யுணர்வும் இல்லை.

குறிப்பு:— 'நான்' என்றொரு ஜீவனும் 'இது' என்றொரு உலகமும் இல்லை எனவும் பொருள்.

1118. ஞானிக்குக் கர்த்ருத்துவ புத்தியாகிய பந்தம் அறு பட்டுப்போன காரணத்தால், அவன் பிறகு செய்ய வேண்டிய தாக யாதோர் கருமமும் இல்லாதவ ளுவான். ஜடமாகிய அன் னியப் பொருள் ஏதொன்றும் அறியப்படாத சுத்த ஞானத்தை அவன் அடைந்திருப்பதால் எவ்வித சந்தேகமும் மயக்கமும் சிறிதும் அவனுக்கு உண்டாவதில்லை.

1119. உண்மை விளக்கமாகிய சொரூப ஞானத்தாற் கவ ரப்பட்ட ஞானியின் மனம், பிறகு ஐம்புல நுகர்வுகளாகிய உண்டுருசியறிதல், சுவாசித்து வாசனை யறிதல், காணல், கேட் டல், தொட்டுணர்தல் ஆகிய ஐம்புலன்களிலும் முன்பு போல் சஞ்சரித்துக் கொண்டிருந்தாலும், நிறைந்த விசார திடத்தாற் கிரந்தி பேதிக்கப் பெற்று நாச மடைந்ததே யாகும்.

1120. உள்ளத்தில் ஞான வாழ்வு பெற்ற மகான்கள் (முற் பாடலிற் கூறியவாறு ஐம்புலன்களில் தம் மனம் சஞ்சரித்தா லும்) அற்பப் புலன்களோடு கூடிய உடலின்ப வாழ்க்கையிற் சிறிதும் மகிழ்ச்சி யடையார். மோன வாழ்வான அதுவேதான் எல்லையற்ற, அகண்ட, பரப்பிரம்மானுபவ மல்லவா? (அகண் டானந்தத்தின் முன் அற்பானந்தம் சுவையற்றதே எனப்பட் டது).

1121. *அலைகடலுள் ஒன்ருகிக் கலந்த நதியொன்று பிறகு சமுத்திர வடிவம் மாறி வேருகப் பிரிந்து ஓடுவது இல்லாதது போலவே, ஞானமய ஆன்ம சொரூபத்தை யடைந்த உயிர்கள் அறிவு மயங்கித் தாம் மறுபடியும் பிறப்ப தில்லை.*

விளக்கக் குறிப்பு:—ஆன்ம சொரூபமானது ஞானசொரூபமே யாவதாலும், பிறப்போ ஆன்ம மறதி யாகிய மயக்கத்தாற் கற்பித்துக் கொண்ட பொய்யறிவே (அறியாமையே) யாவதாலும் ஆன்ம சொரூப ஞான மடைந்த உயிர் மீண்டும் பிறப்பதில்லை எனப்பட்டது.

1122. (நினைப்பு) மறப்புடன் கூடிய மனமுடைய மக்களில் பிறப்பவர் யாவரும் இறப்பர்; இறப்பவர் யாவரும் பிறப்பர். உயர்ந்த பரம்பொருளை அறிந்து மனமிறந்த ஞானிகள் பிறப் பிறப் பற்றோராய் மேலான பதமாகிய அங்கேயே (பரம்பொரு ளாகவே) இருப்பவ ராவர்.

குறிப்பு:— மறப்புடன்—'ஆன்மாவை மறந்த மறதியுடன்' என்றும் பொருள்.

1123. எவரொருவர் தன்னை சத்சித்தாக அறிந்தாரோ அவர் சதாசிவத்தைக் கண்டவ ராவர். பயத்தை விளைவிக்கும் இரட்டைகளின் அழிவையும் அவர் கண்டவ ராகும். அவர் பரி சுத்தமான துரிய நிலையாகிய தம் இயல்பு நிலையையும் கண்டவ ராவர். அவரே பெரியோர். அவர் இனி மறுபிறப்பைக் காணுர். (பிறவா நிலையடைந்தார் எனப்பட்டது).

குறிப்பு:— "இதைக் கண்டார் அதைக் காணுர்" என்றவாறு கூறும் செய்யுள் நயம் கவனிக்கத் தக்கது.

1124. முன்பு ஒரு முறை ஒருவன் இதயக்கிரந்தி பேதிக்கப் பெற்முனுயின், பிறகு எக்காலத்தும் மீண்டும் கட்டுற மாட்டான். தன் சுபாவநிலையான இக் கட்டவிழ்ந்த நிலையே கடவுள் நிலை. இதுவே ஈசுவர சக்தி. இதுவே உபசாந்தி என்றறிக.

## சரு. சான்ருேர் மாட்சித் திறன்

1125. சர்வேசுவரனுகிய கடவுளையே தன் ஆன்ம சொரூப மாக உள்ளே கண்டறிந்துள்ளவனும், எவ்விதமான பற்று மில்லாதவனுமான ஞானி உலகில் சஞ்சரிக்கும் போது,

(a) அந்த ஞானியின் சஞ்சாரமானது, உயிர்களை ஆபத்தின்றி ரக்ஷிக்கும் ஆண்டவனே கால் கொண்டு உலவும் செயலாகும் என்றறிக.

(b) தன் அடியருக்கு ஆபத்தொன்று மில்லாதவாறு எப் போதும் பாதுகாத்து நின்று விளங்கும் சர்வேசுவரனே அந்த ஞானியின் ஓர் பாதுகாப்பாளனுக உலகிற் கால் கொண்டு நடந்து அந்த ஞானியின் பின் செல்கின்முன் என் றறிக.

குறிப்பு:— இச்செய்யுளின் பிற்பகுதி மேற்கண்டவாறு இருவித மாகவும் பொருள் கொண்டமைகின்றது.

1126. மனம் (அகந்தை வடிவான பரிச்சின்ன அறிவு) இறந்து, சிவமய மாகவே நிற்கும் ஞானி சகல உயிர்களுள்ளும் உயிர்க்குயிராய், சமமாய், அகண்ட அறிவாய்ப் பரவி நிறைந் துள்ளவ ஞகும். ஆதலால், ஜீவன் முத்தஞகத் தெளிந்து விளங்கும் அவனது சொரூபத்தை (திருவுருவை) அன்போடு தியானிப்பவரது உள்ளப்பூட்டு உடைந்து, உண்மை யொளியான ஆன்மா அவனருளால் அவர் தம் முள்ளிருந்து ஸ்புரித்துப் பிரகாசிக்கும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகஞர் கூறியது:— அவன் சொரூபத்தை அனுசந்தானம் செய்வோ ரகத்தே உண்மையொளி தனக்குத் தானே விளங்கக் காரணம் யாதெனின் அம் முக்தன் சொரூபம் சிவ சொரூபமாய் எல்லா வுயிர்களிலும் இனிது றைதலே என்பார், 'சிவமயமாய் நிற்கின்றே' னெனவும், 'ஒத்துயிரு ளெல்லாம் உடனுறைவோன்' எனவுங் கூறிஞர்.

1127. இறப்பற்று, நூறு சூரியர்கள் ஒன்று கூடிஞற் போல் எப்போதும் மிகவும் பிரகாசிக்கும் சிறந்த வாழ்வான மெய்ஞ் ஞானம் நிறைந்த ஞானிகளது அருட்பார்வை யாகிய கங்கையில் தோய்ந்தவர்களே, அப்பார்வை இணையற்ற ஆன்ம ஞானத்தை மிகச் சுலபமாக அளித்து, அழிவற்ற நிலையிற் சேர்ப்பிக்கும்.

1128. அன்னியமற்ற ஏகான்மாவாக இருந்து விளங்கும் மெய்ஞ்ஞான சிவபோக ரசத்தில் தோய்ந்த புத்தியையுடைய ஞானிகள், (ஜீவன் ஒருவனது) பாச மயக்க வெறியான கானல் நிறைந்த மனமாம் பாழான பாலை நிலத்தைத் தேவர்களும் விரும்பும் (பக்தி ஞானப் பயிர் விளையும்) செழித்த நிலமாக மாற்ற வல்லவ ராகும்.

1129. ஆன்ம சாந்தி நிறைந்து பொங்கும் உள்ளமுடைய ஞானிகளிடம் வந்தடைவோரது சித்தமும் பேரானந்த மடையும். பிரம்மானந்தத்தில் ஊறித் திளைத்திருக்கும் அந்த ஞானிகளது அருள் நிறைந்த முகமே அடியார்களாகிய வண்டினங்கள் வந்து மொய்க்கும் ஞானச் செந்தாமரை யாகும்; அல்லவா?

### சசு. பெரியோர் மாட்சித் திறன்

1130. சிறப்புடைய பெரியோர்களாகிய ஞானிகளது அருட் குற்றேவலை ஏற்றுத் தொண்டாற்றி வரும் மக்களுக்கு மாயையில்

மருண்ட மயக்கம் அற்றுப் போகும். அழிவற்ற வாழ்வான அருட் செல்வம் உள்ளத்தில் வந்து சேரும். அவ் வடியார்கள் பிறவிப் பெரும் பேறு அடைந்த மனிதர்களாய் வாழ்வர்.

## சஎ. வாதனை மாண்டார் திறன்

1131. 'இவ்வுடம்பே நான்' என்னும் வடிவில் எழும் அகந்தைத் தன்மை யின்றி கலக்கம் என்றும் எழாதாகையால் கனவிற்கூட சிந்தைக் கலக்கம் இல்லாதிருப்போரே, சித்தத் திலிருந்த 'அகங்கார வாசனைகள் யாவும் அழியப்பெற்ற ஞானிக ளாவர்.

1132. மனிதர்களைவிடத் தாழ்ந்த நாற்கால் மிருகங்கள் பறவைகள் முதலிய (ஊர்வன நீர் வாழ்வனவுமான) உயிர்க ளெல்லாம் எப்போதும் அளவற்ற எண்ணங்களாய் அலைந்து கொண்டிருக்கும் மனத்தால் உயிர் வாழ்வனவே யாகும். ஒளி பெற்று விளங்கும் எந்த ஞானியினது உள்ளம் அவ்வாறு எவ்வித எண்ணமும் அறவே யில்லாமல் 'இருப்பு' மாத்திரமாய் வாழ்கிறதோ அவனே உண்மையில் வாழ்வோ னாகும்.

விளக்கக் குறிப்பு:— மன மிறந்த மௌன வாழ்வே மனித வாழ்வு; அவ்வாறின்றி, அலையும் மனமுடைய மனித வாழ்வும் மிருக பக்ஷியாதிகளின் வாழ்க்கையே என்பது கருத்து.

1133. தன் மனத்தை எங்கோ வெகுதூரச் சிந்தனையிற் செலுத்தியுள்ள ஒருவன் புராணப் பிரசங்கம் ஒன்றை வெகு நேரம் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருப்பதாகத் தோன்றி னலும் அவன் ஒன்றுங் கேட்காதவனே யாவது போல, மன வாச னைகள் அழியப்பெற்ற ஞானி நிறைந்த வியவகாரங்களைத் தான் ஏற்றுச் செய்து கொண்டிருந்தாலும் ஒன்றும் செய்யாதவனே யாகும்.

1134. ஒருவனது உடல் தூக்கத்திற் செயலற்றுச் சும்மா படுக்கையிற் கிடந்தாலுங்கூட, கனவில் ஓர் மலை மேல் ஏறிப் பள்ளத்தாக்கில் தலைகீழாய் விழுவதாகக் கண்டு அவன் துன் புறுவது போலவே, ஒன்றும் செய்யாமல் ஒருவன் ஏகாந்த வாசத்தில் இருந்தாலும், மனத்தின் வாசனைகள் அழியப்பெறாதவ னயின், அவன் எல்லா வியவகாரங்களையும் கர்த்ருத்துவத்தோடு செய்தவனே யாவான்.

**பகவான் (22)**

வேறு விஷயங்களில் ஈடுபடுத்தப்பட்டு அதனுல் வெகுதூரத்திற் செலுத்தப்பட்ட மனத்தினராய், ஆனுல் ஓர் கதையைக் கேட்டுக் கொண்டிருப்பதாகக் காணப்படுபவர்களைப் போல (அவர்கள் கதை கேளாதவர்களே யாவது போல) வாசனைகள் அழியப்பெற்ற மனத்தினரான ஞானிகள் எவ்வியவகாரங்கள் செய்து கொண்டிருப்பதாகக் காணப்பட்டாலும் ஒன்றும் செய்யாதவர்களே யாவர். (ஆனுல் அதற்கு மாருக) வாசனைகள் நிறைந்த மனத்தினரான மக்கள் ஒரு காரியமும் செய்யாது கண் மூடிச் சும்மா விருந்தாலும் எல்லா வியவகாரங்களும் செய்தவர்களே யாவர். (எவ்வாறெனின்) தூங்கும் ஒருவனது உடல் அசைவற் றிருந்தும், தான் காணுங் கனவில், தான் ஒருமலை மீதேறி ஓர் குழியில் விழுவதுபோற் கண்டு துன்புறுகின்ரு னன்ருே? அவ்வாறே யென்க.

விளக்கக் குறிப்பு:— செய்யுள் 1133 இன் கருத்தையும், 1134 இன் கருத்தையும் ஒரே செய்யுளிற் கூட்டி ஸ்ரீபகவான் இசைத்தது இவ்வெண்பா. இஃது உள்ளது நாற்பது அனுபந்தத்தில் 30வது பாடலாக வந்துள்ளது காண்க.

வாசனுக்ஷய முற்ற ஞானிகள் சகல காரியங்களையும் செய்வது போல் பார்ப்பவர்களாகிய நமக்குத் தோன்றினுலும், அவர்கள் உண்மையில் யாதொன்றும் செய்யாதவர்களே என்பதையும், வாசனைகள் அறப்பெருத அஞ்ஞானிகள் சர்வ கருமங்களையும் விட்டுவிட்டுச் சதா காலமும் நிஷ்டையிலிருப்பவர்களாகத் தோன்றினுலும் அவர்களது மனம் விஷயானு சந்தான முடைய தாகவே யிருப்பதால், கர்த்ருத்துவத்தோடு சகல காரியங்களையும் செய்தவர்களே யாவர் என்பதையும் இப் பாடலில் இரு உதாரணங்களால் ஸ்ரீ பகவான் விளக்குகின்ருர். பிரசங்கிக்கப்படும் கதையில் மனத்தைச் செலுத்தாமல் வேறெங்கோ தன் மனம் சென்றிருக்கப் பெற்ற ஒருவன் வெகு நேரம் உட்கார்ந்து கதை கேட்டுக் கொண்டிருப்பதாகப் பார்ப்பவர்கட்குத் தோன்றினுலும் உண்மையில் அவன் கதை யொன்றுங் கேளாதவனே. இவ் வுவமையில், மனம் கதையை விட்டு வெகுதூரம் சென்றிருத்தலை, ஞானிக்கு வாசனை (கர்த்ருத்துவம்) அற்றிருப்பதற்கு உபமானமாகக் கூறப்பட்டுள்ளது. தூங்கும் ஒருவன் தன் உடலால் ஒரே இடத்தில் அசைவற்றிருப்பதாகக் காணப்பட்டாலும் அவன் மனத்தால் கனவில் ஓர் மலையி லேறி மடுவில் விழுந்து துன்புறுபவனே யாவதை, இங்கு அஞ்ஞானி யொருவன் வெகு நேரம் உடலசைவற்று உட்கார்ந் திருப்பவனுய் (கர்ம மொன்றுஞ் செய்யாதவனுய்)க் காணப்பட்டாலும் கர்ம வாசனைகளாகிய கர்த்ருத்துவம் நீங்கப் பெருமையால் சகல வித கர்மங்களையும் இயற்றிப் பயன்களையும் அனுபவிப்பதற்கு உபமானமாகக் கூறப்பட் டுள்ளது.

## சஅ. ஜீவன் முத்தர் திறன்

1135. } (இவ்விரு பாடல்களும் குளகம்; ஆதலால்
1136. } இரண்டிற்கும் சேர்த்துக் கீழே உரை தரப்படுகின்றது.)

"கர்த்ருத்துவம் நீங்கப் பெற்றிருக்கும் அப்பெரியோர்களுங் கூட தமக்கு விதிக்கப்பட்ட பிராரப்த கர்மங்கட்கு ஆளானவர் களாய் உடல் தாங்கிப் பலவிதப் பிரவிருத்திகளாற் ஜீவனம் செய்தும், காரியங்களை நடத்திக் கொண்டும் துன்பங்கள் பற்பல நுகர்வதைப் பார்க்கின்ருேமே; ஆகையால் கர்ம பந்தமற்ற முக்தர்கள் என்று அவர்களைக் கூறுவது சரியாகுமா?" என்று கேட்பீர்களாயின், விடையாவது, அவர்கள் துன்புறுவதாகக் காண்பவர் திருஷ்டியில் தோன்றுகிறதே தவிர அப்பெரியோர்கள் தாம் வருந்துவதாகக் கூறுகிருர்களா என்ன? சொல்வீராக.

விளக்கக் குறிப்பு:— தன்னை உடலாக (ஒரு வியக்தி ஜீவனுக)க் கருதும் அஞ்ஞானி தனது திருஷ்டியால் வியக்தித்துவமற்ற அகண்டான்ம சொரூபமேயான ஞானியையும் ஓர் உடலாகத் தான் பார்க்க முடியும். அத்தகைய தோஷ திருஷ்டியால் மக்கள் அப் பெரியோரைக் கர்மம் செய்வோ ராகவும் (கர்த்தாவாகவும்), கர்ம பலனை (பிராரப்தத்தை) அனுபவித்துக் கஷ்டப் படுவோராகவும் (போக்தா வாகவும்) காண்கின்றனர். ஆனுல் ஞானியோ தான் துன்புறுவதாகவோ இன்புறுவதாகவோ உணர்வதே யில்லை. அவன் இவ் விரட்டைகளைக் கடந்த அகர்த்தா அபோக்தா வாகும் என்பது கருத்து; அதாவது, ஞானிக்குப் பிராரப்தம் முதலிய மூவித கர்மமும் அற்பமு மில்லை என்பது கருத்து. இச்செய்யுட்களுடன் உள்ளது நாற்பது—அநுபந்தம் 33 ஆவது செய்யுளையுஞ் சேர்த்து வாசித் துணர்க.

ஒரு முறை ஸ்ரீ பகவான், "வானொலிப் பெட்டி பாடுகின்றது; பேசுகின்றது; ஆனுல் அதற்குள் ஒருவரும் இருக்கவில்லை. அவ்வாறே என் இருப்பு ஆகாயம் போன்றிருக்கின்றது. இவ்வுடல் வானொலிப் பெட்டிபோற் பேசினும் உள்ளே கர்த்தா யாருமில்லை" என்று தன் சுவானுபவத்தை வெளியிட்டனர்!

1137. அந்தப் பெரியோர்களாகிய ஞானிகள் அதீதமாக விருக்கும் ஆன்மாவையே தமது சொரூபமாக அனுபவிப் பவர்களாயிருக்க, ஜடவுடலையே 'நான்' எனக் கருதும் அஞ் ஞானிகளான மக்கள் அப் பெரியோர்களைத் துன்பப் பிண்டமான உடம்பு வடிவாகவே பார்ப்பதைத்தான் (முன் பாடலில்) பார்ப் பவரது தோஷ திருஷ்டியின் பரிசு என்று கூறப்பட்டது.

1138. கர்த்ருத்துவ மற்றுக் கடவுள் விட்ட வழியில் உடல் வாழ்வை நிகழ்த்தி வரும் ஜீவன் முக்தர்களாகிய பெரியோர்களை யணுகிப் பக்தி செய்து துதிக்கின்ற நன் மக்களிடம் (அப் பெரியோர்களின் தோற்ற மாத்திர உடல் வாழ்விற் செய்வதாகக் காணப்படும்) புண்ணியங்கள் போய்ச் சேருகின்றன வென்றும், அவ்வாறு அவர்களைப் போற்ருது தூற்றுகின்றவர்களிடம் (அப் பெரியோர்களது மேற்கண்ட தன்மைத்தான) பாவங்கள் போய்ச் சேருகின்றன என்றும் அறிக.

1139. "(ஜீவன் முக்தனுக்குக்) கர்த்ருத்துவம் நீங்கிவிடும் போது அவனிடம் கர்மங்கள் எப்படி நடைபெற முடியும்? (முடியாதே; ஆனுல்) அவர்களிடம் கர்மங்கள் நடைபெறு வதைக் காண்கிருேமே!" என்று கேட்டால், கர்த்ருத்துவ மாகிய அகப்பற்று அவர்களிடம் அழிந்து விட்ட படியால் கடவுளாம் மகேசுவரனே அவர்களது உள்ளத்தி லிருந்து கொண்டு அக் கர்மங்களைப் புரிகின்ருன் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— பாடல் 1136 இன் விளக்கக் குறிப்பிற் காட்டியபடி, வானெலிப் பெட்டியைப் பேசவைப்பது வேறெங்கோவிருந்து அஞ்சல் செய்யும் நிலையமே யாவது போல ஞானியின் உடலிற் பேசி யியங்கி வருங் கர்த்தன் மகேசுவரனுன கடவுளே என்பது கூறப்பட்டது.

1140. அகந்தை மமதை யிரண்டும் அடியோ டழிந்த பரமௌன நிலையின் போதையில் ஜீவன் முக்தர்களாகிய பெரி யோர்கள் செய்யும் செய்கைக ளெல்லாம், ஆழ்ந்த தூக்கத்தி லிருக்கும் குழந்தைகளை உட்காரவைத்து உணவூட்டும் பொழுது தூக்க நிலையிலேயே அவர்கள் சாப்பிடுவதைப் போன்றதே யாகும்.

விளக்கக் குறிப்பு:— அக் குழந்தைகள் தூக்க லஹரியில் தாம் சாப்பிடுகிருேம் என்ற கர்தருத்துவமோ, இன்ன ருசி என்ற போக்த்ருத்துவமோ அற்றவர்களாய், ஆனுல் உண்ணல் என்ற செய்கையை மட்டும் நடத்தி முடிப்பது போல, மோன லஹரியில் தூங்காது தூங்கும் ஞானிகளிடமும் கர்த்ருத்துவ போக்த்ருத்துவ மற்ற கர்மங்கள் காணப்படுகின்றன என்பது கருத்து. தான் உண்பதைக் குழந்தைகள் அறியாதது போலவே ஞானிகளும் தாங்கள் கர்மம் புரிவதை அறியார்.

குறிப்பு:— பாடல் (ப-22) இன் கருத்தையும் இங்கு வாசித்துணர்க.

1141. கூலிக்காக ஓர் சுமையைத் தலைமேல் தாங்கிச் செல்லும் ஒருவன் அதை இறக்குவதற்குக் குறிப்பிட்ட இடம் வரும் வரைத் தூக்கிச் சென்று (அவ்விடம் வந்ததும்) உடனே அச்சுமையைப் பெரு மகிழ்வோடு இறக்கிப் போடுவது போலவே, மிகச் சிறந்தோனாகிய ஞானியாம் ஜீவன்முக்தனும் தன் தேகமாகிய சுமையை அது முடியும் நேரம் வரும் வரையிற் சுமந்திருந்து (வந்தவுடன்) சந்தோஷமாக அதை இறக்கி (எறிந்து) விடுவான்.

விளக்கக் குறிப்பு:— சுமை யெடுப்போனுக்கு அது ஒரு சுமை மட்டுமாகுமே தவிர, அதன்மேல் 'நான், எனது' என்ற மானம் இருப்பதில்லை. அவ்வாறே ஞானிக்கு அவனுடல் ஓர் வெறும் சுமையே தவிர நான் என்றோ தன்னுடைய உடல் என்றோ அபிமான மில்லை யென்பதும், உடலில் வாழ்வதால் அடைய வேண்டிய பயனாகிய ஆன்ம ஞானம் அடையப்பட்டு விட்ட பிறகு, உண்ட பின் எச்சில் இலையைப் போல அவ்வுடம்பு அகற்றப் பட வேண்டியதே யென்பதும், உடலுக்கு வரும் மரணத்தால் ஞானிக்கு ஒரு நஷ்டமோ வருத்தமோ இல்லை என்பதுமே இப் பாடலாற் போதிக்கப் படுவனவே தவிர, ஞானிக்கு மரணம் வரை தேக பந்தம் உண்டென்றோ அல்லது அவ்வுடல் வாழ்வால் அவன் துன்புறுகிறா னென்றோ இப் பாடலுக்குப் பொருள் கொள்வது தவறாகும்.

ஸ்ரீ பகவான் தேக வாழ்வின் இறுதிக் காலத்தில் அன்பர்கள் "பகவானே இன்னும் பல்லாண்டுகள் தாங்கள் இவ்வுடலில் வாழ்ந்திருக்க வேண்டும்" என்று பிரார்த்தித்த போது

"கண்ட வன்தனைக் காயந் தனையனம்
உண்ட பின்னிலை யொப்ப விடுப்பனே"

என்ற தனது ஓர் பழைய செய்யுளை சுட்டி யருளினார். அது கொண்டு இவ் விளக்கக் குறிப்பு தரப்பட்டது.

1142. சிறு பூச்சி யொன்று ஆழமான கடலின் அலைகளிடை வீழ்ந்து இறக்குந் தருவாயி லிருக்கும் போது அது மீண்டும் தலைதூக்க முடியாதபடி அப்பெரு வெள்ளம் அமிழ்த்தி விடுவது போலவே, மெய்ஞ்ஞான மாகிய பூரண மோனப் பெரு வெள்ளம் பொங்கி யெழும்போது அதன் முன்னிலையில், ஊனுடலை நானென் றபிமானிக்கும் அற்ப அகந்தை சிறிதும் தலைதூக்க முடியாது என்க.

விளக்கக் குறிப்பு:— ஜீவன்முக்தர்களது அனுபவம் ஞான மோனப் பெருவெள்ளப் பெருக்கு என்பதும், அளவற்ற அதன் பெருக்கில்

அகந்தை எழவே முடியாது என்ற உறுதியும் அதனுல் மறுபிறவி (அகந்தையின் மறு எழுச்சி) யின்மையும் உபதேசிக்கப்பட்டது.

1143. 'நான் இது' என்னும் அகந்தை யறிவு அழிந்து, தன் ஆன்ம சொரூபச் சிறப்பை யுணர்ந்த மனம் (ஞானம்) வஞ்சக மயக்கமான உலகத் தோற்றத்தில் மயங்குமோ? (மயங்காது). அவ்வாறே (நாமரூபமற்று) ஆகாசம் போன்ற அற்புதமான சுத்தத் துரிய வெளியாக விளங்கும் ஞான நிலையில் பொய்யான துவிதக் காட்சிகள் சத்தியத்துவம் பெறுமோ? (உண்மை யாகா என்ற வாறு).

1144. பிறப் பிறப்புக்களுக் குள்ளாகித் துன்புறும் ஜீவன் ஒருவன் தான் பூரண ஆவலுடன் உழைத்து அடையத் தக்க பெருஞ்சிறப்பு யாதெனில், தன் நிஜான்ம சொரூபத்தை மறந்த தால் ஜீவனுகப் பிறப்பெடுக்கும் எழுச்சி (அகந்தை யெழுச்சி) அற்றுப் போகும்படி தன் ஆன்ம சொரூபத்தை யறிந்து, அகந்தை யடங்கப் பெற்று ஜீவன்முக்தி நிலை யடைவ தொன்றே யாகும்.

1145. கர்த்தன் (ஜீவன்) ஆகிய தமது கணவன் தான் கர்த்ருத்துவ நாசமாகிய அழிவை யடைந்த பிறகு (ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் எனப்படும்) மூவினைகளாகிய மனைவியர் மூவரும் ஒரே சமயத்தில் விதவைகள் ஆகின்றனரே தவிர, (ஆகாமியம், சஞ்சிதமாகிய) இருவர் மட்டும் விதவைகளாகி, அதாவது அழிந்து, (பிராரப்த மாகிய) ஒருத்தி மட்டும் சுமங் கலியாய் மிஞ்சி நின்று அவனுல் அனுபவிக்கப் படுவளோ? சொல்க!

விளக்கக் குறிப்பு:— வினைகளைச் செய்த கர்த்தா வாகிய ஜீவன் (அவனே அவற்றை யனுபவிக்க வேண்டிய போக்தாவு மாவதால் அவன்) ஆன்ம ஞானத்தால் அழிந்த பிறகு அந்த ஞானிக்கு மூவினைகளும் அற்றுப்போகுமே தவிர 'ஞானிக்குப் பிராரப்தம் மாத்திரம் மிஞ்சும்' என்று சில நூல்கள் கூறுவது வெறும் உபசாரமே தவிர உண்மையல்ல என்பது உபதேசம்.

பகவான் (23)

கணவன் இறந்ததும் அவனது மனைவியர் பலருள் யாரொருவரும் விதவையாகா திருக்க முடியாதது போலவே, (மூவினைகளையும் அனுபவிக்க வேண்டிய) கர்த்தா ஞானத்தால் நாசமானபின் அம்மூவினைகளுமே அந்த ஞானிக்கு இல்லாமற் போகின்றன.

விளக்கக் குறிப்பு:— இச்செய்யுளின் முழுவடிவ மான வெண்பா உள்ளது நாற்பது—அநுபந்தம் 33 ஆவது பாடலாக அமைக்கப் பட்டுள்ளது.

1146. பிராரப்த வினையாற் பிறந்த தாகிய இவ் வுடலுக்கு அந்தப் பிராரப்த வினை பலனைக் கொடுக்கத் தவறுது. ஆனுல் ஜடமாகிய உடலோடு (சித்தாகிய) அறிவாகிய தனக்கிருந்த சம்பந்தத்தை யறுத்துக் கொண்டு, தான் அவ் வுடலுக்கு வேருகத் தனிப்பட்டுள்ள ஜீவன் முக்தனே பிராரப்தப் பலனைக் கடந்தவன் ஆகின்றுன்.

விளக்கக் குறிப்பு.— ஸ்ரீ முருகனுர் கூறியது : ஜீவன் முக்தர்க்கும் பிராரப்தப் பலன் தப்பாது என்னும் விசிட்டாத்துவிதக் கொள்கை இதனுல் மறுக்கப் படுகிறது. எவ்வாறெனின், அவர் கிரந்தி பேதித்ததால் உடலறிவு இழந்தவ ராதலின், அவருக்கு உடல் வினை நிகழ்வது பரதிருஷ்டியிலேயே என்க.

1147. 'பிராரப்த அனுபவமே இவ் வுடலாக உண்டாகி யிருக்கின்றது' என்றுல் யாருக்கும் (ஞானியா யிருந்தாலும் சரி) பிராரப்தானுபவம் ஞானத்தால் அற்றுப் போகின்ற போது அவ் வுடலும் இறந்து பட வேண்டியதுதானே; (அவ்வாறின்றி ஞானி உடலோடு உலவுகின்றுனே, அது எப்படி?) என்று கேட்பாயா யின், அவனது தூல தேகம் விழாமல் இன்னும் இருக்கிறது என்று தோன்றுவது யாருக்கு? (அந்த ஞானிக்கா? அல்லது அதைப் பார்ப்பவர்களாகிய அஞ்ஞானிகளுக்கா?) நீயே நியாயப் படி சொல்க.

விளக்கக் குறிப்பு:— பிராரப்தானுபவம் அற்றவனுன ஞானி தனக்கொரு சரீரம் இருப்பதாகக் காண்பதில்லை. ஆகையால், பிராரப்தம் அற்ற போதே (ஞானமுற்ற போதே) **அவனது** நோக்கில் அவனுக்குச் சரீரம் போய் விட்டதே யாகும். அவனது சரீரம் இருப்பதாகத் தோன்றுவது **அவனது திருஷ்டியில் இல்லாதவர் களாகிய அஞ்ஞானிகளுக்கே** யல்லவா? ஆகையால் 'ஞானிக்குச் சரீரம் இன்னும் இருக்கிறது' என்று கூறும் அவர்கள் வார்த்தை பொருளற்ற தென்க. விழிப்புற்றவனுக்கு வெறுமையாய்ப் போகும் சொப்பன உடலுலகங்களைப் போல.

1148. மதுபான வெறியாற் குருடன் போலான ஒருவன் தன் உடல்மேல் ஆடையிருப்பதையோ நழுவியதையோ அறிவ தில்லை. அது போலவே, ஆகாயம் போன்ற (எல்லையற்றதும் நுட்ப மானதுமான) தன் சித் சொரூபத்தை யறிந்து அதிற் சொக்கிக்

கிடக்கும் ஞானியும் தனக்குச் சடமும் பொய்யுமான ஓர் உடல் இருக்கிற தென்றோ அல்லது அது மரித்தது என்றோ அறிவ தில்லை!

**பகவான் (24)**

*(பாடல் 1148ன் கருத்தை ஸ்ரீ பகவான் தமதருள் வாக்காற் கூறியது இப்பாடல்)*

கள்ளுண்ட வெறியாற் குருடன்போ லான ஒருவன் தன் உடல்மேல் அணிந்திருந்த ஆடையை (அது இருப்பதையோ நழுவியதையோ) அறியாதது போலவே, ஆன்மாவை யறிந்த ஞானி, நிலையற்றதான உடல் ஒன்று தன்னை வந்து சார்ந்தாலும், இருந்தாலும், இயங்கினாலும், இறந்தாலுங் கூட அதை யறிவ தில்லை.

விளக்கக் குறிப்பு:— 'சார்ந்தாலும், இருந்தாலும், இயங்கினாலும், இறந்தாலும்' என்று கூறியதனால் ஞானிக்கு உடலொன்று வந்திருந்தியங்கப் போகின்றது என்று கொள்ளக் கூடாது. பார்க்கும் அஞ்ஞானியின் திருஷ்டிக்கே அவ்வாறு தோன்றுகின்றதே தவிர ஞானிக்கு உடற்பிறப்பு, இயக்கம், நீக்கம் ஆகிய ஒன்றுமே உண்மையில் இல்லை என்பதே அறியப்பட வேண்டிய தாகும். பாகவதம் Chap XI - 13 - 36; "Day by Day" 9.1.46, 18.1.46,19.1.46, 20.1.46, 21.1.46 காண்க.

1149. அகந்தைக் குற்றம் நீங்கப் பெற்ற மேலான ஜீவன் முக்தரிடம் உயிரோடுகூடி உடல் இருந்துவருவதாகத் தோன்றும் தோற்றமானது, எரிந்து சாம்பலான செம்பட்டாடை யொன்று உண்மையில் இருப்பற்றதாயினும் நிஜமான ஆடை போன்றே தோன்றிக் கொண்டிருப்பதற்கு ஒப்பாகும்.

1150. பாம்பின் காலைப் பாம்பே யறிய முடிவது போல ஞானியின் மெய்யியல்பை ஞானி யொருவனே அறியமுடியும். ஆன்ம ஞான மற்ற வேறு யாராலும் ஞானியின் இயல்பு மாறு பாடாக (விபரீதமாக)த் தான் அறியப் படுமே தவிர உண்மை யாக வுள்ளபடி யறியப்படக் கூடிய தல்ல.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது : நூலறிவு மட்டும் பெற்ற ஒருவரது அறிவு மயக்க வறிவாய் உண்மையை யுள்ள படியன்றி மாறாகவே காணுமாதலின், ஞானியின் மெய்த் தன்மையை அன்னோர் தெளிந்தறிய வியலாது. ஜீவன் முக்தி யிலக்கணங் கூறும் நூல்களிலும்,

'ஞானியர் பித்தராகவும், பேயராகவும், பாலராகவும் காணப்படுவ' ரென்றும், 'உலக வுணர்வு ஒழியப் பெருத பாமரரால் அவரை மதிப்பிட வியலா' தென்றும் கூறப்பட்டிருப்பது காண்க.

1151. அகந்தையை யழித்து, ஆன்ம சொரூப மோனத்திலேயே நிலைத்த, சத்திய ஞானப் பேரானந்த சொரூபனுன ஞானியின், (தன்னைத் தவிர) இரண்டாவது பொருள் யாதொன்று மறியாத, அத்துவிதப் பிரம்மானுபவ மானது யாராலும் மனத்தால் எண்ணிப் பார்க்கக்கூட முடியாத தாகும்.

**பகவான் (25)**

*(பாடல் 1151 இன் கருத்தை ஸ்ரீ பகவான் தமதருள் வாக்காற் கூறிய இச்செய்யுள் உள்ளது நாற்பதின் 31 ஆவது பாடலாக அமைந்துள்ளது).*

*அகந்தையை யழித்து, 'நான் நானே' என்ற ஆன்ம சொரூப ஞான வெழுச்சி பெற்றுள்ள ஆத்மானந்தராம் ஞானிக்கு இனிச்செய்ய வேண்டியதோர் காரியம் என்ன விருக்கின்றது? (ஒன்று மில்லை). தன்னைத் தவிர அன்னியமாக யாதொரு பொருளு மிருப்பதாக அறியாத அத்துவித சொரூபராகிய அவரது நிலையை 'அது இப்படிப்பட்டது' என்று யார் எப்படி நினைக்க முடியும்?*

## சக. ஞானியர் திறன்

1152. ஞானியின் பெருமை சொல்லுக் கடங்காதது. அவனிருக்கும் நிலையை (ஸ்திதியை) அவனொருவனே யறிவான். ஞானி ஆகாயத்தையும் விடப் பெரிதும் பரந்தவன். மலையை விட உறுதியானவன். நீ தேகாத்ம புத்தியை யொழித்த பிறகுதான் ஞானியின் இவ் வருமை பெருமைகளை நன்குணர்ந்துகொள்ள முடியும். அவ்வாறே அறிந்துகொள்வாயாக.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனுர் கூறியது:— நமக்குத் தேகாத்ம புத்தியுள்ள வரை ஞானியும் நம்மைப் போல் ஓர் சரீரியாகவும் பந்தப்பட்டவனுகவுமே தோற்றுவதால் ஞானியின் பெருமையை உள்ளபடி யுணர முடியாது. நமக்கு இவ் வஞ்ஞானம் ஒழிந்த போது ஞானியின் அகண்ட நிலை விளங்கும் என்பதாம்.

1153. தனக்கு யாதொரு வடிவமு மில்லாமலேயே சகல நாம ரூப உலகாதிகளையும் இருப்புள்ளன போல விளக்கி வைக்கும் ஆன்ம சொரூபமான மெய்ச்சுடரை (சத்திய ஜோதியை) "அது நான் தான் (அன்னியமல்ல)" என்றவாறு யாதொரு மறைப்பு மின்றி விளங்கக் கண்டறிந்த ஞானி, பிரம்ம-விஷ்ணு-சிவ லோகங்கள் யாவற்றிற்கும் இறைவனாகும் என்றறிக.

1154. வேறுபா டற்றதும், மோனமயமானதுமான ஆன்ம சொரூப நிரதிசயானந்த மகா சமுத்திரத்தின் ஆழத்திற் படிந்து அச் சொரூபத் துரிய நிலையிலேயே தூங்காது தூங்கி (சொக்கி) யிருக்கும் ஞானி, பிறகு இவ் வுலகில் எக்காரணத்தைப் பற்றியும் தன் சித்தம் திரிபுடிகளின் மயக்க மாகிற பாழில் இறங்கித் துன் புறமாட்டான்.

1155. மெய்ந் நனவாகிய ஆன்ம சொரூபானுபவத்தைக் தன்மறதியால் (பிரமாதத்தால்) நழுவ விட்டு, அதனால் மாய மாய்த் தோன்றி ஓர் கனவாகவே காணப்படும் இவ் வுலகையும் அதனை யுணரும் புலனுணர் வாகிய அகந்தை வாழ்வையுமே நனவாகக் கருதி அதையே விரும்பும் (புலனறிவு படைத்த) புலவர்கள் வேறு வகையினர் (இலௌகீக, அஞ்ஞான வகை யினர்) ஆகும். அவ்வாறின்றி, தன்னை (ஆன்மாவை) அறிந்து தெளிந்திருக்கும் மெய்யறிஞர்கள் வேறு வகையினராகும்.

விளக்கக் குறிப்பு:— புல னறிவின் வன்மை பெற்றோன் புலவன்! முதல் வகையினன் அஞ்ஞானி; இரண்டாம் வகையின னன புலவன் ஞானி யாகும்.

1156. ஒருவன் எவ்வளவுதான் துருவித் துருவி மெய்ஞ் ஞான நூல்களை யாராய்ந்தாலும், அவை "உன்னை உன்னுள் ளேயே நன்றாக ஆராய்ந்து (நீ யார் என்று) அறி" என்று கூறு வதோடுதான் நிற்கும். ஒருவன் கண்ணாடியைப் பார்ப்பதன் சரியான பலன் என்ன? அதனுள் தெரியும் பிம்பத்தைக் கொண்டு தன் நிஜ முகத்தைப் பற்றிய (விளக்கத்தை) அழகை அறிந்து ஆனந்திக்கவே யல்லவா?

விளக்கக் குறிப்பு:— நாம் கண்ணாடியைப் பார்த்தவுடன் அதிற் காணப்படும் பிரதிபிம்ப உதவியால் நம் நிஜமுகத்தை யலங் கரிப்பதில்தான் ஈடுபடவேண்டும். கண்ணாடியைப் பார்ப்பதன் பயன் அவ்வளவே யன்றோ? தவிர, அப் பிம்பத்தையே வெறிதே பார்த்துக்

கொண்டு காலங் கழிப்பதோ அல்லது கண்ணுடியைச் சிலாகிப்பதோ பயனல்ல. அவ்வாறே, நூல்களைப் பார்த்தவுடன் அந் நூல்கள் "நீ பிரம்மம்" என்றறிவித்ததும் அந் நூலுண்மையைத் தன் னனுபவத்தால் மெய்யினக் கண்டு தெளிவதற்காகத் தன்னைத் தன்னுள் ஆராய்வதில் ஈடுபட வேண்டும். அதுவே நூற் பயனுகும். ஸ்ரீ பகவான் "நான் யார்?" என்னும் நூலிற் கூறும், எந்நூலிலும் முக்தியடைவதற்கு ...... ....... நூல்களில் விசாரிப்பது வீணே" என்று கூறியிருப்பது காண்க.

தன்னை யறியச் சாதனையில் இறங்கிய பின் நூல்களின் ஆராய்ச்சி பயனற்றதே. நம்மை விசார வழியிற் றிருப்பி விடுவதற்கு மட்டுமே சாஸ்திரங்கள் பயன்படுமே தவிர விசார சாதனைக்கு (நிதித்யாசனத்திற்கு) அவை பயன்படா. இதையே ஸ்ரீ பகவான் தமது நூலில் "இராமன் தன்னை இராம னென் றறியக் கண்ணுடி வேண்டுமோ? ..... கற்றவை யாவும் ஒரு காலத்தில் மறக்க வேண்டியே வரும்" என்று கூறினர்.

1157. ஆன்மா வாகிய தன்னையே அறிய வேண்டிய பொருளாக விளக்கிக் கூறும் மெய்ஞ்ஞான சாஸ்திரங்களாகிய முகம்பார்க்குங் கண்ணுடியை யடைந்தவர்களுள், சூத்திரங் களை (பிரம்ம சூத்திரம் முதலிய வற்றையும்) அவைகளுக்கு எழுதப்பட்டுள்ள பெரிய பாஷியங்களையுமே படித்துக் கொண் டிருப்பவர் எண்ணிக்கையிற் பல ராவர். ஆனல் அச் சாஸ் திரங் கூறியபடி தம் ஆன்ம இயல்பை விசாரித் தறிந்து மோக்ஷ மடைபவர் மிகவும் சிலரே யாவர்.

1158. அறிந்து கூறுமிடத்து, ஆன்ம ஞானம் பெற்ற மெய்ஞ்ஞானிகள் (பெரியோர்கள்) வேறு; அவ் வான்ம ஞானத் தைப் பற்றிக் கூறும் சாஸ்திரங்கள் மட்டும் அறிந்திருக்கும் விசேஷ புத்தித் திறம் பெற்ற விஞ்ஞானிகள் (கலைஞர்கள், பண்டிதர்கள்) வேறு. ஆகையால், அஞ்ஞான பந்தம் நீங்கி வீடு பெற விரும்புவோர் மேற்கூறிய இரண்டாவது வகையின ரான சாஸ்திர நிபுணர்களை விட்டு விலகிப் பரமான்ம நிஷ்டை யில் நிலை பெற்ற மெய்ஞ்ஞானிகளை யடைவதே தக்கதாம்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனர் கூறியது : ஆன்ம நிஷ்டரை யடைந்தா லொழிய அனுபவ ஞானங் கை கூடாமையின் இவ்வாறு கூறினர். கேவல விஞ்ஞானத்தாற் கிடைக்கப் பெறும் பலன் உலகிற் புகழும் பூஜையுமே யொழிய வேறின்றும்.

1159. எந்த மெய்ப்பொருள் தனதருட் சக்தியால் இப் பிரபஞ்ச மனைத்தையுந் தாங்கி வருகிறதோ, அப் பரம்பொருளை

யுணர்ந்த ஞானி யொருவன் அருளும் சொல் (உபதேச மொழி) அஞ்ஞான விருளின் வசப்பட்டு நெடுங்காலம் மயங்கிக் கிடக்கும் ஜீவர்களுக்கு என்றென்றும் உய்வு பெறுதற் கேற்ற ஒரு கொழு கொம்பாக (உறுதுணையாக) அமையும் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— சென்ற 1158 ஆவது பாடலிற் சாஸ்திர விற்பன்னர்களை விட்டு, சமாதி நிஷ்டர்களையே சேர வேண்டும் என்று கூறியதின் காரணத்தை இப் பாடல் விளக்குகின்றது. சாஸ்திர மேதைகளின் வியாக்கியானங்களையும் பிரசங்கங்களையும் விட, மெய்ப்பொருளை யுணர்ந்த ஞானியொருவன் (அவன் படிப்பறி வற்றவனாயினும்) சொல்லும் சொற்களிற் பிறவுயிர்களின் அஞ்ஞான விருளையொழிக்கும் அதிகாரமுடைய ஆன்ம ஒளிச் சக்தி நிரம்பியுள்ள காரணத்தால் சாஸ்திர மேதைகளை விட சமாதி நிஷ்டர் களையே நாம் விரும்பியணுக வேண்டும் என்றுபதேசிக்கப்பட்டது.

## ௫0. ஞானிகள் கன்மத் திறன்

1160. காரியங்கள் ஏதும் செய்யாம லிருப்பதுதான் ஞான முடிவு என்று தீர்மானிப்பா யாகில், ஒருவன் குஷ்டநோ யுற்று அதனால் யாதொரு காரியமும் செய்ய வியலா திருக்கும் நிலையுங் கூட ஞான முடிபுற்ற நிலை என்றல்லவா ஆகிவிடும்! (அது தவ றுதலால்) செய்யுங் கருமங்களின் பலனில் விருப்பு வெறுப்பு இரண்டு மற்றிருப்பதுடன் உள்ளத்தில் அச் செயல்களின் கண் ('நான் செய்கிறேன்' என்றவாறு) யாதொரு கர்த்ருத்துவமு மற்றிருக்கும் உயர் நிலையே சரியான ஞான நிலை என்றறிக.

விளக்கக் குறிப்பு:— 'கர்மங்களை நான் செய்ய வேண்டும் (அல்லது) நான் விட வேண்டும்' என்ற வடிவில் எழும் கர்த்ருத்துவம் அற்றிருப்பதே மெய்ஞ்ஞான நிலை. நிஷ்காமிய கர்மம் செய்வது என்பது உண்மையில் கர்மங்களில் நிஷ்கர்த்ருத்துவ நிலையே என்றறிய வேண்டும்.

1161. எண்ண மற்ற பேரழகான ஆன்ம நிலையில் வாழும் ஞானியர்க்கு சிந்திக்க வேண்டியதாக எந்தவோ ரெண்ணமு மில்லை. ஆன்மாவில் அவர்கள் அடைவது மோனனுபவம் ஒன்றே: ஏனெனில் அப் பரம நிலையில் தனக்கு அன்னியமாக ஒரு பொருளு மிருப்ப தில்லை, அடையப்படுவது மில்லை.

1162. வெறும் இருப்பே ('இருக்கிறேன்' என்னும் உள்ள தன்மையே -- உள் + மை = உண்மையே) தன் நிஜ

இயல்பு என்றறிந்து, எவ்வித சிந்தையு மற்றுக் கம்பீரமான தன் ஆன்ம நிலை கண்ட ஞானிகள், மிகப் பெரிய பற்பல காரியங் களில் ஈடுபட்டுச் செயல் புரிந்தாலும் (தான் 'செய்பவ னல்ல, இருப்பவனே' என்ற அறிவின் திடத்தால்) அச் செய்கை களுக்குத் தாமே கர்த்தாவாக எண்ணிக் கலக்க மடைய மாட் டார்கள்; அவர்கள் அகர்த்தரே, கர்த்ருத்துவ மற்றவரே என்றறிக.

1163. அறமாம் தவம் (ஸ்வதர்மமான ஆன்ம நிஷ்டை) முற்றி, அதனுல் தம் இயல்பான சத்திய ஆன்ம சொரூபத்தில் அதீத ஸஹஜ நிலை பெற்ற ஜீவன் முக்தர்களாகிய பெரியோர்கள் (தேகத்தின் பிராரப்தப்படி அமையும்) புற வாழ்வில் நியம நெறிகளை வழுவாது நடத்திக் கொண்டிருப்பது எவ்வாறு அழகாக விருக்குமோ அவ்வாறே அவர்கள் அக் கர்ம நியமங்களை அறவே விட்டிருப்பதும் ஓர் அழகு வாய்ந்ததாகவே யிருக்கும்.

குறிப்பு:— ஜீவன் முக்தர்கள் கர்மங்களைச் செய்தாலும் நீத்தாலும் சிறப்பே யன்றித் தோஷமில்லை என்பது கருத்து.

1164. (எல்லைக்குட்பட்ட இவ்வுடல் நானல்ல என்று அறிந்த தால்) சரீரமற்றவனுகி எல்லையற்று விளங்கும் ஆன்ம சொரூபி யாகிய ஜீவன் முக்தப் பெரியோன் (பார்ப்பவர் கண்களுக்கு) உலகில் ஒரு சரீரத்தையுடையவனைப் போலவே சஞ்சரித்து வருவது எத்தகையதென்ருல், மூவுலகத்தையும் தம் வயப்படுத்தித் தம் மூன்றே காலடிகளால் அளந்த திருமாலைப் போல, ஆன்மாகாயமாகிய அருள் வெற்ற வெளியானது இரு கால்கள் கொண்டு உலவி வருவதேயாகும்.

1165. "*கருவிகரணங்களின் கூட்டுத் தொகுதியாகிய ஒரு (தனி) வியத்தியே சகல காரியங்களையும் செய்யும் கர்த்தா வாகும். (ஆனுல் நானே இவை யல்ல வாதலால் அகர்த்தா)" என் றறிந்து விலக்கி, தொழில் புரியும் அவைகளோடு தனக்கு எவ்வித சம்பந்தமு மற்றிருக்கும் ஞானி எவ்வளவு கர்மங்களைச் செய்வ தாகப் பிறர் திருஷ்டிக்குத் தோன்றினுலும் அவன் உண்மையில் ஏதும் செய்யாதவனே யாகும்.

*மெய், வாய் (ருசியறியும் நாக்கு), கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாக்கு (பேசும் காரியம்), பாணி, பாதம்,

பாயு, உபஸ்தம் என்னும் கர்மேந்திரியங்கள் ஐந்தும், ஆகிய பத்தும் கருவிக ளாகும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இந் நான்கும் கரணங்க ளாகும்.

குறிப்பு:—"சேய்மையுளம் சென்று....." என வரும் (ப-22) ஆவது பாடலேயும் இங்கு உடன் வாசித் துணர்க.

1166. *(பிராரப்தப்படித்)* தாமாகவே தமக்கு வந்து கிடைப் பவற்றைக் கொண்டு மகிழ்ச்சி யடைபவர்களாய், இரட்டைகள் யாவற்றையும் கடந்தவர்களாய், பொருமை யற்றவர்களாய், வெற்றி தோல்விகளில் எப்போதும் சாந்த சமநிலே யுற்றவர்களா யுள்ள ஞானிகள் *(அவர்கள் செய்வதாய்க் காணப்படும்)* கர்மங் களாற் பந்தப்பட மாட்டார்கள்.

**பகவான் (26)**

*(பாடல் 1166 ஆகிய வெண்பாவைக் கண்ணுற்று ஸ்ரீ பகவான் அதன் பொருள் முழுவதையும் ஒரே குறள் வெண்பாவில் அடக்கி யாத்தருளியது இச்செய்யுள்.)*

கிடைத்த வற்றில் திருப்தி யுற்றவனாய், பொருமை யற்றவ னாய், இரட்டைகளேக் கடந்தவனாய் உள்ள சமாதிஸ்தனான ஞானி (கர்மங்களேப்) புரிந்தாலும் பந்த மற்றவனே என் றறிக.

## ௫௧. தன்மயர் சால்புத் திறன்

1167. வெளியிற் காணப்படும் அடையாளங்களேக் கொண்டு ஞானி யொருவனே அறிய முயலும் மக்கள் அவனிடம் ஒன்றுங் காணுதவராய் வெறுமனே திரும்புவர். ஏனெனில் தம் முகத் திலுள்ள வெறும் ஊனக் கண்களாற் கண்டறிய முடியாத ஞானியின் உள்ளத் தொளியை அம் மக்கள் உணர முடியாதவ ராகும்.

விளக்கக் குறிப்பு:— குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக் கொள்ளும் விவேகிகளாகச் சிலர் ஞானிகளேத் தரிசித்துப் புண்ணிய லாப மடைய வெண்ணிச் சென்று, ஆனல் தமது அபக்குவ மனத்தால் ஞானியின் புறத் தோற்றத்தை மட்டுமே கண்டு, அது தாம் எதிர்பார்த்த விசித்திர விசேஷங்க ளின்றிச் சாமானியமா யிருப்பதால் ஏமாந்து வெறுங் கையோடு திரும்புவது மட்டு மின்றி, சில சமயம் ஞானியைப் பழித்து அபசாரப் பாப மூட்டையுடனும் திரும்புவ துண்டன்ருே? அவர்களுக்கு அறிவுறுத்துவதே இப் பாடல்.

1168. சித்திகளை மட்டும் அளவையாகக் கொண்டு அறிந்து கொள்ளப்படும் ஒரு ஜீவன்முக்தரின் மகிமை உண்மைக்கு மாறுகக் குறைத்தே யுணரப்படும். ஜீவன் முக்தர்கள் சித்தி களோடு கூடியோ, அல்லது சித்திகள் செய்யாதவர்களாகவோ (இருவிதமும்) விளங்குவர். ஆகையால், சித்திகளைக் கண்டு ஆச்சரியப்படும் பாமர மக்கள் ஜீவன் முக்தரது உண்மை மகி மையை அறியார் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— உலகத்திலேயே மிகச்சிறந்த மேதை யென்று பாராட்டி நோபில் பரிசு வழங்கப் பெற்ற ஒருவருக்கு 6 வயதுள்ள ஒரு மகன் இருந்தான். தன் கணித பாடத்திற் கஷ்டமான 9 ஆவது வாய்ப்பாடு தன் தந்தைக்கு மனப்பாடமோ என்று வினவினன். அவர் அவ் வாய்ப்பாட்டை மனப்பாடமாய் ஒப்பிப்பதைக் கேட்ட அவன் மிகுந்த ஆச்சரியப் பட்டவனய், "ஆகா! அப்பாவின் அறிவுத் திறமை எவ்வளவு பார்! அதனல்தான் அப்பாவுக்கு நோபில் பரிசு கொடுத்திருக்கிறுர்கள்! ஆம், அது தகுந்ததே!" என்று புகழ்ந்து மகிழ்ந்தான்! சித்திகளைக் கொண்டு ஞானியரைப் புகழும் மக்கள் கூட்டத்தின் மதிப்புரை இச் சிறுவனின் கூற்றைப் போன்றதே.

1169. மனித அறிவுக் கெட்டாது (அதீத ஞான நிலையில்) வெகு தூரத்தில் இருந்து விளங்குவதான ஜீவன்முக்தரின் உண்மைப் பெருமையைத் தகுதி சிறிதுமற்ற தம் அற்ப மயக்கப் புத்தியைக் கொண்டு கண்டு விட்டதாகக் கருதிக் கொண்டு, அந்த ஞானிகளிடம் பற்பல சித்திகளைக் கற்பித்து, அவர்களது மாகோன்னத உண்மை மகிமையைச் சிறுமைப் படுத்துகின்ற பித்தர்கள் நிறைந்ததே இவ் வுலகம்!

1170. பரம் பொருளாகவே விளங்கும் பரிபூரண ஞானி களுக்கு அவர்களிடம் காணப்படும் சித்திகளைக் கொண்டு மகிமை கூறுவதானது, வீட்டின் கூறையிலுள்ள தோர் சிறு துவாரத்தின் வழியே நுழைந்து வரும் சூரிய வொளியின் ஓர் சிறு கதிரின் ஒளிச்சிறப்பைப் புகழ்வதனலேயே அளப்பரிய ஒளி வடிவினனுன சூரியனின் மகிமையை முற்றும் புகழ்ந்து விட்ட தாகக் கருதுவதற்குச் சமான மாகும் என் றறிக.

1171. இவ்வுடல் உள்பட உலகமெல்லாம் தாஞகிய சத்சித் சொரூப ஆன்மாவே யென்று அனுபவமாய் அறிந்த ஞானி இவ் வுடலுலகத்தோடு ஒன்ருகச் சேர்ந்து வாழ்ந்து வருவதால், இவ் வுலகில் உடலால் தன்னைப் பந்தப்பட்டவன் போலக் காட்டி, பார்ப்போரை மயங்க வைப்பான்! ஆதலால் அந்த ஜீவன் முக்தனது மேல்தோற்றத்தை மட்டும் பார்த்து யாரால் அவனை உள்ளபடி அறிந்து கொள்ள முடியும்? (யாராலுமாகாது என்பது கருத்து).

விளக்கக் குறிப்பு:— ".......அன்னிய மொன்றும் அறியார் அவர் நிலைமை இன்னதென் றுன்ன லெவன்?" என வரும் உள்ளது நாற்பதின் 31 ஆவது பாடலின் கருத்து தன்மயர் சால்பைத் தக்கவாறு கூறுவது காண்க.

## ரு௨. மவுன மாட்சித் திறன்

1172. மிகத் தூய்மை யானதாய், மெய்ஞ்ஞானச் சிறப்பை யருள வல்லதாய், ஒலி வடிவிற் பொருந்தும் எல்லா எழுத்துக்களுக்கும் மூல மானதாய், ஒப்பற்ற எழுத்தொன்று தாஞகவே ஏப்போதும் உள்ளத்தில் விளங்கிக்கொண்டிருக் கின்றது! அதை யாரால் எழுத்து வடிவில் எழுத முடியும்? (முடியா தென்க).

விளக்கக் குறிப்பு:— ஒரு முறை அன்ப ரொருவர் ஸ்ரீ பகவானிடம் தன் நோட்டுப் புத்தகத்தைக் கொடுத்து, அதில் ஸ்ரீ பகவானது கரத்தால் ஏதேனும் ஓர் எழுத்து எழுதித் தருமாறு வேண்டினர். ஸ்ரீ பகவான் இச் செய்யுளின் பிற்பகுதியாகிய குறட் பா ஒன்றை அதில் எழுதித் தந்தனர். பிறகு இக் குறளை ஸ்ரீ பகவானே ஓர் வெண்பா வாக்கினர். அப் பாடல் வருமாறு:—

அக்கரம தோரெழுத் தாகுமிப் புத்தகத்தோர்
அக்கரமாம் அஃதெழுத ஆசித்தாய் — அக்கரமாம்
ஓரெழுத்தென் றுந்தாஞய் உள்ளத் தொளிர்வதாம்
ஆரெழுத வல்லா ரதை?

இப் பாடலின் பொருள்:—எழுத்து என்ருல் ஒரே எழுத்துத்தான் உண்டு. அந்த ஓரெழுத்தை இந்தப் புத்தகத்தில் எழுதும்படி நீ யாசிக்கின்ருய். அழிவற்ற மெய்ப் பொருளான அவ் வோர் எழுத்து உள்ளத்தில் எப்பொழுதும் தாஞகவே (தான் ஆகவே 'நான்' என்னும் சித்ரூப மாகவே) விளங்கிக் கொண்டிருக்கின்றது. ஆகையால் அதை யாரால் எழுத்து வடிவில் எழுத முடியும்? (முடியாதென்க)

இவ் வெண்பாவில் முதற் பகுதி அவ் வன்பரை நோக்கிக் கூறுவதாக அமைந்திருப்பதால் இப்பாடலுக்குக் காரணமாக நிகழ்ந்த சம்பவத்தை நாம் அறியத் தருகின்றது. ஸ்ரீ பகவான் தாம் முதலில் எழுதிய குறள் வெண்பாவைப் பிறகு ஆரியத்திலும், தெலுங்கிலும் மொழி பெயர்த்தனர். இக் குறளின் உபதேசத்தைக் குறிப் பெடுக்குங்கால் ஸ்ரீ முருகனார் இதைப் பின்னிரண்டடிகளாக வைத்து எழுதிய செய்யுளே குருவாசகக் கோவையின் *1172*-ஆவது பாட லாயிற்று.

இங்கு கூறப்பட்ட 'ஓரெழுத்து' என்பது ஆன்மசொரூபமே. ஞான வரம்பாகிய மோனமே அதன் உண்மை வடிவம். 'நான் நான்' என்னும் ஆன்மவுணர்வு ஒலி ஒளிகளைக் கடந்து அப்பால் விளங்குவது. சப்த மின்றி ஸ்புரண மாத்திரமாய் விளங்குவதால் **அது ஒலி கடந்தது;** அதனால் மொழிகடந்ததாகும். மேலும் தூல சூக்கும இயல்புள்ள சகல ஒளிகட்கும் (பொருள் கட்கும்) அப்பாற்பட்ட ஸ்வப்பிரகாச ஞான (பிரஜ்ஞை) சொரூபமாகையால் **அது ஒளிகடந்த தாகும்;** அதனால் ஒளியாம் எழுத்து வடிவமும் அதற்கில்லை. 'நான்' என்னும் அந்தப் பரம் பொருளின் மெய்யுணர்வின் விளக்கமாகப் பிறகு எழுந்த அதன் ஒலி வடிவமே 'ஓம்' என்னும் பிரணவ மாகும். ஆனால் 'நான்' என்னும் அதுவோ இவ் ஓங்கார ஒலிக்குப் பொருளாக விளங்குவ தாகையால், ஸ்ரீபகவான் அதை, "ஓங்காரப் பொருள் ஒப்புயர் வில்லோய் உனையார் அறிவார் அருணாசலா" என்றும், 'ஓம்' என்னும் ஒலிக்கும் முற்பட்ட அதன் இயற்பெயர் "அஹம் (நான்)" என்னும் ஒலியொளி கடந்த உணர்வே என்றும் கூறியுள்ளனர். இந் நூலின் 712. 713, 714, 715 செய்யுட்களையும் இங்கு வாசித் துணர்க.

ஆகவே ஆன்மாவாகிய முதற் பொருள் தனக்கு அன்னியமாக யாதொன்று மில்லாத ஏக மாகையால் அதை எழுத வல்லவர் யார், எங்கு, எவ்வாறு, இருக்க முடியும் என்று கேட்கின்றார் ஸ்ரீ பகவான். ஆகையால் தானாகவே இதயத்தில் விளங்கும் அதை உள்ளத்தே யுள்ளபடி இருந்துணர்வதைத் தவிர, எண்ண, சொல்ல, எழுத எவ்விதத்தும் முடியாது என்பதே நோட்டுப் புத்தகத்தைக் கொடுத்த அவ்வன்பர் மூலம் உலகத்திற்கு ஸ்ரீ பகவா னருளிய உபதேச மாகும்.

1173. *(உய்த்துணர்வார்க்கு)* மிகவும் தெளிவுள்ள தாகவும், சத்திய மானதாகவும், எல்லா மொழிகட்கும் மூலமான தாகவும் உள்ள ஓர் தெய்வீகபாஷை
எது என்று கேட்பீர்களாயின், ஆலடி நிழலில் பரமான்ம ஞானமே வடிவாய் எழுந்தருளிய ஆதிகுரு ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி உபதேசித்த பரமோனமே அந்த ஒரு மொழி யாகும்.

1174. பற்பலவான உரை நூல்களாலும் விளக்க முடியாத பெருமை யுடைய அந்தப் பிரம்ம சொரூப மானது, அடைவதற்

கரிய சற்குருவின் மோனத்தால் மட்டுமே விளக்கப் படுவதால் அந்த மகா குருவின் மௌன வியாக்கியானமே மிகச் சிறந்த உரையாகும்.

1175. மிகவும் உண்மை போல் தோன்றும் இவ் வுடலுல காதிகளின் இருப்புக்கு, மரணம் வரை இருந்து வரும் தேகாத்ம புத்தி (ஆலய விஞ்ஞானம்) ஆகிய மனமே அடிப்படை யாகும். இந்த மனத்தின் உற்பத்திக்கும் லயத்திற்கும் இடம் தந்து கொண்டு அதற்கு அடித்தளமாயிருந்து வருவது ஆதி முதற் பொருளாகிய மோனமேயாகும்.

விளக்கக் குறிப்பு:— கணிகம் - கணத்தில் தோன்றி, கணத்தில் மறையும் உலகத்துக்கு ஆகுபெயர் ; ஆலய விஞ்ஞானம்-உடல் மரிக்கும் வரை நீடிக்கும் உடலுணர்வு, அதாவது தேகாத்ம புத்தியாகிய மனம்.

உலகத் தோற்றத்திற்கு அடித்தளம் மன அறிவு; மனஅறிவிற்கு அடித்தளம் மோன வுணர் வாகிய ஆன்மா. ஆதலால் அழிவற்ற மோனமே சகல அறிவுகளுக்கும் மூலநிலைய மாகும் என்பது கருத்து.

1176. தோன்றி யொடுங்கும் சுபாவமுடைய அற்பப்புத்தி யின் கூர்மையைக் கொண்டு (பரம்பொருள் என்று ஒன்று) உண்டென்றும் இல்லை யென்றும், அதற்கு உருவம் உண்டென் றும் இல்லையென்றும், அது அத்துவித மென்றும் துவித மென்றும், வாத மிட்டுக்கொண் டிருப்பதல்ல மதம்! அவ்வாறு வாதமிடாது, என்றும் அழியா அநுபூதியான, சச்சிதானந்த விளக்கமாகிய மௌனமே மெய்யான மதமாகும் (என்றறிக).

குறிப்பு:— உள்ளது நாற்பதின் 34ஆவது பாடலையும் இங்கு ஒத்து நோக்கி யுணர்க.

1177. சிறப்பிக்கப்படுவதும், அதீத மானதும், மூலமத மானது மான மோன அருள்வாழ்வு உள்ளத்திற் பற்றிக்கொண்டு ஆன்மபோதம் எழாத வரையில் ஜாதிமத மயக்கம் நிறைந்த ஆயிரக்கணக்கான சடங்குகளாலும் பேத புத்தியாகிய அஞ் ஞானம் கொஞ்ச மேனும் நீங்குமோ? (நீங்காது என்றவாறு)

விளக்கக் குறிப்பு:— ஏற்றத் தாழ்வுகளாகிய பேதங்களாற் சமத்துவ மற்ற நிலை, மோனமாகிய ஆன்ம நிஷ்டையில் தான் நீங்குமே தவிர, மற்ற எவ்வித மதச் சம்பிரதாயங்களாலும் அவற்றிற் செய்யப்படும் சீர்திருத்தங்களாலும் நீங்கவே நீங்காது என்பதாம்.

1178. பெரும் சமுத்திரத்தை நோக்கி ஓடி அதிற் சங்கம மாகும் பற்பலவான நதிகளைப் போலவே, சிதானந்த வெள்ளம் பொங்கும் சிவக் கடலிற் கலப்பதையே நோக்கமாகக் கொண்டு செல்லும் மதங்கள் ஒவ்வொன்றும் முடிவில் சிவ மயமே யாகு மாதலால், மதங்களின் நோக்கத்திற் பேதத்திற்கு இடமில்லை என்க.

1179. "மதங்களிற் காணப்படும் சிற்சில கொள்கை களிலே பேதங்களைக் காணும் 'நான்' யார்?" என்று (சதா தன்னையே கவனிக்கும்) ஆத்ம விசார சாதனையையே பற்றிக் கொண்டு, தன்னுள் ஒருவன் ஆழ்ந்து முழுகுவா ஞயின் அப் போது (என்றும் யாதொரு பேதமு மின்றி விளங்கிக் கொண்டி ருக்கும்) ஆன்மாவாகிய தன்னைத் தவிர 'நான்' என்றொரு ஜீவத்துவத் தனிவியக்தி இருப்பற் றழிவதால், அந்த ஆன்மானு பூதியாகிய மோன நிலையில் பேத வுணர்வு இருக்க முடியுமோ? (முடியாது என்ற வாறு).

1180. மேலே கூறப்பட்ட அந்த மஹாமௌன நிலையில் பேத வுணர்வு இராது என்னும் போது (அவ் விரட்டையில்) மற்றொன்றான அபேத வுணர்ச்சி மட்டும் அங்கு இருக்குமோ என்று கேட்பீராயின், மெய்ஞ்ஞானிகள் கூறும் அபேதானுபவம் என்பது யாதெனின் அந்த பேத வுணர்ச்சியின் நீக்கத்தை மட்டும் குறிப்பதே யாகும். (அபேத வுணர்ச்சி என்றவாறு மற்றோ ருணர்ச்சி அங்கு உண்டென்பது கருத் தல்ல. ஏனெனில் அங்கு இருபொருள்கள் இல்லாத ஏகநிலை யாகையால் என்க). 931, 932 கு.கோவைப் பார்க்கவும்.

1181. நன்கு ஆராய்வோமே யானல், குறைபாட்டால் விளையும் விஞக்களும் அவற்றை முன்னிட்டெழும் விடைகளும் துவித நிலையில் நிலவும் பாஷைகளில்தான் உண்டே தவிர (உண்மை போல் விளங்குமே தவிர), மௌனம் எனப்படும் அத்வைதமாம் ஞான மொழியினிடத்தில் அவை சிறிதும் பொருந்தா வென்க.

குறிப்பு:—இவ் வெண்பா பஞ்ச தசி (2-39) யினின்றும் மொழி பெயர்க்கப் பட்ட ஒரு பாடல்.

**பகவான் (27)**

வினு விடைகள் என்பதெல்லாம் இங்குள்ள துவித பாஷையில் தான் பொருந்தும். அத்துவித பாஷையாகிய மோனத்தில் அவை யில்லை!

குறிப்பு:—பாடல் 1181இன் கருத்தை ஒரு குறட் பாவிற் சுருக்கி ஸ்ரீ பகவான் யாத்ததே இச் செய்யுள்.

1182. ஆராயு மிடத்து, தக்க குரு சிஷ்யர்களிடையே மெய்ந்நிலை யடைவிக்கத் தக்க அதிநுட்ப ஞான விளக்கங்களைப் புகட்டவும் அறியவும் அவர்தம்முள் இடைவிடாது செய்யப் படும் உத்தம சம்வாதம் எது வென்றால், எந் நிலையை யுற்று நின்றால் இருவர் மனமும் ஒன்றிலொன்று கலந்து அறிந்து கொள்ள முடியுமோ அந் நிலையாகிய (மனமற்ற) மோன நிலையை யடைந்து நிற்பதே யாகும்.

விளக்கக் குறிப்பு:— மோன மொழியால் உணர்த்தும் சற்குருவின் ஞான போதனையை விளங்கிக் கொள்ள சீடனும் எண்ணங்கள் ஓய்ந்து மனோமௌன முற்று நிற்க வேண்டும் என்பதும், அம் மோன நிலையில்தான் பிரம்ம விளக்கம் தெளிவாகும் என்பதும் உபதேசம். 'ஸ்ரீ மஹரிஷி வாய்மொழி' யின் இரண்டாவது அத்தியாயத்தில், "மௌனம் என்றால் எப்போதும் ஓயாமற் கோஷிப்பது; அதுதான் மிகச் சிறந்த பாஷை. அது அருள்வாக்கின் இடைவிடாப் பெருக்கு. வார்த்தைகள் இந்த மௌனபாஷையைத் தடுக்கின்றன. சொற் பிரசங்கங்கள் மௌனத்தைப்போல் அவ்வளவு தெளிவாக இரா." எனக் கூறுவது காண்க.

## ருங. சுத்த மவுனத் திறன்

1183. பேரின்பத்திற்காகச் செய்யத் தக்க தவமான விசாரத் தால் இதயத்தே ஒருவன் சாக்ஷாத்கரிக்கும் ஆன்மாவின் சொரூபம் யாதெனின், பேத மயக்கப் பிழையறிவாகிய அறியா மையை ('நான் தேகம்' என்ற பொய்யறிவை) நீக்கிவிட்டு எய்தும் மோன நிலையே யாகும்.

குறிப்பு:— விசாரப் பயனாகிய ஆன்மாவின் சொரூபம் மோக அறிவு நீங்கிய மௌனமே என்பது கருத்து.

1184. பொல்லா அகங்கார வடிவ மனவெழுச்சியாகிய கற்பனை யழிந்து, தான் வெட்டவெளியாக விளங்குவதே எல்லை

யற்ற ஞானுனுபூதியாகப் பெறும் இரண்டற்ற மோனுனுபூதியின் நிலையாகும்.

குறிப்பு:— மனக் கற்பனை நாசமான நிலையே மௌனநிலை என்பது கருத்து.

1185. எண்ண வடிவான மன மற்றுப்போய், சுத்த இருப்பு உணர்வாய் விளங்கும் ஆன்மசொரூபமான மௌனமே முத்தியின் நுழைவாயில் என்பது முடிவு. ஆகையால் ஒருவன் எவ்வழியில் வந்தாலும் முக்தி நகர்க்குள் நுழையும் வாயி லாகிய மனமற்ற மோனத்தின் வழியாகத்தான் அதனுள் அடையவேண்டும். அதுவே முடிவில் புகலிட மாகும்.

குறிப்பு:— எம் மார்க்கத்திற் போந்தாலும் மோனத்தின் வழியே தான் முக்தி யடைவு என்பது கருத்து. "ஓர் ஊருக்குள் வரும் வண்டிக்காரன் எந்த வழியாக வந்தாலும் சுங்கச் சாவடியில் வரி கொடுத்தாலன்றி உள் நுழைய முடியாததுபோல, அகந்தையைப் பலி கொடுக்காமல் மோக்ஷ நகருக்குள் நுழைய முடியாது" என்று ஸ்ரீ பகவான் அடிக்கடிக் கூறுவது வழக்கம்.

1186. இரண்டற்ற பரம்பொருளான ஆன்மசொரூபத்தை இடைவிடாமல் முழுமனத்தாலும் நாடி நிற்பதுதான் சுத்தப் பரமௌன மாகுமே தவிர மனத்தின் மூடத் தன்மையால் கருத லற்றுச் சோம்பிக்கிடப்பது பெரும் தமசான மயக்க நிலையே யாகும்.

குறிப்பு:— மனச்சோம்பல் மௌன மன்று. ஆன்ம நாட்டமே சுத்த மௌனம் என்பது கருத்து.

1187. சொல்வடிவா யெழுச்சியுறுத தெய்வீகச் சொல்லான பராவாக்கால் (அகந்தை எழாத ஆன்ம நாட்டத்தால்) இடை விடாது இறைவன் பாதத்தைப் போற்றி, தொழாமல் தொழும் உறுதிவிடாத உள்ளத்தின் மோன நிலையே சகஜமான மெய் வழிபாடாகும் என்றறிக.

1188. தமது சொரூபத்தின் உண்மை சிவமே என்ற அனுபவம் உடையவரே மகத்தான மௌனநிலை யடைந்தவ ராகும். (ஆகையால்) ஆன்ம சொரூபமாம் சிவத்தைத் தவிர (உடல் முதலிய) மற்றெதையும் 'நான்' என்று அபிமானிக் காதவனுய், அதனுல் யாதொரு கர்மமும் செய்ய வேண்டா தவனுய் சிவசொரூபத்திலேயே நிலைத்திரு (நிஷ்டையுற்றிரு).

1189. "'நான் இன்னார்' என்ற வடிவில் எழும் முதலெண்ண மாகிய பொய்த் தன்மை யுணர்வு யார்?" என்று விசாரித்து, அதன் பயனாக அவ் வகங்கார வுணர்வற்ற ஆன்மாவாம் இறை நிலையில் 'நான்' என்னும் ஜீவபோதம் இறந்து ஒடுங்கி ஒன்றாகும் மௌன நிலையின் பேரியல்புதான் (பக்தி மார்க்கத்திற் கூறப்படும்) சரணாகதி தத்துவத்தின் சிறந்த உண்மை யாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— ஆன்மவிசார முடிவாகிய மோனமே பரிபூரண சரணாகதியின் தத்துவம் என்னும் இப்பாடலின் கருத்தையே வைணவ ஆன்றோராகிய நம்மாழ்வார் தமது பாசுரத்தில்,

"யானே யென்னை யறியகி லாதே
யானே யென்றன தேயென் றிருந்தேன்;
யானே நீ, என் னுடைமையு நீயே
வானே ஏத்துமெம் ~~வானோ ரேத்தும்~~ வானவ ரேறே"

என்று விளக்குதல் காண்க.

1190. ['கிழவனைப் பழவினைப் பாங்கே அஃது கெடவே பரன் ஆட்டுவிப்பான்; செய்ம் முயற்சி பழவினையால் ஊனம் ஆம்; ஊறுகளும் (பழவினையால்) ஊதியம் ஆம்; மோனமா நிற்கை முறை' என்று இச் செய்யுளைக் கொண்டு கூட்டிக் கொள்க.]

கர்மங்களுக் குரியவ னாகிய ஜீவனை அவனது பிராரப்த (முன்) வினைப்பிரகாரமே அது தீரும் வரையில் இறைவன் ஆட்டி வைப்பான். பிராப்தப்படி நடவாத வற்றில் ஜீவன் எவ்வளவு முயற்சி செய்யினும் அது நடவாது. பிராரப்தப்படி நடப்பவற்றை ஜீவன் எவ்வளவு தடை செய்யினும் அது பலன் கொடுத்து நடந்தே தீரும். (ஆகையால், பிராரப்தத்தை மீறும் கர்மமுனைப் பற்று) மௌனமா யிருப்பதே நல்லது.

விளக்கக் குறிப்பு:— "அவரவர் பிராரப்தப் பிரகாரம் அதற்கானவன் ஆங்காங் கிருந்து ஆட்டுவிப்பான். என்றும் நடவாதது என் முயற்சிக்கினும் நடவாது; நடப்பது என் தடை செய்யினும் நில்லாது; இதுவே திண்ணம்.ஆகலின் மௌனமா யிருக்கை நன்று" என்று ஸ்ரீ பகவான் ஆதியில் தமது அன்னைக்கு எழுதிக் காட்டி அறிவுறுத்திய உபதேசமே இச்செய்யுளிற் பொதிந்துள்ளது.

1191. எல்லாம் செய்ய வல்ல கடவுளின் ஆணைக்கு எதிராக யாராலும் ஒன்றும் செய்ய முடியாது. ஆகையால், பொல்லா

தும் குறைபா டுடையதும் பொய்யானதுமான மனத்தின் கவலைகளை யெல்லாம் அறவே விட்டு, இறைவ னடியில் மன மொடுங்கி மௌனமுற் றிருப்பதே தக்க செயலாகும்.

1192. அலையும் நீரிற் பிரதிபிம்பம் போலச் சலனமடை யும் அகந்தையாம் மனத்தின் நினைவுகளை முற்றும் நீக்கும் முறை யாதென்று ஆராய்வோமேயானால், நாம் அம் மன அலைவுகளைக் கவனிப்பதே தன்னிலையி னின்றும் நம்மை நழுவ வைப்பதால், அவ்விதம் அதைக் கவனிப்பதை விட்டுவிட்டு, தன்னையே தான் கவனித்து மோனமுற்று நிற்பதே சிறப்புடைய தாகும்.

விளக்கக் குறிப்பு:— 'மனத்தின் எண்ணங்களை யெல்லாம் கவனித்துக் கொண்டே செல்' என்று சாதகர்களுக்குத் தற்காலத்திற் சிலர் ஞானப்பியாச முறை போதிப்பதைக் கேட்டிருக்கிறோ மல்லவா? பயனற்ற படர்க்கை முன்னிலைகளே மனத்தின் எண்ணங்க ளாகையால், அவற்றை நாடுவது அனுபவ மற்ற வேதாந்திகளின் போக்கு ஆகும். அது பயனற்றது என்பதை மகானுபவியான ஸ்ரீ பகவான், "நிலை நழுவத் தான் அதனை நோக்காது தன்னையே தான் குறித்து மோனமுற நிற்கை முறை" என்று உபதேசித் தருள்கின்றார்.

1193. அகங்காரம் அழியப் பெற்று நிற்கும் மெய்ஞ்ஞான சமாதி நிலைதான் 'மோனம்' எனப்படும் தவமாகும் என்று பிரம்ம ஞானிகள் கூறுவர். தேகாத்ம புத்தி நீங்கிய அத்தகைய மோனத் தவத்தை யடைய வேண்டுமாயின் உள்ளத்திற் சதா காலமும் தன்னையே நாடி நிற்கும் தன்னாட்டம் ஒன்றே தான் அதற்குத் தக்க சாதன மாகும்.

1194. அன்னியப் பொருள்களைப் பார்த்து, அவற்றை மெய்யென நம்பி மயங்கி, அதனால் மனம் வெளிமுகப்படுவதை நீத்து, தனது சொந்த மெய்ந் நிலையை நாடி யறிந்து, உள்ளத் தில் நிஷ்டை யடைவதால், 'நான் இத் தேகமே' என்ற அகங் கார வுணர்ச்சி நீங்கி, அப்போது விளங்கும் சுத்தமோனம் எதுவோ அதுவே ஞானத்தின் முடிவு அல்லது எல்லை யாகும்.

1195. கனவு காண்போன் அங்குத் தன்னிடத்திலேயே தான் கண்ட வியவகாரங்கள் அத்தனையும், விழித்து நனவுற்ற பின் தனது பார்வையில் நகைப்புக்கிடமானதாய், பொய்யாய்ப்

போவது போல, ஆன்ம சொரூபமான தன்னிடத்திற் கற்பனை யாய்த் தோன்றிக் காணப்படும் பிறப் பிறப்பாதி ஜீவ வியவகாரங் கள் முழுவதும், ஆன்மபோத மாகிய ஞானவிழிப்படையும் பொழுதே நசித்துப் போவதால், (பந்தம் முத்தியாகிய) சகல மும் வெறும் பொய்யான மாயா வியவகார மாகி விடும்.

விளக்கக் குறிப்பு:— 'தற்போதம்' என்ற சொல்லைத் தமிழில் அகந்தையையே குறித்து உபயோகிப்பது மரபு. அவ்வாறு பொருள் கொள்ளும் போது, "ஜீவ வியவகாரங்கள் முழுவதும் அகந்தை யழியும்போதே நசித்துப் போவதால்" என்று உரை கொள்ள வேண்டும். ஆனால், கனா-நனா என்று உபமானத்திற் காட்டப் பட்டிருப்பதால், நனவுறுதலுக்கு உபமேயமாக 'நிஜ போதம் உறும் போது தப்புதலால்' என்றே இங்கு பொருள் கொள்ளப்பட்டுள்ளது. கு.கோ 1022ல் இவ்வாறே 'தற்போதம்' பொருள் படுத்தப்பட்டுள்ளது காண்க.

1196. இறைவனின் (ஆன்மாவின்) சுத்த வருளாகிய பராசக்தி தன் நிஜசொரூபத்தை விளக்கி யருள்வதால், அஞ்ஞான இருட்டறையிற் கிடந் துழன்ற ஜீவன் சச்சித்தாம் சிவ ஞான வெள்ளத்தில் மூழ்கி, சொரூப சாக்ஷாத்கார மாகிய மோனத்திற் கரைந்து போவான்.

1197. நீக்குவதற்கரிய சங்கற்ப விகற்பங்களாகிய கற்பனை களை யெல்லாம் நீக்கிவிட்டு, அகங்காரம் உள்ளத்தி லொடுங்கி உருவழியும் போது அங்கே விளங்கும் பரிபூரண ஆன்மசொரூப வடிவ ஞானமாகிய மோனமே 'பரா வாக்கு' எனச் சிறப் பித்துக் கூறப்படுவதாம்.

விளக்கக் குறிப்பு:— பாடல் (பகவான் -12)இலும், 706, 715இலும் கூறப்பட்ட '**பராவாக்கு**' என்பது யாது என்பதை இப்பாடலால் வாசகர்கள் நன்கறிந்து கொள்ளலா மாகையால் அம் மூன்று பாடல்களையும் மீண்டும் இங்கு வாசித்து அவற்றின் விளக்கத்தையு மறிக.

1198. அலையும் மனம் அடங்கி, உள்ளத்தி லழிந்து, அங்கு விளங்கும் பராவாக்கான (ஆன்மாவினது) ஆண்டவனது அருண்மொழியின் இனிமையை (மோனவினிமையை)க் கேட்டு அனுபவித் தறியாத மனிதர்கள்தான் குழல் இனிய தென்றும், யாழ் இனிய தென்றும், இவை யிரண்டின் ஓசையை யும் விட மிகவும் இனிமையானது தாம் பெற்ற இளங்குழவிகள் கூறும் மழலை மொழியே யென்றும் கூறிச் சிலாகிப்பர்.

விளக்கக் குறிப்பு:— சற்குருவின் மோனமொழியோ, பேரின்பம் அடைவிக்கும் ஹேதுவாகையால் இம்மைப் பேற்றை வழங்கும் ஏனைய யாவற்றினும் இனியதாகும் எனப்பட்டது.

வள்ளுவர் பெருமான் பலதரப்பட்ட மக்களுக்கும் அவரவர் நிலைக்கேற்ப அறிவு கொளுத்துங் கடமை நோக்கோடு திருக்குறளை யாத்ததால், இல்லறத்தார்க்கு இல்லறவியலில், இம்மை யின்பம் பயக்கும் பொருள்களுள் ஒன்றாக மக்கட் பேற்றைச் சிறப்பிக்கும் முறையில், ''குழலினிது யாழினி தென்பதம் மக்கண் மழலைச் சொற் கேளா தவர்'' என்று கூறினர். அதனால் அதுவே யாவற்றினும் இனிது என்ற தீர்ப்புக்கு அனைவரும் வந்து விடக் கூடாது. உயர்வற வுயர்ந்த ஆன்ம சாதனையில் நின்று வரும் சாதகர்கட்கு இப்பாடலால், அதனினும் சாலச் சிறந்த சத்திய இனிமையாக மோனத்தின் இனிமை கூறப் படுகின்றது. அவ்வளவே தவிர, வள்ளுவனார் ''உழலு மன மோய்ந்து பராவாக்காம் உடையா னருண்மொழியை (மோனத்தை) ஆய்ந்து தாம் கேளாதவர்'' என்று வாசகர்கள் முடிவு செய்தால் அது பெரும் பிழையாகும். இம்மைப் பயனை நாடும் இல்லறத்தார்க்கு இயம்பப்பட வேண்டிய அறிவுரையை மட்டுமே குறள் கூறியிருப்ப தாகக் கண்டு அமைய வேண்டும்.

1199. மனத்தில் அலைபோல ஓயாமல் எழுந்து கொண்டிருக்கும் எண்ணங்க ளாகிய ஓசை அடங்கினா லன்றி சொல்லால் வருணிக்க இயலாத அருமையான மோன நிலை விளங்காது. தன்னுள் சகல எண்ணவடிவ விருத்திகளும் எழாது அடங்கப் பெற்ற ஞானிகள் பெரிய போர்க்களத்தின் ஆரவார இரைச்சலுக் கிடையில் தாம் இருக்கப் பெற்றாலுங் கூட வலிமை வாய்ந்த தமது முழுமோன நிலையினின்றும் நழுவார்.

விளக்கக் குறிப்பு:— சந்தைக் கூச்சலும் சமுத்திர அலையொலியும் போன்ற பேரிரைச்சல் உள்ள விடத்தில் காற்றில் மிருதுவாக மிதந்து வரும் இனிய இசையை கேட்க முடியாமற் போவது போல, உள்ளே எழும் கோடிக் கணக்கான எண்ண அலைகளின் ஆரவாரத்தால் மனத்தின் அடித்தளத்தினுள்ளே சதாகாலமும் அதி மதுரமாகக் கோஷித்துக் கொண்டிருக்கும் சற்குருவின் இனிய மோன உபதேசங்கள் மக்களின் கவனத்திற்கு எட்டாமற் போகின்றன. ஆனால் சங்கற்பங்கள் அனைத்தும் அழிந்து மனோ நாசமுற்ற ஞானிகளின் இயல்போ இதற்கு முற்றிலும் மாறானது. எவ்வாறெனின், மோனவுணர்வில் ஏற்பட்டிருக்கும் அழுத்தத்தின் வலிமையால் ஞானி யொருவனுக்கு வெளியே யுள்ள போர்க்களத்தின் பேரிரைச் சலுங்கூட தன் கவனத்துக் கெட்டாமல் மங்கி விடுகின்றது என்று ஸ்ரீ பகவான் கூறுகின்றனர்.

1200. அற்பமும் அழுக்குமான உடலை 'நான்' என்று அபிமானிக்கும் அகந்தை யுணர்வு அழிந்து உள்ளத்தில் விளங் கும் மோனநிலை என்னும் உண்மை முடிவை அனுபவியாதவர் களும், ஆன்மஞான விசார மில்லாதவர்களுமான மக்கள் கடைப் பிடிக்கும் வாக்கு மாத்திர மௌனம் சித்தத்தின் வியவகாரமான ஓயாத வியாபாரமாகத்தான் முடிகின்ற தல்லவா? நீயே சொல்.

விளக்கக் குறிப்பு:— ஆன்ம விசாரமாம் தன்னுட்டத்தில் ஈடுபடாமல் வெறும் வாக்கு மௌனம் கடைப் பிடிப்போரின் முயற்சி பயனற்றது என்பது உபதேசம்.

1201. அற்பமும் பொய்யானதும் மயக்கந் தருவதுமான ஐம்புல விஷயாசைப் பைத்தியம் முற்றும் அழிந்து போய், அகந்தை யுணர்வு தனது மூலஸ்தானமாகிய ஆன்மாவில் மூழ்கி யழிந்த பின், அப்போது விளங்கும் மெய்ஞ்ஞான ஆன்ம வாழ்வான மோனமே பேரின்ப நிலையாகும்.

1202. பரிசுத்த மோன நிலையில் மிகத் தெளிவாய் விளக்க முறும் ஆன்மசொரூபமாம் சிறந்த அமிர்தத்தை யுண்டு, பேரின்பத்தால் உள்ளம் பூரித்திருக்கும் ஞானிகள் இவ் வுலகில் மனமயக்கப் பைத்தியமான சிற்றின்பத்தைத் தரும் புலனுணர்வு களை நாடி அழிவை யடையார்.

1203. பெரியோர்கள் எல்லா வேத ஆகமங்களின் சித்தாந்த மாகத் தாம் நன்கு விளக்கமுற அறிந்த முடிவான வுண்மை யும், அனுஷ்டிக்கப்பட வேண்டியதாக எல்லா தருமோபதேசங்க ளாலும் கோஷிக்கப்படும் சதாசாரமும் யாதெனில் மோனம் எனப்படும் பரம உபசாந்த நிலையே யாகும்.

விளக்கக் குறிப்பு:— மனோ நாசமே பரிபூரண மோனம். முக்தி யடைவதற்கு இம் மோனமாம் மனோ நாசம் இன்றியமையாதது என்பதே சகல சாஸ்திரங்களின் முடிவான கருத்து என்று ஸ்ரீ பகவான் 'நான் யார்?' என்ற நூலில் உபதேசித்த வுண்மையே இப் பாடலாலும் விளக்கப்படுகின்றது.

1204. அறம் பொருள் இன்பம் ஆகிய மூன்றையும் (தமது குறிக்கோளாகக் கொள்ளாமல்) அடியோடு விட்டுவிடுவதுதான் மோக்ஷ இயல்பான சிறந்த உபசாந்தி யாகும். எனவே, மற்ற அம் மூவித போலிப் புருஷார்த்தங்களைப் பற்றிய சகல நினைவு

களையும் முற்றுந் துறந்து, சிவமாகிய தனது பரமான்ம சொரூப நாட்டமாய் நிற்கும் மோனத்தையே கடைப் பிடிப்பா யாக.

விளக்கக் குறிப்பு:— "பரமார்த்த தீபம் என்னுங் குருவாசகக் கோவை" எனப்படும் இவ் வத்வைத சாஸ்திரத்தில் 'நூற் பய'னுகக் கூறப்பட்ட 8-ஆவது செய்யுளையும் இங்கு ஓர்த்துணர்க.

## ருச. பரா பத்தித் திறன்

1205. *(இறைவனிடம் பிரார்த்தனை வடிவில்)* யாதொரு குற்ற முங் குறையுங் கூறிக்கொள்ளக் கொஞ்சங்கூட உள்ளத்தில் இடமில்லாதவாறு நிகழும் உபசாந்த நிலைதான் ஒருவன் இறைவ னடியில் தன்மயமாய்த் தன்னைச் சமர்ப்பித்து விட்ட, சிறந்த பாரபக்தியின் லக்ஷண மாகும்.

விளக்கக் குறிப்பு:— சம்பூரண சரணுகதி ஒருவன் செய்திருப்பானுயின் அதன் பின் முறையீடு வடிவில் மோக்ஷத்திற்காகக் கூடப் பிரார்த்திப்பது இயலாத தாகும் என்பது கருத்து. அருணுசல நவமணி மாலை 7-ஆவது பாடல் இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

1206. இறைவனின் திருவருளுக்குப் பாத்திரமாகிப் பூரணு னந்த மெய்ந் நிலையில் நிலைபெற்று விளங்கும் உள்ளத்தில், அறியாமை வடிவான தேகாத்ம புத்தியின் அடையாளமான அற்ப மனக் குறைகள் தலைகாட்டுமோ? (காட்டா வென்க).

1207. பிற நினைவுகள் உள்ளத்தி லெழுந்துகொண் டிருக் கும் வரையிலுந்தான், தன் மனத்தால் நினைந்து செய்யுங் கடவுள் தியானமும் நடைபெற முடியும். ஆனுல் பரா பக்தி யாகிய ஆன்ம சமர்ப்பணத்தில் ('நான்' என்னும் முதல் நினைவே அற்றபோது) பிற நினைவுகள் யாவு மழிவதால், அவ் விறை நினைவு மழிவதே பரம் பொருளை நினைப்பற்று நினைக்கும் மெய்ந் நினைவு (சத்தியமான பிரம்மத் தியானம்) ஆகும்.

விளக்கக் குறிப்பு:— 'நான் ஓர் உடல்' என்னும் முதல் நினைவு (ஜீவன்-அகந்தை) எழுந்த பிறகே உலகம் - கடவுள்களாகிய பிற நினைவுகள் தோன்றுகின்றன. அப்போது 'இறைவன் தன்னிலும் வேறுனவன்' என்றவாறு உணரப்படுவதால் ஜீவ மனம் இறைவனைத் தன்னுல் நினைபடும் பொருளாக்கித் தியானம் செய்யும். ஆனுல் மூலமான 'நான்' என்னும் அகந்தை நினைவு சமர்ப்பணத்தால் அழியும் போது வேற்று நினைவுகளாகிய உலக நினைவுகள் அகல்வது மட்டுமன்றி அதனுடன்

சமசத்தியம் பெற்றிருந்த இறை நினைவும் மறையும். ஜக ஜீவ ஈசுவர நினைவு யாதுமற்ற இந் நிலையே நினைப்பற்றுப் பரம்பொருளாய் விளங்கும் மெய்ந்நினைவு அல்லது பிரம்மத் தியானம் எனப்படும்.

1208. நிறைந் தெழும் சகல நினைவுகளும், ஒன்று கூட விடாமல், அழிந்துபோனபின் (மேற் கூறியவாறு இருப்பு மாத்திரமாக) சும்மாவிருக்கும் நிலையை (பிரம்மத் தியானம் என்று) ஓர் நினைப்பாகச் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருப்பது ஏனென்று கேட்பா யாகில், (இருப்பு மாத்திர) அவ் வுண்மை நிறைவான **'இருக்கிறேன்'** என்ற உணர்ச்சி சிறிதும் **மறப்பே யில்லாமல் விளங்குந் தன்மையால்** அவ்வாறு (ஓர் நினைப்பாகக்) கூறப்படுகின்றது என் றறிக.

விளக்கக் குறிப்பு:— "நான் யார்?" என்ற நூலில் ஸ்ரீபகவான் **'ஆன்ம சிந்தனையைத் தவிர'** என்று குறிப்பிட்டிருப்பது இப்பொருளிலேயே என் றறிக.

1209. விஷம் நிறைந்த அஞ்ஞான இருள்மயமான, மாயத் தேகாத்ம புத்தி அழிவுற்று, உள்ளம் ஆகாயம்போல் திறந்த வெளியாக விளங்கும் ஞானத்தால் நிர்மலமாகத் தெளிந்த உபசாந்தியடையும் போது, அங்குப் பெருக்கெடுக்கும் பரிசுத்த அன்புதான் மங்கலம் நிறைந்த மெய்ப் பக்தி (மெய்யான சிவ பக்தி) யாகும்.

1210. இறைவனுகிய ஆன்ம சொரூபத்தையே எக்காலும் யாவற்றிலும் சிறந்த புகலிடமாகச் சார்ந்து நிற்கும் பாக்கியசாலிகள் மட்டுமே ஆன்மசாக்ஷாற்காரம் எய்துவர். அவ்வாறில்லாத மற்றவர்கட்கு அவ் வழிவற்ற உயர்வற வுயர்ந்த அருட்பதமான மோக்ஷம் எவ்விதத்தும் அடைய முடியா தென்க.

1211. சகல விதத்தும் ஆன்மாவையே அனுசந்தித்து நிற்கும் ஆன்ம மெய்யன்பர்களாகிய அடியார்களுக்கே சிறந்தோங்கும் பரந்தாமமான மோக்ஷம் பூரணமாக அனுபவிக்கக் கிடைக்கின்றது என் றறிக.

## ரூரு. ஞான சித்தித் திறன்

1212. தவத்தா லடையப்பெறும் சித்திகள் அணிமாவாதி பலவகையாகச் சொல்லப் பட்டாலும், அப் பலவித சித்தி

களுள்ளும் ஞானசித்தியே தலைசிறந்த தாகும். ஏனெனில், அப் பலவகை சித்திகளுள் ஞானத்தைத் தவிர மற்றவற்றைப் பெற்ற வர்கள் ஆன்ம ஞானத்தை விரும்பி ஏங்கி நிற்பர். ஆனால் ஞான சித்தி பெற்றவர்களோ மற்ற சித்திகளை விரும்பி ஏங்குவ தில்லை. எனவே, ஞான சித்தியையே நாடுக.

1213. பூரண சித்தியாகிய ஞான சித்தியைப் பெற்றதனு லேயே ஆன்ம சொரூப சித்தர்களாகிய ஞானிகள் மற்ற எல்லாச் சித்திகளையும் ஒருங்கே அடைந்தவர்க ளாகின்றனர். எவ்வா றெனின், மிகப் பெரிய ஆகாயத்தினுள் உலகங்க ளெல்லாம் அடங்கிக் கிடப்பது போல, ஆன்ம ஞான சித்தனிடம் சகல சித்திகளும் வெளிப்பட்டுத் தெரியத் தக்கன வாகவோ, வெளியே தெரியாதன வாகவோ அடங்கிக் கிடப்பதால் என்க.

1214. இதயத்தின் அடித்தளம் வரையில் ஆழ்ந்து மூழ்கி நின்றால், தான் ஓர் அற்ப ஜீவன் அல்லது மனிதன் என்றுணரும் ஏழை மனப்பான்மை அறவே யழியும். தேவேந்திரனும் முடிசாய்த்துத் தன்னடியில் வணங்கச் சிறந்து வாழும்படி ஞானப் பேரரசு வந்தடையும்.

## ௫௬. பிரம்மத் திறன்

1215. பரிபூரண சத்திய முதற்பொரு ளாகிற பிரம்மத் தினின்றும் தான் வேறாகாத மகா சிற்சக்தி யாகிய மாயை யான வள் உலகு-உயிர்-இறை என்னும் மூன்று சொக்கட்டானுடுங் காய்களைக் கொண்டு எப்போதும் சூதாடிக்கொண் டிருப்பதற்கு (மாயா விலாசம் புரிவதற்கு) ஆதார விளையாட் டரங்கமாக வுள் ளது அந்தப் பேரின்ப மோன மெய்ப் பொரு ளாகிய பிரம்மமே யாகும். என்ன ஆச்சரியம் !

விளக்கக் குறிப்பு:— முழுமுதற் பிரம்மத்தை யன்றி தனக்கென ஓர் சுய இருப்பு இல்லாதவள் மாயை என்பது இப் பாடலாற் பெறப்பட்டது. ஜீவேசுவர ஜகங்களாகிய மூன்று பொருள்களும் அவளது மாயா லீலை யாகிய—சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமாகிய—சூதாட்டத்தின் முழுமுதற் பொருளாகிய பிரம்மத்தை (ஆன்மாவை) ஆதாரமாகக் கொண்டா லன்றி நடைபெற முடியாத தாகும்! இவ்வாறு அவளது ஆட்டத்திற்கு ஆதாரமாயிருக்கும் ஆன்ம தத்துவத்தையே, படுத்திருக்கும் சிவபிரான் மீது காளி தேவி நர்த்தனம் செய்வதாகச் சாக்த மதத்தினர் உருவகத்தாற்

சித்தரித் துள்ளனர் என் றறிக. ஜீவேசுவர ஜகங்களாகவும் அவைகளின் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களாகவும் விளங்குவ தெல்லாம் பொய்யான மாயையின் சூதாட்டமே என்பதே இங்கு கருத்து.

1216. அசையும் பலவித படங்களையே பார்ப்பவர்கள் அவற்றின் ஆதாரமா யுள்ள திரை யொன்றைக் காணார். அவ்வாறே, அசைவற்ற திரையையே கவனிப்போர் படங்கள் எதையுங் காணார்! இது படக்காட்சிச் சாலையில் இயல்பாக நிகழும் விஷய மாகும்!

1217. படக்காட்சிச் சாலையில் அசையாத திரை இல்லை யென்றால் அசையும் படங்கள் யாதொன்று மிரா. ஆராய்ந் தறியும்போது, திரையில் அசைந்தோடும் படங்களினும் அசை யாத் திரை வேறான ஒன்றே யாகும்.

1218. ஆதாரமான அசையாத் திரையே பிரம்ம மாகும். அசைவற்ற அத்திரையில் அசைந் தோடும் படங்களே உலகு உயிர் இறை ஆகிய முப்பொருள்க ளாகும். எனவே காணப் படுவன அனைத்துமே மாயையின் விளையாட் டாகிய பொய் யென் றறிக.

1219. அசையும் படம் போன்ற ஜீவனே, தன்னைப் போலவே அசையும் படங்களாலாகிய இவ்வுலகிற் காணப்படும் மற்ற உயிர்களாகிய படங்களையோ அல்லது (இவ் வுலகுயிர் களைப் படைத்துக் காத் தழிக்கும்) ஈசனாகிய படத்தையோ அடைய விரும்பி இப் பொய்ப்படமாகிய உலக வாழ்வில் ஏங்கி நிற்பவ னாகும்!

விளக்கக் குறிப்பு:— உலகம்-உயிர்-ஈசுவரன்-இம் மூன்றும் அசையும் படங்களே. (இவை ஆதாரத் திரை யல்ல) இவற்றுள் ஒன்றான ஜீவன் (மனிதன்) மற்ற இரு அசையும் படங்களைப் பார்த்து விரும்பி அல்லது வெறுத்துத் துன்புறுகின்றான். அதாவது, மக்களுட் பலர் உலகப் பொருள்களைக் கண்டு விரும்பி, அவற்றை யடைய ஏங்கித் தவிக்கின்றனர். சிலர் ஈசுவரனாகிய மற்றொரு அசை படத்தைக் காணவும் அடையவும் விரும்பி ஏங்கி நிற்கின்றனர். முதல் வகையினரை இலௌகிகர்கள் என்கிறோம். மாயையின் லீலா

விநோதங்களுள் ளடங்கியதால் இவ் விருவித ஏக்கங்களும் வீணே என்றும், மாயைக்கு ஆதாரமான பரம் பொருளே (ஆன்மாவை) அறியாத அஞ்ஞானத்தால் விளைந்த பொய் வியவகாரங்களே இவ் வேக்கங்கள் என்றும் இங்கு உபதேசிக்கப் படுகின்றது. இந் நூலின் 160-ஆவது பாடலின் கருத்தையும் இங்கு உடன் வாசித் துணர்க.

1220. அசையாத ஆதாரத் திரையாகிய தன்னை (ஆன் மாவை) பிறப் பிறப்புக் கரும மாதிகளாய்ச் சலனமுறும் ஜீவ ஞகக் கருதித் துன்புறும் சித்த விருத்தியாகிய ஜீவ போதம் முற்று மடங்கி யழிந்துபோன மோனத்தில் நிலைபெற் றிருப் பதே முறையான செயலாகும்.

விளக்கக் குறிப்பு:— சென்ற பாடலில், கடவுளைக் கண்டடைய விரும்பி ஏங்கி நிற்கும் பக்தனின் உத்தமச் செயலையுங் கூடக் குறை கூறப்பட்ட தன்றே; அங்ஙன மாயின் அவ் வுத்தம மனிதனுக் குகந்த செயல்தா னென்ன என்றும் புகட்ட வேண்டுமல்லவா? அது இப் பாடலில் உபதேசிக்கப் படுகின்றது. அதாவது, அசை படங்களுக் காதாரமான திரையை அறிவது போல, ஜீவேசுவர ஜகங்களுக்கு ஆதாரமான (ஆன்மாவை) தன்னை அறிந்து படங்களின் மேற் பைத்தியமாகிய மோகம் நீங்கிப் பேரமைதி யடைவதே உத்த மோத்தம மானதும் முறையானது மான செயல் என்று உபதேசிக்கப் படுகின்றது.

## ருஎ. முத்தி யுருத் திறன்

1221. 'பந்தப்பட்ட நான் யார்?' என்று தன்னை விசாரித் தறியும் அறிவில் பந்தம் என்பதோர் எண்ணமே அடியோ டழி வதால், பந்தத்தினின்றும் முத்தி பெற வேண்டும் என்னும் (அப் பந்த இரட்டையின் மற்றென்றாகிய) முக்தி எண்ணமும் அற்றுப்போய், மீந்து நிற்கும் தன் சத்திய ஆன்ம இயல்பை யுணர்வதே முக்தியின் நிஜ லக்ஷண மாகும்.

விளக்கக் குறிப்பு:—"நான் யார்?" என்ற நூலில் வரும் கருத்தின் விரிவே இப் பாடல்.

1222. (முன் பாடலிற் கூறியபடி தற் சோதனையில்) மீந்து நின்று அறிவு மயமாய், சாந்தி வடிவாய் எது விளங்குமோ அதுவே சதாசிவம் எனப்படும். (சதாசிவமாய்) மீந்து விளங்கும் 'அப் போதமே நான்' என்றுணர்வதும், 'உடல் நான்' என்ற அகந்தை யுணர்வு அற்றதுமான மோனமே முக்தியின் எல்லை யாகும்.

விளக்கக் குறிப்பு:—"அகில வேதாந்த..." எனவரும், ஸ்ரீ பகவானது உள்ளது நாற்பது-அநுபந்தம், 40 ஆவது பாடற் கருத்து முழுவதும் இப் பாடலிற் குறிக்கப் படுவதை ஆராய்ந் தறிக.

1223. (ஜீவேசுவரஜகத் தாகிய) யாவுமே தோன்றிக் காணப் படுவதற்கு ஆதார நிலமாகி நிற்கும் அறிவாகிய தன்னை (ஆன்மாவை) ஆராய்வதில் ஈடுபட்டு, அதனுற் பொங்கி யெழும் சாந்தியில் திடமாய் நின்று, அதனின்றும் சோர்வுக்கு (பிரமாதத்திற்கு) இடந்தந்து நிலை குலையாமல் (அந்த சாந்தி நிலையைத் தவிர்ந்த பிற) எல்லாவற்றையும் தான் விட்டு விடுவதே முக்தி யாகும்.

1224. (முன்னிலை-படர்க்கைகளை) எதிரிட் டறியும் மன வறிவு முற்று மழிந்தா லன்றி, ஜீவனைப் பந்தப் படுத்துகின்ற புலன்களின் சேர்க்கையாகிற உலக பந்தத்தினின்றும் மக்கள் விடுபடார். சொரூப நிஷ்டையால் ஆன்மாவில் நிலைபெறுவதால் அச் சுட்டறிவு அழிவதுதான் பேரின்பமான முக்தியின் தன்மை யாகும்.

1225. ஆன்ருேர் இகழ்ந்து நகையாடுவதற்கு இடமா யமைந்துள்ள பிறவித் தளைக்கு மூலகாரணமான ஆசை யென்னும் பெரும் பகையை யழிக்கும் வழியை யறிந்து, நிராசை நிலையைப் பற்றிக் கொண்டு சும்மா விருப்பதே மோக்ஷ மாகும்.

விளக்கக் குறிப்பு:— பகையாம் பற்றை யழிக்கும் வழியாவது, சென்ற பாடலிற் காட்டியவாறு, சுட்டறிவற்றுத் தன்னை விடாதிருக்கும் ஆன்ம நாட்டமே யாகும். வெறுமே யிருத்தலாவது, 'இருக்கிறேன்' என்ற வெற்றுணர்வோடு மட்டும் சும்மாவிருக்கும் நிலையாகும்.

1226. இருப்பு மாத்திரமாய் விளங்கும் சுத்தான்மத் தெளி வாகிய வாழ்வைப் பெறுவதுதான் பிரம்ம ஞான ஒளியான மோக்ஷ பதம். இதுவே வேதாந்த மெய்ந்நிலை கண்ட ஞானி களின் தீர்ப்பாகும்.

## ௫அ. பரமார்த்தத் திறன்

1227. யாதொன்றும் உண்டாவது மில்லை; அழிவது மில்லை; பந்தப்பட்டவர்களு மில்லை; (பந்த நிவர்த்திக்காகச்)

சாதனை புரிவோரும் யாரு மில்லை. மோக்ஷத்தை மிக விரும்பும் முமுக்ஷுக்களு மில்லை. முக்தி யடைந்தவர்களு மில்லை. இதுவே பரமார்த்தம் என் றறிக.

**பகவான் (28)**

(மேற்கூறிய பாடலை ஸ்ரீ பகவான் சுருக்கமாக ஒரே குறள் வெண்பாவாக்கி யருளியதே இப்பாடல்).

உண்டாதல், அழிதல், பந்த முறல், பந்த மற விரும்பு வோர், அதற்காக சாதனையில் ஈடுபடுவோர், முக்தியை யடைந் தோர், இவை ஒன்றுமே யில்லை. இதுவே பரமார்த்தம் என் றறிக.

விளக்கக் குறிப்பு:— சிருஷ்டி யாதி பஞ்ச கிருத்தியங்களும் மாயையின் பொய்ச் சூதாட்ட (லீலா) விநோதங்களே என்பது 1215 ஆவது பாடலால் அறிவிக்கப்பட்டது. ஆகவே, அவைகட்குட்பட்ட ஜகஜீவேசுவரர்களது அறிவுக்கு உண்மை போலத் தோன்றும் எதுவும் பரமார்த்தம் ஆக முடியாது. பந்தம், முக்தி, சாதகர், சாதனை, சாத்தியம் ஆகிய இவை யாவும் ஜக ஜீவேசுவர அறிவுக் குட்பட்டனவே யாவதால் பொய்யே யாகும். எனின் மாயையைக் கடந்து அதீதத்திற் பிரகாசிக்கும் அறிவு எதுவோ அதில் விளங்குவது மட்டுமே பரமார்த்த வுண்மை யாகும். அது எத்தகையது அல்லது யாது என்பதை அவ் வதீதமே தாமாய் நிற்கும் ஸ்திதப்ரஜ்ஞர்களான ஞானிகள் மட்டுமே அறிவர். அவர்களது தீர்ப்பே முடிந்த பரமார்த்தம்.

இங்கு இந் நூலின் 100 ஆவது பாடலை நாம் நினைவிற் கொண்டு நோக்க வேண்டும். அதில் ஸ்ரீ பகவான் 'தனது நிஜானுபவமாக நிகழ்த்த யாம் கேட்டது அஜாத சித்தாந்தமே' என்பது பெறப்படுவதால், அவ் வதீத ஸஹஜாத்ம ஸ்திதியே தாமா யிருந்தொளிரும் அவர் தமது இவ் வனுபவமே பரமார்த்தமாக முன்பு உபநிஷத்து ரிஷிகளும் நிர்ணயித்திருப்பதை ஒரு சுலோகத்தினின்றும் எடுத்துக் காட்டினர். அச் சுலோக மாவது:

*''ந நிரோதோ ந சோத்பத்திர் ந பத்தோ நசஸாதக:*
*நமுமுக்ஷுர் நவைமுக்த இத்யேஷா பரமார்த்ததா.''*

இது அமிர்தபிந்து உபநிஷத்தில் 10 ஆவது சுலோக மாகவும், மாண்டூக்ய காரிகையில் 2-32 ஆவது சுலோகமாகவும், விவேக சூடாமணி யில் 574 ஆவது சுலோக மாகவும் வந்துள்ளது. ஸ்ரீ பகவான் இச் சுலோகத்தைக் குறிப்பிட்டபோது ஸ்ரீ முருகனர் அதை மொழி பெயர்த்துக் குருவாசகக் கோவையின் 1227 ஆவது உபதேச

மாகச் சேர்த்தனர். அதைக் கண்ணுற்ற ஸ்ரீ பகவான் அஃதையே மேலும் சுருக்கி ஓர் குறள் வெண்பாவாக இயற்றி யருளவே அதுவே **பகவான் (28)** என்ற பாடலாயிற்று.

பிரம்மத்தின் வேருகாததும், அனுதியும், ஆனுல் பரமான்ம ஞானத்தின் பேரொளியின் முன் நசிப்பதால் அந்தமுள்ளதுமான — அதாவது, மேற்கூறிய தன் சூதாட்ட மாகிய விருத்தியானது சொரூப- ஞானத்தாற் பொய்யாகி முடிவுறும் போது, சுய விளக்கமே தன் சொரூபமாய்ப் பிரகாசிக்கும் ஆன்மாவில் இரண்டற ஒன்றி விடுவதால், "**மா யா**" (இல்லாதது) என்ற தன் பெயரை மெய்ப்பிப்பதான—மாயையின் அபாவ (இருப்பற்ற) நிலேயில் மிஞ்சி விளங்கும் நாமாகிய **ஆன்மாவே** பரமார்த்த மாகும்.

எனவே 'பரமார்த்த தீப' மென்னும் இக் குருவாசகக் கோவையில் ஸ்ரீரமணபிரான் முடிவாக அருளும் பரமார்த்த வுண்மை, "ஆதியந்த மற்று, '**இருக்கிறேன்**' என்ற வடிவில், சச்சிதானந்த ஏக சொரூபமாய், நிர்விகாரியாய், எப்போதும் விளங்கிக் கொண்டிருக்கும் நானே பரமார்த்தம்; மற்றவை யாவும் மாயா விலாசமே யாதலின் பொய்யே" என்பதே. மாயைக் குட்பட்டு, அதனுல் அகந்தைக் குற்றமுடையவர் களான மக்களது அறிவுக்கு இது பொருந்தாத காரணத்தால், இதைப் புறக்கணித்து விட்டு, உடலே யழியா திருத்துதல், மண்ணே விண்ணுக்குதல், அமர லோகங்களைச் சென்றடைதல், அஷ்ட சித்திகளைப் பெறுதல் முதலிய வெவ்வேறு பரமார்த்தங்களைக் கற்பித்துக் கொண்டு, அவை ஒவ்வொன்றுக்கும் ஒரு மதத்தை ஏற்படுத்திக்கொண்டு வாதமிட்டு நிற்பது தவறு. ஏனெனில், இத் தவறும் மாயையின் சூதாட்டத்திற்கு உட் பட்டதா யிருப்பதால் தான் ("......சண்டையிடல் மாயைச் சழக்கு") என்பதை வாசகர்கள் உணர்ந்து கொள்க.

1228. உள்ள பொருளாகிய ஆன்மாவை இல்லாத தாக்கவும், இல்லாதவையான நாம ரூபாதிப் பிரபஞ்சத் தோற்றத்தை உண்மையாக்கவும் (அஞ்ஞான விருளாகிய) பொய்க் கற்பனேயில்தான் முடியுமே தவிர, தெளிந்த விளக்க மான சத்திய ஆன்ம நிலேயிற் சிறிதும் இயலாது. ஆதலால், (அக்கற்பனே நிலேயில் 'யாவும்' என்று சொல்லப்படுவன) யாவும் சத்திய வஸ்துவான திடஞான நிலேயில் ஏக ஆன்ம சித்தே யாகும்.

விளக்கக் குறிப்பு:— சத்திய ஆன்ம நிலேயில் மற்ற யாவும் இல்லா தனவே என்ற முடிவு கூறப்பட்ட பின் அவை இருப்பன போன்று காணப்பட்டதற்கு ஓர் காரணம் வேண்டி வினவுவார்க்கு 'திண்மைதனில் அனைத்தும் சித்து' என்று இப்பாடலால் ஓர் விடை

தரப்படுகின்றது. அதாவது, நானு நாமரூப ஆபரணங்களுக்குப் பொன் ஒன்றே சத்திய இருப்பைத் தந்துகொண் டிருப்பது போலவே, அனுத்ம சர்வத் திற்கும் ஆன்ம ஏக சித்தே இருப்புத் தந்துகொண் டிருந்த தால், அவை யனைத்தும் ஆன்ம சித்தே எனப்பட்டது.

1229. "உமியோடு கூடிய நெல்லினின்றும் நீக்கப்படும் அரிசியைப் போல, பாச பந்தத்தோடு கூடிய ஜீவாத்மா பந்தம் நீக்கப்பட்டபின் பரமாத்மா வாகிறது" என்று சாஸ்திரங்களில் முதலிற் கூறப்படுகிற தென்றாலும், இவ்வாறு ஜீவாத்மா-பர மாத்மா என்று (பந்தம் - மோக்ஷம் என்றும்) கூறப்படுவ தெல் லாம், குற்றமே வடிவான மனத்தால் அறிவு வடிவான ஆன்மா விற் செய்து காணப்படும் கற்பனையே என் றறிக.

## ருசு. செம்பொருட் டிறன்

1230. எந்தெந்தப் பொருள் உள்ளதாக நீ மனத்தால் நினைக்கின்றாயோ (அறிகின்றாயோ) அப் பொருள்க ளெல்லாம் உண்மையில் இல்லாதனவே யாகும். மேலும் எந்தப் பொருள் (ஆன்மா) இருப்பதாகவோ அல்லது இல்லாததாகவோ உன் மனத்தால் அறியப்படாததாய் உள்ளதோ அது ஒன்றுதான் உள்ள பொருள்!

விளக்கக் குறிப்பு:— மனம் ஒரு பொய்யறி வாகையால் அதனால் உள்ளதாக அறியப்படும் பொருள் யாவும் பொய்யே, இல்லா தனவே யாகிவிடுகின்றன. இவ் விலக்கணப்படி, ஆன்மா மனத்தா லறியப்படும் ஓர் பொருளா யிருக்குமாயின் அதுவும் பொய்யாகவே யாகு மல்லவா? ஆகையால் இம் மனத்தால் அறிபடாப் பொருளாகத் தீர்க்கப்படும் ஆன்மாவே சத்தியப் பொருள் எனப்பட்டது.

1231. பல்வேறு அறிவு வகைகளைக் கொண்டு உண்டாகி யுள்ள வேற்றுமைகளும் குறைபாடுகளும் அழியும்படித் தன் னகத்தே ஒடுக்கிக் கொள்ள வல்லதும், எங்கும் பரந்தும் நிறைந் தும், யாவற்றையும் ஊடுருவிக் கடந்தும் நிற்கும் உன்னத மகிமை வாய்ந்த தோர் செம்பொருளின் சத்திய இருப்பை (மேற்கூறிய பரமார்த்தத்தை) மனமாகிய கற்பனை யறிவால் மறுத்துக் கண்டிக்க வியலுமோ? சொல்க.

1232. ஒரு பொருள் இருக்கின்ற தென்றோ இல்லை யென்றோ மனத்தாற் சிந்திக்காமல், சும்மா விருப்போ மாகில், அப்போது நாம ரூபமற்றுத் தன்மயமாய் யாதொன்று உள்ளத்திற் எப்போதும் 'நான் என்ற வெற்றுணர்வு மட்டு மாய்ப் பிரகாசிக்குமோ அந்த அறிவே செம்பொரு ளாகும்; அறிக.

1233. ஆதி (தொடக்கம்) அறிய முடியாதவை (அற்றவை) என்று கூறப்பட்டுவரும் பொருள்முடிவுகள் ஆறினுள், அந்த மற்றது (முடிவற்றது) எனத் தக்கது ஏக அத்துவித ஒன்றே (ஆன்மாவே) யாகும்; மற்ற ஐந்தும் (அநாதியே யாயினும்) அந்த முடையவைகளே என்று உள்ளத்திற் றெளிவா யறிந்து கொள்க.

விளக்கக் குறிப்பு:— இங்கு அநாதி ஆறு பொருள் என்று கூறப்பட்டது இந்து மதத்தின் ஷட் தரிசனங்களைக் குறித்த தாகும். அவை, கபிலர் காட்டிய 'சாங்கியம்', பதஞ்சலி காட்டிய 'யோகம்', கணாதர் காட்டிய 'வைசேஷிகம்'; கௌதமர் காட்டிய 'நியாயம்', ஜைமினி காட்டிய 'பூர்வ மீமாம்சம்', வியாசர் காட்டிய 'வேதாந்தம்' என்பனவாம். இவ் வாறினுள் வேதாந்தமே அத்துவித மென்ற சொல்லால் இப் பாடலிற் குறிப்பிடப் படுகிறது. மாயையைக் கடந்த ஏக பரப்பிரம்மமே சத்திய வஸ்து என்பது வேதாந்த முடிவு. மற்ற ஐவகைக் கொள்கைகளை நிச்சயம் செய்வது மாயையின் லீலைக்கு உட் பட்ட பிறகே காரியசாத்திய மாவதால், அநாதியே யாயினும் அந்தமுள்ள மாயையைப் போலவே, இவ் வைந்து முடிவுகளும் அநாதியே யாயினும் மாயையின் நசிப்பால் தாமும் நசிப்பன வாதலால், அந்தமுடையன எனப்பட்டது.

1234. ஆராயுமிடத்து, உள்ள பொருளாக (சத்திய வஸ்து வாக) இருக்கக் கூடியது ஒன்றேதான். அதி சூக்ஷ்ம புத்தியால் உள்ளத்தில் மெல்லப் புகுந்து அறிந்த மெய்ஞ்ஞானிகளால் அந்தப் பூரண சித்கனச் செம்பொருள் ஒன்றேதான் சாஸ்திரங் களிற் பலவிதமாகச் சொல்லப்பட்டுள்ளது என் றறிக.

1235. எத்தனையோ விதமாய் மிக விரிந்து பற்பல வாக இயங்கிக்கொண்டிருக்கும் மதங்கள் அத்தனையிலும் மிக்க உத்தமமான அத்வைத தத்துவ மொன்றேதான், மதங்களின் வேறுபாட்டுக்கு வித்தானதும் பேய் போன்ற பொய்த் தோற்ற முடையதுமான அகந்தை அற்றொழிந்த பின், ஞான மயமாக விளங்கும் மோனப் பரம்பொரு ளாகும்.

1236. ஆதியந்த மற்ற தாகவும் (அதாவது எப்போதும் விளங்கிக்கொண் டிருப்பதும்), மாறுபாடு, காரணம், உப மானம் முதலியவை யற்ற தாகவும், உண்மை போல நடிக் கும் ஜீவ அறிவுக்கு விளங்காத தாகவும் உள்ள ஆன்மச் செம்பொருளை யார் அறிகிறார்களோ அவர்களே மேன்மை யடைந்தவர்க ளாகும்.

### ௬0. பாவ ஹிதீதத் .திறன்

1237. அத்வைத மாட்சியானது, வஞ்சகமான திரிபுடி யறிவு நீங்கி, எதனுடனும் பற்றற்றுச் சுதந்திரமான பரவஸ்து வாய் ஞானிகளின் உள்ளத்தில் விளங்குமே யன்றி, மனத்தால் தியானிப்போருக்கு, அற்பப் புலன்களின் வழியே பொய்யாகத் தோன்றும் துவிதக் காட்சிகளைப் போல அறிய முடியாத தாகும்.

1238. மெய்ஞ்ஞான சொரூபமும் மனமற்றதுமான சிவத்தை, மனோநாச மடைந்து உள்ளுணர்வால் மனத்தின் மூலமான இதயத்தில் நிலை பெற்ற பிரஜ்ஞையாளர்களான, சிந்தை யற்ற ஞானதீரர் அறிவரே யன்றி, சித்தக் கலக்கமான புத்தியுடைய மக்கள் அறியார்.

1239. அத்வைத மாட்சியை அனுபவமா யடையும் விருப்பமிகுதியுற்று அதி தீவிரமுடைய முமுக்ஷுவே! சித் தத்தின் வாசனை யெழுச்சிகள் முற்று மடங்கி, சாந்தம் முதிர்ந்து, உண்மைப் பொருளில் நிஷ்டை யுறுவோர்க்குத் தான் அத்வைதானுபவம் கிடைக்குமே தவிர, (விசார மென் னும்) நேர்* மார்க்கத்தையே கைக்கொண்டு சத்தியத்தில் நிலைத்து நிற்க விரும்பாமல் (ஏனைய மார்க்கங்களை நாடும்) பிற்போக்கர்களான மந்தர்களுக்கு அவ் வனுபவம் எவ்வா றடைய முடியும் ? சொல்க.

### ௬௧. அனுபவ முரைத்த திறன்

1240. சற்குரு ஸ்ரீ ரமண பகவானது உபதேசப்படி யடைந்த நம் சுவானுபவத்தைக் கூறுவோமாகில் அது, "இது

---

* நேரே சத்தியப் பொருளில் நிற்கமுடியாத பிற்போக்கர்கள் என்றும் பொருளமையும்.

காறும் பாசக் கொடுங்கானகமாகக் கருதப்பட்டு வந்த இப் பிரபஞ்ச மெல்லாம் உரை கடந்த மெய்ஞ்ஞானமான மோஞ காசமே தவிர வேமெுன்று மில்லை; இத்தனைக் காலமாக அறிந் திருந்த (நாம ரூபப்) புலனறிவுகள் எல்லாம் (உண்மை யற்ற) கனவைப் போன்றவையே" என்பதாம்.

குறிப்பு:— இப் பாடல் முதல், பாடல் 1248 வரையுள்ள ஒன்பது பாடல்களாலும் ஸ்ரீ ரமண சற்குருவருளால் தாம் பெற்ற அனுபவத்திற் சித்தித்த ஞான முடிபை ஸ்ரீ முருகஞர் கூறுகின்ருர்.

1241. புத்திமயக்கத்தால் (இவ்வளவு காலமாக) பரமார்த்த சொரூபத்திற்கு அன்னியமாக என்னைக் கருதியதால் வந்த பந்தம் முக்தி முதலிய யாவும் உண்மையில் கொஞ்சங்கூட அடையப் படவே யில்லை (அதாவது, இதுவரை பந்தமு மடைந்த தில்லை; அதஞல் இப்போது முத்தியு மடையப்பட வில்லை) என்று அதீத தன்னிருப் புணர்வாக (ஆன்ம சச்சித் தாக) மட்டும் நிறைந்து விளங்கும் பரமார்த்த நிலையை அறிந் தேன், அறிந்தேன்!.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகஞர் கூறியது "பந்தவீடற்ற பரசுகமுற்றவா றிந்த நிலை நிற்றல்..." என்பது ஸ்ரீ பகவான் வாக்கு. "சாதகத்திலே துவிதம் சாத்தியத்தி லத்துவிதம், ஓதுகின்ற வாதமது முண்மையல..." என்றும் கூறிஞர். பரமார்த்த நிலையை உள்ளபடி யுணர்ந்தால் அங்கு வீட்டுணர்வும் இல்லை என்க; என்றும் பந்தமின்மையின் 'நான் முக்தன்' என்ற ஞானமும் அறவே நீங்கியது சுவ சொரூபம்.

1242. நாம் எந்தெந்த மதத்தை யாராய்ந்தாலும், அந் தந்த மதங்களில் எவ்வெவ் விதமான வாதங்களைக் கேட்டாலும், அம் மதவாதங்கள் யாவுமே, வேறுபா டில்லாமல் விளங்குந் தீர்ப்பாக ஒரு பரம குறிக்கோளையே நிச்சயமாகக் கூறுகின்றன என்பதைத் திண்ணமாகக் கண்டோம்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகஞர் கூறியது:— சமரச மென்பது உண்மையில் மோனத்து அமைவ தன்றி, புத்தி நுட்பத்தால் அமைவ தில்லை. மோனத்தின் அனுபவ முற்ற பின்பு எல்லாச் சமயங்களும் வாதங்களும் தம்முள் வேறுபாடின்றி சொரூபப் பிராப்தி முடிவொன்றே கொண்டனவாகத் திகழ்வது உள்ளங்கை நெல்லிக் கனியாக நன்கறியப் படுவதாம்.

1243. உண்மை யுரைப்பதில் தவருத வேதத்தின் மெய்ப் பொருளாக விளங்கும் சின்மய பூரண ஆன்மாவில் நிலைபெற்

றிருக்குங்கால் (தன்மை - முன்னிலை - படர்க்கை எனப்படும்) மூவிடங்கள் (இறந்த - நிகழ் - எதிர் காலங்களாகக் குறிப்பிடப் படும்) முக் காலங்கள், (காண்பான் காட்சி காணப்படு பொருள் போன்ற) முப் புடிகள் என்று கூறப்படுவன எதையுமே அங்குக் காணவில்லை.

1244. ஆராயு மிடத்து, சிறந்த மெய்ஞ்ஞானியாய் என் கண்முன் வெளிவந்து தோன்றி ஞான ரமணகுரு நாதன் போதித்த, மேலே நான் கூறிய, இந்த அதிசூக்ஷ்ம அறிவானது அவர் அருள் கூர்ந்து மோனவியாக்கியானமாக அளித்த அனுபவமே யாகும்.

விளக்கக் குறிப்பு:— ஸ்ரீ முருகனார் கூறியது:— மேற்கூறிய செய்யுட்களின் நுட்பம் ஞானோபதேசிகன் அளித்தது மௌனானுபவ சாரமே யாகும். 'என் முன் வெளிவந்து' என்றது, ஞான தேசிகன் என்றுமே உள்ளிருப்பினும் மாயா விலாசத்தில் நம்மைப் போன்ற மானிடப் பௌதிக உடலுடன் தோன்றி யாண்டமையைக் கூறுவதாம். விளக்கம் மௌனத்தாலேயே வலிவுறுத லாதலின், "மோனவியாக்கியானம்" எனப் பட்டது.

1245. நானே பொருளா யிருக்கும் எனது அத்வைத நோக்கில் என்னைத் தவிர 'நீ' என்று இன்னொரு பொருள் எனக் கில்லை. நீயே வஸ்துவா யிருக்கும் போது உன் நோக்கில் உன்னைத் தவிர 'நான்' என்று இன்னொருவன் இருப்பது மில்லை. அவ்வாறே எவனொருவனது ஞான நோக்கிலும் அவனைத் தவிர 'நான் - நீ' என்ற எவ்விதப் பேதப் பொருளும் காணப்படுவ தில்லை. உண்மை யறியும் போது 'நான், நீ, அவன்' யாவும் ஆன்மாவே யாகும்.

1246. நான் எவனொருவனுடைய உடைமைப் பொருளு மல்ல; நான் எந்தப் பொருளின் உடையவனு மல்ல; நான் யாருக்கும் அடிமையு மல்ல; நான் யாரொருவரையும் அடிமை கொண்ட ஆண்டானு மல்ல. நான் செய்ய வேண்டிய கடமைகளாக எனக்கு ஓர் கர்த்தவ்வியமு மில்லை; அவ்வாறே கர்ம பலன்களை நுகர வேண்டிய போக்தவ்வியமும் எனக் கில்லை. நான் எதையும் செய்பவனும் (கர்த்தாவும்) அல்ல; (இதுவே உண்மை என்று) அறிக.

1247. மாயையாற் பிடிபட்டேன் போல வருந்திப் புலம்பிய என் கண் முன்னிலையிலேயே ரமண சற்குருவாய் எதிரிற் றோன்றி என்னை யாட்கொண்டது என் ஆன்மாவே யாதலால், அச் சற்குரு சொரூபமாகவே பிரகாசிக்கும் எனது பூரணாத்மா வுக்கே என் வணக்கம் மிகவும் உரிய தாகட்டும்.

1248. பரசிவ சொரூபமான ஸ்ரீ ரமண சிற்சத்திக்கு மட்டும் கட்டுப்படுவானே யன்றி, இந்த முருகன் (ஸ்ரீ முருகனார்) துன்பந்தரும் வறுமையை எவ்வளவுதான் அடைய நேர்ந்த காரணத்தைக் கொண்டும் கீழ்மையான உலக மாயா சக்திக்கு ஒருக்காலும் சிறிதும் கட்டுப்பட மாட்டான் என்று திண்ணமா யறிக.

## கூஉ. சம நிலைத் திறன்

1249. எல்லா தர்மங்கட்கும் மூல முதல் தர்மமாகிற ஆன்மஞான நிஷ்டை யுடைய பெரியோர்களுக்கு ஜாதி குல சமய தர்மங்கள் எதுவும் கடைப்பிடிக்க வேண்டியதான அவ சியம் சிறிது மில்லை. பயனற்றதும் பொய்யானதுமான உடம் புக்குத் தான் பலவித தர்மப் பாகுபாடுகள் அமையக் கூடுமே தவிர, சத்திய வஸ்துவான ஆன்மாவினிடம் (ஜாதி, குல, சமயப்) பாகுபாடுகள் யாதொன்றுங் கிடையாது.

1250. புலன்களால் உணரப்படும் (இப் பிரபஞ்சப் பொருள்) யாவற்றினுள்ளும், ஆன்மாவாகிய தான் ஒன்றே உண்மைப் பொருளாக இருந்து விளங்கும் அனுபவ அறிவான சமத்துவத்தைக் காண்பதுதான் சமரச மெய்ஞ்ஞான மடைந்த பெரியோர்கள் சிறப்பித்துச் சொல்லும் 'சமதரிசன அடைவு' என் றறிக.

1251. அகந்தை யழிவுற்று, சலனமற்ற ஆன்மானுபவத் தில் விளங்கும் உபசாந்தி நிறைந்த ஞானி யொருவன், விரும் பிப் புகழ்ச்சியால் மகிழாத புத்திமான் ஆவான்; எனவே, அவன் இகழ்ச்சியாலும் என்றும் வருந்துபவனு மல்லன்.

1252. கொடும் வெய்யிற் கானலிற் குளிர்ந்த நீர்த்தடாக மொன்று அருகி லிருப்பதாகக் காணப்படுவதைப் போல் (கானல்

நீர்த் தோற்றம் போல), அஞ்ஞானப் பாழினிடத்திற்றேன்றி உண்மை போலக் காணப்படும் பொய்த் தோற்றமான இவ் வுலகில் பிராரப்த வசமாய் வந்தடையும் சிறப்புடன் கூடிய நல் வாழ்வையும் ஒரு பொருளாகக் கருதி மயங்காத மெய்ஞ் ஞானிக்கு அவ் வாழ்விற் சம்பவிக்கும் தாழ்வும் ஒரு பெரு மிதமேயாக உணரப்படும்.

1253. தம் விருப்பங்கள் நிறைவேற வேண்டு மென்ற வாறு சுய நலக் கோரிக்கைகள் யாதொன்றும் அற்று வாழும் தெய்வீகம் பொருந்திய மாமுனிவோர் தம் வாழ்வில் முயற்சி யின்றி இயல்பாகவே செய்துவரும் தவம் முழுதும் இவ்வுலகில் எங்கெங்கும் வாழும் மக்களுக்கும் அழகிய நல்ல பாக்கியங்கள் அனைத்தையும் கூட்டுவித்துப் பேருபகாரமாகவே யமையும் என் றறிக.

**வாழ்த்து**

1254. அருணாசலம் வாழ்க; ஸ்ரீ ரமண குருபரன் வாழ்க; அந்த சற்குருவின் ஒப்பற்ற உபதேசப்படி வாழும் அடியார்கள் வாழ்க; ஸ்ரீ ரமண குருமூர்த்தி வசனித்த உபதேசங்களின் நல்லதோர் தொகுப்பான (குருவாசகக் கோவையான) இந்தப் **பரமார்த்த தீபம்** என்னும் நூல் தன்னைக் கற்போர்க்குப் பர மார்த்த ஞானத்தைப் பலிதமாக்கிக் கொண்டு என்றும் வாழ்வ தாக.

**ஸ்ரீ ரமணார்ப்பணமஸ்து**

# பிற்பால்

[தனிப்பாடல்களாக ஸ்ரீ பகவா னருளிய கீழ்க்கண்ட 11 செய் யுட்களும் சிறந்த உபதேசங்களாக அமைதலின், அவை இக் குருவாசகக் கோவையில் இடம் பெறுகின்றன. அவை இடம் பெற வேண்டிய திறனும் பாடல் எண்ணும் கீழே கொடுக்கப் பட்டுள்ளன]

1. பெண்ணு ணலிமுதலாம் பெற்றியாற் காரியமாங்
   கண்ணுேக்கா லிவ்வுலகின் காரணனுப் — பண்ணுேர்
   கருத்த னுளனவனிக் காசினிமாய்த் தாக்குங்
   கருத்த னரனுக் கருது.

[இச் செய்யுளைத் தத்துவ ஆராய்ச்சி இயலில் (௧0) ஆவது 'திரிபதார்த்தத் திற'னில், பாடல் 114-a ஆகச் சேர்த்துக் கொள்க]

*உரை:*— பெண் ஆண் அலி முதலியவற்ரு லாகிய இவ் வுலகம் ஓர் காரிய வஸ்துவாகக் கருதப்படுவதால் (இக் காரியத்தைப்) பண்ணும் காரண வஸ்துவான கர்த்தன் ஒருவன் இருப்போ னுகின்ருன். அவன் இவ் வுலகை யழித்தும் ஆக்கியும் வருகின்ருன். அக் கர்த்தனே அரன் என்னுங் கடவு ளாகும் என் றறிக.

இச்செய்யுள் சிவஞானபோதத்தின் முதற் சுலோகத்தை தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட வெண்பா.

விளக்கக் குறிப்பு:— காரண காரியங்கள் ஓர் இரட்டையாகும். உலகத் தோற்றத்தைக் காரியப் பொருளாகக் காட்டி, அதற்கு ஓர் காரணப் பொருளாகக் கடவுள் ஒருவர் உண்டென்று உணர்த்துவதே இப் பாடலின் நோக்கம். "நாமுலகங் காண்ட லால்..." என வரும் உள்ளது நாற்பதின் முதற் பாடலையும் இங்கு உடன் வாசித் துணர்க.

உலகை ஓர் காரியப் பொருளாகக் கருதும் வரையில் அதனுடன் இன்றியமையாத காரணப் பொருள் ஒன்றும் இருந்தே தீரும். இவ்வாறு காரண காரிய இரட்டை யின்றி உலகத் தோற்றம் தன்மயமாய், தானேயாகிய ஆன்ம சொரூபமாக உணரப்படும் போது, அந்தத் தனக்கு அன்னியமான மற்றொரு கர்த்தாவாகக் கடவுள் இரார் என்பதும் இப் பாடலாற் பெறப்படுகின்றது.

2. இந்திர ஜாலிகனுந் தான்மயக்க மெய்தாம
   லிந்தவுல கர்க்குமய லேய்விப்பான் - மைந்தனே
   சித்தனுே தான்மயங்கிச் சேர்க்குமய லிவ்வுலகர்க்
   கெத்தனை விந்தை யிது !

[இச் செய்யுளைத் 'தத்துவ ஆராய்ச்சி யிய"லின் (சக) ஆவது 'சித்தி வேட்கைத் திற' னில், பாடல் 224-a ஆகச் சேர்த்துக் கொள்க.]

உரை:— இந்திர ஜாலக்காரனுவது (தெருவில் வரும் செப்படி வித்தைக் காரன் தான் காட்டும் மாய வித்தை பொய்யான தென்று தனக்குத் தெரியுமாதலால்) அதில் தான் மயங்காமல், தன் ஜாலங்களைப் பார்க்கும் உலக மக்களை மயங்க வைக்கிறுன். ஆனுல், மைந்தனே, சித்தன் ஒருவனே (தான் காட்டும் சித்திகளை மெய்யென்றே தான் நம்புவதால் உண்மை யாகவே தான் உயர்ந்தோ னுகிவிட்டதாகக் கருதி) தானும் மயங்கி உலகத்தாரையும் மயங்க வைக்கிறுன். இது எத்தகைய விநோதம் பார்!

விளக்கக் குறிப்பு:— சித்திகளும் தெருவிற் காட்டப்படும் செப்படி வித்தைகளும் சம மானவையே யென்பதையும், வித்தையில் இரண்டும் சமமே யாயினும் இந்திர ஜாலக் காரனுக் கிருக்கும் அறிவுத் தெளிவு கூட ஒரு சித்தனுக் கிருப்பதில்லை யாதலால் வித்தைக்காரனைவிட சித்திக்காரன் தாழ்ந்தவனே என்பதையும் இப் பாடல் நயமாக எடுத் துபதேசிக் கின்றது.

3. ஒருநா ழிகைவயிறெற் கோய்வீயாய் நாளு
மொருநா ழிகையுண்ப தோயா — யொரு நாளு
மென்னோ வறியா யிடும்பைகூ ரென்னுயிரே
யுன்னோடு வாழ்த லரிது.

[இச் செய்யுளைத் 'தத்துவ ஆராய்ச்சி யிய'லில், (அஉ) ஆவது "மித வாழ்க்கைத் திற"னில், பாடல் 492-a ஆகச் சேர்த்துக் கொள்க.]

உரை:— துன்பந் தரும் என் உயிரே (ஏ,ஜீவனே)! வயிறுகிய எனக்கு ஒரு நாழிகை நேரமாவது நீ ஓய்வு கொடுப்பதே யில்லை! ஒரு நாளில் ஒரு நாழிகை நேரமாவது ஏதும் உண்பதை நீ நிறுத்துவதே யில்லை! நீ எந்த நாளிலும் என் சிரமத்தை யறிந்ததே யில்லை! ஆகையால், உன்னோடு வாழ்வது மிகவும் சிரம மானது!

விளக்கக் குறிப்பு :— இச் செய்யுள் ஸ்ரீ பகவானுல் சுக்கில வருஷம் (1929-30) சித்திரா பௌர்ணமி தினத்தன்று பாடப் பெற்றது.

"ஒருநா ளுணவையொழியென்று

லொழியாய்..." என்று ஔவையார் பாடிய பாடலைத் தழுவி —
பாடப்பட்டது இவ் வெண்பா!

ஔவையார் பசியால் வாடி, உணவில்லாமல் வருந்தும் வயிற்றைப் பார்த்து உயிர் குறை கூறுவதாகப் பாடினர். ஆனால் ஸ்ரீ ரமணரோ தேவைக்கு மேற்பட்ட உண்டியின் வரவால் அஜீரணித்து வருந்திச் சிரமப்படும் வயிறுனது உயிரைப் பார்த்துக் குறை கூறுவதாகப் பாடிய நகைச்சுவை உணரத் தக்கது.

4. பிறந்தநா ளேதோ பெருவிழாச் செய்வீர்
பிறந்ததெவ ணென்று பேணிப் - பிறந்திறந்த
லின்றென்று மொன்றா யிலகுபொரு ளிற்பிறந்த
வன்றே பிறந்தநா ளாம்.

(இச் செய்யுளைத் 'தத்துவ அநுசந்தான விய' லின் (கஅ) ஆவது 'பேதைமைத் திற'னில், பாடல் 603-a ஆகச் சேர்த்துக் கொள்க)

உரை:-- பெரிய விழாக் கொண்டாட முனைந்த மக்களே! பிறந்த நாள் என்பது எது? (அறிவீரோ? கேளுங்கள்) 'இப் போது பிறந்திருக்கும் நாம் (உடலே நான் என்னும் பொய் யுணர்வாகிய ஜீவன்) எவ்விடமிருந்து - எப் பொருளிலிருந்து — பிறந்தோம்?' என்று விசாரித்து, பிறப்பது மிறப்பது மற்று எப்போதும் ஏகமாய் விளங்கும் அப் பரம்பொருளில் (ஆன் மாவில்) சேர்வது என்றோ அன்றுதான் உண்மையான பிறந்த நாளாகும்.

விளக்கக் குறிப்பு:—1912 ஆம் ஆண்டு விரூபாக்ஷக் குகையில் ஸ்ரீ ரமண பகவானது ஜயந்தியை முதன் முதலாகக் கொண்டாட அன்பர்கள் ஏற்பாடு செய்த போது ஸ்ரீ பகவா னருளிய பாக்களே இச் செய்யுளும் இதையடுத்து வரும் செய்யுளு மாகும். உள்ளது நாற்பது — அநுபந்தம் 11 ஆவது பாடலில் 'பிறந்தது யார்?' என்ற கேள்விக்கு விடை யளிக்கப்பட் டுள்ளதைப் போலவே இப் பாடலில் 'பிறந்த நாள் எது?' என்பதற்கு விடை யளிக்கப்பட் டுள்ளது. தேகத்தை நான் என்று பற்றும் அபிமானமே ஜீவனின் பிறப்பு. ஆகையால் இது நம் பொய்ப் பிறப்பாகவே முடிகிறது. ஆன்ம சாக்ஷாற்காரமே நம் மெய்யான பிறப்பு என்று உபதேசிக்கப்பட்டது.

5. பிறந்தநா ளேனும் பிறப்புக் கழாது
பிறந்தநா ளுற்சவமே பேணல் — இறந்த
பிணத்திற் கலங்கரிக்கும் பெட்பென்றே தன்னை
யுணர்ந்தொடுங்கல் தானே யுணர்வு.

[இச் செய்யுளை அதே இயலில், அதே திறனில் பாடல் 603-b ஆகச் சேர்த்துக் கொள்க]

உரை:— ('அந்தோ, இவ் வுலகில் உடலாகிப் பிறந் தோமே' என்று ஏனைய நாட்களில் ஒருவன் வருந்த மறந்து வாழ்ந்தாலும்) பிறந்த நாளன்றுவது பிறந்ததற்காக அழ வேண்டும். அப்படி அழாமல் அந்நாளை உற்சவ நாளாகக் கொண்டாடுதல், செத்துக் கிடக்கும் பிணத்திற்கு (நறுமண மலர்களாலும் ஆடையணிகளாலும்) அலங்கரித்து மகிழும் அறிவின்மையே யாகும் என்று விவேகித்து, ஆன்மாவாம் தன்னையறிந்து ஆன்மாவிலேயே ஒன்றுதல்தான் அறிவுடைமை யாகும்.

விளக்கக் குறிப்பு:— முற்பாடலில் ஆன்ம சாக்ஷாற்காரமே மெய்ப் பிறப்பு என்று விளக்கிய பின், அந்த மெய்ப்பிறப்பை யறியாது பொய்ப்பிறப்பாகிய தேகான்ம புத்தியோடு உடலாய்ப் பிறந் திருக்கும் ஒரு நாளைப் பிறந்த நாளாகக் கொண்டாடுவது அறிவின்மை யென்று இப் பாடலால் உபதேசிக்கப்படுகின்றது.

6. தன்மெய் யுருவுளத்துத் தானுணரி ஞதிமுடி
வின்றிநிறை வாஞ்சச்சித் தின்பு.

[இச் செய்யுளைத் 'தத்துவ அநுபவ விய'லின் (௩0) ஆவது "ஆன்ம நிலைத் திற"னில், பாடல் 1027-a ஆகச் சேர்த்துக் கொள்க]

உரை:— நம் சுவ சொரூபத்தின் இயல்பு யாதென உள் ளத்தில் விசாரித் தறிந்தால், அதுவே ஆதியந்த மற்ற அகண்ட சச்சிதானந்தமாக விளங்கும்.

குறிப்பு:—'உப தேசவுந்தியா'ரின் 28 ஆவது உபதேசத்தின் பொருளே இக் குறட்பாவாக ஸ்ரீ பகவாஞ லருளப்பட்டது.

7. சாதுறவா லுட்டெளிவாய்ச் சாருளவிற் சார்பதமில்
போதகனூற் புண்ணியத்தாற் போ.

[இச் செய்யுளைத் 'தத்துவ அநுபவ விய'லின் (௫௪) ஆவது "சான்றோர் மாட்சித் திற"னில், பாடல் 1127-a ஆகச் சேர்த்துச் கொள்க]

உரை:—சாதுக்களின் சகவாசத்தால் உள்ளத்திற்றெளி வாக ஏற்படும் ஆன்ம விசாரத்தால் அடையப் பெறும் உயர்பதமானது, மத போதகர்களாலோ, சாஸ்திர வாராய்ச்சி யினுலோ, அல்லது புண்ணிய கர்மங்களைப் புரிவதனுலோ கிடைப்பதில்லை என்பதைத் திண்ணமா யறிந்து செல்க.

குறிப்பு:— உள்ளது நாற்பது — அநுபந்தம், 2 ஆவது செய்யுளாகிய சாதுறவு சார....ஒணுதால்' என வரும் வெண்பாவின் பொருளேயே ஸ்ரீ பகவான் இங்கு சுருக்கமாக ஒரு குறட்பா வினு லருளி யுள்ளார்.

8. கண்ட வன்றனேக் காயந் தனேயன
முண்ட பின்னிலே யொப்ப விடுப்பனே.

[இச் செய்யுளேத் 'தத்துவ அநுபவ விய'லின் (சஅ) ஆவது "ஜீவன் முத்தர் திற"னில், பாடல் 1141-a ஆகச் சேர்த்துக் கொள்க].

உரை:— அன்னத்தை யுண்ட பிறகு இலேயை எறிந்து விடுவதைப் போலவே, ஆன்மாவாகத் தன்னே யறிந்த ஞானி பிறகு இவ் வுடலே யுதறி விடுகிறுன்.

விளக்கக் குறிப்பு:— இச் செய்யுள் ஸ்ரீ பகவானது தேகம் நோயுற்றிருந்த இறுதி நாளில் இசைக்கப்பட்டது. 'இன்னும் பல்லாண்டுகள் ஸ்ரீ பகவான் தேகந் தாங்கி வாழ்ந்திருக்க வேண்டு'மென்று அடியார்கள் பிரார்த்தித்த போது, ஸ்ரீ பகவான் இச் செய்யுளே யருளி, 'இனி தேகத்தால் யாதொரு பயனு மில்லே யாதலின் அது விடப்பட வேண்டியதே' என்று கருத்தை யுணர்த்தினர்.

9. வேடன்கைப் பட்ட புறவு விடப்படின்
காடுங் கடந்து விடுமென்னின் — நாடியகம்
வேடன்றுன் வேறகல வேறுன வக்காடும்
வீடா யொடுங்கி விடும்.

[இச் செய்யுளேத் 'தத்துவ அநுபவ விய'லின் (சஅ) ஆவது 'ஜீவன் முத்தர் திற'னில் பாடல் 1147-a ஆகச் சேர்த்துக் கொள்க].

உரை:— வேடனது கையிற் சிக்கிய புறு விடுபடுமாயின் காட்டையுந் தாண்டிப் பறந்து சென்றுவிடு மல்லவா? வேடன் அப்புறுவை விட்டு விட்டுத் தன் இல்லத்தை நோக்கிப் பிரிந்து சென்றிடவே, தன் இல்லத்தினும் வேறுக இருந்த அந்த காடுங் கூட புறுவின் வீடேயாகி புறுவும் அங்கேயே வசித்திருந்து விடும்.

விளக்கக் குறிப்பு:— வேடன்கைப் பட்ட புறவு விடப்படின் காடுங் கடந்து விடும்.

இப் பாடல் வினு வடிவில் இல்லாவிடினும் ஓர் வினுக் குறிப்பே யுள்ளது. முற்றும் உருவகமான செய்யுள் இது. இதில் 'வேடன்' என்றது மாயையையும், 'புறவு' என்றது ஜீவனேயும்,

'விடப்படுதல்' என்றது முக்தியையும், 'காடு', என்றது தூலவுடலையும் குறிப்பனவாம். எனவே, இதில் மறைந்துள்ள வினுப் பொருளாவது:

'மாயையாற் பிடிபட்ட ஜீவன் விடுதலே யடைந்தா ஞயின், தேகத்தையும் உதறிச் சென்று விடுவா னன்ருே?' என்பதாம். இதற்கு ஸ்ரீ பகவா னளித்த விடைச் செய்யுளின் - வெண்பாவின் உருவகப் பொருளாவது :

*மாயையாற் பிடிபட்ட ஜீவன் விடுதலே (முக்தி) யடைந்தாஞயின், தேகத்தையும் உதறிச் சென்று விடுவா னன்ருே என்று கேட்பா யாகின், அகத்தை (தன்னே) நாடுவதாகிய விசாரத்தால் மாயை என்பது இருப்பற்றதாய் மறையவே, தனக்கு அன்னியமானதோர் ஜடப்பொருளாகக் கருதப்பட்டு வந்த தூல வுடலுலகங் கூட தாஞம் ஆன்மா வாகவே அகண்ட ஞாஞனுபவத்தால் உணரப்பட்டு விடும் என்றறிக. அதாவது, ஜீவன்முக்தி யடைந்தால் தேகம் மரிக்க வேண்டும் என்ற நியதி யில்லே. மேலும் முதலில் சாதனேக் காலத்தில் 'தேகம் நானல்ல' என்று கொண்டிருந்த குறுகிய உணர்வும் நீங்கி, ஏகமாகிய அகண்ட ஆன்மவுணர்வுக்கு அயலாக இப்போது தேகம் என்று ஒன்று இன்ஞெரு சத்தாக இருக்க முடியாததால், 'தேகமும் நானே' என்ற அகண்ட அறிவு சித்திக்கும். ஆகவே அம்முக்தன் அவ்வுடலிலேயே ஆனந்தமாய் இருந்து வருவான் என்றறிக. "உடல் நானே தன்னே யுணரார்க்கு..." என வரும் உள்ளது நாற்பதின் 17 ஆவது பாடலேயும் இங்கு உடன் வாசித் துணர்ந்து கொள்க.*

10. மௌனமுள் ளெழுமொரு மொழியரு ணிலேயே.

[இவ் வோரடிச் செய்யுளேத் 'தத்துவ அநுபவ விய'லின் (ஙிஉ) ஆவது "மவுன மாட்சித் திற"னில், பாடல் 1173-a ஆகச் சேர்த்துக் கொள்க].

*உரை:— 'மௌனம்' என்பது உள்ளத்தில் அருள் நிலேயாகச் சதா பெருகிக்கொண் டிருக்கும் ஓர் ஒப்பற்ற மொழி யாகும்.*

*விளக்கக் குறிப்பு:—ஸ்ரீ பகவானேப் பற்றி அன்ப ரொருவர் ஆங்கிலத்தில் எழுதிய கட்டுரையில்,* "Where silence is an inspired sermon" *என்னும் தலேப்பைக் கண்டு, அக் கருத்தைத் தமிழில் ஸ்ரீ பகவான் அருளியதே இவ் வோரடிப் பா. "மௌனம் என்ருல் ஓயாமற் கோஷிப்பது; அது அருள்வாக்கின் இடைவிடாப் பெருக்கு" என்று 'மஹர்ஷி வாய்மொழி' என்ற நூலிற் கூறப்பட்ட கருத்தே இப் பா.*

"குருவாசகத் கோவையிற் சேர வேண்டியது" என்ற குறிப்புடன் ஸ்ரீ முருகனுரது ஏட்டுப் பிரதியிற் புதிதாகக் கிடைத்த பாடல்.

1. அமுதத் துவவாழ் வடைவா ரறிவுக்
கெமதத் துவமறப்பா யேய்வால் — தமவியல்சே
ரஞ்சுமொருங் குற்றதோ ரவ்விடயம் பாழ்த்தகொடு
நஞ்சினு மிக்க நவை.

[இச் செய்யுளைத் 'தத்துவ அநுசந்தான விய' லின் (கசு) ஆவது "விடய போகத் திற" னில், பாடல் 592-a ஆகச் சேர்த்துக் கொள்க].

உரை:— அழிவற்ற நித்திய வாழ்வை யடைய விரும்பும் சாதகர்களுக்குத் தன்னிருப் புணர்வின் மேற் கொள்ளும் நாட்டத்தை இதர விருத்திகளை முன்னிட்டு மறப்பதே 'மரணம்' என்று ஆன்றோராற் சொல்லப்பட் டுள்ள தன்றோ? அதனுல், தமோ குண வயமாகி ஐம்புலன்களும் ஒருங்கே சேர்ந்து பிர விருத்திக்கின்ற புல விஷயங்களில் அவர்கள் ஈடுபடுவது, பாழான கொடிய நஞ்சை விட மிகக் கொடிய தாகும்.

விளக்கக் குறிப்பு:— ஐம்புல விஷயங்களால் தன்னுட்டம் நழுவும். தன்னுட்டம் தவிர்தலே மரணம் என்பது ஆன்றோர் முடிவு. எனவே, மரணமின்மையை விரும்பி விசாரமாம் தவத்தி லீடு படுவோர் ஐம்புல விஷயாசைகளுக்குச் சிறிதும் இடந்தரக் கூடாது என்று உபதேசிக்கப்பட்டது.

ஸ்ரீ ரமணாச்ரமம்



இவ்வுலகங் களெல்லாம் நிலையான உண்மைப் பொருள்போல் தோன்றிக் கொண்டிருப்பதற்குக் காரணமா யிருப்பது யாதெனில், நிலையற்றதான புலையுடலை ‘நான்’ என்று அபிமானித்திருக்கும் அகந்தையே யாகும். இக் குற்றம் (அகந்தை) அழிந்தால் அப்போது மிஞ்சி நிற்கும் ஸ்வாத்ம நிலையே இத் தோற்ற மாத்திர நாமரூபப் பிரபஞ்ச மெல்லாம் மெய்யாகவே சார்ந்து நின்ற சத்துப் பொருள் என்பது தெரிய வரும்.

இவ் வுயிரினங்க ளெல்லாம் அறிவுள்ள பொருள்கள் போலத் தோன்றிக் கொண்டிருப்பதற்குக் காரணமா யிருப்பது யாதெனில், சுயமாய் அறிவற்றதான, பேய் போன்றதோர் உண்மையற்ற, மயக்கநெறி வடிவாயுள்ள அகந்தையே யாகும். இம் மயக்க அறிவு அழிந்தால் அப்போது மிஞ்சி நிற்கும் ஸ்வாத்ம நிலையே இத் தோற்ற மாத்திர உயிர்களின் அறிவுகளுக் கெல்லாம் அறிவு கொடுத்துக் கொண்டிருந்த சித் என்பது தெரியவரும்.

இவ்வுலகப் பொருள்க ளெல்லாம் இன்ப முள்ளவைபோல் தோன்றிக் கொண் டிருப்பதற்குக் காரணமா யிருப்பது யாதெனில், இன்பம் சிறிது மற்றுத் துன்பமே வடிவா யிருக்கும் அகங்காரச் செருக்கே யாகும். இச் செருக்கு (அகந்தை) அழிந்தால் அப்போது மிஞ்சி நிற்கும் ஸ்வாத்ம நிலையே இத் தோற்ற மாத்திர உலக இன்பங்க ளெல்லாம் அனுபவிக்கப் படுதற்கு ஆதாரமா யிருந்துகொண் டிருந்த ஆனந்தம் என்பது தெரியவரும்.

— குருவாசகக் கோவை, 975, 976, 977

CC.NO.2010 ISBN: 81-8288-087-4